சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# அருணாசலபுராணமும்,

அருணாசலேசுரர்

தோத்திரப்பிரபந்தத்திரட்டும்.

இவை

ஆர்க்காடு-சீயான்-ஆறுமுகமுதலியாரவர்கள் குமாரரும்
திருவண்ணாமலை ஆலய தர்மகர்த்தருமாகிய இராவ்பகதூர்
ஆர்க்காடு — தனக்கோடிமுதலியார்
F. M. U., F. R A. S, F. T. S, F. R. S. A
அவர்கள் விருப்பின்படி
முன் அச்சிடப்பட்ட பிரதிகளைப்பார்க்கிலும்
அனேகவிஷயங்கள் நூதனமாகச்சேர்த்து




சென்னை:
சிதம்பரமுதலியாரவர்களது
த்தியாரத்நாகர அச்சுக்கூடத்திற்
பதிப்பிக்கப்பட்டன.

1920.

# நைடதமூலமும் விருத்தியுரையும்.



கூர்மபுராணம், இலிங்கபுராணம், காசிகாண்டம்முதலிய நூல்
பெரிய இலக்கியங்களையியற்றிய அரசகுலசேகர புலவசிகாமணியாய
ஸ்ரீ அதிவீரராமபாண்டிய மகாராஜனால் செய்யப்பட்ட (நைடதம்
புலவர்க்கௌடதம்) என்னு முதுமொழியாற் கொண்டாடப்பெற்ற
நைடதம் என்னும் காப்பியத்திற்குச சிறந்த விரிவுரை யொன்றும்
இன்றியமையாத இலக்கணக்குறிப்பு ஆசிரியவசனம், அலங்கார
விளக்கம், விசேடக்குறிப்பு, நளசரிதம், ஆசிரியர் வரலாறு என்னும்
இவற்றோடு சித்திரப்படங்களுமிட்டு மதுரைத் தமிழ்ச்சங்கப் புலவ
ரும் உவெஸ்லியன்மிஷன் கலாசாலைத் தமிழ்ப்பண்டிதரும், ஊற்று
மலை சமஸ்தான வித்துவானுமாகிய யாழ்ப்பாணம் ஸ்ரீமத் நா. கதி
ரைவேற்பிள்ளை அவர்கள் திருத்தியும், புதுக்கியும். விளக்கியும்
சேர்த்துதர, நல்ல காகிதத்திற் றிருத்தமாகப் பதிப்பித்திருக்கின்
றோம். இதுகாறும் பதிப்பிக்கப்பட்ட புத்தகங்களைப் பார்க்கிலும்
இது எல்லாவற்றினும் விசேடித்தது என்று செந்தமிழ்ப்புலவ
பலர் சிலாகித்திருக்கின்றனர்.

புத்தகம் ஒன்றின் விலை ரூபா 3 0

எமது கேட்லாக் தேவையானவர்கள் அரையணா தபால் ஸ்டா
ம்பு அனுப்பினால் அனுப்பப்படும்.

இப்படிக்கு,

**பி. நா. சிதம்பரமுத**

பிரம்பூர் பாரெக்ஸ் ரோ

உ

சிவமயம்.

# விசேட விளம்பரம்.

இதுகாறும் அநேகர் பதிப்பித்த புத்தகங்களைப் பார்க்கினும் இப்பதிப்புப்பிழையின்றிச் சுத்தமாகப் பதிப்பிக்கப்பட்டது. சைவர்களும், அவருள்ளும் திருவண்ணாமலையைத் தரிசிக்கவரும் சிவநேயச் செல்வர்களும் முக்கியமாக அறியவேண்டிய அநேகவிஷயங்களை சேர்த்திருக்கிறோம். யாவரும் எளிதில் உணரும்படி சருக்கங்கடோறும் சரிதம் சிறிதும் விடாமல் செந்தமிழ் வசனநடையிற் சருக்கவசனங்களும், கிரிப்பிரதக்ஷிண விதியும், திருவண்ணாமலையைப்பற்றிய இருக்குவேத சுலோகம், பாஸ்கர சங்கிதா சுலோகம், அதர்வணவேத சுலோகம், உருத்திரசங்கிதைத் தோத்திரம், தீபவிதி, தீபதத்துவம், கார்த்திகைத்தீபசிறப்பு, அண்ணாமலையார்வண்ணம் என்னும் விசேட விஷயங்களும், அவ்வவ்விடங்கடோறும் குறிப்பு உரைகளும் எழுதி மதுரை நான்காஞ் சங்கப்புலவரும், அத்துவித சித்தாந்த மகோத்தாரணரும் ஆரணிநகர சமஸ்தான வித்துவானும் ஆகிய யாழ்ப்பாணத்து மேலைப்புலோலி ஸ்ரீலஸ்ரீ நா. கதிரைவேற்பிள்ளை அவர்கள் எம்வேண்டுகோட்கியைய அளித்தனார். அவற்றையுஞ் சேர்த்து பதிப்பித்துளோம். திருவண்ணாமலையில்வந்து தரிசனஞ் செய்வோர், தீபமிடுவோர், இடுவிப்போர், தீர்த்தமாடுவோர், கிரிப்பிரதக்ஷிணஞ்செய்வோர், பூசைசெய்வோர், ஸ்தோத்திரபாராயணம் செய்வோர், பிரசங்கிப்போர் யாவருக்கும் இவ்விஷயங்கள் மிக்க பயன்படுமென்பதிற் சந்தேகமின்று அவற்றை யிப்புத்தகத்துடன் சேர்த்துளோம்.

உ

சிவமயம்.

# அருணாசல விசேடக் கொத்து.

## அருணகிரிபுராணம்.

அருணகிரியென்பவரொருகாலந்தையவல்வினையறரு
ருணகிரியென்பவர்பலகாலங்கொண்டொன்றளதீவினையற்று
ருணகிரியையகத்திருத்தியருணகிரியென்பவர்தினமு
மருணகிரிநாயகனருளான்மேலுந்நமலனடியடைவார்.

## திருவண்ணாமலைத் திருநாமங்கள்.

| | |
|---|---|
| அருணாசலம். | முத்திபுரி. |
| அருணகிரி. | ஞானநகரம். |
| அருணை. | தலேசுரம். |
| வாயுநகரம். | கௌரிநகரம். |
| தேசுநகரம். | சுத்தநகரம். |
| சோணகிரி. | தக்கிணகயிலாயம். |
| சிவலோகபுரி. | அனற்கிரி. |

---

## அருணாசல யுக விளக்கம்.

| | |
|---|---|
| கிருதயுகம்-அக்கினிமலை. | துவாபரயுகம்-பொன்மலை. |
| திரேதயுகம்-மாணிக்கமலை. | கலியுகம்-கன்மலை. |

## அருணாசலப் பெருமைகூறும் நூல்கள்.

| | |
|---|---|
| இருக்குவேதம். | தேவாரம். |
| அதர்வணவேதம். | திருவாசகம். |
| பாஸ்கரசங்கிதை. | கந்தபுராணம். |
| சாப உபநிஷதம். | உபதேசகாண்டம். |

## அருணாசல விசேடக் கொத்து

ஸ்ரீருத்திரசங்கிதை.
சூதசங்கிதை.
அருணகிரிபுராணம்.
அருணாசலபுராணம்.
திருவருணைக்கலம்பகம்.
சோணசைலமாலை.
அருணகிரியந்தாதி.
பட்டினத்துப்பிள்ளையார்பாடல்.

---

## தெய்வப் பெயர்கள்.

அருணகிரிநாதர்.
பராசத்தியம்மை.
அடியருணகிரிநாதர்.
உண்ணாமுலையம்மையார்.
வைரவர்.
வாசந்தராசர்.
சபாநாயகர்.
திருவண்ணாமலைநாதர்.
புரவெளிநாதர்.
யானைதிறைகொண்ட விநாயகர்.
செல்வவிநாயகர்.
சிவசுப்பிரமணியர்.
அதிகாரநந்திதேவர்.
மூன்றாம்பிரகாரநந்திதேவர்.
தாரகாதேவி.
மகாகாளர்.
இடபதேவர்.
சண்டேசுரநாயனார்.
சனற்குமாரர்.
கௌதமர்.
திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.
திருநாவுக்கரசுநாயனார்.
சுந்தரமூர்த்திநாயனார்.
மாணிக்கவாசகசுவாமிகள்.

---

## மலைகள்.

கிழக்கில்-ஐந்திரமலை.
தெற்கில்-தெய்வமலை
மேற்கில்-தண்டமலை.
வடக்கில்-குலமலை.
தென்கிழக்கில்-அக்கினிமலை.
தென்மேற்கில்-நிருதிமலை.
வடமேற்கில்-தாரகாசலம்.
வடகிழக்கில்-சிவமலை.

## நாடிகளெனப்படும் நதிகள்.

இடை-பெண்ணையாறு. சுழுமுனை-கமலையாறு.
பிங்கலை-சேயாறு.

---

## அருணாசலத்திற் றோன்று நதிகள்.

கங்கை. சிந்து.
யமுனை. நருமதை.
சரசுவதி. சித்தவி.
கோதாவரி. சோணநதி.
காவேரி.

---

## தீர்த்தங்கள்.

கிழக்கு-இந்திரதீர்த்தம். வடகிழக்கு-கௌதமதீர்த்தம்.
தென்கிழக்கு-அக்கினிதீர்த்தம். ஆலயத்துள்-சிவகங்கை.
தெற்கு-யமதீர்த்தம். சிவகங்கைக்குக்கீழ்-சக்கரதீர்த்தம்.
தென்மேற்கு-நிருதிதீர்த்தம். பிரமதீர்த்தம்.
மேற்கு-வருணதீர்த்தம். கட்கதீர்த்தம்.
புண்ணியநதி அசுவினிதீர்த்தம்.
வடமேற்கு-வாயுதீர்த்தம். அகத்தியதீர்த்தம்.
வடக்கு-குபேரதீர்த்தம். வசிட்டதீர்த்தம்.
சேயாறு. விட்டுணுதீர்த்தம்.

---

## விசேட நாட்கள்.

விடிவகாலம். சித்திரையபரபக்கச்சதுர்த்தசி.
ஐப்பசிமாதக்கேட்டை. அருத்தோதயம்.
கார்த்திகைக்கார்த்திகை. மகோதயம்.
மேற்படி உத்தராடம் கிரகணகாலம்.
மாசிச்சிவராத்திரி. மார்கழிமாதம்.

அருணாசல விசேடக் கொத்து.

## பஞ்சபூதத்தலம்.

பிருதிவி-காஞ்சி.
அப்பு-திருவானைக்கா.
தேயு-திருவண்ணாமலை.
வாயு-திருக்காளத்தி.
ஆகாயம்-சிதம்பரம்.

---

## திருவண்ணாமலை.

பஞ்சபூதத் தலத்துள்-அக்கினி.
ஆதாரத்தலத்துள்-மணிபூரகத்தலம்.
சாதனத்துள்-நினைக்கமுத்திதருந்தலம்.

---

## பூசித்த அடியவர்.

உமையம்மையார்.
மார்க்கண்டேயர்.
விட்டுணு.
பிரமன்.
கௌதமமுனிவர்.
திக்குப்பாலகர்.
வச்சிராங்கதபாண்டியன்.
வல்லாளன்.
சனகர்.
அட்டவசுக்கள்.
சத்தமாதர்கள்.
ஆதித்தன்.
விரதத்தன்.
குதிரை.
புளகாதியன்
இந்திரன்.
அருணகிரிநாதசுவாமிகள்.
முதலாய எண்ணிலர்.

---

## சோதிவடிவாகிய காலம்.

மாசி மாதம், கிருட்டிண பக்கம், சதுர்த்தசி திதி, மக நட்சத்திரம், அர்த்தராத்திரிக்கு மேலே என்க.

---

## மலைவடிவாகிய காலம்.

கார்த்திகை மாதத்துக் கார்த்திகை நட்சத்திரத்தில், சோம வாரத்திரவு பதினேழு நாழிகைக்கு மேலதாகிய சிவலிங்கோற்பவ காலமென்க.

சிவமயம்.

# வேதப் பிரமாணம.

பிரமனும் விட்டுணுவும் அன்னமும் பன்றியுமாகத்

## திருவருணாசலத்தைத் தேடியதற்குப்பிரமாணம்.

பிரமன் தேடியது.

## இருக்குவேத சுலோகம்.

ப்ரஹ்மாணை ஹம்ஸோபூத்வா; சிரோந் வேஷ்டவ்ய:; ஐச்வர்யம் ஸம ஆஸன் ப்ரஹ்மா அஹம் சிரோஜாநே, த்வமேவ மாதாஸி த்வமேவ பிதாஸி த்வமேவம்ருதாஸி, த்வமேவ த்ருஷ்டாஸி, சுரோதாஸி, கர்த்தாசி, காரயதாசி, ஸ்ரோபஸ்டோஸி, யயேவம் வேதா, சிவசாயுஜ்ய மாப்நோதி. சிவசாயுஜ்ய மாப்நோதி.

(இதன் மொழிபெயர்ப்பு.)

பிரமன் அன்ன வடிவாகிச் சிவபெருமானுடைய திருமுடியைத் தேடும்போது ஆயிரம்வருடமாயின, அப்போது பிரமா, சுரன் தேவரீருடைய திருமுடியை அறிந்தேனல்லேன்; தாயும் நீரே, தந்தையுந் தேவரீரே, உடன்பிறந்தவரும் நீரே, பார்க்கின்றவரும், கேட்கின்றவரும், கர்த்தாவாக இருப்பவரும், காரியங்களைச் செய்கின்றவரும், தேவரீரே; மூத்தவரும் நீரே, உயர்ந்தவருந் தேவரீரே என்று துதித்தனர். இங்ஙனம் யாவனறிவானோ அவன் சிவசாயுச்சியத்தை யடைகின்றான்; சிவசாயுச்சியத்தை யடைகின்றான் என்பதாம்.

விஷ்ணு தேடியது.

## இருக்குவேத சுலோகம்.

விஷ்ணூர்ணை வாராஹம் ரூபமாஸ்தாய பூமிம்விதாம யன் சஹஸ்ரம் ஸமா ஆசன், பாதாந விஷ்ண பப்ராபூத்வா த்வமேமாமேதாவி, த்வமேவவிதாவி, த்வமேவாமுகுதாவி த்வமேமா ஜ்யேஷ்டோவி, த்வமேவ சிரேஷ்டோவி, யமேவம் மஹிமாநம், வேதாத்ருஷ்டாடயதி. விஜ்ஞாதாவத் தர்த்தாபவதி, காரயதாபவதி, யமேவம் வேதா சிவசாயுஜ்யமாப்நோதி, சிவசாயுஜ்யமாப்நோதி.

(இதன் மொழிபெயர்ப்பு.)

விட்டுணு பன்றிவடிவாகப் பூமியைத் தோண்டிச்சேனையில் ஆயிரம் வருடமாயினும் சிவனுடைய பாதங்களை, தேடுவதில் விருப்பமுடையவராகிய விட்டுணுவானவர் தாயுநீர், தந்தையுநீர், சகோதரனும் நீர், மூத்தவருமுயர்ந்தவரும் நீர் என்று துதித்தனர், இந்த மகிமையை யாவன் அறிவானே அவனே, காண்கின்றவனாகின்றான் அவனே புரிந்தவனாகின்றான், அவனே கர்த்தா ஆகின்றான் அவனே காரியங்களைச் செய்கின்றவனாகின்றான் இங்ஙனமறிவானாயின் அவன் சிவசாயுச்சியத்தை யடைகிறான்; சிவசாயுச்சியத்தை யடைகின்றான் என்பதாம்.

## பாஸ்கர சங்கிதைச் சுலோகம், (வேதபாகம்.)

ப்ரஹ்மா விட்டுணு, ரஜஸ பந்த வைசிரவ மஹரி தவிப த்ருஸ்ய திஜோ வேதாஸ்தாணூ ருத்ரஸ் திஷ்டதி நஸ்மிக்ரோப்தா, த்ரஷ்டாஸ் தாணூ ரூபாரய்யாத்தம் ;

தஸ்ய தத்ர் த்ராபி சௌ நிக்ருக்ஷ வராஹோ விஷ்ணுர் பிரமோஞ்ஜ
பூமௌ ப்ரஹ்மோர்த்வம் அப்யாத பூமோ நிவாராஸூக் ருத்திர.

(இதன் மொழிபெயர்ப்பு.)

பிரம விட்டுணுக்கள் இராசத குண மேலிட்டுப் போர் செய்யாநிற்கும்போது, இருவருக்கு நடுவில் ஸ்ரீருத்ரபகவான் புவனங்களைக் காக்குமாறு அக்கினித் தம்பமாகத் தோன்றினர். அதனைப் பார்த்த மாத்திரத்தில் தங்கள் போரை நிறுத்திவிட்டுத் தூரத்தே விலகிவிட்டனர். பின்னர் விட்டுணு பன்றியாகிய பூமியிலிருந்து கீழே தேடிக் கொண்டு சென்றார். பிரமன் அன்னப்பறவையாகிப் பூமியிலிருந்து மேலே தேடிச்சென்றான் வைணவர்கள் வேதப் பிரமாணங்கள் இல்லையென்பதற்காக இவைகாட்டினும்.

அதர்வண வேத முடிபாகிய

## சரப உபநிடதம்.

யத்பாதாம்போருஹத்வந்த்வம் ம்ருக்யதே விஷ்ணுநாசஹ
ஸ்துத்வாஸ்துத்யம் மஹேசாநமவாங்மனசகோசரம்
பக்த்யாநம்ரதநோர் விஷ்ணோ: ப்ரஸாதமகரோத்விபு:

இதன் கருத்து.

யாதொருவருடைய (சிவபெருமானது) பாதத்தாமரை யிரண்டும் விஷ்ணுவினாலே தேடப்பட்டன வாக்கும் மனத்திற்கும் எட்டாத சிவபெருமானைத் தோத்திரஞ் செய்து அன்பினால் வணங்கிய விட்டுணுவினுக்குப் பிரபுவாகிய அருணாசலேசுரர் அருள் புரிந்தனர்.

இட்டம் பொருந்தவும் பிரதக்ஷிணஞ் செய்பவர்கள் பண் டிதராயினும் மூர்க்கனாயினும் பாதகனாயிருந்தாலும், குலந் தினுயர்ந்தோனாயினும், தாழ்ந்தோனாயினும் தேவர்களும் வணங்காநின்ற அருணாசலத்தைப் பிரதக்ஷிணஞ்செய்வானா யின் அளவில்லாத கோடி பாவங்களெல்லாம் மாறுதலு மென்பது சத்தியம். பிரதக்ஷிணஞ்செய்யும்போது மிதியடி, செருப்பு இவை தரிக்கலும், குதிரை, யானை, ஒட்டை, வண்டி, பல்லக்கு இவைகளிலேறிச்சென்றலும், குடைபிடிக் கலும் செய்தல் பாவமாம். மாகிதன் என்னும் அரசன் அவ் வாறே குதிரையிலேறிப் பிரதக்ஷிணஞ் செய்ததனால் நரகத்தில் விழுந்தான். குதிரை சிவலோகஞ்சார்ந்தது. அங்கே கணங்களுக்கெல்லாம் அதிபதியாய் விளங்கிற்று. ஆதலால் அன்பர்கள் மிதியடி முதலானவற்றை விடுத்துச் சிவபெரு மானது திருவடிகளைத் தியானித்துச் செய்யின் புத்தி, சித்தி, முத்தி எளிதில் கைகூடும்.

பிரதக்ஷிணஞ்செய்யும்போது ஓரடி வைத்தலால் மனத் தினாற்செய்த பாவங்களெல்லாம் நீங்கும்; இரண்டடி வைத்த லாற் சொற்களாலாகிய பாவங்களெல்லாம் நீங்கும். மூன்ற டிவைப்பினால் உடலினாற்செய்த தீமைகள் யாவும் போம். பிராதக் காலத்திலே (விடியற்காலம்) வலஞ் செய்யின் குற் றங்கள் நீங்கும். உச்சிக்காலத்திற் செய்யின் இட்டசித்தி கள் விளையும். மாலைக்காலம் வலம் வரின் மிகுதியாகத் தழை த்துவளருந் தனம், தானியம் முதலாயின பெற்று வாழ்வர். ஞாயிற்றுக்கிழமையில் வலம் வந்தோர் மெய்யிலுற்ற நோய்க

# சைவசமயம்.

---

பிறப்பும் இறப்பும் உடையவர்கள் பசுக்கள். பசுக்கள் எண்ணிலாதவர்கள்: பசுக்களாவார்—தேவர்கள் முதலாகக் கிருமிகள் ஈறாக உள்ள சீவர்கள்.

பிறப்பும் இறப்பும் இல்லாதவர் பதி. பதி ஒருவரே. அந்தப்பதி சிவபெருமான். சிவபெருமானுக்குப் பசுக்களெல்லாம் என்றும் அடிமைகள். சிவபெருமான் அந்தப் பசுக்கள்தோறும் நிறைந்து நின்று அவர்களை எல்லாம் ஆளுந் தலைவர். ஆதலால் சிவபெருமான் ஒருவரே பசுபதி. (பசுக்களுக்குப் பதி) பசுபதி:—பசு-ஆன்மா, பதி-தலைவன்.

இந்த உண்மையை விசுவசித்துச் சிவபெருமானை வழிபடுகிறமார்க்கமே சைவசமயம். பலரைப் பரம் என்று கொண்டு வணங்குகிற சமயம் சைவசமயம் அன்று; சிவபெருமானிலும் உயர்ந்தவர் உண்டு என்றாவது, சிவபெருமானுக்குச் சமத்துவம் உடையவர் உண்டு என்றாவது கொள்வது சிவத்துரோகம்.

சிவபெருமானின் வேறாகாத திருவருளே சிவசத்தி. அந்தச் சிவசத்தியே பார்வதி தேவியாரென்று சொல்லப்படும். சிவபெருமான் ஆன்மாக்களுக்கு அருள்செய்யும் பொருட்டுக் கொண்டருளிய மூர்த்தங்கள்:—

விநாயகக்கடவுள், சுப்பிரமணியக்கடவுள், வைரவக்கடவுள், வீரபத்திரக்கடவுள் இவர்களுக்குச் செய்யும் வணக்கம், சிவபெருமான் ஒருவரைக் குறித்த வணக்கமேயாம் (சத்தி-வல்லமை.)

முப்பத்து முக்கோடி தேவர்களைப் பரமென்று கொண்டு வணங்குகிறபடியாற் சைவசமயம் என்று மூடர்கள் பகர்கின்றனர்கள். மனிதர்களைப்போலவே பிறந்தும் இறந்தும் உழலுகிற தேவர்களைப் பரம என்றுகொள்வது சைவசமயத்துக்கு முற்றும் விரோதம்.

சைவசமயிகளை அஞ்ஞானிகள் என்று கிறிஸ்தவர்கள் வழங்குகிறார்கள் அஞ்ஞானி என்கிற சொல்லுக்குப் பொருள் மெய்க்கடவுளை அறிகிற அறிவு இல்லாதவன். கிறிஸ்தவர்கள் தங்கள் கருத்தின்படி தாங்கள் சைவசமயிகளை அஞ்ஞானிகள் என்று வழங்கலாம் என்றால், சைவசமயிகளுந் தங்கள் கருத்தின்படி தாங்கள் கிறிஸ்தவர்களை அஞ்ஞானிகளென்று வழங்கலாம்.

சைவசமயிகள் என்று பெயர் இட்டுக்கொண்டு, அநேக மூடர்கள், உயிர்ப்பலி ஏற்கிற துட்டதேவதைகளையும் காடன், மாடன், சுடலைமாடன், காட்டேறி, மதுரைவீரன், கறுப்பன், பதினெட்டாம்படிக் கறுப்பன், சங்கிலிக் கறுப்பன், பெரியதம்பிரான், முனி கண்ணகி பேய்ச்சி முதலானவர்களையும் வணங்குகிறார்கள். இந்தியாவில் அநேக மூடர்கள் மகமதியர்களுடைய பள்ளிவாயிலைச் சேவிக்கிறார்கள். இலங்கையில் அநேக மூடர்கள் ரோமான் கத்தோலிக்கருடைய

மரிமை கோயிலுக்குக் காணிக்கைசெலுத்துகிறார்கள். இவர்கள் எல்லாருஞ் சிவத்துரோகிகள், இவர்களே அஞ்ஞானிகள்.

சைவசமயத்தைத் தமிழ்ச்சமயம் என்றும், சைவசமயக் கோயிலைத் தமிழ்க்கோயில் என்றும், அறிவில்லாத ஜனங்கள் வழங்குகிறார்கள். தமிழ் என்பது ஒருசமயத்தின் பெயரன்று ஒருபாஷையின்பெயர் (தமிழ்-இனிமை).

பெறுதற்கரிய மனிதப் பிறவியைப் பெற்றும், மிகமேலாகிய சைவசமய மரபிலேபிறந்தும், சைவசமயம் இப்படிப்பட்டது, அந்தச் சமயக்கடவுள் இப்படிப்பட்டவர், அவரை வழிபடுகிறமுறைமை இப்படிப்பட்டது என்று, ஆராய்ந்து அறிந்துகொண்டு சைவசமயத்தை அனுட்டியாது, நேர்ந்த நேர்ந்தபடி நடப்பது, ஐயையோ நரகத்துன்பத்துக்குக் காரணமன்றோ

சைவசமயிகள் சைவசமயத்தை அறியாது கெடுவதற்குக் காரணம், சைவசமயத்தைச் சைவசமயாசாரிகள் பிரசங்கஞ் செய்யாது விடுதலே யாதாயினும் ஒரு சமயத்தை அறிந்து பிரசங்கஞ் செய்யாதவர்கள், அந்தச் சமயத்துக்குத் தாங்கள் குருமார்கள் என்று சொல்லிக்கொண்டு திரிவதும், அந்தக் குருத்துவத்துக்கு உரியமரியாதையையும் தாங்கள்பெற விரும்புவதும் என்ன பரிதாபம்! பரிதாபம்!!

சிவமயம்.

# சைவசமயி.

விபூதி உருத்திராக்கம் தரிப்பது மாத்திரமே சைவசமயிக்கு இலக்கணம் என்று சிலர் எண்ணுகிறார்கள்.

விபூதி உருத்திராக்கந் தரிப்பது மற்சமாமிசம் புசியாதுவிடுவது இந்த இரண்டுமாத்திரமே சைவசமயிக்கு இலக்கணம் என்று வேறுசிலர் எண்ணுகிறார்கள்.

விபூதி உருத்திராக்கந் தரிப்பது, மற்சமாமிசம் புசியாதுவிடுவது, மற்சமாமிசம் புசிக்கிறவர்கள் காணாதிருக்கும்படி போசனஞ்செய்வது இந்த மூன்று மாத்திரமே சைவசமயிக்கு இலக்கணம் என்று மற்றுஞ் சிலர் எண்ணுகிறார்கள்.

## சைவசமயிக்குரிய

முக்கியவிலக்கணங்களாவன:—

க. கொலை, களவு, கள்ளுண்ணல், மற்சமாமிசம் புசித்தல், வியபிசாரம், பொய் முதலாகிய பாவங்களை மரணபரியந்தம் விலக்கி நடப்பது.

உ. உயிர்களுக்கு இரங்குதல், மெய்பேசுதல், வறியவர்களுக்கு ஒருபிடி அன்னமாவது கொடுத்தல், செய்நன்றி அறிதல், இந்தக்கருமங்களை மரணபரியந்தம் பாதுகாத்து நடப்பது.

௩ பிதா, மாதா, பாட்டன், பாட்டி, தமையன், மாமன், உபாத்தியாயர், குரு, அரசன் முதலிய பெரியோர்களை மரணபரியந்தம் உபசரிப்பது.

௪. சிவதீக்ஷை பெறுங்கொள்வது

௫ விபூதி உருத்திராக்ஷந்தரிப்பது.

௬ சந்தியாவந்தனை, (அனுஷ்டானம்) சிவபூசை பஞ்சாக்ஷரசெபம், சிவஸ்தோத்திரம் இவைகளை மரணபரியந்தம் நித்தமும் ஒரு பத்துநிமிஷநேரத்திலாவது மனதை ஒடுக்கி விதிப்படி அன்புடன் செய்துமுடிப்பது

௭ நித்தமுமாவது புண்ணிய காலங்களிலாவது சிவலிங்கப் பெருமானை அன்புடன் விதிப்படி வலஞ்செய்து வணங்கித் துதிப்பது.

௮. சைவவினாவிடை, சிதம்பரமான்மியம், பெரிய புராணம் முதலாகிய புத்தகங்களை வாசித்தாவது கேட்டாவது அறிவது.

௯ சிவபெருமானுடைய மகிமையையும் புண்ணிய பாவங்களையும் சிவபெருமானை வழிபடுமுறைமையையும் அறிவிக்கிற சைவப்பிரசங்கங்களைக் கேட்டுச் சிந்திப்பது.

௧௦ சிவநிந்தை, சிவசாத்திரநிந்தை, குருநிந்தை, சிவனடியார்நிந்தை இவைகளைக்கேளாது நீங்கிவிடுவது

௧௧. திருஞானசம்பந்தமூர்த்திநாயனார், திருநாவுக்கரசுநாயனார், சுந்தரமூர்த்திநாயனார், மாணிக்கவாசகசுவாமி

கள் என்னுஞ் சைவசமயகுரவர் நால்வருடைய திருநக்ஷத்திரங்களிலே, அவரவருடைய சரித்திரத்தைக் கேட்டுச் சிவனடியார் ஒருவருக்காவது அன்னங் கொடுத்து, விரதத்துடன் இருப்பது.

கஉ. செய்யத்தகாத பாவத்தைச் செய்தாலும் செய்யத்தக்க புண்ணியத்தைச் செய்யாதுவிட்டாலும், மனம்பதைபதைத்து அஞ்சி நடுநடுங்கி குருவை அடுத்து அவர் சிவாகமப்பிரகாரம் விதித்த பிராயச்சித்தத்தை விசுவாசத்துடன் செய்துகொள்வது.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# அநாசாரம்.

1 மற்சம் மாமிசம் புசித்தல்.

2 கள் சாராயங் குடித்தல்.

3 மற்சம் மாமிசம் புசிப்பவர், கள்ளுஞ் சாராயங் குடிப்பவர், தாழ்ந்தசாதியர், அன்னிய சமயிகள் என்கிற இவர்களிடத்தாவது, இவர்களுடன் இருந்தாவது, இவர்கள் காணவாவது போசனம் பண்ணுதல்.

4 சனனசௌசம் மரணசௌசம் உடையவரிடத்தே போசனம் பண்ணுதல்.

5 போசனஞ்செய்தவுடனே எச்சில் தெளியாதுவிடுதல்.

6 எந்தப் பாத்திரத்தையாவது எச்சிலாக்குதல்.

7 பலகாரம் பழம் முதலியவைகளை எச்சில்பண்ணிப் புசித்தல்.

8 புகையிலைச் சுருட்டுப் பிடித்தல்.

9 வெற்றிலைப்பாக்கு வாயிலிருக்கச் சயனித்தல்.

10 காலையிலே தந்தசுத்தி பண்ணுமுன்னே வெற்றிலைப்பாக்கு போடுதல்.

11 வாயோடு கையையுங் கையோடு பாத்திரத்தையும் அணைத்து எச்சில்பண்ணித் தண்ணீர் குடித்தல்.

12 வீட்டுமுற்றத்திலும் கிணற்றங்கரையிலும் குளக்கரையிலும், ஆற்றங் கரையிலும், பூந்தோட்டத்திலும், திருவீதியிலும், எச்சில் உமிழ்தல், மலசலங் கழித்தல்.

13 ஸ்நானத்துக்குஞ் சமையலுக்கு முபயோகப்படுகிற சலத்திலே சௌசம் பண்ணுதல்.

14 கிணற்றங்கரையிலே சௌசம்பண்ணுதல்.

15 சௌசத்தின் பொருட்டுப் பாத்திரத்திலே சலம் கொண்டு வைத்துக்கொள்ளாது மலசலங் கழித்தல்.

16 சௌசஞ் செய்தவுடனும் வாய்கொப்பளித்துக் கால்கழுவாது விடுதல்.

17 க்ஷௌரம் பண்ணுவித்துக்கொண்டாலும் துக்க வீட்டுக்குப் போனாலும் உடுத்தவஸ்திரத்துடனே முழுகாதுவிடுதல்.

18 முகக்ஷௌரம் மாத்திரம் பண்ணுவித்துக் கொள்ளுதல்

19 மத்தியானத்துக்குப்பின் க்ஷௌரம் பண்ணுவித்தல்.

20 தைச்சங்கிராந்தியிலும் ஆசௌசமுடிவிலும் பழையமட்பாண்டங்களைத் தள்ளாது விடுதல்.

21 மட்பாண்டங்களை எல்லாருங் காணும்படி வெளியில் வைத்தல்.

22 பாண்டங்களை நாய்காகம் முதலியவைகளால் தீண்டவிடுதல்.

23 எச்சில் முதலியவைகளை முற்றத்திலேதுப்பாது வழியிலே துப்புதல்.

24 கஞ்சா அபினி உண்ணல்.

இந்த அநாசாரங்களை யெல்லாரும் விலக்கித் திருத்தம் உற டக்கக் கடவார்கள்.

உ

சிவமயம்.

திருக்கோயிலிலும்

திருவீதியிலும் செய்யத்தகாத

# குற்றங்கள்.

1 ஸ்நானஞ் செய்யாதுபோதல்.
2 தோய்த்துலராத வேட்டி தரித்துக்கொண்டுபோதல்.
3 கால் கழுவாது போதல்.
4 ஆசௌசத்துடனே போதல்.
5 தலையில் வஸ்திரந் தரித்துக்கொள்ளுதல்.
6 சட்டையிட்டுக் கொள்ளுதல்.
7 போர்த்துக்கொள்ளுதல்.
8 மேல்வேட்டி போட்டுக்கொள்ளுதல்.
9 பாதரக்ஷை யிட்டுக்கொள்ளுதல்.
10 வாகனமேறிக் கொள்ளுதல்.
11 குடைபிடித்துக் கொள்ளுதல்.
12 வெற்றிலைப்பாக்கு அருந்துதல்.
13 துப்புதல்.
14 மலசலங் கழித்தல்.
15 மூக்குநீர் சிந்துதல்.
16 மயிர்கோதி முடித்தல்.
17 சூதாடுதல்.
18 சிரித்தல்.
19 சண்டையிடுதல்.
20 வீண்வார்த்தை பேசுதல்.
21 காமப்பற்று வைத்தல்.
22 காலை நீட்டிக்கொண்

23 சயனித்தல்.

24 ஆசனத்திருத்தல்.

25 சுவாமிக்கும் பலிபீடத்துக்கும் குறுக்கேபோகுதல்.

26 சுவாமிக்கும் பலிபீடத்துக்கும் இடையிலே நமஸ்காரம் பண்ணுதல்.

27 சுவாமிக்கு நேராகக் காலை நீட்டி நமஸ்காரம்பண்ணுதல்.

28 சுவாமிக்குக் காலை நீட்டி அங்கப்பிரதக்ஷணம் பண்ணுதல்.

29 நிருமாலியத்தைக் கடத்தல்.

30 நிருமாலியத்தை மிதித்தல்.

31 தூபி, துஜஸ்தம்பம், பலிபீடம், விக்கிரகம் இவைகளின் நிழலை மிதித்தல்.

32 விக்கிரகத்தைத் தொடுதல்.

இவைகளை அருணகிரிபுராணம் வலம்புரிச் சருக்கத்தில் 90-கரு செய்யுள் முதலியவற்றிலே பார்க்கக்காணலாம்.

இந்தக் குற்றங்களைச் செய்தவர்கள் நரகத்திலே தண்டிக்கப்படுவார்கள் என்று ஆகமங்களும் புராணங்களுஞ் சொல்லுகின்றன. குளிக்கப்போய்ச் சேறுபூசிக் கொள்வதுபோலச் சுவாமி தரிசனமாகிய புண்ணியஞ் செய்யப்போய்ப் பாவத்தைத் தேடிக்கொள்வது புத்தியன்று. எல்லாரும் இந்தக் குற்றங்களை விட்டு விதிப்படி சுவாமி தரிசனஞ்செய்து, திருவருள் கடாக்ஷம்பெற்று உய்யக்கடவர்கள்.

இந்தியாவிலே, உத்தியோகஸ்தர்கள் அநேகச் சுவாமி சந்நிதானத்திலே, விதிக்கு விரோதமாக, சட்டை இட்டுக்கொண்டும், போர்த்துக்கொண்டும், மேல்வேட்டி போட்டுக்கொண்டும், தலையில் வஸ்திரந் தரித்துக்கொண்டும், பாதரக்ஷை இட்டுக்கொண்டும், குடை பிடித்துக்கொண்டும் போகிறார்கள். அவர்கள், தங்கள் சமயத்தில் [illegible] உடையவர்களானால், இப்படிச் செய்வார்களோ இறந்த

வர்களுள்ளே கவர்னர் முதலிய பெரிய உத்தியோகஸ்தர்களுந் தங்கள் கோயில்களுக்குத் தங்கள் சமயாக்கிரமப்படியே போவதை அவர்கள் காணவில்லையா? தங்களிற் சூழ்ந்த மனுஷர்கள் தங்களெதிரே பாதரக்ஷை இட்டுக்கொண்டாயினுங் குடைபிடித்துக் கொண்டாயினும் நின்றால், அவர்களைக் கோபிக்கிறார்களே! இதுகுற்றம் என்று கொண்டவர்கள் இந்தக் குற்றத்தைத் தாங்கள் சுவாமி சந்நிதானத்திலே செய்யத்துணிவது என்ன செருக்கு!!

திருக்கோயிற்றன்னின் மலஞ்சலம்விடுதல் உமிழ்தல் திருவிளக்குச்சாயை பிம்பச்சாயைகடத்தல், ஒருக்காலாய் வலம்வருதல் ஓடி வலம்வருதல் ஒண்டொடி வேசியாப் புணர்தலுற்றவரை நினைத்தல், மருக்கமழ் நின்மாலியத்தைச் சிவன்றனைக் கோமுகையை வழிகடத்தலாடையினறி மருவுதல் கான்றுமிழ்தல். பெருக்கநீறணியாமை பெலிப்பற்று மிதித்தல் பெலிபீடங் குறுக்கிடுதல் பெருமான் சந்நிதியில்,

ஏறுடனே தூபி துசதண்டு பெலிபீடம் இலிங்கமிவைசாயைமிதித்தேகுதல் பொய்ம்மொழிதல். பேறிழவேயுசூதி பிறர்தாரத்தை விரும்பல் பெரும்புனலாவிருபாதங் கழுவாண்மசயனம், தேறுபாகிலை தின்றம்பலமுமிழ்தறிருடல் திருக்கோயினியமத்தைச் செய்தவத்தோரா தவகட், காறணியுஞ்சடைமுடியா ராகமத்திறசொலுமிவ்வா றைந்தோடிரண்டுமெற்று தாகாவன்றே.

இக்குற்றங்கள் அபுத்திபூர்வமாகநேரின் வேதத்திலுள்ள ஊருசதிரமந்திரத்தை ஆயிரமுருச்செபிக்கின் முற்றுமகலும். அவ்வேத வாக்கியமந்திரங்களை உச்சரித்தற்கு அருகரல்லாதவர் அகோர மந்திரத்தை ஆயிரமுருச்செபிக்கக்கடவர் இக்குற்றங்களைப் புத்திபூர்வகமாகவேயியற்றின் தப்பாது எரிவாய் நிரயத்தில் அழுந்துவது திணணம், இதற்குப் பரிகாரமுமில்லை என்பது வேதாகம புராணாதிக

ளின் றுணிபாகலின், ஆலயத்திலே புண்ணியத்தைத் தேடிப்போய் நகைசெயல்களால் பாவத்தைத் தேடிக்கோடல் முறையன்று. ஆகையால் இவற்றுள் ஒன்றனையியற்றாது தமக்கு விதித்தவாறே அவ்வவ்வெல்லையினின்று சுவாமி தரிசனஞ்செய்து திருவருளைப் பெற்றுய்வதே கடமையாம். சுபம்.

திருக்கோயிற் குற்றங்கள்

முற்றிற்று.



தேவர்கள் முனிவர்கள். சித்தர்கள் முதலியயாவர்களும் புடைசூழ உமாமகேஸ்வரி சமேதராய் பரமசிவன் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ கயிலையங்கிரி—1.

சிவமயம்

திருச்சிற்றம்பலம்.

திருவண்ணாமலையில்

# திருஞானசம்பந்தசுவாமிகள்

அருளிச்செய்த

# தேவாரத்திருப்பதிகம்

சுவாமிபெயர்—அருணாசலேசுரர்.

தேவிபெயர்—உண்ணாமுலையம்மை.

பண்-நட்டபாடை. (முதற்றிருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

உண்ணாமுலையுமையாளொடுமுடனாகியவொருவன்
பெண்ணாகியபெருமான்மலைதிருமாமணிதிகழ
மண்ணார்ந்தனவருவித்திரண்மழலைம்முழவதிரு
மண்ணாமலைதொழுவார்வினைவழுவாவண்ணமறுமே. ௧)

தேமாங்கனிகடுவன்கொளவிடுகொம்பொடுதீண்டித்
தூமாமழைதுறுவன்மிசைசிறுநுண்டுளிசிதற
வாமாம்பிணையணையும்பொழிலண்ணாமலையண்ணல்
பூமாங்கழல்புனைசேவடிநினைவார்வினையிலரே. ௨)

பீலிம்மயில்பெடையோடுறைபொழில்சூழ்கழைமுத்தஞ்
சூலிம்மணிதரைமேனிறைசொரியும்விரிசார
லாலிம்மழைதவழும்பொழிலண்ணாமலையண்ணல்
காலன்வலிதொலைசேவடிதொழுவாரனபுகழே. ௩)

உதிரும்மயிரிடுவெண்டலைகலனாவுலகெல்லா
மெதிரும்பலியுணவாகவுமெருதேறுவதல்லான்
முதிருஞ்சடையிளவெண்பிறைமுடிமேல்கொளவடிமே
லதிருங்கழலடிகட்கிடமண்ணாமலையதுவே. (௪)

மரவஞ்சிலைதரளம்மிகுமணியுந்துவெள்ளருவி
யரவஞ்செயமுரவம்படுமண்ணாமலையண்ண
லுரவஞ்சடையுலவும்புனலுடனாவதுமோரார்
குரவங்கமழ்நறுமென்குழலுமைபுல்குதல்குணமே. (௫)

பெருகும்புனலண்ணாமலைபிறைசேர்கடனஞ்சைப்
பருகுந்தனைதுணிவார்பொடியணிவாரதுபருகிக்
கருகும்மிடறுடையார்கமழ்சடையார்கழல்பரவி
யுருகும்மனமுடையார்தமக்குறுநோயடையாவே. (௬)

கரிகாலனகுடர்கொள்வனகழுகாடியகாட்டி
னரியாடியநகுவெண்டலையுதையுண்டவையுருள
வெரியாடியவிறைவர்க்கிடமினவண்டிசைமுரல
வரியாடியகண்ணாளொடுமண்ணாமலையதுவே. (௭)

ஒளிறூபுலியதளாடையனுமையஞ்சுதல்பொருட்டாற்
பிளிறூகுரன்மதவாரணவதனம்பிடித்துரித்து
வெளிறூபடவிளையாடியவிகிர்தனிராவணனை
யளறூபடவடர்த்தானிடமண்ணாமலையதுவே. (௮)

விளவார்கனிபடநூறியகடல்வண்ணனும்வேதக்
கிளர்தாமரைமலர்மேலுறைகேடில்புகழோனு
மளவாவணமழலாகியவண்ணாமலையண்ண
றளராமுலைமுறுவலுமைதலைவன்னடிசரணே. (௯)

வேர்வந்துறமாசூர்தரவெயினின்றுழல்வாரு
மார்பம்புதைமலிசீவரமறையாவருவாரு
மாரம்பர்தமுரைகொள்ளன்மினண்ணாமலையண்ணல்
கூர்வெண்மழுப்படையானலகழல்சேர்வதுகுணமே. (௧௦)

வெம்புந்தியகதிரோனொளிவிலகும்விரிசார
லம்புந்திமூவெயிலெய்புனனண்ணாமலைதனைக்
கொம்புந்துவகுயிலாலுவகுமிர்காழியுண்ஞான
சம்பந்தனதமிழ்வல்லவரடிபேணுதறவமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

பண்-தக்கேசி. (முதற்றிருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

பூவார்மலர்கொண்டடியார்தொழுவார்புகழ்வார்வானோர்கண்
மூவார்புரங்களெரித்தவன்று மூவர்க்கருள்செய்தார்
தூமாமழைநின்றதிரவெருவித்தொறுவின்னிரையோடு
மாமாம்பிணைவந்தணையுஞ்சாரலண்ணாமலையாரே. (௧)

மஞ்சைப்போழ்ந்தமதியஞ்சூடும்வானோர்பெருமானார்
நஞ்சைக்கண்டத்தடக்குமதுவுநன்மைப்பொருள்போலும்
வெஞ்சொற்பேசும்வேடர்மடவாரிதணமதுவேறி
யஞ்சொற்கிளிகளாயோவென்னுமண்ணாமலையாரே. (௨)

ஞானத்திரளாய்நின்றபெருமானல்லவடியார்மே
லூனத்திரளைநீக்குமதுவுமுண்மைப்பொருள்போலு
மேனத்திரளோடினமான்கரடியிழியுமிரவின்க
ணானைத்திரள்வந்தணையுஞ்சாரலண்ணாமலையாரே. (௩)

இழைத்தவிடையாளுமையாள்பங்கரிமையோர்பெருமானார்
தழைத்தசடையார்விடையொன்றேறித்தரியார்புரமெய்தார்
பிழைத்தபிடியைக்காணாதோடிப்பெருங்கைமதவேழ
மழைத்துத்திரிந்தங்குறங்குஞ்சாரலண்ணாமலையாரே. (௪)

உருவிற்றிகழுமுமையாள்பங்கரிமையோர்பெருமானார்
செருவிலொருகால்வளையவூன்றிச்செந்தீயெழுவித்தார்
பருவிக்குறவர்புனத்திற்குவித்தபருமாமணிமுத்த
மருவித்திரளோடிழியுஞ்சாரலண்ணாமலையாரே. (௫)

எனைத்தோரூழியடியாரேத்தவிமையோர்பெருமானார்
[illegible] ரபாவந்தீர்க்குநிமலருறைகோயில்
கனைத்தமேதிகாணாதாயன்கைம்மேற்குழலூத
வனைத்துஞ்சென்றுதிரளுஞ்சாரலண்ணாமலையாரே. (௬)

[illegible] கள்வருமேல்வினையோடு
[illegible]
மூங்கிலெழுந்தமுழவிச்சேணுசமுதகல்வரைகண்மே
லத்திப்பிறைவந்தணையுஞ்சாரலண்ணாமலையாரே. (௭)

மறந்தான்கருதிவலியைநினைந்துமாறாயெடுத்தான்றோ
ணிறந்தான்முரியநெரியவூன்றிநிறையவருள்செய்தா
றிறந்தான்காட்டியருளாயென்றுதேவரவர்வேண்ட
வறந்தான்காட்டியருளிச்செய்தாரண்ணாமலையாரே. (௮)

தேடிக்காணார்திருமால்பிரமன்றேவர்பெருமானை
மூடியோங்கிமுதுவேயுகுத்தமுத்தம்பலகொண்டு
கூடிக்குறவர்மடவார்குவித்துக்கொள்ளவம்மினென்
றாடிப்பாடியளக்குஞ்சாரலண்ணாமலையாரே. (௯)

தட்டையிடுக்கித்தலையைப்பறித்துச்சமணேநின்றுண்ணும்
பிட்டர்சொல்லக்கொள்ளவேண்டாபேணித்தொழுமின்கள்
வட்டமுலையாளுமையாள்பங்கர்மன்னியுறைகோயி
லட்டமாளித்திரள்வந்தணையுமண்ணாமலையாரே. (௰)

அல்லாடரவமியங்குஞ்சாரலண்ணாமலையானை
நல்லார்பரவப்படுவான்காழிஞானசம்பந்தன்
சொல்லான்மலிந்தபாடலானபத்துமிவைகற்று
வல்லாரெல்லாம்வானோர்வணங்கமன்னிவாழ்வரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

---

திருவண்ணாமலையில்

## திருநாவுக்கரசுசுவாமிகள் அருளிச்செய்த

திருநேரிசை. (௪-ம் திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

ஓதிமாமலர்கடூவியுமையவள்பங்காமிக்க
சோதியேதுளங்குமெண்டோட்சுடர்மழுப்படையினானே
யாதியேயமரர்கோவேயணியணாமலையுளானே
நீதியானின்னையல்லானினையுமாநினைவிலேனே. (௧)

பண்டனைவென்றவின்சொற்பாவையோர்பங்கநீல
கண்டனேகார்கொள்கொன்றைக்கடவுளேகமலபாதா
வண்டனேயமரர்கோவேயணியணாமலையுளானே
தொண்டனேனுன்னையல்லாற்சொல்லுமாசொல்லிலேனே. (௨)

உருவமுமுயிருமாகியோதியவுலகுக்கெல்லாம்
பெருவினைப்பிறப்புவீடாய்நின்றவெம்பெருமான்மிக்க
வருவிபொன்சொரியுமண்ணாமலையுளாயண்டர்கோவே
மருவிநின்பாதமல்லான்மற்றொருமாடிலேனே. (௩)

பைம்பொனே பவளக்குன்றே பரமனே பால்வெண்ணீறா
செம்பொனே மலர்செய்பாதா சீர்தருமணியேமிக்க
வம்பொனே கொழித்துவீழுமணியண்ணாமலையுளானே
யென்பொனே யுன்னையல்லாலேதுநானினைவிலேனே (௪)

பிறையணி முடியினானே பிஞ்ஞகா பெண்ணோர்பாகா
மறைவலா விறைவாவண்டார்கொன்றையாய்வாமதேவா
வறைகழ லமரரேத்துமணியண்ணாமலையுளானே
யிறைவனே யுன்னையல்லாலியாதுநானினைவிலேனே (௫)

புரிசடைமுடியின்மேலோர்பொருபுனல்கங்கைவைத்துக்
கரியுரிபோர்வையாகக்கருதியகாலகாலா
வரிகுலமலிந்தவண்ணாமலையுளாயலரின்மிக்க
வரியிருவரும்பணிசெய்பாதநான்மறப்பிலேனே. (௬)

இரவியுமதியும்விண்ணுமிருநிலம்புனலுங்காற்று
முரகமாமவனமெட்டுத்திசையொளியுருவமானா
யரவுமிழ்மணிகொள்சோதியணியண்ணாமலையுளானே
பரவுநின்பாதமல்லாற்பரமநான்பற்றிலேனே. (௭)

பார்த்தனுக்கன்றுநல்கிப்பாசுபதத்தையீந்தாய்
தீர்த்தமாப்பொலிவுகங்கைநெடுமுடிநிலாவவைத்தா
யார்த்துவந்தீண்டுகொண்டவணியண்ணாமலையுளானே
தீர்த்தனேநின்றனபாதத்திறமலாற்றிறமிலேனே. (௮)

பாலுநெய்முதலாய்மிக்கபசுவிலைந்தாடுவானே
மாலுநான்முகனுங்கூடிக்காண்கிலாவகையுணின்றா
யாலுநீர்கொண்டல்பூகமணியண்ணாமலையுளானே
வாலுடைவிடையாயுன்றன்மலரடிமறப்பிலேனே. (௯)

இரக்கமொன்றியாதுமில்லாக்காலனைக்கடக்தவெம்மா
னுரத்தினல்வரையையூக்கவொருவிரனுதியினலே
யரக்கனைநெரித்தவண்ணுமலையுளாயமரரேறே
சிரத்தினல்வணங்கியேத்தித்திருவடிமறப்பிலேனே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

இதுவுமது.

திருக்குறுந்தொகை. (நு-ம் திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

வட்டனைமதிசூடியைவானவர்
சிட்டனைத்திருவண்ணுமலையனை
யிட்டனையிகழ்ந்தார்புரமூன்றையு
மட்டனையடியேன்மறந்துய்வனே. (௧)

வானனைமதிசூடியமைந்தனைத்
தேனனைத்திருவண்ணுமலையனை
யேனனையிகழ்ந்தார்புரமூன்றெய்த
வானனையடியேன்மறந்துய்வனே. (௨)

மத்தனைமதயானையுரித்தவெஞ்
சித்தனைத்திருவண்ணுமலையனை
முத்தனைமுனிந்தார்புரமூன்றெய்த
வத்தனையடியேன்மறந்துய்வனே. (௩)

காற்றனைகலக்கும்வினைபோயறத்
தேற்றனைத்திருவண்ணுமலையனைக்
கூற்றனைக்கொடியார்புரமூன்றெய்த
வாற்றனையடியேன்மறந்துய்வனே. (௪)

மின்னனை வினைதீர்த்தெனையாட்கொண்ட
தென்னனைத் திருவண்ணாமலையனை
யென்னனை யிகழ்ந்தார்புர மூன்றெய்த
வன்னனை யடியேன் மறந் துய்வனே. (௫)

மன்றனை மதியாதவன் வேள்விமேற்
சென்றனைத் திருவண்ணாமலையனை
வென்றனை வெகுண்டார்புர மூன்றையுங்
கொன்றனைக் கொடியேன் மறந் துயவனே. (௬)

வீரனை விடமுண்டனை விண்ணவர்
தீரனைத் திருவண்ணாமலையனை
யூரனை யுணரார்புர மூன்றெய்த
வாரனை யடியேன் மறந் துய்வனே. (௭)

கருவினைக் கடல்வாய்விடமுண்டவெங்

யுருவினை யுணரார்புர மூன்றெய்த
வருவினை யடியேன் மறந் துய்வனே. (௮)

அருத்தனை யரவைந்தலைநாகத்தைத்

கருத்தனைக் கடியார்புர மூன்றெய்த
வருத்தனை யடியேன் மறந் துய்வனே. (௯)

அரக்கனை யலறவ்விரலூன்றிய
திருத்தனைத் திருவண்ணாமலையனை
யிரக்கமாயென்னுடலுறு நோய்களைத்
துரக்கனைத் தொண்டனேன் மறந் துய்வனே. (௧௦

திருச்சிற்றம்பலம்.

இதுவுமது.

திருக்குறுந்தொகை (௫-ம் திருமுறை.)

திருச்சிற்றம்பலம்.

பட்டியேறுகந்தேறிப்பலவில
மிட்டமாகவிரந்துண்டுழிதரு
மட்டமூர்த்தியண்ணாமலைகைதொழக்
கெட்டுப்போமவினைகேடில்லைகாண்மினே. (௧)

பெற்றமேறுவர்பெய்பலிக்கென்றவா
சுற்றமாயிருதொல்குழலாளொடு
மற்றந்தீர்குமண்ணாமலைகைதொழ
நற்றவத்தொடுஞானத்திருப்பரே. (௨)

பல்லிலோடுகையேந்திப்பலவில
மொல்லைசென்றுணங்கல்கவர்வாரவ
ரல்லநீர்க்குமண்ணாமலைகைதொழ
நல்லவாயினநம்மையடையுமே. (௩)

பாடிச்சென்றுபலிக்கென்றுநின்றவ
ரோடிப்போயினார்செய்வதொன்றென்கொலோ
வாடிப்பாடியண்ணாமலைகைதொழ
வோடிப்போகுநம்மேலைவினைகளே. (௪)

தேடிச்சென்றுதிருந்தடியேத்துமி
னாடிவந்தவர்நம்மையுமாட்கொள்வ
ராடிப்பாடியண்ணாமலைகைதொழ
வோடிப்போகுமதுள்ளவினைகளே. (௫)

கட்டியொக்குங் கரும்பினிடைத்துணி
வெட்டிவீணைகள் பாடும்விகிர்தனை
யட்டமூர்த்தியண்ணாமலைமேவிய
நட்டமாடியைநண்ணநன்காகுமே. (௬)

கோணிக்கொண்டையர் வேடமுன்கொண்டவர்
பாணிநட்டங்களாடும்பரமனை
யாணிப்பொன்னினண்ணாமலைகைதொழப்
பேணிநின்றபெருவினைபோகுமே. (௭)

கண்டந்தான்கறுத்தான் காலனாருயிர்
பண்டுகால்கொடுபாய்ந்தபரமனை
யண்டதோங்குமண்ணாமலைகைதொழ
விண்டுபோகுநம்மேலைவினைகளே.

மூர்த்திச்சென்றமுப்போதும்வணங்குதி
னத்திவாயொளியானண்ணாமலை
சிந்தியாவெழுவார்வினைதீர்த்திடுங்
கந்தமாமலர்சூடுங்கருத்தனே. (௯)

மறையினானொடுமாலவன்காண்கிலா
விறையுநீர்மையனின்றருள்செய்தவ
னுறையுமாண்பினண்ணாமலைகைதொழப்
பறையுநாஞ்செய்தபாவங்களானவே. (௧0)

திருச்சிற்றம்பலம்.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

சைவசமயாசாரியராகிய

# திருவாதவூர் மாணிக்கவாசக சுவாமிகள்

திருவண்ணாமலையில் அருளிச்செய்த

# திருவெம்பாவை.

[சத்தியைவியந்தது]

வெண்டளையான்வந்த இயற்றாவிணைக்கொச்சகக்கலிப்பா.

திருச்சிற்றம்பலம்.

ஆதியு மந்தமு மில்லா வரும்பெருஞ்
 சோதியை யாம்பாடக் கேட்டேயும் வாட்டடங்கண்
மாதே வளருதியோ வன்செவியோ நின்செவிதான்
 மாதேவன் வார்கழல்கள் வாழ்த்திய வாழ்த்தொலிபோய்
வீதிவாய்க் கேட்டலுமே விம்மிவிம்மி மெய்ம்மறந்து
 போதா ரமளியின்மே னின்றும் புரண்டிங்ங
னேதேனு மாகாள் கிடந்தாளென் னேயென்னே
 யீதேயெந் தோழி பரிசேலோ ரெம்பாவாய். (௧)

பாசம் பரஞ்சோதிக் கென்பா யிராப்பகனும்
 பேசும்போ தெப்போதிப் போதா ரமளிக்கே
நேசமும் வைத்தனையோ நேரிழையாய் நேரிழையீர்
 சீசீ யிவையுஞ் சிலவோ விளையாடி
யேசுமிட மீதோ விண்ணோர்க ளேத்துதற்குக்
 கூசுமலர்ப் பாதந் தந்தருள வந்தருளுந்
தேசன் சிவலோகன் றில்லைச்சிற் றம்பலத்து
 ளீசனார்க் கன்பார்யா மாரேலோ ரெம்பாவாய். (௨)

முத்தன்ன வெண்ணகையாய் முன்வந் தெதிரெழுந்தென்
னத்தனா னந்த னமுதனென் றள்ளூறித்
தித்திக்கப் பேசுவாய் வந்துன் கடைதிறவாய்
பத்துடையீ ரீசன் பழவடியீர் பாங்குடையீர்
புத்தடியோம் புன்மைதீர்த் தாட்கொண்டாற் பொல்லாதோ
வெத்தோநின் னன்புடைமை யெல்லோ மறியோமே
சித்த மழகியார் பாடாரோ நஞ்சிவனை
யித்தனையும் வேண்டு மெமக்கேலோ ரெம்பாவாய். (௩)

ஒண்ணித் திலநகையா யின்னம் புலர்ந்தின்றோ
வண்ணக் கிளிமொழியா ரெல்லாரும் வந்தாரோ
வெண்ணிக்கொ டுள்ளவா சொல்லுகோ மவ்வளவுங்
கண்ணைத் துயின்றவமே காலத்தைப் போக்காதே
விண்ணுக் கொருமருந்தை வேத விழுப்பொருளைக்
கண்ணுக் கினியானைப் பாடிக் கசிந்துள்ள
முண்ணெக்கு நின்றுருக யாமாட்டோ நீயேவந்
தெண்ணிக் குறையிற் றுயிலேலோ ரெம்பாவாய். (௪)

மாலறியா நான்முகனுங் காணா மலையினைநாம்
போலறிவோ மென்றுள்ள பொக்கங்க ளேபேசும்
பாலூறு தேன்வாய்ப் படிறீ கடைதிறவாய்
ஞாலமே விண்ணே பிறவே யறிவரியான்
கோலமு நம்மையாட் கொண்டருளிக் கோதாட்டுஞ்
சீலமும் பாடிச் சிவனே சிவனேயென்
றோலமிடினு முணரா யுணராய்காண்
ஏலக் குழலி பரிசேலோ ரெம்பாவாய். (௫)

மானேநீ நென்னலை நாளைவந் துங்களை
நானே யெழுப்புவ னென்றலு நாணாமே

திருவெம்பாவை

போன திசைபகரா யின்னம் புலர்ந்தின்றோ
  வானே நிலனே பிறவே யறிவரியான்
றானேவந் தெம்மைத் தலையளித்தாட் கொண்டருளும்
  வான்வார் கழல்பாடி வந்தோர்க்குன் வாய்திறவா
யூனே யுருகா யுனக்கே யுறுமெமக்கு
  மேனோர்க்குந் தங்கோனைப் பாடேலோ ரெம்பாவாய். (சு)

அன்னே யிவையுஞ் சிலவோ பலவமர
  ருன்னற் கரியா னொருவ னிருஞ்சீரான்
சின்னங்கள் கேட்பச் சிவனென்றே வாய்திறப்பாய்
  தென்னா வென்னாமுன்னந் தீசேர் மெழுகொப்பா
யென்னானை யென்னரைய னின்னமுதென் றெல்லோமுஞ்
  சொன்னோங்கேள் வெவ்வேறா யின்னந் துயிலுதியோ
வன்னெஞ்சப் பேதையர்போல் வாளா கிடத்தியா
  லென்னே துயிலின் பரிசேலோ ரெம்பாவாய். (எ)

கோழி சிலம்பச் சிலம்புங் குருகெங்கு
  மேழி லியம்ப வியம்பும்வெண் சங்கெங்கும்
கேழில் பரஞ்சோதி கேழில் பரங்கருணை
  கேழில் விழுப்பொருள்கள் பாடினோங் கேட்டிலையோ
வாழியீ தென்ன வுறக்கமோ வாய்திறவா
  யாழியா னன்புடைமை யாமாறு மிவ்வாறோ
ஊழி முதல்வனாய் நின்ற வொருவனை
  யேழைபங் காளனையே பாடேலோ ரெம்பாவாய். (அ)

முன்னைப் பழம்பொருட்கு முன்னைப் பழம்பொருளே
  பின்னைப் புதுமைக்கும் பேர்த்துமப் பெற்றியனே
யுன்னைப் பிரானாகப் பெற்றவுன் சீரடியோ
  முன்னடியார் தாள்பணிவோ மாங்கவர்க்கே பாங்காவோ

மன்னவரே யெங்கணவ ராவா ரவருகந்து
சொன்ன பரிசே தொழும்பாய்ப் பணிசெய்வோ
மின்ன வகையே யெமக்கெங்கோ னல்குதியே
லென்ன குறையு மிலோமேலோ ரெம்பாவாய். (௯)

பாதாள மேழினுங்கீழ் சொற்கழிவு பாதமலர்
போதார் புனைமுடியு மெல்லாப் பொருண்முடிவே
பேதை யொருபாற் றிருமேனி யொன்றல்லன்
வேதமுதல் விண்ணோரு மண்ணுந் துதித்தாலு
மோத வுலவா வொருதோழன் றொண்டருளன்
கோதில் குலத்தரன்றன் கோயிற் பிணாப்பிள்ளைகா
ளேதவனூ ரேதவன்பே ராருற்றா ராரயலா
ரேதவனைப் பாடும் பரிசேலோ ரெம்பாவாய். (௧௦)

மொய்யார் தடம்பொய்கை புக்குமுகே ரென்னக்
கையாற் குடைந்து குடைந்துன் கழல்பாடி
யையா வழியடியோம் வாழ்ந்தோங்கா ணாரழல்போற்
செய்யாவெண் ணீறாடி செல்வா சிறுமருங்குன்
மையார் தடங்கண் மடந்தை மணவாளா
வையாநீ யாட்கொண் டருளும் விளையாட்டி
னுய்வார்க ளுய்யும் வகையெல்லா முய்ந்தொழிந்தோ
மெய்யாமற் காப்பா யெமையேலோ ரெம்பாவாய். (௧௧)

ஆர்த்த பிறவித் துயர்கெடநா மார்த்தாடுந்
தீர்த்தனற் றில்லைச்சிற் றம்பலத்தே தீயாடுங்
கூத்தனிவ் வானுங் குவலயமு மெல்லோமுங்
காத்தும் படைத்துங் கரந்தும் விளையாடி
வார்த்தையும் பேசி வளைசிலம்ப வார்கலைக
ளார்ப்பரவஞ் செய்ய வணிகுழன்மேல் வண்டார்ப்பப்

பூத்திகழும் பொய்கை குடைந்துடையான் பொற்பாத
மேத்தி யிருஞ்சுனைநீ ராடேலோ ரெம்பாவாய். (௧௨)

பைங்குவளைக் கார்மலராற் செங்கமலப் பைம்போதா
லங்கங் குருகினத்தாற் பின்னு மரவத்தாற்
றங்கண் மலங்கழுவு வார்வந்து சார்தலினா
லெங்கள் பிராட்டியு மெங்கோனும் போன்றிசைந்த
பொங்கு மடுவிற் புகப்பாய்ந்து பாய்ந்துநஞ்
சங்கஞ் சிலம்பச் சிலம்பு கலந்தார்ப்பக்
கொங்கைகள் பொங்கக் குடையும் புனல்பொங்கப்
பங்கயப் பூம்புனல்பாய்ந் தாடேலோ ரெம்பாவாய். (௧௩)

காதார் குழையாடப் பைம்பூண் கலனாடக்
கோதை குழலாட வண்டின் குழாமாடச்
சீதப் புனலாடிச் சிற்றம் பலம்பாடி
வேதப் பொருள்பாடி யப்பொருளா மாபாடிச்
சோதி திறம்பாடிச் சூழ்கொன்றைத் தார்பாடி
யாதி திறம்பாடி யந்தமா மாபாடிப்
பேதித்து நம்மை வளர்த்தெடுத்த பெய்வளைதன்
பாதத் திறம்பாடி யாடேலோ ரெம்பாவாய். (௧௪)

ஓரொருகா லெம்பெருமா னென்றென்றே நம்பெருமான்
சீரொருகால் வாயோவாள் சித்தங் களிகூர
நீரொருகா லோவா நெடுந்தாரை கண்பனிப்பப்
பாரொருகால்வந்தனையாள் விண்ணோரைத்தான்பணியாள்
பேரரையற் கிங்ஙனே பித்தொருவ ராமாறு
மாரொருவ ரிவ்வண்ண மாட்கொள்ளும் வித்தகர்தாள்
வாருருவப் பூண்முலையீர் வாயார நாம்பாடி
யேருருவப் பூம்புனல்பாய்ந் தாடேலோ ரெம்பாவாய். (௧௫)

முன்னிக் கடலைச் சுருக்கி யெழுந்துடையா
ளென்னத் திகழ்ந்தெம்மை யாளுடையா ளிட்டிடையின்
மின்னிப் பொலிந்தெம் பிராட்டி திருவடிமேற்
பொன்னஞ் சிலம்பிற் சிலம்பித் திருப்புருவ
மென்னச் சிலைகுலவி நந்தம்மை யாளுடையா
டன்னிற் பிரிவிலா வெங்கோமா னன்பர்க்கு
முன்னி யவணமக்கு முன்சுரக்கு மின்னருளே
யென்னப் பொழியாய் மழையேலோ ரெம்பாவாய். (௧௬)

செங்கணவன் பாற் றிசைமுகன்பாற் றேவர்கள்பா
லெங்கு மிலாததோ ரின்பநம் பாலதாக்
கொங்குண் கருங்குழலி நந்தம்மைக் கோதாட்டி
யிங்குநம் மில்லங்க டோறு மெழுந்தருளிச்
செங்கமலப் பொற்பாதந் தந்தருளுஞ் சேவகனை
யங்கண் ணரசை யடியோங்கட் காரமுதை
நங்கள் பெருமானைப் பாடி நலந்திகழப்
பங்கயப் பூம்புனல்பாய்ந் தாடேலோ ரெம்பாவாய். (௧௭)

அண்ணா மலையா னடிக்கமலஞ் சென்றிறைஞ்சும்
விண்ணோர் முடியின் மணித்தொகைவீ றற்றாற்போற்
கண்ணா ரிரவி கதிர்வந்து கார்கரப்பத்
தண்ணா ரொளிமழுங்கித் தாரகைக டாமகலப்
பெண்ணாகி யாணா யலியாய்ப் பிறங்கொளிசேர்
விண்ணாகி மண்ணாகி யித்தனையும் வேறாகிக்
கண்ணா ரமுதமுமாய் நின்றான் கழல்பாடிப்
பெண்ணேயிப் பூம்புனல்பாய்ந் தாடேலோ ரெம்பாவாய்.

உங்கையிற் பிள்ளை யுனக்கே யடைக்கலமென்
றங்கப் பழஞ்சொற் புதுக்குமெம் மச்சத்தா

லெங்கள் பெருமா னுனக்கொன் றுரைப்போங்கேள்
ளெங்கொங்கை நின்னன்ப ரல்லார்தோள் சேரற்க
வெங்கை யுனக்கல்லா தெப்பணியுஞ் செய்யற்க
கங்குல்பக லெங்கண் மற்றொன்றுங் காணற்க
இங்கிப் பரிசே யெமக்கெங்கோ னல்குதியேல்
லெங்கெழிலென் ஞாயி றெமக்கேலோ ரெம்பாவாய். (௧௯)

போற்றி யருளுகநின் னாதியாம் பாதமலர்
போற்றி யருளுகநின் னந்தமாஞ் செந்தளிர்கள்
போற்றியெல் லாவுயிர்க்குந் தோற்றமாம் பொற்பாதம்
போற்றியெல் லாவுயிர்க்கும் போகமாம் பூங்கழல்கள்
போற்றியெல் லாவுயிர்க்கு மீறா மிணையடிகள்
போற்றிமா லுநான் முகனுங் காணாத புண்டரிகம்
போற்றியா முய்யவாட் கொண்டருளும் பொன்மலர்கள்
போற்றியா மார்கழிநீ ராடேலோ ரெம்பாவாய். (௨௰)

திருச்சிற்றம்பலம்.

இஃது

௸ சுவாமிகள்

திருவண்ணாமலையிலருளிச்செய்த

# திருவம்மானை.

## ஆனந்தக்களிப்பு.

[ஒப்புமைப்பற்றிவந்த வாரடித்தரவு கொச்சகக்கலிப்பா.]

செங்க ணெடுமாலுஞ் சென்றிடந்துங் காண்பரிய
பொங்கு மலர்ப்பாதம் பூதலத்தே போந்தருளி

யெங்கள் பிறப்பறுத்திட் டெந்தரமு மாட்கொண்டு
தெங்கு திரள்சோலைத் தென்னன் பெருந்துறையா
னங்கண னந்தணனா யறைகூவி வீடருளு
மங்கருணை வார்கழலே பாடுதுங்கா ணம்மானாய். (௧)

பாரார் விசும்புள்ளார் பாதாளத் தார்புரத்தா
ராராலுங் காண்டற் கரியா னெமக்கெளிய
பேராளன் றென்னன் பெருந்துறையான் பிச்சேற்றி
வாரா வழியருளி வந்தென் னுளம்புகுந்த
வாரா வமுதா யலைகடல்வாய் மீன்விசிறும்
பேராசை வாரியனைப் பாடுதுங்கா ணம்மானாய். (௨)

இந்திரனு மாலயனு மேனோரும் வானோரு
மந்தரமே நிற்கச் சிவனவனி வந்தருளி
யெந்தரமு மாட்கொண்டு தோட்கொண்ட நீற்றனாய்ச்
சிந்தனையை வந்துருக்குஞ் சீரார் பெருந்துறையான்
பந்தம் பறியப் பரிமேற்கொண் டான்றந்த
வந்தமிலா வானந்தம் பாடுதுங்கா ணம்மானாய். (௩)

வான்வந்த தேவர்களு மாலயனோ டிந்திரனுங்
கானின்று வற்றியும் புற்றெழுந்துங் காண்பரிய
தான்வந்து நாயேனைத் தாய்போற் றலையளித்திட்
டூன்வந்து ரோமங்க ளுள்ளே யுயிர்ப்பெய்து
தேன்வந் தமுதின் றெளிவி னொளிவந்த
வான்வந்த வார்கழலே பாடுதுங்கா ணம்மானாய். (௪)

கல்லா மனத்துக் கடைப்பட்ட நாயேனை
வல்லாளன் றென்னன் பெருந்துறையான் பிச்சேற்றிக்
கல்லைப் பிசைந்து கனியாக்கித் தன்கருணை
வெள்ளத் தழுத்தி வினைகடிந்த வேதியனைத்

தில்லைநகர் புக்குச் சிற்றம் பலமன்னு
மொல்லை விடையானைப் பாடுதுங்கா ணம்மானாய். (௫)

கேட்டாயோ தோழி கிறிசெய்த வாறொருவன்
றீட்டார் மதில்புடைசூழ் தென்னன் பெருந்துறையான்
காட்டா தனவெல்லாங் காட்டிச் சிவங்காட்டித்
தாட்டா மரைகாட்டித் தன்கருணைத் தேன்காட்டி
நாட்டார் நகைசெய்ய நாமேலை வீடெய்த
வாட்டான் கொண்டாண்டவா பாடுதுங்கா ணம்மானாய். (௬)

ஓயாதே யுள்குவா ருள்ளிருக்கு முள்ளானைச்
சேயானைச் சேவகனைத் தென்னன் பெருந்துறையின்
மேயானை வேதியனை மாதிருக்கும் பாதியனை
நாயான நந்தமமை யாட்கொண்ட நாயகனைத்
தாயான தத்துவனைத் தானே யுலகேழு
மாயானை யாள்வானைப் பாடுதுங்கா ணம்மானாய்.

பண்சுமந்த பாடற் பரிசு படைத்தருளும்
பெண்சுமந்த பாகத்தன் பெம்மான் பெருந்துறையான்
விண்சுமந்த கீர்த்தி வியன்மண்ட லத்தீசன்
கண்சுமந்த நெற்றிக் கடவுள் கலிமதுரை
மண்சுமந்து கூலிகொண் டக்கோமான் மொத்துண்டு
புண்சுமந்த பொன்மேனி பாடுதுங்கா ணம்மானாய். (அ)

துண்டப் பிறையான் மறையான் பெருந்துறையான்
கொண்டபுரி நூலான் கோலமா வூர்தியான்
கண்டங் கரியான்செம் மேனியான் வெண்ணீற்ற
னண்ட முதலாயி னந்தமிலா வானந்தம்
பண்டைப் பரிசே பழவடியார்க் கீந்தருளு
மண்டம் வியப்புறுமா பாடுதுங்கா ணம்மானாய். (௯)

விண்ணாளுந் தேவர்க்கு மேலாய வேதியனை
மண்ணாளு மன்னவர்க்கு மாண்பாகி நின்றானைத்
தண்ணார் தமிழளிக்குந் தண்பாண்டி நாட்டானைப்
பெண்ணாளும் பாகனைப் பேணு பெருந்துறையிற்
கண்ணார் கழல்காட்டி நாயேனை யாட்கொண்ட
வண்ணா மலையானைப் பாடுதுங்கா ணம்மானாய். (௧௦)

செப்பார் முலைபங்கன் றென்னன் பெருந்துறையான்
றப்பாமே தாளடைந்தார் நெஞ்சுருக்குந் தன்மையினா
னப்பாண்டி நாட்டைச் சிவலோக மாக்குவித்த
வப்பார் சடையப்ப னானந்த வார்கழலே
யொப்பாக வொப்புவித்த வுள்ளத்தா ருள்ளிருக்கு
மப்பாலைக் கப்பாலைப் பாடுதுங்கா ணம்மானாய். (௧௧)

மைப்பொலியுங் கண்ணிகேண் மாலயனோ டிந்திரனு
மெப்பிறவி யுந்தேட வென்னையுந்தன் னின்னருளா
லிப்பிறவி யாட்கொண் டினிப்பிறவா மேகாத்து
மெய்ப்பொருட்கட் டோற்றமாய் மெய்யே நிலைபெறு
மெய்ப்பொருட்குந் தானேயா யாவைக்கும் வீடாகு
மற்பொருளா நஞ்சிவனைப் பாடுதுங்கா ணம்மானாய். (௧௨)

கையார் வளைசிலம்பக் காதார் குழையாட
மையார் குழல்புரளத் தேன்பாய வண்டொலிப்பச்
செய்யானை வெண்ணீ றணிந்தானைச் சேர்ந்தறியாக்
கையானை யெங்குஞ் செறிந்தானை யன்பர்க்கு
மெய்யானை யல்லாதார்க் கல்லாத வேதியனை
யையா றமர்ந்தானைப் பாடுதுங்கா ணம்மானாய். (௧௩)

ஆனையாய்க் கீடமாய் மானுடராய்த் தேவரா
யேனைப் பிறவாய்ப் பிறந்திறந் தெய்த்தேனை

ஊனையு நின்றுருக்கி யென்வினையை யோட்டுகந்து
தேனையும் பாலையுங் கன்னலையு மொத்தினிய
கோனவன்போல் வந்தென்னைத் தன்றொழும்பிற் கொண்டருளும்
வானவன் பூங்கழலே பாடுதுங்கா ணம்மானாய். (௧௪)

சந்திரனைத் தேய்த்தருளித் தக்கன்றன் வேள்வியினி
லிந்திரனைத் தோணெரித்திட் டெச்சன் றலையரிந்
தந்தரமே செல்லு மலர்கதிரோன் பற்றகர்த்துச்
சிந்தித் திசைதிசையே தேவர்களை யோட்டுகந்த
செந்தார்ப் பொழில்புடைசூழ் தென்னன் பெருந்துறையான்
மந்தார மாலையே பாடுதுங்கா ணம்மானாய். (௧௫)

ஊனா யுயிரா யுணர்வாயென் னுட்கலந்து
தேனா யமுதமுமாய்த் தீங்கரும்பின் கட்டியுமாய்
வானோ ரறியா வழியெமக்குத் தந்தருளுந்
தேனார் மலர்க்கொன்றைச் சேவகனார் சீரொளிசே
ரானா வறியா யளவிறந்த பல்லுயிர்க்குங்
கோனாகி நின்றவா கூறுதுங்கா ணம்மானாய். (௧௬)

சூடுவேன் பூங்கொன்றை சூடிச் சிவன்றிரடோள்
கூடுவேன் கூடி முயங்கி மயங்கிநின்
றூடுவேன் செவ்வாய்க் குருகுவே னுள்ளுருகித்
தேடுவேன் றேடிச் சிவன்கழலே சிந்திப்பேன்
வாடுவேன் பேர்த்து மலர்வே னனலேந்தி
யாடுவான் சேவடியே பாடுதுங்கா ணம்மானாய். (௧௭)

கிளிவந்த மென்மொழியாள் கேழ்கிளரும் பாதியனை
வெளிவந்த மாலயனுங் காண்பரிய வித்தகனைத்
தெளிவந்த தேறலைச் சீரார் பெருந்துறையி
லெளிவந் திருந்திரங்கி யெண்ணரிய வின்னருளா

லொளிவந்தெ னுள்ளத்தி னுள்ளே யொளிதிகழ
வளிவந்த வந்தணனைப் பாடுதுங்காணம்மானாய். (௧௮)

முன்னானை மூவர்க்கு முற்றுமாய் முற்றுக்கும
பின்னானைப் பிஞ்சகனைப் பேணு பெருந்துறையின்
மன்னானை வானவனை மாதியலும் பாதியனைத்
தென்னானைக் காவானைத் தென்பாண்டி நாட்டானை
யென்னானை யென்னப்ப னென்பாரகட் கின்னமுதை
யன்னானை யம்மானைப் பாடுதுங்கா ணம்மானாய். (௧௯)

பெற்றி பிறர்க்கரிய பெம்மான் பெருந்துறையான்
கொற்றக் குதிரையின்மேல் வந்தருளித் தன்னடியார
குற்றங்க ணீக்கிக் குணங்கொண்டு கோதாட்டிச
சுற்றிய சுற்றத் தொடர்வறுப்பான் றொல்புகழே
பற்றியிப் பாசத்தைப் பற்றறநாம் பற்றுவான்
பற்றியபே ரானந்தம் பாடுதுங்கா ணம்மானாய். (௨௦)

திருச்சிற்றம்பலம்.

---

சுப்பிரமணியக்கடவுள் வரப்பிரசாதியாய்த்
திருவண்ணாமலையில் எழுந்தருளியிருந்த
அருணகிரிநாதர் அருளிச்செய்த

# திருப்புகழ்.

---

தனனாதனனத் தனனாதனனத்
தனனாதனனத்—தனதான.

அருமாமதனைப் பொருவான் கயல்குத்
தயிலார்நயனக் கொடியார்த
[illegible]ர் தனமற் புழுகார்கயிலத்
[illegible]ல்கெட டேல்தாழ

விருமாநடைபுக் குரைபோயுணர்வற்
றிளையாவுளமுட் துயர்சோர
வெறிவாய்நரகிற் புகுதாதபடிக்
கிருபாதமெனக் கருள்வாயே
பொருமால்வரைபட் டிருகூறிடவுற்
றொருவேரணைவிட் டெறிவோனே
புறமான்மறவக் குறமாமகளுக்
குருகாவிருபொற் புயவீரா
திருமால்கமலப் பிரமாவிழியிற்
றெரியாரவனுக் கரியோனே
செழுநீர்வயல்சுற் றருணைபுரியிற்
திருவீதியினிற் பெருமானே.

---

தான தத்த தந்த தான தத்த தந்த
தான தத்த தந்த—தனதான.

தோத கப்பெ ரும்ப யோத ரத்தி யங்கு
தோகை யர்க்கு நெஞ்ச மழியாதே
சூலை வெப்ப டர்ந்த வாத பித்த மென்று
சூழ்பி ணிக்கு ணங்க ளணுகாதே
பாத கச்ச மன்றன் மேதி யிற்பு குந்து
பாசம் விட்டெ றிந்து பிடியாமுன்
பாவ லர்க்கி ரங்கி நாவி னுக்கி சைந்த
பாடன் மிக்க செஞ்சொ றரவேணும்
வேத மிக்க விந்து நாத மெய்க் கடம்ப
வீர பத்ர கந்த மயூரகோனே
மேரு வைப்பி ளந்து சூரனைக் கடிந்து
வேலை யிற்று ளைச்ச

கோதை பொற்குறிஞ்சி மாது கச்சணிந்த
கோமளக்குரும்பை புணர்வோனே
கோலமுற்றுயர்ந்த சோணவெற்பிலங்கு
கோபுரத்தமர்ந்த பெருமாளே.

---

தனதனத் தானனத் தனதனத் தானனத்
தனதனத் தானனத்—தனதான.

கயல்விழித் தேனைநேச செயமொழித் தாயெனக்
கனவுகேட் டேனெனப் பெறுமாது
கருதுபுத் ராவெனப் புதல்வரப் பாவெனக்
கதறிடப் பாடையிற் றலைமீதே
பயில்கூடைத் தாரழப் பழையகட் பாரழப்
பறைகள்கொட் டாவரச் சமனொரும்
பரியகைப் பாசம்விட் டெறியுமப் போதனைப்
பரிகரித் தாடையைத் தரவேணும்
மயிலிடைச் சேவல்கைப் பரிதரத் தோகையுற்
றருணையிற் கோபுரத் துறைவோனே
யமரர்த் தாசிறைக் குமரிநட் பாகனைத்
தரியசொற் பாவலர்க் கெளியோனே
புயலிலைப் பாறுபொற் சயிலமெய்ச் சாரலிற்
புனமறப் பாவையைப் புணர்வோனே
பொடியடப் பூதரத் தொடுகடற் சூரனைப்
பொருமுழுச் சேவகப் பெருமாளே.

---

தானதன தானத்த தனதன தானத்த
தானதன தானத்த—தனதான.

ஆலுமயில் போலொத்த தோகையர்க ளேமெத்த
வாரவட மேலிட்ட முலைமீதே
யானதுகி லேயிட்டு வீதிதனி லேநிற்கு
மாமைநடை யாரிக்கு மொழியார்பான்
மாலொடவர் போகத்தி லேகுலவி யேசித்தம்
வாடுமெனை நேசித்த மகிழ்வாகி
மாகமுக டாருக்ர வேகமயி லேயுற்று
வாழ்வுபெற வேமுத்தி தருவாயே
நாலுமுக வேதற்கு மாலிலையின் மாயற்கு
நாடவரி யார்பெற்ற வொருபாலா
நாகமுடி மீதுற்ற ஞானமதி லேபத்தர்
ஞானமுனி வோர்கட்கு மிறையோனே
வேலைவிழி வேடிசசி யோடமரர் மாதொக்க
வீறருணை மால்வெற்பி லுறைவோனே
வீரமுட னேயுற்ற சூரர்களை வீழ்விக்க
வேலைமிக வேவிட்ட பெருமாளே

— —

தானதன தானத் தானதன தானத்
தானதன தானத்—தந்ததான.

ஆலவிழிநீலத் தாலதரபானத்
தாலளகபாரக் கொண்டலாலே
யாரநகையால்விற் போலுநுதலால்வித்
தாரநடையால்வற் கொங்கையாலே
யாலமயலாகிக் காலதிரிசூலத்
தாலிறுகுபாசத் தும்பினாலே

தாழ்விலுயர்பாழ்பட் டேழ்வினைவிடாமற
சாகுமுனிவேனவற் கொண்டிடாதோ
சோலைதருகானிற் கோலமறவானைத்
தோளிலுறவாகக் கொண்டவாழ்வே
சோதிமுருகாசித் தாபழயஞாலச்
சோணகிரிவீதிக் கந்தவேலே
பாலககலாபக் கோமளமயூரப்
பாகவுமைபாகத தன்குமாரா
பாதமலர்மீதிற் போதமலர்தூவிப்
பாடுமெவர்தாழ்நற் றம்பிரானே

---

தனனதன தானதத்த தனனதன தானதத்த
தனனதன தானதத்த—தனதான.

முழுகிவட வாமுகத்தி லெழுகனலி லேபிறக்கு
முழுமதிநி லாவனிரகும் வசையாலும்
மொழியுமட மாதருக்கு மினியதனி வேயிசைக்கு
முதியமத ராசனுக்கு மழியாதே
புழுகுதிகழ் நீபமத்தி லழகியகு ராநிரைந்த
புதுமையினி லாறிரட்டி புயமீதே
புணரும்வகை தானினைத்த துணரும்வகை நீலசித்ர
பொருமயிலி லேறிநித்தம் வரவேணும்
எழுமகர வாழிசுற்று பொழிலருணை மாநகர்க்கு
ளெழுதரிய கோபுரத்தி லுறைவோனே
யிடைதுவள வேடுவேசி பவளவித ழேதுடிப்ப
விளமுலைவி டாதசித்ர மணிமார்பா
செழுமதிய நாகமொய்த்த வெள்ளருகுபுனல் வேணிவைத்த
சிவனைமுத லோதுவித்த குருநாதா

திசைமுகன் முராரிமற்று மரியபல தேவருற்ற
சிறையடைய மீளவிட்ட பெருமாளே.

---

தனன தனதன தனன தனதன
தனன தனதன—தனதான.

இறுகு மணிமுலை மருவு தரளமு
மெரியு மெழுமதி தெவளாலே
யிரவி யெனதுயிர் கவரவருகுயி
லிசையு முறுகட லலையாலே
தருக ணதிபதி மதனன் விடுகொடு
சரமு மினியெனை யணுகாதே
தருண மணிபொழி லருணை நகருறை
சயில மிசையினில் வரவேணும்
முறுகு திரிபுர மறுகு கனலெழ
முறுவ லுடையவர் குருநாதா
முடிய கொடுமுடி யசுரர் பொடிபட
முடுகு மரகத மயில்வீரா
குறவர் மடமக ளமிர்த கனதன
குவடு படுமொரு திருமார்பா
கொடிய சுடரிலை தனையு மெழுகடல்
குறுக விடவல பெருமாளே

---

தனனதத்தத தத்ததத்தத் தனதன
தனனதததத் தத்தததத்த தனதன
தனனதத்தத் தத்தததத்த தனதன—தனதான.

கமலமொட்டைக் கட்டழித்துக்குமிழியை
நிலைகுலைத்தும் பொறகுடத்தைத் தமனிய
கலசவர்க்கத் தைத்தகர்த்துத் தலையற வினநிரைக்

## அருணகிரிநாதர் அருளிச்செய்த திருப்புகழ்.

கருவிலட்டைப் பிற்றுரத்திப் பொருதவு
சயம்விளைத்துச் செப்படிப்பித் துலவிய
கரிமருப்பைப் புக்கொடித்துத் திசன்மத னபிடேக
மமலர்செற்றிக் கட்டழற்குட் பொடிசெய்து
வதிகசக்ரப் புட்பரக்கக் கொடுமையி
னடனமிட்டச சப்படுத்திச் சபதமொ டிருதாள
மறைதல்கற்பித் துப்பொருப்பைக் குலவிய
சிறக றுப்பித் துக்கதித்துப் புடைபடு
மயினவச்சித் ரத்தனத்துத் திருடிக ளுறவாமோ
தமரமிக்குற் றுக்கலக்கப் பலபறை
தொகுதொகுத்தொக் குத்தொகுக்கித் தொகுதொகு
தரிகிடதத்தத் தத்தரிக்கத் தரிகிட வெனவோதி
சடவுடற்பக் கப்பழுத்துப் புகையெழு
விழிகளுட்செக் கசசிவத்துக் குறளிகள்
தசைகள்பட்சித் துக்களித்துக் கழுகொடு கழுகாட
வமரில்மெத்தக் கொக்கரித்துப் பொருதிடு
மசுரரத்தத் திற்குளித்துத் திமியென
வடிகடித்திட் டுக்கைகொட்டிச் சமர்செயு மயிலான
வழகுமிக்குச் சித்திரப்பொற் புரவியி
னுலவுகிர்த்தக் கொற்றசித்துக்குருபர
வருணையிற்சித் தத்தெனக்குத் தெளிவருட் பெருமாளே.

முற்றிற்று.

---

### திருவண்ணாமலை க்ஷேத்திரவெண்பா.

வேதச் சிரத்தும் வியன் கயிலைத் தடத்து
மோதித் தெளிந்தார்த் துள்ளத்தும்—நாதிக்கும்
தண்ணா ரமுதமழைத் தாழ்பொழில்சூழ் தென்னருணைக்
கண்ணா ரமுதன் கழல்.

சிவமயம்

திருவண்ணாமலை

குகைநமச்சிவாயர் உபதேசம்பெற்றுச்

## சிதம்பரத்திருப்பணிசெய்த

# குருநமச்சிவாயர் சரித்திரம்.

---

தலைசசாரமெனனுந் திருநாமம்பெற்ற திருவண்ணாமலையில் நமசசிவாயமூர்ததியென்றொரு சித்தர் எழுந்தருளி இருந்தனர் அவர் மேற்படியூர் மலையின்மேற் குகைசெய்து நிஷ்டைபுரிநதுவநதமையால், குகை நமச்சிவாயமூர்த்தியெனக் கூறப்பட்டனா. அவர் அக்குகையின் சமீபத்தில் வளாநதோங்கிநின்ற ஓா ஆலவிருட்சத்தின்மீது தாங்தும் ஊஞ்சலிட்டு, அதில்யோகநித்திரை கொள்வதுவழக்கம். அவருக்கு நமச்சிவாயமூர்த்தி யென்றொரு சீடரிருந்தனர், அவர் அருகேயிருந்து அதிபக்தியுடன் பணிவிடை செய்துகொண்டிருக்கும்போது ஒருநாள் குலுக்கென்றுநகைத்தாா; நமச்சிவாயம்? என்ன விதிசயங்கண்டு நகைத்தாயென்று கேட்டார். உடல், பொருள், ஆவி மூன்றுந் தத்தஞ்செப்ய, அவைகளை யேற்றுக்கொண்டு அடிமையை யாள விருப்புற்றதென்னையனே!

திருவாரூரின்கண் தியாகராஜசுவாமிகள் எழுந்தருளச்செய்து தெருவீதி வரும்போது அப்ஸரப்பெண்களுக் கொப்பற்ற நடன நாட்டியப்பெண்கள் ஆடிக்கொண்டுவர, அதிலொரு தேவதாசி கால்தடக்கி விழுந்தாள். அங்குநின்றவர்களெல்லாம் நகைத்தார்கள், அடிமையுநகைத்தேன். அதுவே தவிர மற்றொன்று மில்லையென்றார்.

இது நிற்க, மற்றொருநாள் வஸ்திரத்தைப்பிடித்துத் தேய்த்தார், அவ்வேதுக்காகத் தேய்த்தது என்று குகை நமச்சிவாயமூர்த்தி கேட்க; சிதம்பரத்திலே கனகசபைக்குக் கறுப்புத்திரை யிட்டிருந்தது, அதற்கருகே குத்து விளக்கிலே நெய்விட்டுத் திரிபோட்டெரிய, அவ்வை நெருப்பு எலியிழுத்துக்கொண்டுபோக, அத்திரை பற்றிக்கொண்டது. அங்கிருந்தவர் அதைத்தேய்த்தார்கள்; அடியேனும் மேன்மேலும் எரியாவண்ணம் தேய்த்தேன் சுவாமி யென்றார்.

பின்பொருநாள், குகை நமச்சிவாயமூர்த்தி சிலகாரணார்த்த சோதனை நிமித்தம் வாந்திசெய்து, அதைத் திருவோட்டிற்பிடித்து இதைமனிதர் அடிபடாத இடத்திற்கொண்டுபோய்விடென்று கட்டளையிட்டனர்; அதை நமச்சிவாயர் மனிதர் சஞ்சரிக்கப்படாத விடமெதுவெனவறிந்து தானேவாங்கி உட்கொண்டனர்.

ஆசாரியர் இவ்வற்புதச்செய்கையையறிந்து சிஷ்யரைப்பார்த்து அப்பா நமச்சிவாயம்! அடிபடாதவிடத்தில் வை

த்தாயாவென்று கேட்டார் சிஷ்யா வைக்குந்தானத்திலவை த்தேனென்று தலைவணங்கிக் கூறினர். இதற்குமேல் இந்த மூன்று அதிசயமும் பார்த்து, நம்மினின்றுஞ் சிஷ்யனுக்கு வர வர ஞானோதயம் அதிகமாகிறது இவ்விடத்தில்வைத் திருக்கக்கூடாது இன்னும் ஓர் அதிசயம்பார்த்துச் சீட்டனை அதற்கேற்ற இடத்திற் கனுப்பவேண்டுமென்று ஆலோசனை செய்து; ஒரு வெண்பாவி லரைவெண்பா எடுத்துக் குகை நமச்சிவாயரோதத்தி கூறினார்; அது வருமாறு:—

நேரிசை வெண்பா

ஆல்பழுத்தப் பக்கியினுக்காகாரமானதென
வேல்பழுத்த னெறிலைமீணிலெனச—

என்றவுடனே—அருகே இருந்தசீடர் ஏன் சுவாமி! குறை வெண்பாவை முடிக்கலாமே என்றுசொன்னார் ஆசாரியர், அப்பா நமச்சிவாயா! குறைவெண்பாவும் நீ முடிக்கலாமே என்றுசொன்னார் சிஷ்யர் சுவாமி! குருவாக்குக் கெதிர்வாக் கடியேன் சொல்லக்கூடாது; இதுசிஷ்யனுக்கடுத்ததல்லவே என்றுசொன்னார். நீ ஞானபூமியானோ யான்படியினாலே சொல்லுமென்று குருவாக்குவந்தது. நமச்சிவாயர் அதைச்சிரசில்வகித்து அந்தக்குறை வெண்பாவையு முடித்தனர். அஃதெப்படியெனில்:—

-சாலவனச

செய்யா வொருத்தருடன் சேர்ந்து மிருப்போ
மையா நமசி வாயா.

என்று முடித்தார்

அதற்குமேல் குகை நமச்சிவாயமூர்த்தி யோக நித்தி ரைச்செய்யும் மஞ்சம்விட்டிறங்கி, அப்பா என் இருகண்ம ணியே! இன்றன்றோ நீ மெய்ஞ்ஞானத்தை யடைந்தாய்! ஆச்சரியம்! ஆச்சரியம்! உன்னைப்போலெவன் யாருக்கு க்கிடைப்பான்! ஆகையால் இன்றுமுதல்நீ குருநமச்சிவா யமூர்த்தி எனத் திருநாமம்பெறப்பட்டாய் என்று தழுவிக் கொண்டு, ஒருகம்பத்திலே இரண்டுயானை கட்டக்கூடாது; இதுவோ போகஸ்தலம், அஞ்ஞானத்தை நீக்கி மெய்ஞ்ஞா னத்தைத் தராநின்ற அம்பலவாணர் எழுந்தருளியிருக்கும் திவ்விய க்ஷேத்திரமாகிய சிதம்பரம் என்னுந்தலம் ஒன்றுள து அத்தலம் உம்மால் இன்னுந் திருப்பணிமுதலிய காரியங்க ள் நடக்கவேண்டியிருப்பதால், அங்கேபோய்ச் சேருமென் று கட்டளையிட்டனர். சிஷ்யர், சுவாமி அடியேன்குருதரிச னம் செய்துகொண்டு, இவ்விடம்குருபாதசேவையை யல் லாமல், வேறொரு ஸ்தலத்திற்குப் போவதில்லை என்றும்! பின்னும் அடியேன் நித்தியம் குருதரிசனமில்லாமல் இருப் பதில்லை என்றுங்கூறினர். குகைநமச்சிவாயர் நீர் சிதம்பரம் போய் கனகசபையை தரிசனஞ்செய், அங்கே நம்மைப்போ ல் தரிசனங் கொடுத்தாலும், அல்லாவிடில் இவ்விடம்வந்து விடும் என்றுசொல்ல; சிஷ்யர் நல்லபுத்தி தந்தீர் என்று கு ருவுக்குத் தோத்திரஞ் செய்தவிபரம்.

## அறுசீரடியாசிரிய விருத்தம்.

வாக்காலே தியானத்தாலே மனமகிழ் கிருபையாலே
நோக்காலே பரிசத்தாலே நுணணிய பிறவி தீர்க்கு
தாக்கான நமச்சிவாய சலக்கமெய் யாகுகின்ற
நாற்காலி காலதானு னுன் முத்தி பெறலுமாமே.

என்றிந்தப்பிரகாரம் அடிமைக்கிரமமாய்ப் பத்துப்பாடல் தோத்திரம் செய்தனர், "நடக்கலாம்" என்று குருவாக்குவந்தது.

உடனே குருநமச்சிவாயர் தனியராய்ச் சாயங்காலம் புறப்பட்டுக் கிழக்குநோக்கிக் காதவழிவந்தார். இருட்டிப்போயிற்று; அவ்விடத்தில் ஒரு இடம்பார்த்து ஓர்விருக்ஷத்தின் கீழேநிஷ்டையிலிருந்தார், ஒருசாமத்திற்கு மேற்பசிப்பிணியால் நொந்து அப்போது உண்ணாமுலையம்மையாரை நோக்கி ஒரு வெண்பா இயற்றினர்.

### நேரிசை வெண்பா

அண்ணா மலையா ரகத்துக் கினியாளே
யுண்ணா முலையே யுமையாளே—நண்ணு
வினைதோறும் போற்றிசெய் நின்னடிய னுண்ண
மனைதோறுஞ் சோறுகொண்டு வா.

இவ்வெண்பா இயற்றியசமயத்தில், அண்ணாமலையாருக்குச் சர்க்கரைப் பொங்கல்செய்து, பொற்றாம்பாளத்தில் வைத்து, நைவேதித்துக் கோவிலிலே [illegible]க் திருக்காப்

பிட்டு அர்ச்சகர்முதலியோர் மறந்துபோய் அவரவர் வீடுவந்து சேர்ந்தார்கள். பின்பு அதையறிந்த உண்ணாமுலைத்தாயார்கொண்டுவந்து குருநமச்சிவாயமூர்த்திக்குக் கொடுத்துவிட்டுக் கோயிலுக்குட் போய்விட்டார். விடிந்தபின் அர்ச்சகர் முதலானவர்கள் கோவிலுக்குவந்து கதவைத்திறந்து பொற்றாம்பாளத்தைப்பார்த்தார்கள். பொற்றாம்பாளம் எங்குங்காணோம்! யாரோ கள்வன்வந்துகொண்டுபோய் விட்டானென்று கோவிற் குருக்கள் முதலானோரும், பட்டினத்திலுள்ளவர்களும், இஃதென்ன அதிசயமோ! தெரியவில்லையென்று அவரவர் ஆலோசனைசெய்ததில், இருபதுநாழிகைமட்டும் பூசையில்லாமல் இருந்தது. அப்போது ஒரு பிராமணப்பிள்ளையின் மீது ஆவேசமவந்து குருநமச்சிவாயமூர்த்தி சிதம்பர தலத்துக்குப் போகின்ற வழியிலே ஆலவிருக்ஷத்தின்கீழே இருக்கிறார். அவருக்கு அமுதுகொண்டுபோய் அம்மையார் கொடுத்தார். அங்கே தாம்பாளங்கிடக்கிறது. எடுத்துக்கொண்டு வாருங்களென்று சொன்னார். அதைக்கேட்டு ஆச்சரியமுற்று அணிபண்ணாமலையாரையும் உண்ணாமுலையம்மையாரையுந் தோத்திரஞ்செய்து, அதற்குமேல் குருக்கள்முதலிய யாவரும் அவ்விடம் சென்று தாம்பாளத்தைக்கண்டு எடுத்துக்கொண்டு அருணாசலப்பதிக்கு வந்துவிட்டார்கள்.

பிறகு மறுநாளருணோதயத்தில் குருநமச்சிவாயமூர்த்தியெழுந்து நித்திய கடனை முடித்துக் குருவைத் துதி

செய்து கிழக்குநோக்கி வரும்வழியில் இருடிவந்தனம் என்றொரு திவ்விய ஸ்தலத்தைக்கண்டனர். அத்தலத்தில் அம்மையாரும் சுவாமியும் அர்த்தபாகம் பிரியாமலிருக்கிறது. முனிவர்களுக்கரசனாகிய அகத்திய மகாமுனிவரால பூசிக்கப்பட்டது. அங்கு ஐயாயிரங்கொண்டான் என்றோர் திவ்விய தீர்த்தமுமுண்டு. அதில் ஸ்நானம் பண்ணிப் பூசைமுடித்துத் திரிகரண சுத்தியுடன் சுவாமியைத் துதித்துத் தரிசனஞ் செயதுகொண்ட பின்னர் தீர்த்தக்கரையில் நிஷ்டையி லிருக்கும்போது பசிநோய் வந்ததாக, அப்போதியற்றிய:—

நேரிசை வெண்பா.

தாயிருக்கப் பிள்ளை தளருமோ தாரணியி
னீயிருக்க யான் சோர்வ னிதியோ—வேயிருக்குந்
தோளியே விண்ணோர் துதிக்குந் திருமுத்து
வாளியே சோறு கொண்டுவா.

இவ்வாறு சொன்னமாத்திரத்தில் அம்மையார் செவியில் அம்முறை கேட்டவளவில் வந்து எனனப்பா! நான் அர்த்தபாகம் பிரியாம லிருக்கவும் நீ பிரித்துப் பாடினது சரியா? இப்போது உன் வாக்கினாலே சேர்த்துப் பாடவேண்டுமென்று கூற, அவ்வாறே குருநமச்சிவாயமூர்த்தி சேர்த்துப்பாடிய:—

நேரிசை வெண்பா.

மின்னும் படிவந்த மேககளத் தீசருடன்
மன்னுந் திருமுத்து வாளியே—பொன்னின்

களையாளே தாயேயென் கன்மணக்கத் தீன்ற
மலையாளே சோறு கொண்டு வா.

என்று இவ்வெண்பாவைச் சொன்னவுடனே. அம்மையார் அமுதுகொண்டுவந்து கொடுத்தாள். அதை யுட்கொண்டு அங்கு நின்று புறப்பட்டு விருத்தசைலம் வந்து மணிமுத்தா நதியிலே ஸ்நானஞ்செய்து, பழமலைநாதரையும் பெரியநாயகி யம்மையாரையும் தரிசித்து ஒரு குளக்கரையில் சிவ்கடையி லிருக்கும்போது பசி வந்தது. அப்போது சொல்லிய —

நேரிசை வெண்பா.

நன்றிபுனை யும்பெரிய நாயகியெ னுங் கிழத்தி
யென்றுஞ் சிவன்பா லிடக்கிழத்தி
நிலைக்கிழத்தி மேனிமுழு துங் கிழத்தி
மலைக்கிழத்தி சோறு கொண்டு வா.

இவ்வெண்பாவைச் சொன்னவுடனே. அம்மையார் தண்டூன்றிக்கொண்டு விருத்தாம்பிகையாய் வந்து குரு நமசிவாய மூர்த்தியைப்பார்த்து என்னப்பா! உன்னுடைய வாக்கினாலே என்னைக் கிழத்தி கிழத்தி என்று பாடுதல் நலமா? கிழவிக்கு நடக்கவியலுமா! ஜலமெடுக்கத் தள்ளுமா! அமுது கொண்டுவர முடியுமா! என்று சொல்ல, குரு நமசிவாயமூர்த்தி அம்மா! பாலகாசியிற் பாலாம்பிகை, இது விருத்தகாசி, நீரும் பெரியநாயகி. உம்முடைய சுவாமியும் பழமலைநாதர், அதற்காக நான் அப்படிச் சொன்னேனென்று சொன்னார். அம்மையார் உன்னுடைய வாக்கினாலே இளமை

யாய்ச் சொல்லவேண்டுமென்று கேட்க குருநமச்சிவாயர் இரண்டு அம்மையார் ஆகிறதே என்று சொல்ல, அம்மையார் ஆனால் ஆகட்டும், இளமையாய்ச் சொல்லவேண்டுமென்று சொன்னார்! அதற்கு மேற்சொன்ன:—

நேரிசை வெண்பா.

முத்தநதி சூழு முதுகுன் றுறைவாரே
பத்தர் பணியும் பதத்தாளே—யத்த
ரிடத்தாளே மூவா முலைமே லேரார
வடத்தாளே சோறு கொண்டு வா.

இவ்வெண்பாவைச் சொன்னவுடனே, அம்மையார் பாலாம்பிகையாய்ச் சோறுகொண்டுவந்து கொடுத்தார். அதை உட்கொண்டு அதற்குமேல் நடந்து டவநகிரிக்குவந்து நாலுகோபுரமும் தரிசனைசெய்து சொல்லிய:—

நேரிசை வெண்பா.

கோபுரங்க ணான்கினையுங் கண்டமட்டிற் குற்றமெலாந்
தீபரந்த பஞ்சதுபோற் சென்றதே—நூபுரங்க
ளார்க்கின்ற செஞ்சரண வம்பலவா நின்பாதம்
பார்க்கின்றார்க் கென்னோ பலன்.

இவ்வெண்பாக் கூறிக்கொண்டே சிதம்பரம்வந்து கோவிலிலேபோய்ச் சிவகங்கா ஸ்நானஞ்செய்து சொல்லிய:—

நேரிசை வெண்பா.

கண்டமட்டிற்கண்டவினை காதம்போங்கையிலன்றிக்
கொண்டமட்டிற்கொண்டவினை கொள்ளைபோம்—வண்டமிழ்ச்சேர்
வாயாரவேபுகழும் வண்ணச் சிவகாமித்
தாயார் திருமஞ்சனம்.

இவ் வெண்பா சொன்னவுடனே கனக சபைக்குப்போய் சுவாமி தரிசனஞ் செய்யும்போது, சபாநாதர் மலையின்பேரிலிருந்து குகைநமசிவாயரைப் போலவே தரிசனங் கொடுத்தார் அப்போது தோத்திரஞ்செய்த—

எழுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

திருவரு ணமலையிற் குகைநமச் சிவாய
   தேசிக வடிவமா யிருந்து
கரவறு மடியேன் சென்னிமே லுனது
   கழலிணை வைத்தவா றனைமேரன்
விரகறு ரியனைப் புதல்வனைப் பொருளை
   வேண்டிய வேண்டிய தனைத்தும்
பரவினாப் புகழ்வார்க் களித்திடும் பொன்னம்
   பலவனை பரமரா சியனே.

என்று இந்தப்படி நூறுபாடல் ஒரு நாழிகையில் நின்றபடியே பாடித் தோத்திரஞ் செய்துகொண்டு, அதற்குமேல் மூன்று அறையில் யோகநிஷ்டையி லிருந்தனர்; அப்போது தில்லை மூவாயிரவரிலே மூன்றுபேர் குருக்கள்மார் பல்லக்கு ஏறுகிறவர்கள்; அ

வர்கள்பேர் சிவமுத்தர், ஜடாமுத்தர், மகாமுத்தர், அம்மூவரிடம சென்று திருவண்ணாமலையிலிருந்து, ஒரு சந்நியாசி நம்மன்பன் வந்திருக்கின்றனன். அவன் யோகத்திலே அதிகமாயிருப்பவன் அவனுக்குத் தனித்து இடங்கொடுக்கவேணும். அவனாலே நமக்கு அநேக திருப்பணிகளாகக் காத்திருக்கின்றன. அதற்கேற்ற இடம் என்றால் நம்முடைய கோவிலுக்கு வடபுறத்தின் எல்லைக்கப்புறம் இடமிருக்கிறது அங்கே நாம்போய் இரண்டுதரம் பாதம்வைத்திருக்கிறோம். அங்கு எதற்காகவெனில், மாணிக்கவாசகருக்குத் திருவாசகம் எழுதுவதற்காகவும், உபமன்னியருக்குத் திருப்பாற்கடல் அழைப்பித்துக் கொடுப்பதற்காகவும் போயிருந்தோம் அவ்விடத்தில் இவனைக்கொண்டுபோய் விடுங்களென்று வாக்களித்தனர். அந்தப்படியே குருக்கள் மூவரும் குரு நமசிவாயமூர்த்தியைக் கொண்டுபோய் அவ்விடத்திலிருக்கச்செய்து, கோவிலுக்கு வந்துவிட்டார்கள். அதற்குமேல் சிவ்ஷையிலிருக்கும்போது பசி வந்தது அப்போது சொல்லிய:—

வெண்பா.

ஈன்பயிலுங் காய மூலராம லுன்றனது
வான்பயிலும் பொன்னடியை வாழ்த்துவேன்-றேன்பயிலுந்
சொல்லிய வல்லார் துதிக்குஞ் சிவகாம
வல்லியே சோறு கொண்டு வா.

இவ் வெண்பாவைச் சொன்னவுடனே, சிவகாமியம்மையார் அமுதுகொண்டுவந்து சொன்ன;—

நேரிசை வெண்பா.

பிராட்டியார் திருவாக்கு.

கொண்டுவந் தேன்சோறு குகைநமசி வாயரது
தொண்ட ரடியார் சுகிக்கவே—பண்டுகந்த
பேய்ச்சிமுலை யுண்ட பெருமா னுடன்பிறந்த
நாச்சி சிவகாமி நான்.

இவ்வாறு அம்மையார் சொல்லி நித்தியமும் அன்னங் கொண்டுவந்து கொடுக்கக் குரு நமச்சிவாயமூர்த்தி யோகத்திலிருந்து வந்தனர்.

இப்படி இருக்க, வருவார் போவார் அநேகர் பார்த்து மகா பெரியவரென்று பணங்களை எதிரில் வைத்துவிட்டுப் போவார்கள்; அவை அதிகமாய்க் குவிந்து கிடக்க. அவைகளை குரு நமசிவாயர் பார்த்து, இது ஆட்கொல்லி, இவ்விடம் வருவானேனென்று அந் நேரம் யார் முன்னே நிற்கிறார்களோ அவர்களை வாரிக்கொண்டு போகக் கட்டளையிட, அவரவர்கள் வாரிக்கொண்டு போவார்கள், அப்படி நடந்துவதைத் தில்லை மூவாயிரவர் பார்த்து. இப்படி வீணாக அநேக திரவியம் போகிறதென்று யோசித்துக் குரு நமச்சிவாயமூர்த்தியி னிடத்திற்போய், தேவர் இவ்விடத்தி லிருக்கிறபடியினால் கண்டபேர் திரவியங்களை வாரிக்கொண்டு போகிறார்கள்; கோவிலுக்குள்ளே வந்தால். அநேக திருப்பணிகள் நடக்கும், அநேக கட்டளைகள் நடந்துவரும் உள்ளே வரவேண்டுமென்று சொன்னார்கள். நாம் சபாநாயகர் உத்திரவின்மேல் வந்துவிட்டோம்; நம

ககங்கே வரவேண்டியது என்னவிருக்கிறது என்றுசொல்ல: இவர் நாம் அழைத்தால் வரமாட்டாரென்று இவர்களிற்சிறந்த மூவரும் சபாநாயகரிடஞ் சென்று குரு நமசிவாய மூர்த்தி கோயிலுக்குள் ளே வந்தால், அநேக திருப்பணிகள் அநேக கட்டளைகள் நடந்து வருமென்று சொன்னார்கள்? சபாநாதர் நல்லது உங்களுக்குவரமாட்டார், நாமேபோய் அழைத்து வருகிறோமென்று ஜங்கமரூபவிருத்தராய்த் தண்டு கமண்டலம் பிடித்துகொண்டு, திருப்பாற்கடலுக்குவந்து குருநமசிவாயமூர்த்தி நிஷ்டையிலிருக்க எதிரேநின்றார்; குருநமசிவாயர் நிஷ்டை நீங்கிப்பார்த்தார், பெரியவராய் எதிரில் நிற்பதைக் கண்ணுற்று சமுகத்தி லென்றுசொன்னார்; வந்தவரும் சந்நிதியென்றார். தாம் இருப்பது எந்த ஊரென்று கேட்டார். நாம் இருப்பது தில்லைவனமென்றார், உம்முடைய பெயர் என்னவென்று கேட்டார் நம்முடைய பெயர் அம்பலத்தாடுவார் என்று சொன்னார் இவ்விடத்தில் வந்தகாரியம் என்னவென்று கேட்டார். அன்னம் தேவையாயிருக்கிறது, இவ்வூர் முழுதுஞ் சென்றேன். இங்கேபோனால் அகப்படுமென்று சொன்னார்கள். வந்தேனென்று சொன்னார். அதற்குக் குரு நமசிவாய மூர்த்தி நமக்கு தேவி கொண்டுவந்து அன்னம் கொடுக்கிறது. நம்மிடத்தில் பாத்திரங்கூட இல்லையென்று சொன்னார், சுவாமி! இதோ பாத்திர மிருக்கிறதென்று சந்திரனைப் பாத்திரமாய வைத்தார். குரு நமசிவாயர் தேவியை நோக்கினார், அன்னம் வந்தது இதைக் கொள்ளுமென்றார். அம்பலத்தாடுவார் நாம் கொள்ளுகி

றதில்லை யென்று சொன்னார். குரு நமச்சிவாயர் எதற்காக வென்னார்; இந்தப்பிரகாரம் நித்தியம் அன்னங்கொடுத்தால கொள்ளுநவோம். இல்லாவிடில் கொள்ளுகிறதில்லை யென்றார். நீரோ மிகவும் பெரியவராம் விருத்தரா யிருக்கின்றீர். நாமோ காசியோ ராமேசுவரமோ, உமக்கெப்படி நித்தியம் அன்னங் கொடுக்கிறோ மென்று நாம் சொல்லுகிறது என்றார். உமக்கு முன்னே நடந்தால் அன்னங் கொடும். பின்னால் இருந்தால் அன்னம் வேண்டா மென்று சொன்னார். நீர் முன்னே நின்றால் அன்னங் கொடுக்கிறேன், அல்லாவிடிற் கூடாதென்றார். சுவாமி, நாம் முனனிற்கிறோமென்றார். அதற்குமேல் குருநமச்சிவாயர் சுவாமியை அமுது கொள்ளுமென்றார். விபூதி கோவிலும், உருத்திராக்கமும் தொட்டுக் கொடுத்தால் கொள்வோமென்றார், நீர் முன்னின்று கொடுக்கிறே னென்றார். நல்லது முன்னிற்கிறோம் என்றார் அப்படியே படைக்கிறோம் என்றார். அமுதைக் கொள்ளும் பாவனையாய்க் கொள்ளும்போது. தாகத்துக்குத் தீர்த்தம் வேண்டுமென்றார் அதோ திருப்பாற்கட லிருக்கிறது ஜலம் கொள்ளுமென்றார் அப்படியே கொள்ளப்போய் மறைந்து கோவிலுக்குப்போய், தில்லை மூவாயிரபேரை யழைத்து நாம்போய்த் திட்டஞ்செய்து வந்திருக்கிறோம். நீங்கள் அனைவருங்கூடி நமக்குண்டான விருதுகளையும் நாம் ஏறுகிற சிவிகையையும் எடுத்துக்கொண்டுபோய். அவரை அச்சிவிகையிலேற்றி விருதுகளுடன் வீதிப்பிரகாரஞ்செய்து நம்மிடத்திற்குக் கொண்டுவந்துவிடுக வென்று சொன்னார். அப்படியே தில்லை மூவாயிரவர் எடுத்துக் கொண்டுபோய் இனிமேலா வது வரலாமே! இந்தப் பல்லக்கின் பேரில் ஏறவேண்டு மென்று

சொன்னார்கள். நமக்கேன் பல்லக்கு தேவையில்லையென்று சொன்னார். இது பல்லக்கு அல்ல சூர்யசிங்காசனம் என்றார்கள் கூடாது யென்றார். அதற்குமேல் நேற்று மத்தியானம் எங்கள் சுவாமி தங்களிடத்திற்கு வந்தாரே, நீங்களென்ன சொன்னீர்கள் என்றார்கள். குருநமச்சிவாயர் திஷ்டையிலே பார்த்தார். சபாபதி தரிசனமாயிற்று இவ்விடத்திற்கும் வந்து அக்கும்போய்ச் சொன்னாரென்று அப்போது சொன்ன:—

நேரிசை வெண்பா.

சங்கமரா யம்பலவர் தாமே யெழுந்தருளி
யிங்கெமக்குப் பிச்சை யிடுமென்ன—வங்கமுது
திட்டமுட னமக்கு ந்தினமு மேசர்வ
கட்டளையுள் டாக்குமென்றார் காண்.

இவ்விதமாய்ச் சொல்லிக்கொண்டே பல்லக்கிலேறி வீதிப்பிரகாரம் போகும்போது சொன்ன:—

அறுசீரடியாசிரிய விருத்தம்.

அல்லலாகிய வருவினை தனையறுத் தடியினை தருவாரோ
மல்லணிடிய புவியன்மே விண்ணமும் வரும்பிறப் பறுப்பாரோ
நல்லமாமுலை மாதுமை நாயகர் நானிந நவின் றேற்றுந்
தில்லைநாயக ரம்பலத் தாவெர் திருவுளந் தெரியாதே.

இவ்வாறு சொல்லிக்கொண்டு கோவிலிலேபோய்க் கொடிக்கம்பத்தருகே பல்லக்கிறக்கி பஞ்சாக்கர மதில்மட்டும் பாதக்குறடி

இட்டுக்கொண்டு போய், அதற்குமேல் கனகசபையிற் சென்று சுவாமி தரிசனம்செய்து, தில்லை மூவாயிரவரைப்பார்த்து இப்போது நாம் என்னகட்டளை நடப்பிவிப்போமென்று யோசனைசெய்ய, சபாநாயகர் அசரீரிவாக்கியமாய்ச் சர்வஜனத்துக்கும் சர்வகட்டளையென்று தெரிவிம் என்று வாக்கியமளித்து நாம் சர்வகட்டளை யென்று தெரிவிப்பதற்கு இப்போது இவ்வளவு அன்பர்களும் பார்த்திருக்கும் பொழுது சபாநாயகர் பிச்சைகொடுத்தால் எப்போதும் நடக்குமென்று பொற்றாம்பாளத்தை யேந்திச்சொல்லிய —

நேரிசை வெண்பா.

காதலுடன் சர்வ கட்டளையா யுன்றுடைய
பாத மலர்ப்பூசை பண்ணவே — யோது
குருவா யெனையாண்டு கொண்டவனே பிச்சை
தருவாய் சிதம்பரநாதா.

இந்தப்பிரகாரம் சொன்னவுடனே. சபாநாயகர்முன் ஆகாசமார்க்கமாய்ச் சகலஜனமும் பார்க்கத்தக்கதாக ஒருதங்கக்காசு விழுந்தது. சுவாமியே பிச்சை கொடுத்தார் என்று சகலஜனமும் பொன் முத்து முதலியன அநேகமாய்ப்போட்டார்கள். குருநமச்சிவாயர் இதைத் தில்லை மூவாயிரவர் கையிற்கொடுத்து சிறிது நடந்தார், சற்றுத்தாக்கிறது; எது தாக்குகிறதென்று மூவாயிரவரைக் கேட்டார், அது எங்களுக்குத் தெரியுமாவென்று சொன்னார்கள் குருநம

சிவாயர் தியானத்திலே பார்த்துச் சுவாமிக்கு ஆபரணங்களிருந்ததுண்டாவென்று கேட்டார். ஆபரணம் ஏதென்றுசொல்லி அதற்குமேல் ஆலோசனைசெய்து பதஞ்சலி வியாக்ரபாதர் நடனம்பார்க்க பாதச்சிலம்பும் கிண்கிணியும் இருந்ததுண்டென்பார் அது நாங்களறிவோம்; மற்றபடி ஆபரணங்களிருந்ததில்லையென்று சொன்னார்கள். அதற்குமேல் குருநமச்சிவாயர் சிற்பிகளை யழைப்பித்துப் பாதச்சிலம்பும் கிண்கிணியும் வீரகண்டாமணியும் செய்யவேணும் என்ன வேண்டுமென்று கேட்க. சிற்பர் அதற்கு ஐம்பதினாயிரம் பொன் செல்லுமென்று சொன்னார். வந்திருக்கிற திரவியத்தை யெடுத்துக்கொடுத்துத் திருவாபரணஞ் செய்யச்சொல்லி யனுப்பிவைத்து அறைக்கு எழுந்தருளியிருக்க. தில்லைமூவாயிரவர் கூடிக்கொண்டு நாமனைவரும் இவராலே பிழைக்கலாமென்றிருந்தோமே! திரவியத்தைக் கொடுத்துச் சிலம்பும் கிண்கிணியும் பண்ணச்சொன்னாரே! அதுதரித்தால் நடனஞ் செய்யவேணுமே! இவருக்கு சுவாமி நடனம் செய்யப்போகிறாரோ என்று பரிகாசஞ் செய்யத்தலைப்பட்டார்கள்.

அந்தச்சொல் இவர் செவியிலே விழுந்துகொண்டிருந்தது. இப்படியிருக்க, நாற்பதாம்நாள் சிலம்பும்கிண்கிணியும் செய்துவந்தன. மூவாயிரவரையும் மற்றையாவரையும் அழைப்பித்து இப்போது சபாநாயகர் நடனம்பண்ணினால் அனைவரும் பார்ப்பீர்களாவென்று கேட்டார். நாங்கள் எத்தனை புண்ணியஞ் செய்தோமோ! எங்கள் மூவேழ்வமிசமும் கரையேறிப் போகுமென்று சொன்னார்கள். குரு

நமச்சிவாயர் ஆனால் ஒருவேளை காற்றுவந்து அசைந்தார் என்று சொல்வார்கள். பலகணி வாயில்களெல்லாம் அடைக்கவேண்டுமென்று திட்டஞ்செய்து சிலம்பும் கிண்கிணியும் சபாநாயகர் பாதத்திலே தரிக்கச்சொல்லித் தாம் நடனதரிசனம் விரும்பிச்சொன்ன:—

நேரிசை வெண்பா

அம்பலவா வோர்கா லாடினாற் றாழ்வாமோ
வும்பரெலா கண்டகெனக் கொப்பாமோ—சம்புவே
வெற்றிப் பதஞ்சலிக்கும் வெம்புலிக்குந் திருநிவென
வொத்துப் பதஞ்சலிக்கு மோ.

இத்தப் பிரகாரம் சொன்னவுடனே, கலகலென நடனமாயிற்று திருநடனமாக குருநமச்சிவாயமூர்த்தி சொன்ன —

விருத்தம.

மிதித்தபொற் பதமு மெடுத்தபா தார
விந்தமுஞ் சந்தவெம் புலித்தோல்
விளங்கிய விடையு முந்தியுஞ் சுழிய
மேனிவெண் ணீற்றின தொளியுங்
கதித்தநற் கனக மேருவாங் கனைய
[illegible]யுங்களுங் காள
[illegible]முஞ் சென்னியும் சரியே
[illegible] கனகே.

துதித்துக் கிங்கர கண பலர்புகழ்ந் தேத்தத்
தும்புரு நாரதர் பாடத்
துங்கமா மாயன் மத்தள மிடைமேற்
சுமந்து திந்தோந் தோமென முழக்கத்
திதித்திதி தருமிவன் றம்பிகை கொட்டித்
திகழ்சிறு தாளமொத்த திசைபடத்
தில்லையம் பலத்தே திருநடம் புரியுந்
தேவனே சிதம்பரேசுரனே.

என்று குருநமசிவாயமூர்த்தி தோத்திரஞ்செய்யவே சபாபதியார் நடனஞ்செய்யத்தொடங்கினார். சகலரும் கீழேவிழுந்து நமஸ்கரித்து அசைவற்றிருந்தார்கள், தில்லைமூவாயிரவரில் மூன்றுபேர் கீழேவிழுந்து கண்ணை விழித்துக்கொண்டு வெகுநாழிகை நடனமாகிறதே ஆடுகிறதே குருநமசிவாயமூர்த்தியும் அசைவற்றிருக்கிறவர் அம்பலவாணருடைய உங்கள் மத்துவம் தெரியவராது நடனத்தை நிறுத்தவேண்டுமென்று சொன்னார்கள் குருநமசிவாயர் ஆடச்சொல்லுகிறது நாமா! நிறுத்தச்சொல்லுகிறது நாமா! என்றுசொன்னார். சுவாமீ தாளம்போடுகிறவர்கள் நிற்கவேண்டுமென்று சொன்னார்கள். அப்போது குருநமசிவாயமூர்த்தி சொன்ன —

நேரிசை வெண்பா.

தூக்கியகா லேறகாதோ துட்டன் முயலகன்மேற்
றூக்கியகா லூனுஞ் சலியாதோ—வாக்கா
லினைவாறா தில்லைத் திருத்தாண்டவர்க்
[illegible] குஞ்சிதாடி 

இவ்வெண்பாச் சொல்லியவுடனே, மிகவும் நடனமாயிற்று. ஆகவே தில்லைமூவாயிரவர்கூடிச் சபாபதியினிடத்து குருநமசிவாய மூர்த்தி தோத்திரஞ் செய்கிறாரே ! நாம் அவர்மீது தோத்திரஞ் சொல்வோமென்று தோத்திரஞ்செய்த தில்லை மூவாயிரவர் —

பாடல்.

வேடநெசசின் மிகவிரும்பும் வேளவன்றன் மேனிபோன்ற
வாடனித்தந காளியொடா டம்பலவர் சந்நிதிக்குக்
கோடிலக்கங் கவிபாடுங் குருநமசி வாயரருட்
பாடன்மெச்சி யம்பலவா பாதச்சசை யாடியதே.

இவ்வணஞ் சொன்னவுடனே குருநமச்சிவாயமூர்த்தி நடனம் நிற்கும்படி சொல்லிய —

நேரிசை வெண்பா.

கருதத்தா தாதியென நாடகத்திற் கேற்ற
தகுதித்தா ஞஞ்சிலம்புந் தானே—மருதப்பா
பாரே யினியமையும் பொன்னம் பலத்தரசு
வாரே திருத் தாண்டவம்.

இவ்விதமாயச்சொன்னவுடனே நடனம்நின்றது. அதற்குமேல் தில்லைமூவாயிரவர்கூடித் தேவரீர்பரிபூரணத்தையடைந்து இவ்வி காசமானால் நாங்கள் பூசிக்கிறோமென்று சொல்லிக்கொண்டார்கள். அப்படியே செய்யுவோமென்றுசொல்லி அநேக திருப்பணிகள் நடத்திவந்தனர். பின்னும் கட்டளை வித்தாரமாய் நடக்கத்தக்கதாக

எழுபத்திருவர் தம்பிரான்களுக்குப் பல்லக்குப் பிருது முதலும் வேண்டியவைகளையுங் கொடுத்துத் தேசமெங்குஞ் சஞ்சாரஞ் செய்வித்தனர்.

அதற்குமேல் குருநமசிவாயமூர்த்தி அநேககால மிருந்து திருப்பெருந் துறையிலே இலிங்காகாரம ஆயினார்.

நேரிசை வெண்பா.

வந்தீச சுரவருடம் வைகாசி தேதிநவ
மிந்துநா ளூழிகை யேழரைமேல்— சந்தகுரு
தானு மருணகிரி தானுசிவ லிங்கமது
வானா னமசிவா யன்.

மேல் குருநமசிவாயமூர்த்திமுதலிய இத்தனை பட்டங்களென்று சொல்லுவதற்குக் காலாந்தரங்களிலே ஆதாரங்கள் கைசோர்ந்துபோயிருக்கின்றன. அதற்குமேல் குருநமசிவாயமூர்த்தி பட்டத்திற்கு வந்தவக்காலத்தில் சபாநாயகர் சர்வகட்டளைக்கு ஸ்ரீ சாலிவாகன சகாப்தம்-௧௬௧௭-யுவ வருஷம் தை மீ ௨௨ உ புவனேக வீரபட்டினத்து நாட்டாரனைவரும் காலாட்கள் தொழுரும் சிதம்பரேஸ்வரர் சர்வகட்டளைக்குக் குருநமசிவாயமூர்த்தி பணிவிடைக்கு அரசூர்பபத்தில் இளங்கம்பூர் நான்கெல்லை யுட்பட சேர்ந்தபடியினாலே சந்திராதித்தர் உள்ளவரைக்கும் சிவார்ப்பிதமாகத் தந்தது.

சிலாசாதனத்துப் பாடல்

விருத்தம்.

தென்னருணை மருவுகுகை நமச்சிவாய
தேவர் சிஷ்யன் குருநமசி வாயன்செய்யும்
மன்னுபணி விடையாகப் புலியூர்ச்செம்பொன்
மன்றுடையான் பூசைகொண்டு மகிழ்ந்துவாழ்க

வின்னிலமே லாந்தழைக்க வாகூர்ப்பத்து
லிலிங்கபுர சாதனக்கல் லெழுதிநாட்டி
நன்னெறிசேர் காலாட்க டோழன் சின்ன
நல்லநயி னான்கொடுத்து நடத்தினானே.

பின்னும் அரியலூர்ச சீமையில் ஒப்பில்லாத மழவராயர் கட்டளை ௨௪-கிராமம்விட்டு நடந்தது. அம்பலங் கட்டளை அரைக் கட்டளை என்றபேர். அனந்தகிரிசசீமையில் சொக்கம்பட்டிஉடையார்சீமையில் பிச்சனூர், மானூர் இரண்டு கிராமம்விட்டது. வீரகநல்லூர் என்று இரண்டுகிராமம் நடப்பிவித்தது. கள்ளடகுறிச்சியில் பாளையப்பட்டுச சேலம் சேதுராயப்பிள்ளை குரு நமசிவாயபுரம் என்று ஒருகிராமம் நடப்பித்தது. மங்கலூர்ச்சீமையில் ஆதிபுரமாளிகை [illegible]டுஎன்று இரண்டுகிராமம் நடந்தது. வெட்டவலம் பண்டாரத்தார் காடி பூமாரி என்று இரண்டு கிராமம நடந்து இவைகளெல்லாம் சபாபதி சர்வ கட்டளைக்கும் குரு நமச்சிவாயமூர்த்தி மடத்திற்கும் நடந்துவந்தன. உடையார்பாளையம பண்டாரத்தார் தென்னந்தோப்புக்கு ரூபா ௪௦௦ கொடுத்துச சிதம்பரத்தில் சுவாமி சாவகட்டளைக்கு வாங்கிவிட்டது. இவைகளெல்லாம் அநேகமாய் முன்னாலே நடந்தது. கலிகாலக் கொடுமையால் வரவர நின்று போயிருக்கின்றன.

அந்தக்கிராமத்திலிருக்கிற விபரம். சகாப்தம் ௧௧௬௫-௵ முதல் குருநமசிவாயமூர்த்தி பட்டம்-௧௭-க்கு சகாப்தம்-௧௭௨௭ ௵த்துக்குச் சரியான குரோதன ௵ வரை வந்த பட்டத்துக்குள்ளாக உடையார் பாளையத்திலிருக்கிற பண்டாரத்தார் அநேக வாகனமுதலானதும் தருமமும் நடப்பிவித்தார். இந்தவாறு குரு நமச்சிவாயமூர்த்தி தேசசஞ்சார யாத்திரைசெய்து சபாநாயகர் சர்வகட்டளைக்கும் மடதருமத்துக்கும் பிட்சைநடத்தி வந்தது.

உடையார் பாளையம் சீமையில் ஜெயங்கொண்ட சோழபுரத்தில் சிவகாரததோப்பு மடம் தீர்த்தம் உண்டாக்கிக் கொடுத்து, உடையார்பாளையப் பகுதியில பேரணிஈஸ்வரா கோவிலும் கிழக்கு மடமும் தீர்த்தமும் உண்டாகியிருக்கின்றன.

இளங்கம்பூர் முனனுலே சர்வமானியகிராமம். இப்போது சர்வரிலே கழிந்துவருகிறது சாலிவாகன சகாப்தம ககசு௦-க்குமேல் செல்லும யுவஞு தைமீ ௨௦௨ இளங்கம்பூர்ச சபாநாயகர் சர்வகட்டளைக்கு சாதனக்கல எழுதினது காஞ்சிபுரத்திலிருந்து வந்து சின்னநல்ல காளாக்கத் தோளபடைத்தோா உடையதனு.

௨ வது, பட்டம நலலநாயக பணடாரத்தாா. சபாநாதருக்கு வெள்ளியானை வெள்ளியிடபம பின்னும் சில திருப்பணிகளும் செய்துவைததார்.

ங. வது, அவா புத்திரா நலலநாயகபணடாரத்தார் சபாநாயகருக்குப பொன்குதிரையும அநேக சத்திமூர்த்தங்களும் உடையார் பாளையம் சீமையில்மானேரி எனனுங்கிராமமும் நடப்பிவித்தனர்.

சாலிவாகன சகாப்தம க௬௬ரு-கருச செல்லாநின்ற ஜயஞு தைமீ ௨௨௨ சின்னநல்லநாயகபணடாரத்தார் புத்திரர் நல்லநாயக பண்டாரத்தார். அவாபுத்திரா சின்னநாயகபணடாரத்தார். பாளையம் அரணமனையும் ஆலயமும் மடமும மற்றுமுண்டான தருமங்களெல்லாம் செய்தனர். அவாகாலத்தில் சாலிவாகனசகாப்தம் சார்வரிஞு மார்கழிமீ ௨௨௨ மானூர் பிசசனூர் இந்த இரண்டுகிராமமும் ஜயங்கொண்ட சோழபுரச சிவகாரத்தோப்பும் செயதுவைத்தனர்.

ச. வது, பெரிய நல்லநாயகபணடாரத்தார் காலத்திலே பூதவாகனம், மயில்வாகனம், அன்னவாகனம்செய்து உற்சவம் நடப்பித்து மடப்புறமென்னும் கிராமமும் எங்கும்வாங்கித் தருமங்களைச் செய்துவைத்தனர்.

௯. வது, சின்னநல்லநாயக பண்டாரத்தார் காலத்திலே சிவகாமி அம்மையாருக்குக் குருமங்கிலியஞ் செய்து, கட்டளை அமை கட்டிவைத்து, மேல் கோபுரத்துக்கு மேற்கே பிள்ளையார் கோவிலுங் கட்டிவைத்து, திருப்பெருந்துறைக்கு குருநமச்சிவாயமூர்த்தி மடத்திற்குத் தெற்கு ௪௦௦-பொன் கொடுத்துத் தென்னந்தோப்பு வாங்கிவிட்டனர்.

௧. வது, சின்ன அம்பலநாயக பண்டாரத்தார சிதம்பரவேலனுக்கு ௨௦-தளிகை நைவேதநியஞ்செய்து குருநமசிவாயமூர்த்தி அடியார்களுக்கு பிட்சை நடப்பித்துவந்தார, சகாப்த௵ ௧௬௯௦-சர்வதாரி௵ மார்கழி௴ ௨௨௳.

இந்தச் சகாப்தம் வரைக்கும் கோபுரதநில் சாசனம் இருக்கிறது.

இவ்வாதீனம் வீரசைவமடம்.

## குருநமச்சிவாயர் செய்த பாடல்.

ரமாசியமாலை-சிதம்பரவெண்பா-அண்ணாமலைவெண்பா.

---

## குகைநமச்சிவாயர் செய்த பாடல்.

அருணைகிரியந்தாதி-தனிவெண்பாமாலை.

இவ்வாதீனத்தார்க்கு காளதுவரையில் சிதம்பர உற்சவகாலத்தில் சுவாமியுடன் பல்லக்குப் பிருதுகள் நடந்துவருகின்றன.

குருநமசிவாயர் சரித்திரம்

முற்றிற்று.

உ

சிவமயம்.

திருவண்ணாமலை

குகைநமசிவாய சுவாமிகளால் உபதேசம்பெற்ற

சிதம்பரம்

# குருநமச்சிவாய சுவாமிகள்

அருளிச்செய்த

# அண்ணாமலை வெண்பா.

---

காப்பு.

மன்னுதிரு வண்ணா மலைமாலை நாயடியேன்
பன்னுதமிழ் வெண்பாவிற் பாடவே—துன்னுமலர்ப்
பாதனே மூடிகத்தின் பாலேறுந் தேவகண
நாதனே முன்னட

வெண்பா நூல்.

ஆதிநட மாமலை யனாதிருவா தேமலை
சோதிமதி யாடரவஞ் சூடுமலை—நீதி
தழைக்குமலை ஞானத் தபோதனரை வாவென்
றழைக்குமலை யண்ணா மலை. (க)

அன்பர் பிறப்பை யகற்றுமலை யன்பரல்லா
வன்பர் பிறப்பை வளர்க்குமலை—யன்மை
வடிக்குமலை சிவகத்தை வர்த்திசிப்பு வாசி
யடிக்குமலை யண்ணா மலை. (உ)

கூற்றை யுதைத்தமலை கோமாறன் கூடல்வலை
யாற்றை யடைத்தமலை யாரூரன்—போற்றச்
சிறந்தமலை தீவினையேன் செய்தகுற்ற மெல்லா
மறந்தமலை யண்ணா மலை. (ங)

ஏழைக் கிரங்குமலை யேதேது கேட்டாலுங்
கோழைப் படாமற் கொடுக்குமலை—வாழ

ஞான குருநாத னமசிவா யன்கருணை
யானபர ஞானியெனை யாண்டமலை—வானவர்கள்
போற்றுமலை தீவினையேன் புந்திக் கவலையெல்லா
மாற்றுமலை யண்ணா மலை. (கக)

சரண கமலந் தனைப்புகழுந் தொண்டர்
மரண பவத்துயர மாறக்—கருணை
பொழியுமலை தட்டுப் புழுகு பனிநீரே
வழியுமலை யண்ணா மலை. (கஉ)

அன்பர் கருத்தி லனவரத மேவுமலை
துன்ப மகலத் துரத்துமலை—யின்பம்
விளைக்குமலை செம்பொன்மக மேருவினை வில்லா
வளைக்குமலை யண்ணா மலை. (கங)

நண்பாக் குகையி னமசிவா யன்கருத்தில்
வெண்பாப் பயிராய் விளையுமலை—திண்பா
ரளந்தமலை நெடுஞ்சுடரா யன்றிருவர் தேட
வளர்ந்தமலை யண்ணா மலை. (கச)

சீதமல ரோனெடுமா றேடுமலை யன்பருக்குப்
பாதமலர் வீடாய்ப் பலிக்குமலை—மாதவர்கண்
மொய்த்தமலை யுண்ணா முலையுமையைப் பாகத்தில்
வைத்தமலை யண்ணா மலை. (கரு)

வைத்தநிதி யோநமச்சி வாயகுரு நாடோறு
மெய்த்தமிழி னற்புகழ்ந்து மேவுமலை—யெத்திசையு
மின்னுமலை மாதுடனே வெள்ளிமலை வீடாக
மன்னுமலை யண்ணா மலை. (கசு)

முக்கோண மாக முளைத்தமலை மூண்டகன்மா
லக்கோடு நாக மணிந்தமலை—திக்கோடு

றன்னுமலை தன்னைத் துதிக்குமடி யாருளத்தின்
மன்னுமலை யண்ணா மலை. (௧௭)

வண்டமிழா லோதமச்சி வாயகுரு வேத்துமலை
கண்டுதொழு வார்க்கினிய காட்சிமலை—யண்டமுத
லானமலை போற்றி நினைக்குமடி யாருளத்தே
வாழுமலை யண்ணா மலை. (௧௮)

அஞ்செழுத்தாய் வேதமா யாகமமாய் நின்றமலை
விஞ்செழுத்தா யொன்றாய் விளங்குமலை—நெஞ்சகத்தே
நைத்தமலை நாயேனைத் தன்னடியார் கூட்டத்தில்
வைத்தமலை யண்ணா மலை. (௧௯)

மன்னுறு மோனமசி வாயகுரு செந்தமிழாற
பன்னூறு மேத்திப் பணியுமலை—யென்னாளு
மெய்க்குமலை பொல்லா வினையேனைத் தன்னடிக்கீழ்
வைக்குமலை யண்ணா மலை (௨0)

எந்தை குருநாத னிருக்குமலை யென்பாச
பந்தமறப் போகவிப் பரிந்தமலை—சந்திரனைத்
தேய்த்தமலை நாயடியேன் சிந்திக்குஞ் சிந்தனைக்கே
வாய்த்தமலை யண்ணா மலை. (௨௧)

அஞ்ஞானக் கவலை யகற்றுமலை யன்பர்க்கு
மெய்ஞ்ஞானச் சோதி விளக்குமலை—அஞ்ஞானச்
சந்தமலை நாயேற்குத் தந்தைதாய் சற்குருவாய்
வந்தமலை யண்ணா மலை. (௨௨)

நீற்றை யணிந்தமலை நீள்சுடராய் நின்றமலை
யேற்றைப் பரியாக வேறுமலை—கூற்றை
யுதைத்தமலை யன்றரிவை யோர்பிம்பு வாகி
வதைத்தமலை யண்ணா மலை. (௨௩)

ஓலமிடுந் தேவர்குழா முய்யத் திருமிடற்றி
லாலவிடந் தன்னை யடக்குமலை—நாலுமறை
யந்தமலை நாயேனை யாளக் குருவாகி
வந்தமலை யண்ணா மலை. (௨௪)

ஆதி நெடுமா லயன்காணா வன்றுபரஞ்
சோதிச் செழுஞ்சுடராய்த் தோன்றுமலை—வேத
முழங்குமலை சிந்திப்பார் முன்னின்று முத்தி
வழங்குமலை யண்ணா மலை. (௨௫)

வந்துலகி லோகமசி வாயகுரு வாயடியேன்
சிந்தைகுடி கொண்டிருக்குந் தெய்வமலை—முந்தைவினை
நீக்குமலை சொல்லரிய நீள்பிறவித் துன்பமெல்லாம்
போக்குமலை யண்ணா மலை. (௨௬

சத்திக் கொருபாகந் தான்கொடுத்து நின்றமலை
முத்திக்கு வித்தாய் முளைத்தமலை—யெத்திசையும்
போற்றுமலை போற்றிப் புகழ்வா ரெழுபிறப்பை
மாற்றுமலை யண்ணா மலை. (௨௭)

வால மதியை மௌலியின்மேல் வைத்தமலை
சீலமுனி வோர்கள் செறியுமலை—காலங்
கடந்தமலை சீறிவருங் காலனைக்கா லாலே
யடர்ந்தமலை யண்ணா மலை. (௨௮

இட்ட மிடருஞ் சிவாநிதி யில்லாத
துட்டர் சகமுந் துடைக்குமலை—நட்டம்
பயிலுமலை யெவ்வுலகும் பாழ்படுமென் றுலவு
மயிலுமலை யண்ணா மலை.

கண்ட மிருளக் கவிவிடத்தை வானவர்க்கா
வுண்டபிரா னுறையு மலை—தொண்ட

அண்ணாமலைவெண்பா.

ஓலமிடுந் தேவாகுழா மூய்யத் திருமிடற்றி
லாலவிடந் தன்னை யடக்குமலை—நாலுமறை
யந்தமலை நாயேனை யாளக் குருவாகி
வந்தமலை யண்ணா மலை. ([illegible])

ஆதி நெடுமா லயன்காண வன்றுபரஞ்
சோதிச செழுஞ்சுடராய்த் தோன்றுமலை—வேத
முழங்குமலை சிந்திப்பார் முன்னின்று முத்தி
வழங்குமலை யண்ணா மலை. (௨௫)

வந்துலகி லோகமசி வாயகுரு வாயடியேன்
சிந்தைகுடி கொண்டிருக்குந் தெய்வமலை—முந்தைவினை
நீக்குமலை சொலலரிய நீள்பிறவித் துன்பமெல்லா
பாய்க்குமலை யண்ணா மலை. (௨௬)

சத்திக் கொருபாகந் தான்கொடுத்து நின்றமலை
முத்திக்கு வித்தாய் முளைத்தமலை—யெத்திசையும்
போற்றுமலை போற்றிப் புகழ்வா ரொழுபிறப்பை
மாற்றுமலை யண்ணா மலை. (௨௭)

வால மதியை யொளவி பின்மேல் வைத்தமலை
சீலமுனி வோர்கள் செறியுமலை—காலன்
கடந்தமலை சீறிவரு காலனைக்கா லாலே
யடர்ந்தமலை யண்ணா மலை. (௨௮)

சிட்ட ரிடருஞ் சிவசிந்தி யில்லாத
துட்டர் சகமுந் துடைக்குமலை—நட்டம்
பயிலுமலை யெவ்வுலகும் பாழ்படுமென் றுவு
மயிலுமலை யண்ணா மலை. (௨௯)

கண்ட மிருளக் கவிவிடத்தை யாண்டவர்க்கா
வண்டபிரா னைநி யகவுமலை—கொண்ட

ரிணங்குமலை வானோரு மேனோரும் போற்றி
வணங்குமலை யண்ணா மலை. (௩௦)

துன்பப் பசிதீர்க்குஞ் சுத்தசிவ ஞான
வின்பப் பசுந்தே னிருக்குமலை—யன்பர்க்
கிருளுமலை வாராம லெப்போதுங் காட்சி
யருளுமலை யண்ணா மலை. (௩௧)

செகமருவு மைம்புலனிற் சேராமன் ஞானச்
சுகமருவ மேன்மைபுனை தொண்ட—ரகமருவுந்
தூயமலை வஞ்சகர்க்குத் தோன்றாம லேயொளிக்கு
மாயமலை யண்ணா மலை. (௩௨)

கரத்தி லினிய கனபொருளைத் தந்துஞ்
சிரத்தி லடியிணையைச் சேர்த்தும்—பரத்து
மிகத்துமலை வாராம லென்குருவா யாண்ட
மகத்துமலை யண்ணா மலை. (௩௩)

பற்றி யிமையோர் பகைதெறுவான் வந்தெதிர்த்த
வெற்றி மதராசன் வேகவே—புற்று
விழித்தமலை தக்கனார் வேள்விதனை முன்ன
னழித்தமலை யண்ணா மலை. (௩௪)

பாட றனைவிரும்பிப் பாவலர்க்கா கப்பரவை
வீடுதனக் கிருகால் மேவியே—கூட
விணக்குமலை தன்புகழை யெண்டிசைக டோறு
மணக்குமலை யண்ணா மலை. (௩௫)

கத்திக்குந் தேமாங் கனிபழுத்துக் கார்க்கவென்
மத்திக்கு நல்கி மகிழுமலை—சித்தக்கு
மெண்ணுமலை வற்றோர்க் கினியமலை யோரஞ்ச
வண்ணமலை யண்ணா மலை. (௩௬)

உன்னு தவம்புரியு மோநமச்சி வாயகுரு
மன்னுங் கருணைமுகில் வாழுமலை—பென்னம்
பெரியமலை மாலும் பிரமனுந் தேடற்
கரியமலை யண்ணா மலை (௪௭)

வேண்டு மயன்மால் விழிமனத்துக் கெட்டாம
லீண்டெழற் பிழம்பாய் நின்றமலை—யாண்ட
கருணைமலை யொப்புரைத்துக் காணவரி தான
வருணைமலை யண்ணா மலை. (௪௮)

வீடுமுதலா விரும்பும் பொருளனைத்தும்
பாடுமடி யார்க்கும் பலிக்குமலை—நீடுபுகழ்
பூண்டமலை சற்குருவாய்ப் பொல்லாச் சிறியேனை
யாண்டமலை யண்ணா மலை. (௪௯)

அனைத்துலகும் போற்றுதிரு வைந்தெழுத்தை யோதித்
தனைத்தொழுது பேணுந் தவத்தோர்—நினைத்தவர
நல்குமலை யெந்நாளு நல்லோரு நன்னெறியு
மல்குமலை யண்ணா மலை. (௫௦)

மானனைய கண்ணார் வசமாகி நாயடியே
னானவினைக் காட்டி லுழலாமல்—ஞானநெறி
காட்டுமலை தன்னைக கருதுமடி யாரிடரை
வாட்டுமலை யண்ணா மலை. (௫௧)

பிள்ளை யறுத்துதவும் போனனை யுவர்த்து
கொள்ள வயிரவமெய்க் கோலமாய்—மெள்ள
நடந்தமலை சிம்புளாய் நாரசிங்க ருடலை
யடர்ந்தமலை யண்ணா மலை. (௫௨

ஸ்ரீ தற்குரு மோநமச்சி வாயகுரு
வையமுழு தாத்திக்க வாழுமலை—துய்யவராக்

தேக்கு மலை நல்லோர் செறியமலை பெண்ணையா
ளாக்குமலை யண்ணா மலை. ([illegible])

உண்ணா முலையா ளொருபாக மானமலை
கண்ணா ரமுதாய காட்சிமலை—விண்ணோர்
துதிக்குமலை யன்பர் தொழுதேத்தி நாளு
மதிக்குமலை யண்ணா மலை. ([illegible])

காதலரு ளான னமசிவா யன்கனிவா
யோதுதமிழ் மாலை யுர்தமலை—பாதிமதி
சூடுமலை பத்திசெயுந் தொண்டருடன் கூடிவிளை
யாடுமலை யண்ணா மலை. ([illegible])

தேவரையுந் தேவருக்குத் தேவராச செப்புமொரு
மூவரையு மண்ணோர் முனிவரையும்—யாவரையும்
பெற்றமலை தன்பெருமை பேசுகொற் றாய்தந்தை
யற்றமலை யண்ணா மலை. ([illegible])

நேசிக்கு மன்பர் நினைவுகொடு பாவித்துப்
பூசிக்கும் பூசை பொருந்துமலை—யாசைக்குள்
வீழுமலை பற்றொழிந்த மெய்யடியார் நெஞ்சகத்தில்
வாழுமலை யண்ணா மலை. ([illegible])

நன்றிபுனை நஞ்ச னமச்சிவா யன்றினமுந்
துன்று மலர் தூவித் துதிக்குமலை—யன்றிருவர்
தேடுமலை சந்ததமுந் தில்லைசிற்றம்பலத்தே
யாடுமலை யண்ணா மலை. ([illegible])

நெஞ்சகத்தி லொரன்று நினைப்பார்க்கு மாலறியாக்
கஞ்சமொத்த பொன்னடியைக் காட்டுமலை—யஞ்செழு
[illegible] யம்பிகையுண் ணாமுலையம் மைக்குகந்த
[illegible] யண்ணா மலை.

புன்றலையின் மாயன் புவியிடந்துங் காணரிய
நன்றிதரும் பொன்னடியை நாடியே—யென்றுமொரு
நாளுமலை வாராம னாயேனைச் சற்குருவா
யாளுமலை யண்ணா மலை. (௧௰)

கண்ட விடத்தைச் சகமிரந்து போகாமற்
கொண்ட திறம்பாடிக் கொண்டாடித்—தொண்டர்
பணியுமலை மெய்ம்முழுதும் பால்வெள்ளை நீற்றை
யணியுமலை யண்ணா மலை. (௧௧)

தில்லைவனங் காசி திருவாரூர் தென்மதுரை
செல்லினும பேறெளியாய் நின்றமலை—தொல்லைமறை
பாடுமலை சந்ததமும் பஞ்சாக்கர மேவிநட
பாடுமலை யண்ணா மலை (௧௨)

மூலமுத லண்ணா மலையென்று மன்பருக்குச்
சாலவரந் தருளு நாயென்று—நாலுமறை
பேசுமலை பாகம் பிரியாச் சிவஞான
வாசமலை யண்ணா மலை. (௧௩)

தொன்மதுரைச் சுந்தரர்க்காத் தூதுபோய் வந்தமலை
நன்மைதரத் தொண்டருக்கு நல்குமலை—மன்மதனைக்
காய்ந்தமலை கூடவிற்சங் கத்தா ருடன்றமிழை
யாய்ந்தமலை யண்ணா மலை. (௧௪)

புண்டரிகன் மாறேடிப் பொன்முடியும் பொன்னடியுங்
கண்டறிய வொண்ணாக் காட்சிமலை—தொண்டருடை
யூனமலம் பற்றறுக்க வோநமசி வாயகுரு
வானமலை யண்ணா மலை. (௧௫)

சோலைதொறுங் குழுமலைச் சோலையென
ழ்ழ மழைமாரி—யென்றும்

பொழியுமலை மாருமற பூஞ்சுனைநீர் பொங்கி
வழியுமலை யண்ணா மலை. ([illegible])

வேட்ட வடியார் விளக்குறு சிவஞான
நாட்டம பொழிபோர னாதநீ—ராட்டக
குளிக்குமலை காளுற குறைவிலாச செல்வ
மளிக்குமலை யண்ணா மலை ([illegible])

நீலமலை தேடரிதாய் நின்றமலை நின்றதழற
கோலமலை மன்றிற குனிக்குமலை—மூலமலை
யந்தமலை சுந்தரநகா யனபிரவிற றாதுபோய
வந்தமலை யண்ணா மலை ([illegible])

தரையெலா முய்யத தனிக்கிருந்து செயயுந
கரையிலா மாதவததைக கண்டு—விரவியொரு
பாகமலை மாதுபெறப் பாலித்து நின்றருளு
மாகமலை யண்ணா மலை ([illegible])

கள்ளப் புலவேடர் கைவசமா கககனிந்து
தெள்ளித தெளிந்தோர் செறிவாக வுள்ளக்
கருத்துமலை யாதிருக்கக் காட்சிதருந தெய்வ
மருத்துமலை யண்ணா மலை ([illegible])

முககுணமு மைமபுலனு மூளா வகையடக்கி
யொககு முணர்வா யிருப்போ ருள்ளத்தே—புக்குலவும்
பாதமலை தாய்வயிற்றிற பார்மீதில் வந்துபிற
வாதமலை யண்ணா மலை.

பன்னைத்த கூடற பழம்பதியிற்பிட்டமுதை
புன்னைத்து வைகை யுடையாமண்
போமெலை சந்தமும் பொன்னம்பலத்தினட
மாமெலை யண்ணா மலை.

அண்டமுழு தும்பறந்தே யன்னவுரு வாய்த்தேடி
மண்டலமெ லாஙகோல மாய்த்தேடிப்—புண்டரிகன்
சீர்க்கமலை கோனறியாத தெய்வச சிவஞான
மார்க்கமலை யண்ணா மலை (கூங)

கூனற சிறபிறை ௗ டக கோளரவுக கஞ்சாமல்
வானப் பண்சடைமேல வைத்தமலை—ஞானச
சரதமலை யானந்தத தாணடவத்தூக கேறற
வரதமலை யண்ணா மலை (கூச)

பொருந்துதலைச சஙகப் புலவாதம்மைப் போலே
விரிந்தபுகழ்க் கூடலிலே மேவி —யருககமிழை
யாழ்ந்தமலை பார்மீதி லலகெழுநத ஞகிவந்து
வாய்ந்தமலை யணணா மலை. (கூரு)

ஆதிமலை யாதி யநாதிமலை யம்மையொரு
பாதிமலை யோதியறை பாடுதலை—நீதிமலை
தந்தரமலை யந்தரமலை சாற்றியபஞ சாககர
மந்த்ரமலை யண்ணா மலை. (கூகூ)

அஞ்சு புலனு மடககி யறிவுடையோர்
வஞ்ச வினைப்பிறவி மாயலே—நெஞ்சி
லழுந்துமலை யன்ப ரனவாதம் போற்றி
வழுத்துமலை யண்ணா மலை. (கூஎ)

கதிததமுனி பாலகன்மார்க் கண்டனையே சீறிப்
பதைத்துவருங காலன் படவே—யுதைத்ததொரு
வீரமலை சற்குருவாய் மேவியெனை யாண்டபட்ச
வாரமலை யண்ணா மலை. (கூஅ)

இமயவரும் பத்தருமா தேசுராருங் காணச்
சமயகுரு வாதுரஇ தாஙக—வுமையொருபா

கானமலை வாக்குமனங் காய்ந்த நமக்காய
வானமலை யண்ணா மலை. (௬௯)

ஆத்தி கடுக்கைமுத லானமல ரைந்தெழுத் தாற்
சாத்தி யடியவருந் தக்கோரு—மேத்திய
புகழுமலை யாகவவைப் பொற்கொடியோ டெய்தி
மகிழுமலை யண்ணா மலை. (௭௦)

மாலூன்றிச் செய்யு மணர்ந்தனைக்கு சக்கரனைக்
காலூன்றி யாளக் கருணையாய்—கோத்ரனைத்
தந்த விருதத சதாவே தியகாக
வந்தமலை யண்ணா மலை. (௭௧)

அறுகு மதியு மணிமுடிமேற சூடன
மறுகுதனி லடியார வாழ—விறகு
சுமந்தமலை போற்றிசெயுந் தொண்ட ரகம்போந்தமு
மமர்ந்தமலை யண்ணா மலை. (௭௨)

மட்டலவு கஞ்சமலரோனு மாலோனுந்
திட்டமுடன் றேடித திகைததாலு—மெட்டரிய
ஞானமலை பார்மீது நாலுகத்தி லுலவு
வானமலை யண்ணா மலை. (௭௩)

மறைவடிவாஞ் சோமாசி மாறன மகடனனி
லுறைவடிவாம பகலிலுமை யோடு—நிறைவடிவாய்ச்
சென்றமலை யந்தணர்சூழ் தெய்வக் கனகமணி
மன்றமலை யண்ணா மலை. (௭௪)

எப்பொருளு மாகி யிருசுடர்யா ராக
மெய்ப்பொருளு மாகி விளங்குமலை—கைப்பொருளே
யொத்தமலை யென்றலைமே லோமச்சி வாயனெழு
ழுந்தமலை யண்ணா மலை. (௭௫)

பல்லுயிருங் கேட்டறியப் பார்த்தன்கை யாலடித்த
வில்லடியும் புத்தன் மிகவெறிந்த—கல்லெறியும்
பட்டமலை மன்மதனைப் பார்வையினால் வெந்துவிழ
வட்டமலை யண்ணா மலை. (௫௬)

வானை யுருவ வளர்ந்தமலை வாமபசவைசத
தேனையொரு பாகத்திற் சேர்த்தமலை—யானை
யணித்திரள்சேர் சார லதில்வேய்க ளீன்ற
மணித்திரள்சே ரண்ணா மலை. (௫௭)

அன்று கயிலை யரக்க னெடுத்த வப்போ
தின்றவனைக் காலா னெரித்தமலை—யென்று
மருத்துமலை யெவ்வுலகு மன்பரிடர் நோக்கு
மருத்துமலை யண்ணா மலை. (௫௮)

அன்றுபதி னாலுவய தானமார்க் கண்டர்தமக்
கென்றுமீ ரெண்வயதே யென்றமலை—நின்று
பிறக்குமலை தன்னடியார் செய்தகுறை யெல்லா
மறக்குமலை யண்ணா மலை. (௫௯)

அன்றிருவர் தேட வனல்வடிவாய் நின்றமலை
யின்றுருகுந் தொண்டருக்கு நேயமலை—யென்று
நடிக்குமலை வெள்ளியிலே காரணனையோட
வடிக்குமலை யண்ணா மலை. (௬௦)

நஞ்சணியுங் கண்டமலை நாளுமடியவர்தம்
வஞ்சவினை தானறுக்க வந்தமலை—செஞ்சடை
மினுக்குமலை யன்பர்க் கினியபே ரின்பம்
வணிக்குமலை யண்ணா மலை. (௬௧)

[illegible] பத்தர்பணிந் தேத்துமலை
[illegible] மானை மரித்த காட்டிமலை—கைய[illegible]

நதியணியும் வேணியின்மே லுறுமலர்க் கொன்றை
மதியணியு மண்ணா மலை (௮௨)

மயிலரவஞ் சேருமலை மான்புலிகள் கூடிப்
பயிலுமலை வானோர் பரவுங—கயிலை
பொருந்துமலை யெந்நாளும் போற்றுமன்பர் நாவா
லருந்துமலை யண்ணா மலை. (௮௩)

உற்றுப் புரத்தி லொருமூவர் தம்மைவைத்துப
பற்றி யெரித்துவிழப் பார்த்தமலை—நத்தியே
காணுந் தனைத்தேடி நம்புமடி யார்தமையே
யாளுமலை யண்ணா மலை (௮௪)

உள்ளும் புறம்பு மொருசெயலா மன்பருள
கொள்ளுமலை நாட்டங் குளிக்குமலை—துள்ளு
மெருத்தின்மே லேறுமலை யென்பிறவி நோய்க்கு
மருந்துமலை யண்ணா மலை (௮௫)

துன்ப மகற்றுமலை தொல்வினையை நீக்குமலை
யன்பர்தமை வாவென் றழைக்குமலை—தன்பதத்தைக்
காட்டுமலை தன்னைக் கருத்திலுறு மன்பரிடா
வாட்டுமலை யண்ணா மலை. (௮௬)

போதமுற்ற மெய்யடியார் புந்தியிலே வேரோட்டிப்
பாதமுச்சி மட்டாயப் படர்ந்தமலை—நாதந்
தழைக்குமலை யன்பா தபோதனரை வாவென்
றழைக்குமலை யண்ணா மலை. (௮௭)

முப்போதும் பூசித்து மோகித்துப் போற்றுமவர்க்
கப்போது முன்னின் றருளுமலை—யெப்போதுந்
தாய்க்குமினி தானமலை சற்குருவாய் நாயேற்கு
வாய்க்குமலை யண்ணா மலை. (௮௮)

காலை யுதைத்தமலை கையின்மான் சூலமலை
வேலை விடமருந்து மெற்றிமலை—மாலை
யணிசேரு நீணைமுடிமே லங்கரவ மீன்ற
மணிசேரு மண்ணா மலை. (அகூ)

மாறுபட்ட தக்கனுயிர் மாய்த்தமலை மாலயற்கு
நீறுபட்ட செந்தழலாய் நின்றமலை—கூறுங்கா
லொப்பனைக ளில்லா துயர்ந்தமலை நீணைமுடிமே
லப்பணியு மண்ணா மலை. (கூ0)

பசைசிறந் தாளுகிய பார்வதிடி வானமலை
கசசையெனக் கடசெவியைக் கட்டுமலை—நிட்சயமாய
மாளுமடியேனை மாளா வகையருளி
யாளுமலை யண்ணா மலை. (கூக)

மாவொருகை வெற்றி மழுவொருகை யானமலை
யானமுனி வோர்கண் டத நாடுமலை—யானை
யுரித்தமலை யம்மை யுமையாலே யாகரு
மருந்துமலை யண்ணா மலை (கூ௨)

மூலமலைமலர்க் கொன்றை முடிமே லணிந்தமலை
யெல்லையிலா மாதவர்க ளேத்துமலை—தில்லையிலே
நட்டமலை முப்புரத்தை நாடுமனபா மூவரைவிட்
டட்டமலை யண்ணா மலை. (கூ௩)

எல்லாருங் காணற் கினியமலை யென்னுடைய
பொல்லா வினையறுக்கப் போந்தமலை—சொல்லாரும்
நல்லமலை பொல்லாரை நாசமுறப் பார்க்கைக்கு
வல்லமலை யண்ணா மலை. (கூச)

ஆழி நெடுமா லயர்க்குமரி தானமலை
யூழின் வினை யன்பர்க் கொழிக்குமலை—யாழியிலே
நஞ்சமுண்டக் கண்டு நடுங்கினரைக் காக்குமலை
யஞ்சுமுகத் தண்ணா மலை. (கூரு)

எத்திசையுந் தோற்றுமலை யேறுகந்து நின்றமலை
சித்திவரமீந் தருளிச் செய்யுமலை—முத்தர்மனம்
பூணுமலை யண்டர் புகழுமலை நீண்டொரு
மாணுமலை யண்ணா மலை. (௯௬)

வண்மைக் குணத்தவரை மாதவரை வந்தடைந்தோர்
தம்மைத் தளராமற் றாங்குமலை—யுண்மை
பொருந்துமலை விண்ணவர்கள் போகாம லால
மருந்துமலை யண்ணா மலை. (௯௭)

வானத்துப் பூந்தருவை வாங்கிக் களிறுபிடி
யானைக்கு நீட்டி யணையுமலை—ஞானத்த
ருன்னுமலை யெந்நாளு மோகமசி வாயகுரு
மன்னுமலை யண்ணா மலை. (௯௮)

அழியாத முத்தி யளிக்குமலை யன்பர்க்
கொழியா வினையை யொழித்துக்—கழியாத
வேற்றுப் பிறப்பை யினியமையு மென்றருளி
மாற்றுமலை யண்ணா மலை. (௯௯)

பெற்றந் தனிற்றோன்றிப் பெய்வளையுந் தானுமென்றன்
குற்றங் களைந்தருளிக் கொண்டமலை—சீதம
புதியமலை கங்கையணி பொற்சடைமேல்வைத்த
மதியமலை யண்ணா மலை. (௧00)

அண்ணா மலைமாலை யானதமிழ் வெண்பாவாற்
றண்ணாரு மைந்தெழுத்தைச் சாற்றியநூல்—பண்ணாகக்
கற்றவர்கள் கேட்டவர்கள் காசினியிற் பேரின்ப
முற்றவகை யாள்வ ருவந்து. (௧0௧)

மன்னுதிரு வண்ணா மலையைவல மாகவந்தன்
புன்னுதிரு வைந்தெழுத்தை யோதினேன்—றென்னருணை
நாயகத்தைக் கோவிலிலே நான்கண்டேன் பேறெடுத்தற்
றாயகத்தைக் கண்டவர்பெற் றான்.

அண்ணாமலைவெண்பா
முற்றிற்று.

சிவமயம்.

யாழ்ப்பாணத்து நல்லூர்

மகாவித்வசிரோமணி

## கா. தியாகராசபிள்ளை அவர்கள் இயற்றிய

# அண்ணாமலையார் வண்ணம்.



முதரிதென்றல்,

தனத்தான தனனதன தனத்தான தனனதன
தனத்தான தனனதன தநத தனனா
தனனதன தானதான தனனா.

சிலைக்காம னுடலெரிய விழித்தாடல் புரிபரமர்
செருக்கால நமனுயிரை யுண்ட சரணர்
மலர்ப்பாவை வருசகல கலைப்பாவை தொழுபசிய
மலைப்பாவை கவுரியொரு பங்கிலுறைவார்
சினத்தாலு மிகவுமெதிர் விழித்தாலு முனிவினொடு
சிரித்தாலு மழல்வடிவு கொண்ட பரனார்—
அரவு குடிபெறு நீள்குழையார்,

திருக்கோயி றிருவதிகை திருச்செய்ஞ திருமருக
திருத்தோணி திருவரதை வஞ்சி பனையூர்
திருச்சேறை தருமபுர மறைக்காடு திருமயிலை
திருக்கோவ றினாநகர மன்பில் கடவூர்
திருக்காவை பொதியமலை கழிப்பாலை கயிலைமலை
தெளிச்சேரி யிடைமருது தஞ்சை வழுவூர்—
சுழியல் பனைவாயில் கூடலுறைவார்,

புலித்தோலி னுடையழகர் பலிக்கேகு நடையழகர்
[illegible] நுதலழகர் செங்கை மழுவார்

நெருப்பாறு வரும்விழியின் மயிர்ப்பால மெனுமனதி
நினைப்பார்தன் வினைகளையு மெங்கள் பரனார்
புயத்தோடு நெடியவரை யெடுத்தானை வெகுளியொடு
புடைத்தானை யுரியையணி கொண்டதிறவார்—
குமுதமலர் மாலை சூடுவிடையாா

புகைப்போல வேழுபடன் முகிற்கூட மிடறிவிழு
பொழிற்கூடு வளர்கமுகு நின்ற நிலையே
குருத்தோடு மிடறொடிய முடத்தாழை விரியவெதிர்
குதித்தோடி வருகயல்க ளென்று வயல்சூழ்
புகழ்ச்சோண கிரியிறைவர் விடைப்பாக ரமரர்விழி
புதைத்தேபி னிருகைதொழு மகவுவடிவாா—
தடவரையெனுவிபோலுமயிலாா

மலைப்பார மெனவளரு தனப்பார மெழுதிடினும்
வளத்தோடு பெறகுணமி ரண்டும் வருமோ
விருப்பான கரியகுழ லிருட்போல வெழுதிடினு
மிகுத்தேறு வரியளிமு ரன்று வருமோ
மதர்ப்பான விணைகழிகள் வடிப்போல வெழுதிடினு
மடப்பார்வை யிருகுழைக டாதுவருமோ—
குழையெழுதினு சலாடிவருமோ,

மலர்த்தாளை யனசமலர் தனைப்போல வெழுதிடினு
மலர்ப்பாய வணமெனந டந்துவருமோ
வுருப்பான திலகநுதல் விதுப்போல வெழுதிடினு
முவப்பான குறுவியா வரும்பி வருமோ
வனிக்கோல மிடறகமு கினைப்போல வெழுதிடினு
மரப்பாவை யுருகுமினை யின்பம் வருமோ—
விரலெழுதின் வீணைபேசவருமோ,

இலைப்பாதி யிழையுமென நுசுப்பாக வெழுதிடினு
மிதைப்போல வொசிவொடுதளர்ந்து வருமோ
வனப்பேறு கிரியென மணித்தோள்க ளெழுதிடினு
மயிர்க்கால்கள் புளகித மெறிந்து வருமோ
லிதழ்கோவை யதனைமிகு சிவப்பாக வெழுதிடினு
மிளைப்பான பொழுதமுது விந்து தருமோ—
உயிரெழுதின் மீதுலாவி வருமோ,

எழுதகோடு முறுவன்முலை நகைக்காக வெழுதிடினு
மெதிர்ததாடு புலவிநகை யிங்கு வருமோ
மதிப்பான வுடலையொரு கொடிப்போல வெழுதிடினு
மயிறசாய லொரு சிறிது தங்கிவருமோ
எடுத்தாடு படமெனவல குலைப்பேணி யெழுதிடினும்
இதத்தோடு மமுதுகுதி கொண்டு வருமோ
கிழியெழுதி னேதுலாப முரையீர். (௪)

---

ஆரவ மொழியுரை.

கருடனோட மற்சமாமை கமலமோட முற்கராவ
காட்டிலோட மூன்றிராமர் காறடக்கி யோடவே
மருளிவந்த சிங்கமோட வாமன்வெள்ளை பாறவே
வஞ்சமான கண்ணனோட மாரனீறச் சென்று
மிருளினோட முண்டகந்த னேங்கியோட வென்றவர்க்
கீறிலாது சிவன்வைத்த வேந்தல்யாவன் வேதமே
யருளுமந்த முதல்வன்யாவ னருணைகண்டு வாழ்மினோ
வாரணாதி மூலமென்ப தறிவிலாத மாக்களே.

உ

சிவமயம்

தெய்வீகம் விளங்கிய குகை நமச்சிவாயதேவர்

அருளிச்செய்த

# அருணகிரியந்தாதி.



காப்பு.

சித்திதரும் புத்திதருஞ் செந்திருவைச் சேர்விக்கும்
பத்திதரு மெய்ஞ்ஞானம் பாலிக்குங்—கொத்தி
யரிமுகனைக் காய்ந்த வருணேசர் தந்த
கரிமுகனைக் கைதொழுதக் கால்.

நூல்.

கார்கொண்ட மேனியனுங் கஞ்சனுங்கா ணப்பெருமை
யார்கொண் டுரைசெய்வா ரம்புவியிற்—சீர்கொண்
டருணகிரி மேவுகின்ற வையாநீ வேண்டிக்
கருணைபுரி யாதிருந்தக் கால். (௧)

காலைமலர் தூவக் கருத்தறியா நாயேற்கு
வேலைவிட முண்ட விமலனே—மேலாய
வாசிகனே கண்பவித்து வாழ்விக்குஞ் சோணகிரித்
தேசிகனே நீகண்டாய் திக்கு. (௨)

திக்குவே றில்லை திருவுளமே யல்லாம
லிக்குவே ளைக்காய்ந்த வீசனே—மிக்கவிடந்
தன்னையுண்ட சோணகிரித் தாணுவே நாயேற்குப்
பின்னையுண் டோநீயல்லாற் பேசு. (௩)

பேசுமவர் வஞ்சப் பிறப்பறுக்கு மென்றுலகில்
வீசுபுகழ்ச் சோணகிரி வித்தகா—மாசிலா
வண்ண மலையானே யன்னைவயிற் றென்னைபுறப்
பண்ணு மலையாதே பார்.

பர்ராம னீயிருந்தாற் பார்மீதி ஞயேனுக்
காராவார் சோணகிரி யண்ணலே—தீராப்
பிறப்பை யகற்றுதற்கும் பிஞ்ஞகனே சூழ்ந்த
விறப்பை யகற்றுதற்கு மின்று. (௬)

இன்றுபோ காவோ விருவினையு மும்மலமு
நின்றுதமி யேனை நெருக்காம—னன்றிதரு
மாரணனே சோணகிரி யத்தனே மாறேறுங்
காரணனே நீநினைந்தக் கால். (௭)

காலன் றனக்கஞ்சக் காரணமென் னெஞ்சமே
யாலமுகந்த வருணேசன்—கோலத்தை
நேசமுற்று நீகருதி னீயகர்ம னின்றலைக்கும்
பாசமுற்று நீக்கும பரன். (௮)

பரமனீ யென்று பணிந்துருகிப் பாடிக்
கரஞ்சேர்த்து நீர்சோரக் கண்கள்—வரநகேட்ட
வென்னவா வின்படியே யீந்தா யிதற்கருணை
மன்னவா காணென்கைம் மாறு. (௯)

மாறுகொண்ட தக்கன் மனோரதமெல் லாந்தவிர்த்து
வீறுகொண்ட சோணகிரி வித்தகா—வாறுகொண்ட
செஞ்சடையாய் நின்னைத் தெரிசித்தல் வேண்டுமென்கண்
பஞ்சடையா முன்னே பரிந்து. (௧௦)

பரிந்தணிந்த வெண்ணீறும் பாம்புந் தீக் கண்ணு
மரிந்திர மாலையழகும்—தெரிந்து
நெருக்குமாம் வல்வினையை நீக்குமரு ணைகற்
றிருக்குமாம் கோலநகை சேர்த்து. (௧௧)

சேரமுதற் றேடியெஞ்சே கட்பிட்டின் காணுத
செல்வன் திருவடிவு கொண்டோ—துலம்

உ

சிவமயம்

தெய்வீகம் விளங்கிய குகை நமச்சிவாயதேவர்

அருளிச்செய்த

# அருணகிரியந்தாதி.

காப்பு.

சித்திதரும் புத்திதருஞ் செந்திருவைச் சேர்விக்கும்
பத்திதரு மெய்ஞ்ஞானம் பாலிக்கு—மொத்தி
யரிமுகனைக் காய்ந்த வருணேசர் தந்த
கரிமுகனைக் கைதொழுதக் கால்.

நூல்.

கார்கொண்ட மேனியனுங் கஞ்சனுங்கா ணப்பெருமை
யார்கொண் டுரைசெய்வா ரம்புவியிற—சீர்கொண்
டருணகிரி மேவுகின்ற வையாநீ வேண்டிக்
கருணைபுரி யாதிருந்தக் கால். (௧)

காலைமலர் தூவக் கருத்தறியா நாயேற்கு
வேலைவிட முண்ட விமலனே—மேலாய
வாசிகனே கண்பலித்து வாழ்விக்குஞ் சோணகிரித்
தேசிகனே நீகண்டாய் திக்கு. (௨)

திக்குவே றில்லை திருவுளமே யல்லாம
லிக்குவே ளைக்காய்ந்த வீசனே—மிக்கவிடந்
தன்னையுண்ட சோணகிரித் தாணுவே நாயேற்கும்
பின்னையுண் டோ நீயல்லாற் பேசு. (௩)

பேசுமவர் வஞ்சப் பிறப்பறுக்கு மென்றுலகில்
வீசுபுகழ்ச் சோணகிரி வித்தகா—மாசிலா
வன்று மலையானே யன்னைவயிற் றென்னைபு
பன்று மலையாதன் பார். (௪)

பாராம னீயிருந்தாற் பார்மீதி லுயேனுக்
காராவார் சோணகிரி யண்ணலே—தீராப்
பிறப்பை யகற்றுதற்கும் பிஞ்ஞகனே சூழ்ந்த
விறப்பை யகற்றுதற்கு மின்று. (ரு)

இன்றுபோ காவோ விருவினையு மும்மலமு
நின்றுதமி யேனை நெருக்காம—லன்றிதரு
மாரணனே சோணகிரி யத்தனே மாறேடுவ
காரணனே நீநினைந்தக கால். (௬)

காலன் றனக்கஞ்சக் காரணமென் னெஞ்சமே
யாலமுகந்த வருணேசன்—கோலத்தை
நேசமுற்று நீகருதி னீவகர்ம னின்றலைக்கும்
பாசமுற்று நீக்கும பரன். (எ)

பரமனீ யென்று பணிந்துருகிப் பாடிக்
கரஞ்சேர்த்து நீசோரக் கணகள்—வரவகேட்ட
வென்னவா வின்படியே யீந்தா யிதற்கருணை
மன்னவா காணேனகைம மாறு. (அ)

மாறுகொண்ட தக்கன் மனோரதமெல் லாந்தவிர்த்து
வீறுகொண்ட சோணகிரி வித்தகா—வாறுகொண்ட
செஞ்சடையாய் நின்னைத் தெரிசித்தல் வேண்டுமென்கண்
பஞ்சடையா முன்னே பரிந்து. (கூ)

பரிந்தணிந்த வெண்ணீறும் பாம்புந்தீக் கண்ணு
மரிந்தசிர மாலையழகும்—தெரிந்து
நெருக்குமாம் வல்வினையை நீக்குமரு ணைசற்
றிருக்குமாங் கோலவகை னேத்து. (க௦)

தோவமுதத் தேடிநெஞ்சே கப்பிட்டேன் சரைத
சேலலத் துருவடிவு கொண்டோ—லுலர்

தரித்தபிரான் சோணேசன் றன்முனிந்து வேளை
யெரித்தபிரான் வந்தா னிதென். (கக)

என்ன தவப்பயனோ வேழையேற் கென்றறியேன்
முன்னமறை காணாத முக்கண்ணோ—னின்னையே
தேடுகைக்குஞ் சோணகிரித் தேசிகனே நின்புகழைப்
பாடுகைக்கும் பெற்ற பயன். (கஉ)

பெற்றோம் பலனைப் பிறந்தநா னெஞ்சமே
யற்றோ மனத்தி லகவாதம்—பற்றுவா
ருள்ளலைக்குந் தீவினையை யோட்டு மருணகிரி
வள்ளலைக் கொண்டாட வரம். (கங)

வரம்பலிக்கு மெய்ஞ்ஞான வாழ்வே பலிக்குந்
திறம்பலிக்குஞ் செல்வம் பலிக்கு—முரம்பலிக்குஞ்
சோணா சலேசசுவாமிதனை யுள்ளத்தே
காணார் கருத்தென் கருத்து. (கச)

கருதி வருணேசன் கஞ்சமலர்த் தாளை
யிருத்தி நினைப்பாரை யென்றும்—வருத்துமோ
நாட்டும் பலவுயிரை நாடோறும் பின்றொடர்ந்து
வாட்டும் பிறவிநோய் வன்பு. (கரு)

வன்பெருக்கிற் கன்மிதக்கும் வாய்முதலை பிள்ளைதரு
மென்புருக்கொள் பெண்ணா யிருக்குமே—பன்பருக்கு
நாட்டுகுரு சோணகிரி நாதனடி யார்மூவர்
பாட்டினிசை கேட்ட பரம். (கசு)

பரம னருணேசன் பதம்பணியார்க் கென்றுங்
கருமஞ் சிதையுமெனல் கண்டோ—மருமந்த
கூட்டித் தலைபோய்க் கொடியதக்கன் வேள்வியிலே
யாட்டுத் தலையாகை யால். (கஎ)

ஆலம் வருவதுகண் டஞ்சி யமரர்குழாஞ்
சாலவெருண் டோடுஞ் சமயத்தி—லோலமென
நின்ற னுலகறிய நேசமடி யாரிடத்துக்
குன்றாத சோணகிரிக் கோ. (கஅ)

கோடிவிதி மாளிற் குலாவுகம லக்கணனெ
னொடி வடவா லுறங்குமே—நாடுங்கா
லக்கணனர் கோடி யழியி னருணகிரி
நக்கனருள் சற்றே நகும். (க௯)

நகுமாலை யேந்தருணை நம்பா பிறப்பிற்
புகுவேனைக் காக்கும் புனிதா—தகுமேனைப்
பெற்றதுணை நீயல்லாற் பேருலகி லுயேனுக்
குற்றதுணை மற்றியாவ ரோது. (உ0)

ஓதக் கடனஞ்சை யுண்டசோ ணாசலனை
யோதக் கடனெஞ்சே யோதினுற—பாதம்
பெறலா நமது பிணிமூப்புச சாக்கா
டறலாங் கரையேற லாம். (உக)

ஆமென்று நம்பி யனுதினமும் போற்றினு
னாமென்று பற்றி நலமாகக்—காமித்துச்
சிட்டாகு சோணகிரி சிந்தித்தா னெஞ்சமே
விட்டேகும் வெய்ய வினை. (உஉ)

வெய்ய பிறவிதனை வேரறுக்குஞ் சோணகிரி
யையரடி யார்பாட்டிற் கல்லாமர்—றய்யகரா
வாய்க்குமோ பிள்ளையுந்தன் வாரியிற் கன்மிதக்கு
காய்க்குமோ வாண்பனையுங் காய்.

காய நெகிழாமுன் கண்க ளிருளாமுன்
வாயிதழ்கள் பல்லும் வழுவாமுன்—காயம்பார்த் (உங)

தேடிநமனை யாயர்முன் ஞுள்ளேகீ சோணகிரி
நாடிநம வென்றே நட. (உச)

நடக்குங் குலக்கல்வி நம்மவென்பா ராசை
யடக்கும் வகைசற் றறியார்—தொடேக்குறல்
காட்டுமோ சோணேசன் கஞ்சமலர்த் தாளிணையைக்
கூட்டுமோ சொல்லீர் குலம். (உ௫)

குலமில்லார் வண்மைக் குணமில்லாா கல்வி
நலமில்லா ராலு நன்றே—வலம்வந்
தரிய திருவருணை யண்ணலுக்கா ளாவார்
பெரியவாக்கு மேலான பேர். (உ௬)

பேரும் பெருவாழ்வும் பிள்ளைகளும் வேண்டுவா
ராரும் பரவு மருணேசன—சீரை
புறக்கத் திலுமறக்க வொண்ணு துரைக்கிற்
பிறக்கக் கிடையாது பின். (உ௭)

பின்னறியேன் முன்னறியேன் பேதையேன் பாமாலை
யென்னறியேன் சோணகிரி யீசனே—நின்னருளைக்
கொண்டுரையா கிற்குமை குறியுங் குறிதேடுவ
கண்டுரையா தென்றன் கருதது. (உ௮)

கருத்தறிந்த மெய்யடியார் கணகாண வெள்ளை
யெருத்திவருஞ் சோணகிரி யீசா—பருதத
வலங்கார நால்வேத னைந்தலையு ளொன்றைக்
கலங்காம வீயறுத்தசய் கண்டு. (உ௯)

[illegible]வினை யென்பார் கருத்[illegible] [illegible]
[illegible]கோ வேயருணை [illegible]—[illegible]
[illegible] தோன்[illegible] [illegible] சாற்றமுன்றன்
[illegible] வேதன் [illegible]. (௩௰)

சிரஞ்சாலே தானணிந்து சேவிலுகந் தேறி
யரும்மா மறைநேடு மண்ணல்—வருமா
முனிக்கூட்டம் போற்று முதல்வனரு ணேச
னினிக்கூட்டான் றன்பத் தெமை. (௩௧)

எமையாளுஞ் சோணகிரி யீசாநின் பாகத்
துமையாளு நீயு முகந்த—சமயத்
திருக்கின்ற கோலந்தனை யான்காண வேண்டி
யிருக்குமா கருணை செயவா வென்று. (௩௨)

என்றருமரு ணேச னிருபதத்தை நம்பாதார்
குன்றில் வனத்திற குகையதனிற—சென்று
இரிந்தென் பலமருந்து தின்றசில கால
மிருந்தெ னிராமலிருந் தென. (௩௩)

எனமனந் தேட விணையடியுஞ் சீர்முடியுந்
தானவுறறிற கெட்டாத தானுவா—ஞானத்
தழல்கண்ட மேனித் தலைவனரு ணேசன்
கழல்கண்டார் காணா கரு. (௩௪)

கருமா முகில்வண்ணன் கஞ்சனுக்கு மெட்டாப்
பெருமான் விடையேறும் பெம்மா—னொருமான்
மழுவேற்குஞ் சோணகிரி மன்னனடி யாரைத்
தொழுவேற்கு முண்டோ துயர். (௩௫)

துயர்கொண்டு நாளுந் தொலையாப் பிறப்பி
லயர்கின்ற நாயேற்கு மாமோ—வுயர்தவத்தோ
ராரும் பரவு மருணேச ரம்புயத்தாள்
சேருங் கருத்தொருக்காற் செப்பு. (௩௬)

செப்பரிய மால்பிரமர் சிந்தைதனக் கெட்டாத
வப்பரிய சோணகிரி யப்பனை—யெப்பொழுதும்

பெண்ணைவிட்டு நீங்காமின் போழகு சந்ததமென்
கண்ணைவிட்டு நீங்காது காண. (௩௭)

காணு ரரிபிரமா கஞ்சமலர் தாளிணையை
காணுமற் றுன்காண நாடியே—சேணுடை
ராயம் புகழருணை யணணு மலையானே
மாயுந் தமியேன் மனம். (௩௮)

மனத்திற் பயமறிந்து மாமுனிவாக் காகச
சினத்திற புரமெரித்த சிமா—னனத்தனரு
டக்கன் தலையறுத்த தாணு வருணகிரி
நக்கன் றனைமனமே நம்பு (௩௯)

நம்பியிரு நெஞ்சமே நாளு மருணகிரி
யும்பாகோ னன்றுரைத்த வுண்மையை—நம்பிக
கெடுத்தாலுஞ் சோணேசன கேடுபடா தெம்மை
யெடுத்தாலுஞ் சோணேச னென்று. (௪௦)

என்றுதரு வாய்மகிழ்ந்தே யான்பெறவா தெந்தா
வின்று தமியேற் கியம்பிடாய்—நன்றிதரு
மேகனே சோணகிரி யீசனே சேவேறும்
வாகனே சாகா வரம (௪௧)

சாகாவரம்பெறலாஞ் சந்ததமுஞ் சோணகிரி
நாகா பரணன்று ணடியே—யேகாந்த
மெண்ணுமக்க மாலைகொடு நாவார வைந்தெழுத்தை
யெண்ணு மறவா தெடுத்து. (௪௨)

எடுத்த பயனை யிருவினையை யென்று
மடுத்தசிவ பூசை யறியார்—தொடுத்த
வெறியாருஞ் சோணகிரி சித்தரடியாரை
யறியாத மானிட ரசக.

அச்செல்லா மொன்று வதிலே யிருவகையா
வைசச தென்ன சோணகிரி வள்ளலே—யிசையிலே
வாய்ந்துசில பேரிருக்க வாய்புதைத்துக் கைகட்டித்
தாய்ந்துசில பேரிருக்கத் தான். (௭௪)

தானே யுலகுடையோன் றன்னசைவே பல்லுயிர்க்குந்
தானே யனைவர்க்குந் தாதையாய்—தானே
யனைத்துயிரு ப காக்கு மருணேச னென்றுன்
மனத்துயரம் போவத்த மாணடு. (௭௫)

மாணடு பிறந்துழலு மாப்பிணியை நீக்குதற்கு
வேணடு மருந்துனககு வேணடிறு லீணடுலகில்
வீணேசர் சொல்லை விரும்பாம னெஞ்சமே
சோணேச னனனெறுருககாற சொல. (௭௬)

சொல்லரிய நால்வேதஞ் சொன்னபடி யேகருதி
நில்லரிய பூசையிலே நேசமா—வெல்லரிய
நஞ்சே தரித்தருளு நாதரடித் தாமரையை
நெஞ்சே மறவாம னீ. (௭௭)

நீயே வாழ்வேணடும் நின்னைப்போ லானதுணை
நாயேனுக் காருணடு நாடுங்காற்—றுயகமா
மண்ணு மலைமேவு மப்பனே யென்பிறவிப்
புண்ணு மலையகற்றும் போது. (௭௮)

போது மதிசூடும் புனிதர் புவியீன்ற
மாதுபங்க ரண்ணு மலைநாதர்—பாத
மிறுகப் பிடிமனமே யெந்நாளு நின்னைக்
குறுகப் பயப்படுமே கூற்று. (௭௯)

கூற்றிருக்கு முன்காலிற் கூறு புறக்காலி
லேற்றிருக்கு மாயவன்க ணெப்பொழுதுஞ்—சாற்றுகையி

வம்புயத்தோன் கம்பிருக்கு மண்ணா மலைநாதன்
செம்புயத்திற் காரிணையாஞ் செப்பு. (௩௦)

செப்பரிய ஞானச் செழுஞ்சுடரே சோணகிரி
யப்பனே நன்னா லறிந்தாலு—மிப்புவியிற்
கொண்டகுரு வைப்பொருளாக் கொள்ளார் பயனேது
கண்டவெல்லாம் வீணிலே கற்று (௩௧)

கற்றதனாற் றொல்லைவினைக் கட்டறுமோ நல்லகுலம்
பெற்றதனாற் போமோ பிறவிநோ—யுற்றகட
ணஞ்சுகந்து கொண்டருணை நாதரடித்தாமரையை
நெஞ்சுகந்து கொள்ளா நெறி. (௩௨)

நெறியுண்டா நல்ல நிலையுண்டா ஞானக்
குறியுண்டா மெண்ணமெலாங் கூடுஞ்—செறிவுண்டா
மாதி யருணகிரி யண்ணலா ரைந்தெழுத்தை
யோதிமட நெஞ்சமே யுன் (௩௩)

உன்னக் கருத்துண் டுரைப்பதற்கு நாவுண்டு
பன்னச் சிவநூல் பலவுண்டு—முன்னமறைக
கெட்டாத சோணகிரி யீசரிரு தாள்பணிய
வொட்டாது பாவ முயர்ந்து. (௩௪)

உயர்ந்தவர்க்கு ளெல்லா முயர்ந்திருக்குங் கோவே
நயந்தபுகழ் சோணகிரி நாதா—பயந்தமர
ருண்ணப் படாநஞ்சை யுண்டவுன்னைச் சாமவரோ
டெண்ணப் படுவா ரிதென். (௩௫)

என்ன சனன மெடுத்தார் புவிமீதி
லன்னமிடா ரின்சொல் லறிகிலார்—முன்னமே
பொன்னூர் புரமெரித்த வுண்ணா முலைபாக
னென்னூர் இறைஞ்சிடார். (௩௬)

நீறிடே னைந்தெழுத்தை நேசமுட னேகருதிக்
கூறிடே னென்னையுமாட் கொள்வதனுக்—காறணிந்த
வேணியார் சோணகிரி வித்தகனார் வெற்றிமழுப்
பாணியர்க் கன்றோ பரம். (௪௭)

பரகதிக்கு வித்தாமுன் பஞ்சாக்கரத்தைப்
பரபரப்ப வெண்ணாத பாவ—நரகப்
பிறப்பிற்கு மீடாப் பிறந்தருணை யீசா
விறப்பிறகு மீடாயி னேன். (௪௮)

வனிருந்து நெஞ்சே யிரவுபக லாயுடலைத்
தானொறுப்பாய் சோணகிரித் தாணுவா—மானுகந்த
வெந்தையா னீயகு மிருவினைநோய் சிந்திக்குஞ்
சிந்தையால் வேறென் செயல். (௪௯)

என்செயலாஞ் சோணேச ரிட்டபடியே யொழிய
நெஞ்சையெலாம் புணரு நினைந்தாலும்—விஞ்ச
வருமோ பெருவாழ்வு வல்லமையா னெஞ்சந்
தருமோகம் பேராசை தான். (௫௦)

தானே யெனக்குத் தவமாய்த் தவப்பயனாய்த்
தானே யெனக்கன்னை தாதைதாய்த்—தானென்னைச்
செப்பரிய நின்பாதஞ் சேர்விக்குஞ் சோணகிரி
யப்பனே நீயேறு மான். (௫௧)

ஆனவா நல்குதி யானிரஞ்சென் றாகிலென்
றானம் பதினாறுந் தான்செயினென்—ஞானன்ற
னஞ்சடையான் சோணகிரி யன்னைதனை யெண்ணாத
நெஞ்சடையார் பூதலத்தே நின்று. (௫௨)

நின்று தவம்புரியாய் நெஞ்சே திருப்பவ்வமில
வென்றுனிலை புன்சமுந் செய்திடாய்—வென்றிதட

மம்மான் கரத்த னருணேச னம்புயத்தாள்
சும்மா கிடைக்குமோ சொல். (௯௩)

சும்மா கிடைக்குமோ சோணா சலன்பாத
மம்மால் விரிஞ்ச னறிகிலா—னம்மா
விருந்துகதை சொன்னக்கா லென்னாகு நெஞ்சே
பொருந்த நினையாத போது. (௯௪)

பேதையிரு பல்லுகுத்துப் புண்டரிகன் றேவியெனு
மாதையென்று மூக்கரிந்த மாவீரன்—றாதை
விருப்பா மதிசூடி வெண்டலையோ டேந்தி
யிருப்பா னருணேச னின்று. (௯௫)

இன்றைக்கு நாளைக் கிரவிக ளெனுந்துயர
மென்றைக்குப் போமருணை யீசனே—கொன்றைமதி
புன்னை யெருக்கும் புனையுஞ் சடாடவியா
யென்னை நெருக்கு மிவை. (௯௬)

நெருக்குமிவை யென்னுயிரை நீங்காமற் சூழ்ந்தே
யிருக்கும் பலபிணிநோ யெல்லா—முருகுமலை
கண்டே னருணேசன் கஞ்சமலர்த் தாள்கருதிற்
கொண்டே னெனகென் குறை. (௯௭)

குறையேது மில்லையினிக் கூறுங்கால் வானோர்க்
கிறையாகுஞ் சோணேசற் கென்று—மறைபுகுந்தோம்
பற்றி நமன்றொடரான் பார்க்குங்கா ணெஞ்சமே
வெற்றி கபண் கைத்தலத்து வேல் (௯௮)

வேலைவிட முண்ட விமலாரு ணேசற்கொன்றை
மாலையணி மார்பர் மலர்ப்பதத்தைத்—மேலமரர்
பண்ணினார் பூசையறம் பண்ணிப் பரகதியி
னண்ணினா ரெல்லா நலம்.

எல்லார் பிறப்பு மிறப்புமியா பாவலர்தஞ்
சொல்லாற் றெளிந்தோஞ் சோணேச—நில்லிற்
பிறந்தகதை யுங்கேளேம் பேருலகில் வாழ்ந்துண்
டிறந்தகதை யுங்கேட்டி லேம். (௭௦)

ஏமாந்த சோணகிரி யீசரடியாரடிக்கே
பூமா மலர்தூவிப் போற்றாதார்—தாமென்றும்
வெஞ்ச மனத்திருக்கும் வேடராய் நாடோறும்
வஞ்சநம னுக்கஞ்சு வார். (௭௧)

வஞ்ச நமனுக்கஞ்சி வாடுந் தமியேனை
யஞ்சலென்ற சோணகிரி யண்ணலே—நெஞ்சறிய
வாண்டகுரு நீயென் றறியாதோ செய்தவ
மாண்டமரத் திரக்கணைத்த மணை. (௭௨)

மண்ணிற் பிறந்திறந்து மாயுந்தெய்வங்களோ
டண்ணைப் படாவருணை யீசனே—விண்ணப்ப
மொன்றுண் டடியே னுனைப்பிரியா தேயிருக்க
மென்று தருவா யெனக்கு. (௭௩)

தருவா யெனக்குகந்துன் றனனிருதா டன்னை
மருவார் புரமெரித்த மன்னா—குருவாகி
முன்னை வினையகற்றி மூதறி யருணேச
வென்னைப் பொருளா வெடுத்து. (௭௪)

எடுப்பானுங் காப்பானு மேற்பானு மேற்பக
கொடுப்பானு மேதுங் கொடானும்—விடப்பானம்
பண்ணியனேகா பயங்கெடுத்த சோணகிரிப்
புண்ணியனே நீதானிப் போது. (௭௫)

இப்போது பின்னைக் கிலையென் றிரப்போரை
யெப்போதுந் தள்ளா திரங்கியே—முப்போதும்

பூசிப்ப தெந்நாள் புனிதனே சோணகிரி
கேசிப்ப தெந்நா ளினைந்து. (௭௬)

நினையேன் றிருக்கோல நின் றுகண் ணீர்சோர
கனையேன் பிறப்பறுக்க நாடேன்—புனையேனின்
பொன்னடிக்குப் பூமாலை போற்றி யருணேச
ரின்னடிக்கிங் காருதவும் பேர். (௭௭)

பேராயிரமுடைய பெம்மானைச் சோணகிரி
யாரா வமுதை யறியாமல்—வாராது
நீதுகலமுந் தெரியுங்கா ணெஞ்சமே
யேதுமவ னென்றே யிரு. (௭௮)

இருந்துவினைப் பார்த மிருவினையை நீக்கும்
பொருந்துமடி யிம்மையிலே போக்கு—மருந்தன்றோ
தம்பிரா னெவ்வுயிர்க்குந் தானு வருணகிரி
யெம்பிரா னோரஞ் செழுத்து. (௭௯)

அஞ்செழுத்தை யோதுமவர்க் கஞ்சி யவர்தலையிற
றஞ்செழுத்தைக் கஞ்சன் றுடைக்குமே—யஞ்சுதலைக்
கொன்றறுத்து நாலா வொருகுறையா நின்றதலை
யின்றறுப்பான் சோணேச னென்று. (௮௦)

என்றுநமன் றூதுவரை யேற்கவே தானழைத்து
நின் றுரைக்குஞ் சோணகிரி நித்தனார்க்—கின்றடிமை
யானவர்க்கு நீர்வணங்கி யப்பாலே போமென்று.
வானவர்க்குப் புத்தியாத் தான். (௮௧)

[illegible]தருஞ் சோணேசன் பொன்னடியை வாழ்த்துதற்குப்
[illegible]தரு மெய்ஞ்ஞானம் பாலிக்கு—முத்திதரும்
[illegible]ற்றரிய தீவினையை மாற்றுவிக்கு மைந்தெழுத்தைப்
போற்றரிய நெஞ்சமே பூண்டு. (௮௨)

பூண்டவகைக ளெல்லாம் பொருந்துமணி முத்திருக்க
வேண்டும் பசும்பொன் விளைவிருக்கத்—தீண்டாமற
பொவ்வகரவுந் தோலெலும்பும் பூண்டா யென்னருணைச்
சங்கரா கங்கா தரா. (௮௩)

கங்கா தரனே கடையேனை யெந்தா
ளங்கா தரவா வழகருணா—வங்காதல்
பாக்குநாள சோணேச பார்த்துப் பரகதியிற்
சேர்க்குநா ளெந்தநாள் செப்பு. (௮௪)

செப்பரிய வாணவத்தைச் சேதமுறு மும்மலத்தை
யொப்பிலாச் சஞ்சிதத்தை யோட்டினே—னிப்போ
தருவாகி நின்ற வருணகிரி யானைக்
குருவாக வென்றுளத்தே கொண்டு. (௮௫)

கொண்ட நெறிசற்றுங் குலையார் மனத்திருக்கு
மண்டர்கோ வையருணை யண்ணலே—தொண்டர்க
ளிடையாது நெஞ்ச மிருவினையா லென்று
மடையா மெழுபிறப்பா மல். (௮௬)

அல்லதொரு தெய்வ மறியே னறிந்தாலு
நல்லதென்று நெஞ்சகத்தி னாடேன்யான்—சொல்லரி
யண்ணா மலைமேவு மண்ணலையு மன்னைவிடத்
துண்ணா முலையாளை யும். (௮௭)

உம்மை நினைந்தே யுருகி யருணேசர்
தம்மை நினைந்தார் தமக்கல்லா—லிம்மையிலு
மெவ்வாறு காண வெளிதோ புவிமீதி
லெல்லார் துதிக்கு நடம் (௮௮)

நடலைதுறந் தானருணை நம்பனுக்கன் பில்லா
குடலைப்பொறுத் தாலவ னுண்டோ—மடலை...

வோதினுற் பாச மொழியுமோ புற்றிலே
மோதினுற பாம்புசா மோ. (௮௯)

மோகமறேன சோணகிரி மூர்த்தியே மும்மலமு நின்
றூகமறே னினபெருமை தானறியேன்—காகாய்
தம்மதென்னுங் காயத்தைத் தானெடுத்துத் தாரணியி
னம்மதென் னுமே கண்டாய் நரி (௯௰)

நரிகளுப் பொதிசோறு நான்சுமந்து நொந்தே
னரிக்கு மரிநா மரனே—நெரிகுமறை
காணாத சோணகிரிக் கண்ணுதலே நின்பாதத்தைப
பேணாத நாயேன் பிறந்து. (௯௧)

பிறந்திறக்குந் தெய்வப் பிணக்கைக்கொண் டாடே
னறைந்தழைக்குஞ் சோணகிரி யாரே—பிறந்திடவா
வும்மைப் புகழ்ந்தே யுமக்கடிமையானபோ
தமமைப் புகழ்வதல்லாற் றூன். (௯௨)

தானவர்கண் மூப்புரத்தைக் காமெரித்து மன்றுசகந்தீ
வானவர்க்காச சோணகிரி வள்ளலே—யேனம
விருப்பா மலர்சூடி வேண்டினு மெண்ணாட
நெருப்பா விருந்தென்ன நீர். (௯௩)

நீராடி நஞ்சுகந்த நித்தனே சோணகிரி
யாரா வமுதேயென் னையனே—பாராளுந்
தாதையே பூசையறந் தானறியா மற்றிரியும்
பேதையேற் காரார் பின். (௯௪)

பின்னை யொருவரில்லை பேருலகிற் றஞ்சமா
மன்னனக் தருமருணை யையரே—யென்னை
வெறுப்பதற்குங் காப்பதற்கு மெண்பிறவி சேர்வைத்
தெடுப்பதற்கு நீரேயெவர்,

நீர்கொண்ட வேணி நிமலாவென் னின்பிறப்பை
யார்தொலைப்பார் நீயல்லா தாயுங்காற்—பார்மீதிற்
பொய்யா வரங்கொடுக்கும் புண்ணியனே சோணகிரி
யையா கருணா லயா (௯௬)
கருணால யாநின் கழல்பணிய மாட்டே
னருணா சலாவென் றழையேன்—மரணாந்த
காலத்தி லோதுவ கருத்தறியேன் கண்ணையுன்றன்
கோலத்தில் வையேன் குறித்து. ௯௭)
குறியே னிருபதத்தைக் கூறும் வகைசற்
றறியே னறிந்தவாகொள ருற்றேன்—சிறியேனின்
றாயுமறை தேடரிய வண்ணா மலையானே
மாயுமிருந் தையா மனம். (௯௮)
ஐயா மரப்பாவை யாடுவதுஞ் சூத்திரிதன்
வைகாசி யோபாவை கற்றதோ—வெய்யவினை
யென்னிச்சை யோவருணை யீசா படைத்தளிக்கு
முன்னிச்சை யன்றோ வுரை. (௯௯)
உரைக்கு மடியா ருயிர்ப்பயிர்வா டாமற்
றரைக்குளா னந்தவெள்ளந் தன்னை—நிரைக்குமே
யெண்ணார் புரமெரித்த வெந்தை யருணகிரிக்
கண்ணா ரமுதமெனுங் கார். ௧௦௦

அருணகிரியந்தாதி முற்றிற்று.

---

இந்த அருணகிரியந்தாதியானது கன்னடசர மூர்த்தியாகிய குகை நமச்சிவாயதேவர் மல்லிகார்ச்சனத்திலிருந்து "தெற்கே சிவதல யாத்திரைசெய்து வருகிறேன்" என்று தம் குருவின் அனுமதி பெற்றுக்கொண்டு சஞ்சரிக்கும்போது தன் குருவுருவாக எழுந்தருளிய அண்ணாமலையார் அனுக்கிரகத்தபடி திருவண்ணாமலையிலே குகையினிடத்து மகிமையுடனிருந்து அண்ணாமலையார் வரப்பிரசா[illegible]யிவ்வந்தாதித் தோத்திரஞ் செய்தது.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

திருவண்ணாமலையின்கண் எழுந்தருளியிருந்த

## குகைநமச்சிவாயசுவாமிகள்

திருவாய்மலர்ந்தருளிய

திருவருணைத்

# தனிவெண்பா.



சொன்னநா ளருணைக்குருவே சோணாசலத்தானே
யின்னம் பிறந்தாலு மிப்படிநீ—சன்னிதியைக்
காட்டக் கிடைத்திடுமோ கன்னெஞ்சே நாமவரைக்
கூட்டக் கிடைத்திடுமோ கூறு. (௧)

சம்பா வமுதுஞ் சருக்கரைதே னெய்பாலுந்
தெம்பாகத் தந்தருளுந் தேசிகா—வெண்பாக்கே
வந்தருள் சோணேச வய்யதுநா றுங்கொடுத்துத்
தந்தருள்வா யின்பதமே தான. (௨)

ஆருக்க லாமே யருணேச ரேயுலகி
னீரொருத்த ரல்லாம லேமெகா—னீரும்
பிறவாமலே யிருந்தீர் நின்பிறந்தா ரெல்லா
மிறவாரோ மண்மீதினில். (௩)

வானவரு மிந்திரனு மாலோடய னுஞ்சென்று
போனவிடம் புன்முனைத்துப் போகாதே—தானமுதா
யுய்ந்த வருணேச னென்பாக னெஞ்சதனைப்
பத்தியுட னின்றுநீ போது (௪)

சோணா சலனைத் துதியாமற் றொல்லுலகில்
வீணாசை கொண்டிருந்து விட்டோமே—பூணாரம்
பெண்டிர்மக்கள் சுற்றம் பெருவாழ் வெனக்கருதி
யுண்டி தனக்கா யுழன்று. (௫)

ஓதி யுரைத்தாலு முண்படுக்கை யற்றாலு
மாதவரைத்தன் னெஞ்சின் மறந்தாலு—நீதி
வழுவாமற் சோணகிரி வள்ளலே யன்பு
தழுவாம லாமோ தவம். (௬)

அங்கனையார் மேல்வைத்த வாசையிலே நூற்றிலொரு
பங்கருணே சன்மேற பற்றினர்—சங்கையற
வந்தவின் பம்பெறலா மாராய்ந்து நெஞ்சமே
சிந்தந் தவம்பெறலா நீ. (௭)

இந்தவரந் தானே யெமக்கமைய நீகுருவாய்
வந்ததிருக் கோலசந்தை மாறாமற்—சிந்தைதனில்
வைச்சிருக்க வுச்சியிலே வைத்தபதந் தைக்கருத்திற்
றைச்சிருக்கச் சோணா சலா. (௮)

உண்ண வுடுக்க வொருகுடைக்கீழ் வையமெலாம்
பண்ணப் பணந்தேடப் பாவிக்க—வெண்ணியிடு
மந்தநாள் பின்னிட் டடியே னுனைத்துதிப்ப
தெந்தநாள் சோணே சனே. (௯)

மண்ணும்பொன் னாகாதோ மாற்றான் விலகானோ
பண்ணுந் தவங்கள் பலியாவோ—நண்ணுபுகழ்
விண்ணும் பரவும் விமல வருணகிரி
யண்ணல் புரிந்தா லருள். (௧௦)

மானமிலி பொய்யன் மனங்கனிவி லாதபுத்தி
யீனனிவ னென்று யிகழாதே—ஞான

வுருவே யருணகிரி யோநமசி வாய
குருவே யெனையாண்டு கொள். (௧௧)

ஆதிமறை தேடரிய வண்ணாமலை யாருக்
கேதுமுடி யேதடியென் றேத்துவே—னீதி
யொளியே திருமேனி யும்பருக்கு மெட்டா
வெளியே யவரிருக்கும் வீடு. (௧௨)

ஆயாசந் தீர்க்கு மருணேச ரேதமியேன்
மாயாம லொன்றுதர மாட்டீரோ—வோயாம
லாசலுக்கு நேரா யுழலுமனந் தானொருவர்
வாசலுக்குப் போகா வாம். (௧௩)

பல்லுயிரைக் கொன்ற பழிநீங்கு நீங்காத
புல்லறிவு நீங்கும் புலைநீங்கும்—கொல்லவந்த
கூற்றுவனு நீங்கும் குவலயத்திற் சோணகிரிப்
போற்றுந் தவத்தோர்க்கப் போது. (௧௪)

சிந்தையினால் வாக்கினால் செய்தொழிலாற் பார்வையினால்
வந்த பிறப்பிறப்பும் வன்பிணியும்—எந்தைகுரு
நாதனெனச் சோணகிரி நம்பனென மால்தேடும்
பாதனெனப் போமே பறந்து. (௧௫)

பொல்லாத வென்பிறவிப் புண்ணுக் கொருமருந்து
சொல்லா யருணகிரிச் சோதியே—யெல்லாரும்
போற்ற நடம்புரியும் புண்ணியா நான்மறைக
ளேற்றுஞ் சிவலோ கனே. (௧௬)

சூலங் கரத்திருக்கச் சோதிமழு மானிருக்க
வாலமுண்ட கண்டத் தழகிருக்க—வேளை
விழித்த விழியிருக்க மெய்ப்போக ராயார்
தரித்ததென்ன தாயுமோ நான். (௧௭)

அடைக்கலமாச் சோணகிரி யப்பனடி சார்ந்தோங்
கடைப்பிறவி முந்நீர் கடந்தோம்—படைக்குமைந்
துண்டலனை யும்மதியோ மூரிக் கடாவேறும்
கண்டகனை யும்மதியோ வகாண. (௧௮)

இந்தப் பிறப்பி லிரங்காத தேவரீ
ரெந்தப் பிறப்பி லிரங்குவீர்—சிந்தைக்
கனியே யருணகிரிக் கண்ணுதலே பொல்லாத்
தனியே னிடர்தீரத் தான். (௧௯)

ஆயபிணி முந்நூற் றறுபதுக்கு மூடாகி
மாயவுட லைசுமக்க மாட்டேனே—தோயுமதி
யப்பணியு மவேணி யருணைச ரேதமியேற்
கிப்பிறவி மாறத் தினி. (௨௦)

பொழுது திக்கச் சாமமெனும் போதே யெழுந்து
முழுகி வெண் ணீறதனின் மூழ்கி—தொழுதணைது
பொன்றனை சேவடியைப் போற்ற விறைஞ்சருணை
மன்றே தருவாய் வரம். (௨௧)

வையமுழு தும்படைத்து வாழு மருணகிரி
யைய னணைந்தபடி யல்லாம—னெய்யமனம்
நூறு யிரமாக நோகடினு மெள்ளளவு
மேறு ததிற்குறை யாது. (௨௨)

ஆகா வழியா யடியேன் பிறந்திறந்து
போகா வழியருளப் போகாதோ—வாகா
வருணையனே யன்பர்க் கனைவரத மானு
கருணையனே கண்பார்த் தருள். (௨௩)

மையிலே நீயிருக்க [illegible]
பொய்யிலே வீழ்ந்து [illegible]

நீரு வுளைத்துதிக்கு நேசருளத் திற்கருப்பஞ்
சாரு மருணை சலா. (௨௪)

நெற்றிவிழி கண்மூன்று நித்திரையோ சோணேசா
பற்றுமழு சூலம் பறிபோசசோ—சற்று
மயிமான மின்றோ வடியாக ளெல்லாரு
சபிமாண்டு போவதே தான். (௨௫)

ஆண்ட குருவை யறியாத மானிடர்க
ணேண்டி விடவொரு கதி தோன்றிரு—னீண்டபுகழ்
திக்கெலாம் போற்றுதிரு வணணு மலைதனில்வா
ழெக்கழா தேவி யிவள். (௨௬)

ஆற்ற லரிசி குறைந்தநாட் போதாதோ
வெற்றிலைக்குங் கேடுவர வேணுமோ—சித்தசிந்த
மணணு மலைநாதா வைம்ப தாரைக்காசுக்
கெணணிவிற்ற தற்குவந்த தென். (௨௭)

சோன கிருக்குமோ கொன்றாலுங் கேளாவூர்
காளையரே நின்று கதறுமூர்—நாளும்
பழியே சுமக்குமூர் பாதகரே வாழுமூ
ரழியாதூ ரண்ணு மலை. (௨௮)

வீடுதருஞ் சோணகிரி வித்தகனூர் சத்தியுட
னீடுதே ரேறியவர் நிற்கின்றூ—ரோடி
யடம்பிடிக்க வாருங்கள் வந்தவர்க்கு முத்தி
யிடங்கிடைக்கும் பாருங்க ளின்று. (௨௯)

பூமாலை சாத்திப் புவிபுகழ்சோ ணாசலற்குப்
பாமாலை சூட்டிப் பலகாலு—காமாலை
[illegible] பார்த்திருக்க நாயேற்குக்
(௩௦)

எனக்குத் தனக்கென் றிகலியைந்து பூதந்
தனக்குத் தனக்கே தலையாய்—மனக்குவச
மாவதில்லை சோணகிரி யையா விதைநீக்கப்
போவதில்லை போகாப் பொறி. (௫௧)

போகாப் பொறியாய்ப் புலனைந்தும் கூடியவித்
தேகாதி தள்ளுகைக்குந் தேட்டமா—யோகா
விரிக்கு மருணகிரி யீசா விதனை
யுருக்கும் வகையே துரை. (௫௨)

தாயினுநல் லாரினிய தாதையினுந் தானல்லோ
ராயிலரு ணேச ரடியேற்கு—மாயவுட
லேகம் பொருந்துவரோ நூறு வயதிருந்துஞ்
சாகப் பொருந்துவரோ சாற்று. (௫௩)

பத்தர்களை வாவென்றும் பாவிகளைப் போவென்று
முத்திவழி யீதென்று மூதலிக்குஞ்—சத்தியமே
யன்னவயல் சூழருணை யண்ணா மலைநாதர்
சன்னிதியி லூதுதிருச் சங்கு. (௫௪)

நச்சரவம் பூண்டானை நன்றாய்த் தொழுகவன்ற
னிச்சையிலே தானு மிருப்பதுவும்—பிச்சைதனை
வாங்குவது முண்பதுவும் வந்துதிரு வாசலிலே
தூங்குவதுந் தானே சுகம். (௫௫)

திருவருணைத் தனிவெண்பா.

முற்றிற்று.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

திருவண்ணாமலைத்

# தீபதரிசனச் சரித்திரச் சுருக்கம்.

ஸ்ரீ அகண்டாகார சச்சிதானந்த பரிபூரணசுயம்பிரகாசப் பொருளாய்விளங்குந் ஸ்ரீ கைலாயபதியானவர் இந்த உலகின்கண் ஆங்காங்கு வசிக்கும் ஆன்மாக்கள் ஒவ்வொன்று முய்யும்பொருட்டுத் திருவருட்கண்கூர்ந்து திருக்கோயில்கொண்டிருக்கின்ற பலஸ்தலங்களுள் ஒன்றாகியதும், ஆளுடையபிள்ளையாராகிய திருஞானசம்பந்த சுவாமிகளாலும், ஆளுடையவரசுகளாகிய திருநாவுக்கரசு சுவாமிகளாலும், பதிகம்பெற்றுள்ளதும், ஆளுடைய அடிகளாகிய மாணிக்கவாசக சுவாமிகளால் திருவெம்பாவை; திருவம்மானைபாடியருளியதும், பட்டினத்துச் சுவாமிகளது அம்சத்தாற் திருவவதாரஞ்செய்தருளிய அருணகிரிநாதர் திருப்பரங்குன்றின்கண்ணே எழுந்தருளியிருப்பவரும், திருச்செந்தூரின்கண்ணே எழுந்தருளியிருப்பவரும், திருவாவினன் குடியின்கண்ணே எழுந்தருளியிருப்பவரும், திருவேரகத்தின்கண்ணே எழுந்தருளியிருப்பவரும், இதுவன்றி மலைகடோறும் விளையாடுதலை நிலைபெற்ற குணத்தையுடைய முருகப்பிரானிடத்து அன்புடையோராய்த் திருப்புகழ் முதலிய அநேகப்பிரபந்தங்கள் பாடியருளப்பெற்றதும், சோழதேசமுதலான இடங்களில் இன்ன இன்னநாட்டில் இத்தனை இத்தனை தலங்களென்று முன்னோராகிய அறிவுடையோர்க ளேற்படுத்தி [illegible] கோட்டுக்குள்ளிருக்கும் [illegible] விசேஷமாகிய திருவண்ணாமலையெ

ளனுந் திவ்வியக்ஷேத்திரமானது கிருதாயுகத்தில் அக்கினி
மலையாகவும், திரேதாயுகத்தில் சுவர்ணமலையாகவும், துவாப
ரயுகத்தில தாமபிரமலையாகவும், கலியுகத்தில் கன்மலையாக
வும், திருவுருக்கொண்டு, அருணாசலம், சோணாசலம், கௌ
ரிநகரம், தேசுநகரம, முத்திநகரம், ஞானநகரம், சிவலோக
ம, என்று இவ்வாறு பலதிருநாமங்க ளுடையதும்: ஆன்ம
கோடிகளை இடைவிடாது இரட்சிக்குஞ் சிவபெருமானே
கிரிரூபமாயிருப்பதும்: பார்வதிதேவியார் திருவவதாரமான
தும்: திருக்கண்புதைத்ததும: மகிடாசுரமர்த்தனஞ் செய்த
தும்: இடப்பாசம பெற்றதும சந்திரவம்சத்தனாகிய வச்சி
ராங்கத பாண்டியன் பேறுபெற்றதும: கலாதரன், காந்தி
சாலி, தவஞ்செய்து பேறுபெற்றதும. அக்கினி வம்சத்தனா
கிய வல்லாளராஜன் புத்திரசோகந் தீர்ந்ததும்: இந்திர தீர
த்த முதலாகிய அநேக தீர்த்தங்களும: அன்பர்கள் திரும
லை வலம்புரிதலும ஆதித்தனுக்கு தரிசனங் கொடுத்ததும்,
சூரியவம்சத்தனாகிய பிரததராஜனால அநேககாணிக்கைக
ள தரப்பெற்றதும, அஷ்டவசுக்களும் பிரமன முதலானவர்
கள் பாவந்தீர்ந்ததும: புளகாதிபன பேறுபெற்றதும்; நினை
க்க முத்திதரும் தலமென்பதும ஆகிய புராணத்திற் சொல்
லப்படுகின்றன.

பரமசிவம்:—மலையுருவமானதற்குக் காரணமியாதெனி
ன், ஒருகற்பத்தில் மகாவிஷ்ணுவும் பிரமதேவனும் தாம்தா
ம் பிரமமென்றுவாதித்துப் போரிட்டதைத் தீர்க்கும்பொரு
ட்டுச் சிவபெருமான் அழற்றூணாயவர்கள் மத்தியில்நின்று
கலகத்தைத் தீர்த்து அநுக்கிரகித்து அவர்கள் வேண்டுதலி
னால் ஒரு சிறியமலையா யுருக்கொள, அதைக்கண்ட பிரம
தேவனும், மகாவிஷ்ணுவும், சுவாமியைநோக்கி இம்மலையி
னுச்சியில் ஒருஜோதி எக்காலுந் தெரியும்படிக்குக் கிருபை

செய்ய வேண்டுமென்று பிரார்த்தித்தார்கள். அதற்குச் சிவபெருமானவர் வாரீர் பிரமவிஷ்ணுக்களே! கார்த்திகைமாதத்தில் வரும் கார்த்திகைநக்ஷத்திரத்தில் இம்மலையினுச்சியின்கண் ஒருஜோதி காண்பிப்போம்; அச்சோதியைத் தரிசித்தவர்கள் மிடியும் வியாதியும், நீங்கி இஷ்ட காமியங்களைப் பெற்றுவாழ்வார்கள். இவையல்லாமல் அரசர்களும் தவத்தர்களும் தரிசிப்பார்களாகில் இடையூறின்றி வாழ்வார்கள். அன்றியும், இதைத் தொழுதவர்களுக்கும், தரிசித்தவர்களுக்கும், அவர்மட்டில்லாமல், அவர்களுடைய கோத்திரத்தில் இருபத்தொரு தலைமுறைகளும் மோக்ஷங் கொடுப்போம் என்று திருவாய் மலர்ந்தருளினார்.

மேலும் இம்மலை ஜனன மரணமென்னும் வியாதிக்கு மருந்துபோல இருப்பதனால் மலைமருந்தென்றும், அழல்வண்ணமாயிருப்பதனால் அருணாசலமென்றும் பெயருள்ளது; இதை ஒருதரஞ் சொன்னவர்களுக்கும் பஞ்சாக்ஷரத்தைமூன்றுகோடி தரம் உச்சரித்த பலன்வருமென்பது அருளிச் செய்தார்.

அதற்குப் பிரமனும் மகாவிஷ்ணுவும், ஆநந்தமடைந்து சிவபெருமானைப் பார்த்துத் தேவரீர் இவ்வாறு மலைக்கோலமாயிருந்தால் அடியங்கள் எப்படிப்பூசை செய்யக்கூடும்; ஆகையால் இந்தமலையின்கீழ் ஒரு சிவலிங்கமூர்த்தியா யெழுந்தருள வேண்டுமென்று வேண்டிக்கொண்டார்கள். சிவபெருமான் அப்படியே சிவலிங்கமூர்த்த மாகின்றேனென்று அந்தமலையினுள்ளேமறைய, உடனே அம்மலையினிடத்திற் சிவலிங்கந்தோன்றியது. அதைக்கண்டு பரமானந்தமாய் மயனென்னுந் தேவதச்சனால் ஓராலயங் கட்டுவித்தார்கள். அப்போ தவ்விடத்தில் வளப்பம் பொருந்திய

நகரமும், மூந்நூறு தீர்த்தங்களும் உண்டாயின. அல்லாமலும் ஆகாயகங்கை கிணறுகளாகவும் கற்பக விருக்ஷங்கள் மரங்களாகவும் வந்திருந்தன தேவர்களும், இருஷிகளும், மனிதர்களாகவந்து பிறந்தார்கள் அரம்பாஸ்திரீகள் தாசிகளாகப் பிறந்தார்கள். ஆகையால் எல்லா ஸ்தலங்களும் உடலென்றும், அருணாசலஸ்தலம் முகமென்றும் அதில் சிவபெருமான் கண்ணென்றும், இந்தஸ்தலத்தின் பெருமையை அளவிட்டுச் சொல்லுதற்கருமையென்றும், நமது பெருமானாகிய நந்திகேச்சுரர் மார்க்கண்டேய முனிவருக்கு அனுக்கிரகஞ் செய்தார். அக்காலத்தில் சிவபெருமான் திருவாய்மலர்ந்தருளியபிரகாரம் அம்மலையின்மேல் கார்த்திகைமாதத்தில் வருகின்ற கார்த்திகை நக்ஷத்திரத்தில் ஜோதிதரிசனமாகிக் கொண்டுவந்த பாவனையாக இப்போதும் அந்தமலையின்மேல் தீபதரிசனமாகின்றமையால், அத்தினத்தில் இந்திரதீர்த்தமுதலாகிய தீர்த்தங்களில் ஸ்நானஞ்செய்து கிரியைவலம்வந்து தங்கடங்கள் சத்திக்குத்தக்கபடி அதிபக்தியுடன் தர்மங்களையுஞ்செய்து அருணாசலேசுரரைத் தொழுது தீபதரிசனமுஞ்செய்து உள்ளன்போடு துதிப்பவர்கள் அளவிலாச்சம்பத்தையும் மோக்ஷத்தையு மடைவார்கள்.

இதன்றியும், ஆதிவாரத்தில் திரிகரணசுத்தியுடன் தீர்த்தமாடி அந்தமலையையாதொரு சிந்தனையுமில்லாமல் நிர்மலமாய்வலஞ்செய்து தம்மாலியன்றவளவில் தர்மங்கள் செய்தவர்கள் சூரியமண்டலத்தைப்பிளந்து சிவபதத்தைத் தமக்கு இடமாகச்சேர்த்துக்கொள்வார்கள் சோமவாரத்தில் அருணோதயத்திற்குமுன் தீர்த்தமாடி ஈரவஸ்திரத்துடன் வலம்வந்தவர்கள் தேவேந்திரனைப்போல் ஏழுலகத்தையும் ஆண்டு சிவசாரூப்பியத்தை அடைவார்கள்; மங்களவாரத்தில் தீர்த்தமாடி யாருடனும் வாய்பேசாமல் சித்தத்தைச் சிவ

பாலிருத்தி வலஞ்செய்பவர்கள் தங்கள்வறுமையும் சங்கிலித்தொடர்போல் வருகின்ற ஏழுபிறப்பையும் நீங்குவார்கள்; புதவாரத்தில சிவபெருமானை பிரதக்கிணஞ் செய்தவர்கள் நான்குவேதங்களையும் ஆறுசாஸ்திரங்களையும், அறுபத்துநான்கு கலைகளையும் தெளிந்து முத்திக்கு நெருங்கினவராய்த் தேவர்களாவார்கள்; குருவாரத்தில் வலமவந்தவர்கள் திரிமூர்த்திகளும் புகழத் தேவர்களுக்கும முனிவர்களுக்கும் மேலாவார்கள்; சுக்கிரவாரத்தில் வலஞ்செய்தவர்கள விஷ்ணுபதத்திற்சேர்வார்கள்; சனிவாரயுதயத்தில வலம்வந்தவர்களுக்கு நவக்கிரகங்களும பதினோராமிடத்தில நற்பலனைக்கொடுக்கும்; சிவராத்திரியிலும வருஷபபிறப்பிலும, ஐப்பசிமுதலாகிய மூன்றுமாதங்களிலும், வலம வந்தவர்களுக்கு மேற்சொன்ன பலனகளிலும் அதிகமான பலன்சித்திக்கும்.

உருவந்தெரியாமல் சித்தரும் தேவருமி இத்திருமலையை உள்ளன்புடன் வலஞ்செயவதால் மறறவாகள் கிரிப்பிரதட்சணஞ்செய்யும்போது வாசனத்தின்மே லேறிக்கொண்டுவாராமலும், போர்வை போரத்துக்கொள்ளாமலும்; குடைபிடித்துக்கொள்ளாமலும், பாதரட்சை தொடுத்துக்கொள்ளாமலும், தாம்பூலந தரியாமலும, வேறொருசிந்தனையில்லாமலும், மனத்திலை வந்தனஞ்செய்து அருணைசலேசுரரையே சிந்தித்துக்கொண்டு மிகுந்த பயபகதி யுள்ளவர்களாயிருத்தல்வேண்டுமென்றும், அந்நாளில விரதமிருந்து சிவதரிசனஞ்செய்து ஆலயத்திற்குள்ளேபோகின்றவர்களுள் அனுஷ்டானமில்லாதவர்கள் அவ்விடத்திலிருக்கும் ஆதி சைவாசாரியர்களைக்கொண்டு வில்வார்ச்சனை முதலானவைகளைச் செய்வித்தால் தங்கள் கையினாற்செய்த பேறு கிடைக்குமென்றும் பிரம்தேவர் சனகாதிகளுக்குச் சொன்னார்.

[சர்வாலய தீபதரிசனச் சரித்திரச் சுருக்கம்.]

ஸ்ரீகைலாயத்தில் உலகமாதாவாகிய பார்வதியாரோடு சிவபெருமான் எழுந்தருளி யிருக்கும்போது, அவ்விடத்தில் ஏற்றியிருந்த நெய்தீபங்களில் ஒருதீபம் அணையுந்தருணத்தில் ஒரெலியானது அதிலிருந்த நெய்யை உண்ணப்போனபோது, அவ்வெலியின் முகமானது அணைந்துபோகிற வர்த்தியைத் தூண்டியமாத்திரத்தில், பிரகாசம் அதிகரித்ததனால் சிவபெருமானவர் கிருபை கூர்ந்து அவ்வெலிக்கு மானிட சரீரமும், அரசும், பற்பமேற்றந் தந்து பூமியில் பிறக்கும்படி கட்டளையிட்டனர். அவ்வெலியானது மாவலிச் சக்ரவர்த்தியாய்ப்பிறந்து சகலைசுவரியத்தையும் அனுபவித்திருக்குங் காலத்தில் ஒருநாள் சிவ தரிசனத்துக்குப் போக எத்தனித்துத் தன இராசசின்னமுதலிய சகல ஆடம்பர விபவத்துடன் சிவாலயத்திற்குட் பிரவேசித்துப் பிரதட்சணம் வருகையில், அவ்விடத்தில் ஏற்றியிருந்த தீபநெய்யின் ஓர் துளி இந்தச்சக்கரவர்த்தியின் தேகத்தில் ஒழுகினவுடன், அச்சக்கிரவர்த்தியின் தேகமுழுமையும் இரணங்கண்டு வெகுகாலம் வருத்தப்பட்டுக்கொண்டிருக்கும்போது. ஒருநாள் சிவபெருமான் கிருபைகூர்ந்து சக்கிரவர்த்தியே! நீ மிகவும் அலங்காரியாகையால் நம்மாலுனக் கிந்தப் பழுண்டாயிற்று நீ இன்றுமுதல் உணர்ந்து, நெய் முதலிய பொருள்களால் ஆலயங்களுக்குத் தீபமேற்றுவையானால் உனக்கு இந்த விரணநீங்கி சாயுச்சியபதவி கிடைக்குமென்று அசரீரியாய்த் திருவுளம் பற்றியதைக்கேள்வியுற்ற அச் சக்கிரவர்த்தியானவர் ஆனந்தமடைந்து அந்தக்கட்டளையின்படியே அன்றுமுதல் சிவாலயங்களிலும், மற்ற இருஷிகளுடைய ஆரணியங்களிலும், தீபம் ஏற்றிக்கொண்டு வரு

காலங்களில், ஒருநாள் ஸ்ரீகைலாசபதியாகிய சிவபெருமானு னவர் திருவுளமிரங்கிக் கார்த்திகைமாதம் பூர்வபக்ஷம் கார் த்திகை நக்ஷத்திரத்தில், தேஜோமயமா யெழுந்தருளி அச் சக்கிரவர்த்திக்குச் சாயுச்சியபத மளித்தருளினார்.

அக்காலத்தில் சிவதரிசனத்துக்கு வந்திருந்த தேவர்க ளெல்லாரும் அச்சோதியைக்கண்டு பயந்து துதிசெய்து, சு வாமியினுடைய உஷ்ணந் தணியும்பொருட்டும் பொரி, அவ ல், நிவேதனம் செய்தார்கள். இவ்வாறு கைலாசபதியான சிவபெருமான் மாபலிச்சக்கிரவர்த்திக்குச் சோதிரூபமாய்த் தரிசனங்கொடுத்த காரணமாக இன்றும் சிவாலயங்கடோ றும் கார்த்திகைமாதம் பூர்வபக்ஷம கார்த்திகை நக்ஷத்திரத் தில் தீபம்வைக்கவும் * சுட்கப்பனை கட்டவும் ஆயிற்று.

கார்த்திகை நக்ஷத்திரத்துக்கு முன்னால் பரணி நக்ஷத் திரஞ் சாயுங்காலே அதிவாசதீபத்தில் அக்கினிகாரிய முத லியவைகளின் மூலமாய் மகாலிங்க மூர்த்தியை ஆவாகனஞ் செய்து அந்தத்தீபத்தைச சுவாமி சந்நிதானத்திற்குநேரே பூ சித்து வைக்கவேண்டும்.

மறுநாள் சாயங்காலே அர்த்த சூரியமண்டலத்தில் தெ ன்னை, பனை, கமுகு, வாழை, மூங்கில் என்னும் இந்த மரங் களில் ஓர்விதமரத்தைத் ஆலயத்திற்கும் இந்திரத்திக்குக்கு மத்தியஸ்தானமாகிய பிரமஸ்தானத்தில் நாட்டவேண்டும். இந்த மரத்துக்குத் தீபதண்டமென்று பெயராம்.

தண்டவுன்னதப் பிரமாணம்.

சுவாமி கர்ப்பக்ரகத்து விமானம் எவ்வளவு உயரமோ அவ்வளவு உயரமாவது, அந்த விமானக்கழுத்தினளவாவது இருக்கவேண்டும். இவ்விதமான தீபதண்டத்துடன் உலர்

* சுட்கப்பனை யென்பது — சொக்கப்பானை.

ந்த தென்னோலையாவது பனையோலையாவது பாக்கோலையாவது வாழைச்சருகாவது தாழஞ்சருகாவது அசோகச் சருகாவது சேர்த்து விமானம்போல் கட்டவேண்டும்.

மேற்சொன்ன பரணிநக்ஷத்திர மறுநாளாகிய கார்த்திகை நட்சத்திரத்தில் பஞ்சமூர்த்த சமேதமாய்ச் சோமாஸ்கந்த மூர்த்தியை உற்சவாலங்காரத்துடன் எழுந்தருளப்பண்ணி மேற்படி தீபம் சுவாமிக்குமுன்னே வரும்படியாகச் செய்து தீபதண்டத்தைச சமஸ்காரப்படுத்திக்கொண்டு அத்தீபத்தை அந்தத் தண்டத்தின்மேல்வைத்துச் சருகுகளை கொளுத்திவிட்டு அந்தச் ச ருகுகள் எரிந்தபின்பு மேற்படி தண்டத்தைச் சோதிததுவிடவேண்டும். அச்சோதியைச் சிவபெருமானாகப பாவனைசெய்து தரிசிப்பவர்கட்கு இம்மையிற் செல்வமும், மறுமையில் மோக்ஷமும் கிடைக்குமென்று ஆகமங்களிற் சொலலப்பட்டிருக்கின்றன.

## தண்ட விதி.

உத்தமம் தென்னமரம், மத்திமம் பனைமரம், அதமம் பாக்கு மரம், அதமாதமம வாழையும் மூங்கிலுமாம்.

## தண்டவுன்னதப் பிரமாணம்.

உத்தமம் உயர்வு, மத்திமம் அதன் கழுத்தளவு.

மலையைசசேர்ந்த ஸ்தலங்களில் நக்ஷத்திரம் பிரதானமாகவும் சமுத்திரத்தைச்சேர்ந்த ஸ்தலங்களில் பௌர்ணமி திதி பிரதானமாகவும், தீபம் வைக்க வேண்டியதென்று ஆகமங்களிற் சொல்லப்பட்டிருக்கின்றன.

தீபதரிசனச் சரித்திரச் சருக்கம்.

முற்றிற்று.

---

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# தீபவிதி.



ஆலயம்முதலிய சிவசந்நிதானங்களினும், பூசையினும், யாகாதிகளினும் விளக்கிடுதல் சிறந்த புண்ணியமாகும். பதினாறுவகை உபசாரங்களுள் விளக்கிடுதலும் ஒன்று. சரியைத் தொழில்களுள் இது விசேடித்ததாகக் கூறப்பட்டுள்ளது. விளக்கில்லாத எக்காரியங்களும் பயன்படா. விளக்கிலா இடம் உயிரில்லாத உடம்பை நேர்க்குமென்று சிவாகமங்கள் கூறுகின்றன. சிவபெருமானுக்கு முப்பத்திரண்டு உபசாரங்களுடன் பூசைசெய்க. அவை யியலாதார் பின் பதினாறுவகை யுபசாரங்களிற் பூசிக்க. அவையு மியலாதவர் சந்தனம் புட்பம் நைவேத்தியம் தூபம் தீபம் என்னும் ஐந்துவித உபசாரங்களினாலாவது செய்க. அவையிரண்டுஞ் செய்ய வியலாதவர் முடிவிற்செய்யப்படும் தீபமாத்திரம் ஏற்றித் தலேபார்க்கும் பீட்டுக் கூத்துமாடிச் சங்கரா சயபோற்றி யென்னக்கடவர் என்று காமிக ஆகமம் இலளித ஆகமம், தமிழ்வேதம் என்பன முழங்கா நிற்கும். இந்நற் றீபத்தின் பெருமை யித்துணைத்து என்பது தெற்றெனப் புலப்படும். புவனங்கள் யாவற்றையும் பொதுவறப் புரந்த மாவலிச்சக்கிரவர்த்தி யென்பான் யாவன்? அவன் முற்பிறப்பில் எலியாகப்பிறந்து சிவாலயத்திலுள்ள விளக்கிலிட்டுவைத்த நெய்யை யுண்ணுதற்குச்சென்றான். அக்காலத்து மங்கியிருந்த தீபச்சுடர் தன்முகத்திற்சுட உதறியதனால் அது ஓங்கியெரிந்தது. அதனால் தத்துவாதீத தனிப்பரஞ்சுடராகிய தற்பரசிவனார் அவனுக்கு மூவுலகும் ஏவல்கேட்ப ஆளும் பேற்றினையும், அட்ட ஐசுவரியம், அட்டபோக்கிய சம்பன்னம், சத்த சந்தானம், சதுர்விதோபாயம், சட்குண சமேதம், பஞ்ச தந்திரப் பிரவீணம், வர்க்கத்திரய விவேட

டம். சதுரங்கபலம் முதலிய சகல நியோக சகிதமாக வாழும் வாழ்க்கையினையும் அருளினார் என்று புராணங்கள் உரைத்தன. சிவ திரவியமாகிய நெய்யைத் தன்பசிக்காக வுண்டமையினாலும், முடங்கிய தீபத்தைத் தூண்டவேண்டுமென்று நினைத்துச் செய்யாமையினாலும், சிறிது குற்றமுற்றவனானபடியால் திருமாலது படிற்றுச் செயலகையி னகப்பட்டான். இங்ஙனமாயின் மெய்யன்புடன் தீபமிடுகின்றவர் அடையும் பலன் இவ்வளவின தென்று உலகமறிந்து ஏற்றியுய்க.

தீபமாலை, தீபம் என்னும் இவற்றாற் பிரகாசிப்பித்தல் சிவ வழிபாட்டிற்கு இன்றியமையாததாகும். தீபமாலையாவது கபிலை நிறப்பசுவின் நெய்யினால் நிறைக்கப்பட்டதும், கர்ப்பூரம், அகில் என்னு மிவற்றோடு சம்பந்தமாகத் திரிக்கப்பட்ட இழைகளையுடையதும், அவியாததும், வட்டவடிவாகிய தோரணம் முன்னர்த் தூங்கப்பெற்றதும், திரிசூல வடிவாகச் செய்யப்பட்டதுமாயுள்ளது. தீபங்கள் ஒருமுகம். இருமுகம், மும்முகம், நான்குமுகம், ஐம்முகம் என்பனவும், புருடதீபம், நட்சத்திரதீபம், மயூரதீபம், இடபதீபம், நந்திதீபம், கும்பதீபம் எனப் பலவகையவாக விளங்கும். பூசையின் மூவகையுள் தீபம்வரையும் அருச்சனை யெனவும், நைவேத்தியம் வரையும் பூசை எனவும், பலியிடுமெனவும் சாந்திகருமம் எனவும் சொல்லப்படும். ஆகவே தீபமில்லையேல் அருச்சனையென்பதுமில்லையாம். ஆலயங்களில் தீபமிடும்போது, ஒன்றுமுதல் பத்துவரையில் இடுதல் அதமாதமமாம். பத்துமுதல் நூறுவரையில் இடுதல் அதமம். நூறுமுதல் பதினாயிரம் அளவும் இடுதல் மத்திமம் எனப்படும். பதினாயிரமுதல் ஓரிலக்கம் வரையும் இடுதல் உத்தமமாகும். இலக்கத்திற்குமேல் இடப்படுவனவெல்லாம் உத்தமோத்தமமாகும்.

பகற்காலத்தே யிடப்படும் தீபங்களிலும் இரட்டிப்பாக இராக்காலத்தினிடை முதலாஞ் சாமம், நான்காஞ் சாமங்களில் இடப்ப

வெனவற்றினும் இடைச்சாமங்களில் இருமடங்கு அதிகமாக ஏற்றுக. இன்னுந் தீபங்கள் நான்கு வகைப்படும். குற்றமில்லாத நற்பசுக்களின் நெய்கொண்டு இடுவது சாத்துவிக தீபம். வெள்ளாட்டு நெய், நல்லெண்ணெய்கொண்டு இடுவது இராசத தீபம். எருமை நெய்யாலிடுவது தாமத தீபமாகும். விருக்ஷங்களின் விதைகளில் உற்பத்தியான ஆமணக்கெண்ணெய், இருப்பை நெய், கடலையெண்ணெய் முதலியனகொண்டு இடுவது பைசாச தீபமென்க. தாமத தீபத்தைப் பார்க்கினும் பைசாச தீபம் இழிந்ததும் யோக்கியமில்லாததும் என்று சிவாகமங்களால் இழித்துக் கூறப்பட்டன. திரிகள் தாமரைநூல், பருத்திநூல் கொண்டுசெய்க. இவ்வாறு பரசிவனாது திருமுகங்களினின்றுந் தோன்றிய சிவாகமங்கள் முறையிடவும். சிலர் அதனையெட்டுணையேனும் மதிக்காது, குளிக்கப்போய்ச் சேறுபூசுவார்போலச் சிவாலயங்களிலே கெட்ட நாற்றமுள்ள மண்ணெண்ணெய் கொண்டும், மெழுகுவர்த்தி யென்னும் அநாசாரப் பொருள்கொண்டும் தீபமிடுகின்றனர். உற்சவ காலங்களிலே எண்ணெய்ச்செலவிற்குப் பயந்து சாணவரட்டியிலே மண்ணெண்ணெயைத்தோய்த்துக் கொளுத்திப் பிடிக்கின்றனர். தருமகர்த்தர்களும் அதனைக் கண்டித்தல் கிடையாது. அருச்சகர்களும் அவர்வழியே செல்கின்றனர். அதனால் அவர்க்கு நரகப்பிராப்தியன்றி நற்பலன் அடையாது. தீபமிடுங்கால் அது ஓரங்குலம் வளர்ந்து எரிவது அதமமென்க. இரண்டுமூன்று அங்குலம் மத்திமமாம். அவற்றின் மேற்பட்டெரிவன உத்தமம்.

காலை உச்சி மாலை என்னும் முக்காலங்களிலும் தீபங்கள் நான்குடன் பூசிப்பது அதமத்தினதமம். காலை உச்சிகளில் நான்கு தீபங்களும், மாலைக்காலத்தில் எட்டுத் தீபங்களும் இட்டுப் பூசித்தல் அதமம். முக்காலங்களிலும் பன்னிரண்டு இடுவது மத்திமத்திலுத்தமம், [illegible] மத்திமத்தின் மத்திமமும், [illegible]

தொனிகளோடும். அருக்கிய புட்பங்களோடும் முப்பத்தாறு தீபங்களிடுவது மத்திமத்திலுத்தமமுமாகும். எழுபது தீபங்களேற்றிப் பூசித்தல் உத்தமத்திலதமம். முக்காலங்களினும் இரண்டு மரக்கால் அரிசிகொண்டு செய்யப்பட்ட அவிசு பாயசம், சித்திரான்னம் என்பவற்றையும், அவ்வளவு சுத்த அன்னத்தையும் படைத்து அர்த்தசாமத்தும் அவ்வாறு நைவேத்தியஞ்செய்து, முப்பத்துநான்கு வாத்தியங்கள் முழங்க, இருநூறு தீபங்களிட்டுப் பூசிப்பது உத்தமத்தில் மத்திமமாம். பந்துமரக்கால் அரிசிகொண்டு செய்த நைவேத்தியம்படைத்து, ஐம்பது வாத்தியங்களும முப்பத்திரண்டு உபசாரமும். ஐம்பது உருத்திர கணிகையர் நிருத்தங்களுமமையக் காலை உச்சி மாலை என்னு முக்காலங்களினும் ஐந்நூறு, ஆயிரம, பதினாயிரம் தீபங்களேற்றிப் பூசிப்பது உத்தமோத்தமம் ஆகும். இங்ஙனம் சிவாகமவிதிப்படி சிவாலயங்களிலே எண்ணிறந்த தீபங்களை யேற்றிப் பூசித்தவருக்குண்டாகும பலன் திருவருணாசலத்தில் கார்த்திகைமாதத்தில் இடப்படுந் தீபதரிசனமாத்திரையே யுண்டாகும். கார்த்திகைத் தீபத்திற்கு நெய். திரி முதலியன உபகரித்தோர் பெரும்பயனை எவருஞ் சொல்லுதல் இயலாது.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# தீபதத்துவம்.



ஆலயாதிகளிலே திருவிளக்கிடுவதின் உண்மையை யாராய்வாம். தீபம் ஆக்கினேயு உபசாரத்துளொன்று அக்கினி அருவாகவும் உருவாகவும் இருத்தல்போலச் சத்தியுகளினும் அருவாகவும் உருவாகவும் இருக்கின்றார் என்பது உணர்ப்படும். அக்கினியொன்

றைப்பற்றித் தோன்றுதல்போலப் பரமபதியும் அன்புமுறுகிய விடத்துத் தோன்றுவான் என்பதூஉம் போதரும். ஒரு விளக்கினிருந்து வேறொரு விளக்கும், அதிலிருந்து பலவிளக்குகளும் தோன்றுவது போலத் தத்துவங் கடந்த தனிப்பரம்பொருள் ஆகிய சிவபெருமானும் ஆன்மாக்களை அநாதியே பந்தித்த ஆணவாதிமும்மலங்களையும் நீக்கி யவைகட்கு அத்துவித இன்பமாகிய சிவசாயுச்சியத்தை யளித்தற்குச் சிவமாகியும் சத்தியாகியும், நாதவிந்துக்களாகியும், சதாசிவன், மகேசுரன், உருத்திரன் முதலிய அளவிறந்த உருவங்களைக்கொண்டும் பஞ்ச கிருத்தியங்களையும் இயற்றுகின்றார் என்பது பெறப்படும். அவ்வுண்மை ஒருமுக தீபம், இருமுக தீபம், மும்முக தீபம், நான்முக தீபம் ஐம்முக தீபம், பலவடுக்குத் தீபங்களாலும் உணர்த்தப்படுமென்க. தீபம் என்பது சிவபெருமானது திருவருள் வடிவாகிய சிவசத்திக்குறியாம். இன்னும் இத்தீப மியைதலை ஆராயுங்கால் தீபம் இருளை நீக்குவதுபோல அஞ்ஞான விருளை நீக்குவது ஞானம் என்று அறிதல் சான்றோர்க் குரிமையாம். ஆலயம் தேகமாகவும், ஆங்குள்ள தகழிபோல இருப்பது தேகத்திலுள்ள மனம் ஆகவும், அத்தகழியில் நெய்யை நிறைத்தல்போல இம்மனத் தகழியிலும் உண்மை யுணர்வாகிய நெய்யை நிறைத்து, தாமரை நூல், திரியிடுதல்போல உயிர் என்னுந் திரியையிட்டு, பிராணன் என்னுங் காற்றை நிறுத்தி, அன்பென்னுந் தூண்டுகோல்கொண்டு சிவஞானம் என்னுந் தீபத்தை யேற்றின் ஆணவமாதி மலவிருளகன்று பேரருட்சோதியாகிய சிவ தரிசனம் உண்டாகும் என்பதற்கு அறிகுறியா மென்னப்படும். கார்த்திகைத்தீபமும் அதனைத் தரிசிக்குங் கண்களின் ஒளியும் இரண்டற அத்துவிதமாக விளங்கல்போலச் சிவபெருமானாகிய பசுபதியும், ஆன்மாக்களும் "விண்ணளிநிலமுடலுயிர்" என்றின்னார்போல அத்துவிதமாக விளங்குகின்றனர் என்னுந் தத்துவமும் [illegible] பெறப்படும்.

தேவாரம்.

உடம்பெனு மனையகத்து ளுள்ளமே தகழியாக
மடம்படு முணர்நெய்யட்டி யுயிரெனுந் திரிமயக்கி
யிடம்படு ஞானத் தீயா லெரிகொள விருந்து நோக்கிற்
கடம்பமர் காளை தாதை கழலடி காண லாமே.

ஷை

ஊனி லுயிர்ப்பை யொடுக்கி யொண்சுடர்
ஞான விளக்கினை யேற்றி.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# கார்த்திகைத் தீபச் சிறப்பு.

திருவண்ணாமலையிலே கார்த்திகை மாதந்தோறும் இடப்படும் தீபத்திற்கு சர்வாலய தீபம் எனவும், கார்த்திகைவிளக்கீடு எனவும், ஞானதீபம் எனவும், சிவசோதி, பரஞ்சுடர் எனவும் பெயர்கள் வழங்கப்படும். கார்த்திகைத் தீபக்காட்சியைக்கண்டு ஆனந்தித்தவர்தங் கண்களே கண்களெனப்படும். அல்லாதார் கண்களெல்லாம் புண்கண், மரக்கண், பீலிக்கண், மட்பாண்டக்கண் எனப்பட்டு ஒரு சிறிதும் பயனிலவாம். அதனை மதுரைச் சங்கப்புலவருளொருவராம் பொய்கையாரும்.

மட நடைப் பறவையு மாய விலகு
முடிமலர் முடிக்கா டலைமுறை போகா
துறழ்பு காண்குமென் றூழ்இத் திரிந்து
தேவயாண் டாயிர மோடியு முணராப்
பரஞ்சுடர் மலைக்கட் டெருக்குடங் கண்ணணி
கண்ணுய் விளக்குங் கார்த்திகை விளக்கை

மாணைப் பெரீஇ இயவிர் மணைக்கோ விழியே
யல்லன மரங்கற் பீலி யேனம்
நிலமிவற் றுழைபோ மாசின வாகலிற்
பல்சான் றீரே பல்சான் றீரே
வீழ்நாட் படாஅமை வியர்ப்பய னுறுவான்
சென்மின் காணமின் றிருவிளக் கருளே.

என்று அவ்வுண்மை தெரித்தார். இவ்விளக்கீடு, சிவபெருமான் உலகமுழுதும் சோதி வடிவாய் விளங்கிநின்றதற்கு அறிகுறியாக எவ்விடத்துந் தீபமிட்டுத் தரிசிக்கு மதுவாம். வைணவர்க்கு ஐப்பசியில் தீபாவளி வருதல்போல, சைவ சித்தாந்திகளாகிய எம்மனோர் யாவருக்கும் உரிய தீபாவளி கார்த்திகைத் தீபமேயாம். இதனைப் புறச்சமயிகளும் ஏற்றுக் கொண்டாடி வருகின்றனர். சமணர் முதலாய புறப்புறச் சமயிகளும் இதன் பெருமையை யாங்காங்கு எடுத்துவியந்துள்ளனர். சமண நூலாகிய சீவக சிந்தாமணியினும்,

(நாமகளிலம்பகம்-௨௨௭-செய்யுள்.)

தார்ப்பொலி தரும தத்தன் றக்கவா றுரைப்பக் குன்றிற்
கார்த்திகை விளக்கிட் டன்ன கடிகமழ் குவளைப் பைந்தார்
போர்த்ததன் னகலு மெல்லாம் பொள்ளென வியர்த்துப் பொங்கித்
தீர்க்கடன் மகரப் பேழ்வாய் மதனன்மற் றிதனைச் சொன்னான்.

என்று சிறப்பித்துப் பேசப்பட்டிருக்கின்றது. ஒல்காப்பெரும் புகழ்த் தொல்காப்பியனாரும் புறத்திணையியலின் மக்கட்பாடாண்டுறை கூறியவிடத்து, "வேலி நோக்கிய விளக்கு நிலையும்" என்றருளி இதன் பெருமை குறிக்கவைத்தார். இதற்கு உரை செய்த உச்சிமேற் புலவர் கொளும் ஆசிரியர் நச்சினார்க்கினியரும், "இது கார்த்திகைத் திங்களிற் கார்த்திகை நாளின் ஏற்றிய விளக்குச் சிறப்புமேயாம் வெளியிடமும் இரிபரந்து சுடர் ஓங்கிச் செழுந் துவிட்டெழுந்,

தென்று அறிவோராக்கல் கூறப்படுவதாம்" என்றுரைத்தார். அவ்வாறே சங்கப்புலவர்களும்,

(தொல்காப்பியம்-புறத்திணையியல் - ௩௬-சூத்திரத்து உரைச் செய்யுள்கள்.)

மைம்மிசை யின்றி மலை விளக்குப் போலோங்கிச்
செம்மையி னின்றிலங்குந் தீபிகை—தெமமுனையுள்
வேலினுங் கேடாது வேந்தன் மனை விளங்கக்
கோலினுங் கோடா கொழுந்து.

வளிதூக்கக் கண்ணும் வலந்திரியா பொங்கி
யொளிசிறந் தோங்கி வரலா—னளிசிறந்து
நன்னெறியே காட்டு நயந்தெரி கோலாற்கு
மெய்ந்நெறி காட்டும் விளக்கு.

என்று சாதகிகைத் தீபத்தின் பெருமையை நன்கு எடுத்துக்காட்டினர். ஆகவே யித்தீபக் காட்சி உலகந் தோன்றிய கால[ம்] தொடங்கி நிகழுகிற தென்பது உண்மையாயிற்று. முன்னர் காலத்திற் கார்த்திகை மாதத்திலே கார்த்திகை நட்சத்திரத்தி[ல்] சிவபெருமானைப்பூசித்து விளக்கு ஏற்றியபோது, அது எத்துணை காற்றடித்தபோதும் சாயாது மேலோங்கி யெரியுமாயின் மிகவு[ம்] நல்லதென்றும், வலப்பக்கத்தாயினும், இடப்பக்கத்தாயினும், கீ[ழ்] லாயினும் சாய்ந்து எரியுமாயின் இன்னின்ன பலாபலமென்று அறிந்துகொள்ளும் வழக்கம் இருந்தது இக்காலத்தும் அதுகொ[ள்] ளப்படுகின்றது. உலகரும் "மலையிலிட்ட விளக்கு, குன்றின் மே[லி] ட்ட விளக்கு" எனக்கூறுதல் காணப்பட்டுவருதலால் திருவண்ணா மலையின்கண் இடப்படும் கார்த்திகைத் தீபத்தின் சிறப்பு விளங்கும். திருவண்ணாமலையென்பது தொண்டைநாட்டு முப்பத்திரண்டு சிவத் தலங்களுள் ஒன்று. முப்பத்திரண்டு தலம் வந்ததற்குக் காரணம் என்னென்று ஆராயுங்கால், இறைவியாகிய பரமேசுவரி திருக்கயி லையினின்றும் இவ்வுலகில் வந்து முப்பத்திரண்டு அறங்களையும் வ[ளர்]

த்தருளினன் என்னலால் அதற்கு அறிகுறியாகத் தலங்களும் முப்பத்திரண்டாயின வென்பர் பெரியோர். உலகத்திலுள்ள தலங்கள் எவற்றினும் நினைத்த மாத்திரையே அத்துவித முத்தியாகிய திருவடிப்பேற்றை யளித்தலால் திருவருணாசலத்திற்கு ஒப்பானவும் மிக்கவுமான தலங்கள் எங்குமில்லை. பரசிவமே மலையாக விளங்குவாராயின் அதன் பெருமையை யாவரே யுணரவல்லார்.

இத் திருவண்ணாமலையின் பெருமை தேவாரம், திருவாசகம், திருவிசைப்பா, பெரியபுராணம், கந்தபுராணம். சூதசங்கிதை, பிரமாண்டபுராணம் சரப உபநிடதம். இருக்குவேதம், பாஸ்கர சங்கிதை, அருணாசலபுராணம், அருணகிரிபுராணம், திருவருணைக் கலம்பகம், அருணையந்தாதி. அருணகிரியந்தாதி. சிவரகசியம், முதலிய பலநூல்களில் விளக்கப்பட்டுள்ளன. விட்டுணு தன்பிள்ளையுடன் சண்டையிட்டு மிருகமாகவும், புத்திரன் பறவையாகவும் உருவெடுத்து அடிதலை தெரியாது மயங்கி கருவமொழிந்த பின்னர்த் துதிக்க, சோதிவடிவாய சிவபெருமான் மலையாக விளங்நின்றார். அம்மலையினால் உலகமெல்லாஞ் சிவந்த நிறமாக விளங்கினமையால் அருணாசலம் எனப் பெயர் பெற்றது. அருணம்—சிவப்பு. அசலம்—மலை சோணகிரி என்பதற்கும்பொருள் அதுவே. சோணம்—சிவப்பு. இனி அருணம் என்பதனை அ-ருணம் என்னும் வடமொழிகளாகக் கொண்டு, ருணசம்பந்தங்களை யொழிப்பது எனவும் பொருள் கூறுவர் அருணகிரி புராணத்தார். நிற்க, இப் போலிவைணவர்கள் திருவண்ணாமலை சுதரிசனகிரி எனப் பெயர்பெற்ற வைணவத்தலம் என்று கூக்குரலிடுகின்றார். அவ்வாறே இராமாநுசன் என்னும் புதுவை வைணவனொருவன் சுதரிசனகிரிபுராணம் என்று ஒருபோலிப் புராணம்பாடிச் சிவதூடணங்களும் புரிந்தான். அதற்குச் சைவர்கள் மறுப்புக்கள் எழுதி வெளியிட, வாய்ப்படக்கி நாவுலர்ந்து காலுலர்ந்து தென்றிசை யோடி

னன். அதுநிற்க, விட்டுணுவும் பிரமனும் அடிமுடிகளைத் தேடியறியாது திதிக்க, அக்கினி யுருவாய் நின்றருளிய பெருமான் அடியையும் முடியையுங் காட்டாது இலிங்கோற்பவ மூர்த்தியாய் இலிங்கோற்பவ காலமாகிய மகாநிசியிலே ஒரு முகூர்த்தகாலங் காட்சி கொடுத்தருளியதுமன்றிக் கார்த்திகை மாதத்திலே கார்த்திகை நட்சத்திரத்திலே இதுபோல ஓர் சோதி காட்டுவேம். அதனைத் தரிசிப்பவர் யாவராயினும் அவர்பாசமாகிய இருட்படலத்தினின்றும் நீங்கிச் சிவஞானவொளியையடைந்து நம்கழலடி யுறுவார்" என்றும் பரமர் அருளினமையால அந்த ஐதிகப்படியே இப்போதும் மலையில் கார்த்திகைக் கார்த்திகையில் தீபமேற்றித் திருவிழாக் கொண்டாடப் படுகின்றது. விட்டுணுவுக்கும் பிரமனுக்கும் நடுவிற் சோதி வடிவாகத் தோன்றியது மாசிமாதத்தில் கிருஷ்ணபக்ஷ சதுர்த்தசி திதியும் சோமவாரமுந் திருவோண நட்சத்திரமுங் கூடிய மகாநிசிக்காலமன்றோ? தீபமிடல் மாசிமாதத்திலன்றிக் கார்த்திகையி லிடுதல் யாதுகாரணம் என வினவிற் கூறுவாம்.

இறைவன் சோதியுருவாக முதலிற் றோன்றியது மாசிச் சிவராத்திரியிலேயே இலிங்கோற்பவ மூர்த்தியாயப் பின்னாகக் காட்சி கொடுத்தது மகாநிசிக் காலமாகிய இரவு இருபத்தேழு நாழிகைக்குள்ளாம். அக்காலந் தேவநாளாதலின் அக்கணக்கின்படி பாரின் மா[illegible]கினைக கார்த்திகை மாதமே தேவர்க்கு மகாநிசிக் காலமாம். அது பற்றியே கார்த்திகையில் விளக்குவிழாச் செய்யப்படுமென்றறிக. இதுவன்றி வரன் என்னுமொரு சித்தன் முனிவர் சாபத்தால், மகிடாசுரனைப் பிறந்திருக்க, சங்கரி அவனைக் கொன்று அவன் கழுத்திற் சிவலிங்கந் தோன்றியெடுக்க, அக்கொலையினின்றும் நீங்காதுறைய அப்பாவத்தை விலக்கிக் கொள்ளாக, அம்மையார் இத்திருவருணாசலத்தை யடைந்து, ஐப்பசி மாதத்திற் கேட்டை நட்சத்திரத்திற் பூசித்து, கடக தீர்த்தத்

முழுகி அருச்சித்தமையால் சிவலிங்கங் கையினின்றும் நீங்கப்பெற்று, கார்த்திகைக் கார்த்திகையிலே சிவாகம விதிப்படி உற்சவம் நடத்துவித்துத் தீபங்களையும் எவ்விடத்தும் ஏற்றுவித்து, தாம் நினைந்தனவெல்லாம் பெற்றார் என்று அருணகிரிபுராணங் கூறுதலால் அவ்விதிப்படி யிக்காலத்துந் தீபமேற்றுதலுமாம். இத்தீப தரிசனஞ்செய்தோர் சிவபெருமானைத் தரிசித்தவராவர்.

சிவபெருமான் ஒளிவடிவா யிருக்கின்றார் என்பது தோன்றத் திருநெறித் தமிழ்வேதமும் "சோதியே சுடரே சூழொளி விளக்கே" என அடுக்கிக் கூறுகின்றது இத்திருமலை சிவனேயாதலால் இதன்கண் கால்வைத்து ஏறுதல் மகாபாதகமாம். இம்மலையை வலம் வந்தோர் தம்பாவங்க ளெல்லாம் நீங்கி முத்திபெறுவர். வலம் வருவோர் பாதரட்சையிட்டும் குடைபிடித்தும், வாகனத்து ஏறியும் செய்தல் ஆகாது. முன்னர் யாகிநன் என்னும் அரசன் குதிரையிலேறி வலஞ்செய்தான். அதனாலே அவன் நரகத்தில் வீழ்ந்தான். குதிரை சிவலோகஞ் சென்று சிவகணத்தலைவனாய் வாழ்ந்ததென்று உண்மைநூல்கள் கூறுகின்றன. ஆதலால் நமரங்காள்! குளிக்கப்போய்ச் சேறுபூசுவார்போலப் பாவந் தேடிக்கொள்ளாது விதிப்படி தீபதரிசனமும் பிரதக்ஷிணமுஞ் செய்து சிவஞானபலத்தால் அருணகிரிப் பெருமானது திருவடிப் பேறாகிய அத்துவித சிவசாயுச்சிய முத்தியை யடைந்து சேமமாக வாழ்வீராக.





உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# அருணாசலபுராணம்

## மூலமும் உரையும்.

---

பாயிரம்.

---

### விநாயகர் காப்பு.

கலி விருத்தம்.

மிக்க வேத வியாசர் விளம்பிய
விக்க தைக்கியை யின்றருள் செய்தி
முக்கண் வெற்பினை மும்மத வாரியை
கைக்களிற்றினை கைதொழு தேத்து

10

இ-ள். அநேக வேதங்களை இயல்பாகவே உணர்ந்த வியாசரால் அருளிச்செய்யப்பட்ட ஸ்காந்த புராணத்தில் உருத்திர சங்கிதையிலிருக்கும் இந்த அருணாசல மான்மியத்தை யிக்காலத்தில் தமிழிலுற்செய்ய (இதற்கு இணையில்லையென்று சொல்லும்படி) அனுக்கிரகஞ் செய்வதற்கு மூன்று கணகளையுடைய மலைபோன்றவரைச் சமுத்திரம்போன்ற * மும்மதத்தையும் தும்பிக்கையினையு முடைய யானைமுகம்பொருந்திய விநாயகரைக் கையினாற்கும்பிட்டு எடுத்தநூல் இடையூறின்றி இனிது முடித்தற்பொருட்டுத் தோத்திரஞ் செய்வாம். எ-று. (க)

## நடேசர் துதி

முதிருஞ்சுவை மதுரம்பெற
 மொழியுநதமிழ் விரகன்புகழ்
பதிகம்புனை பவளமயினா
 பவபஞ்சன னமலன்கதி
ருதிரும்படி பகிரண்டமு
 முடையும்படி யிலகும்படி
யதிரும்படி நடனம்புரி
 யதிருங்கழ லதிருங்கழல்

இ-ள். மிகுந்த மதுரச சுவையு முண்டாகப் பாடுகின்ற திருஞான சம்பந்தமூர்த்தி சுவாமிகளால் தோத்திரம் பண்ணப்பட்டபதிகமாகிய மாலையைத் தரிக்கின்றவராகியும், தம்மையடைந்தவர் களது பிறவியைக் கெடுப்பவராகியும், மலரகிதராகியும் விளங்கி, சூரியனுதிரவும், பகிரண்டமுடையவும், விளங்குகின்ற பூமியதிரவும் ந

* மும்மதமாவன—கன்னமதம், கபோலமதம், பீஜமதம்.

.டனத்தைச் செய்யாநின்ற மிகவுஞ் சப்திக்கின்ற வீரகண்டாமணி யைத்தரித்த நடேசரது பாதத்தை வணங்குவோம். எ-று. இச்செய் யுளுக்குப் பயனிலைவருவிக்கப்பட்டது. (உ)

## தலமகிமை.

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

இரவிகள்சந்திரர் வயிரவர்விஞ்சைய
ரிமையவ ரெண்டிசையோ
ருரகரருந்தவர் முனிவரர்பங்கய
ருவணநெடுங் கொடியோர்
பரவிநெருங்கலி னுலகநிறைந்தவர்
பணியு மிடங்கிடையா
நரகரவென்பது கடலின்முழங்கிய
தருணை வளம்பதியே.

இ-ள். சூரியர்களும், சந்திரரும், வயிரவரும், வித்தியாதரரும், தேவரும், அட்டதிக்குப் பாலகரும், நாகலோகத்தாரும், அரியதபசி களும், முனிவர்களும், பிரமர்களும், கருடக் கொடியையுடைய வி ட்டுணுக்களும்பரந்து நெருங்குதலினால் உலகநிறைந்து அவர்கள்வ ணங்குதற்கு இடங்கிடையாததாய் அவர்களாலே சொல்லப்பட்ட அ ரகரவென்கிற சப்தமானது சமுத்திரத்திலும் அதிகமாக முழங்கும்வ ளப்பத்தையுடையது அருணாசலமென்னுந் தலமாம். எ-று. (ங)

இளமுலைமங்கையர் முகமுநெருங்கிய
விருகுழை யும்பகலே
யொளிரொருசந்திர னுடனிருசெங்கதி
ருதயமெ னுந்தனியூர்

தளையவிழுந்தொடை மகபதிதன்பதி
  தனபதி தன்பதியா
மளகைவளம்பதி தனிலும்வளமபதி
  யருணைவளம் பதியே

இ-ள். இளமையாகிய தனங்களையுடைய பெண்கள்முகங்களு ம், அவர்களணிந்த இரண்டு இரத்தினக்குண்டலங்களும், பகலிலே பிரகாசிக்கின்ற ஒரு சந்திரனுடனே இரண்டுசூரியர் உதயமானார்க ளென்றுசொல்லும்படியாகிய ஒப்பற்ற ஊர, முறுக்கவிழ்ந்த கற்பக மாலையைத்தரித்த தேவேந்திரனுடைய பட்டினமாகிய அமராவதி யையும், குபேரனுடைய நகரமாகிய அளகாபுரியையும பார்க்கிலும் வளப்பத்தையுடையது அருணாசலமென்னுந் தலமாம் எ-று. (ச)

காலனெதிர்த்திட மார்பிலுதைத்தவா
  காமனுருப் பொடியா
ரலமிடற்றினர் மாலைமதிக்குறை
  யாடரவப் பணியா
நாலுமுகத்தவன் ஞாலமளிப்பவ
  னுடுமதற் கரியார்
சூலமெடுப்பவர் மேவுதிருப்பதி
  சோண கிரிப்பதியே

இ-ள். இமயனெதிர்க்க மார்பில் உதைத்தவராகியும், மன்மத னுடைய தேகத்தைப் பொடியாகச் செய்தவராகியும், விடத்தைக்க ண்டத்தில் தரித்தவராகியும், இளம்பிறையைத்தரித்தவராகியும், ஆ டுகின்ற சர்ப்பத்தை ஆபரணமாகப் பூண்டவராகியும், பிரமாவும் வி ஷ்ணுவும் தேடுதற்கரியவராகியும் சூலத்தைக் கையிலெடுத்தவராகி யும் விளங்குகின்ற பரமசிவன் வாசஞ்செய்கின்ற அழகாகியபதி அ ருணாசலமென்னுந் தலமாம். எ-று. (ரு)

## பரசிவ வணக்கம்.

### சந்தக்கலிவிருத்தம்.

உறவொடு பகையறு மொருமுத லவனெவ
னிறுதியி லுலகரு ளிறையவ னவனெவன்
மறைமுடி வினிடம் வளர்கவ னெவனவ
னறிவினி லறிபவ னடியிணை தொழுதனம்.

இ-ள். உறவும் பகையும் இல்லாத ஒப்பற்ற முதன்மையானவனெவன்? சருவசங்கார மானபின்பு உலகத்தை உண்டாக்குகிறவனெவன்? வேதமுடிவிலே சகலத்தை யறிகிறவனெவன்? தன்னியற்கையறிவினாலே சகலத்தை யறிகிறவனெவன்? (பரமசிவம் அப்படிப்பட்ட தன்மையையுடைய பரமசிவனது திருவடிகளை யாம் வணங்கினோம். எ-று. (க

### அருணசலேசர்துதி.

கலிநிலைத்துறை.

மணிகொண்ட நெடுங்கடலில் விழிவளருந்
திருமாலு மறையினோனும்
பணிகொண்ட பாதலத்தும் பூதலத்து
மீதலத்தும் பரிந்து தேட
வணிகொண்ட பிரமாண்ட கோளகைபொற்
கோளகையா யழகு காட்டக்
கணிகொண்ட வொருவரையா மொருவரையா
மகலாது கருத்துட் சேர்ப்பாம்.

இ-ள். இரத்தினங்களுக் கிருப்பிடமாகிய நீண்டகடலிலே

சஞ்செய்கின்ற பாதாளத்திலும் பூமியிலும் மேலுலகத்திலும் வருந்தித்தேட அவர்களாலெட்டப்படாமல் அழகாகிய பிரமாண்ட கோளகையானது பொன்னாற் செய்யப்பட்ட கோளகைபோலாகி அழகுகாணபிக்க எண்ணங்கொண்ட ஒப்பற்ற அக்கினிமலையாகிய பரமசிவத்தை நீங்காது இருதயகமலத்திற் சேர்த்துக்கொள்வோம். (எ)

ஒருமானைக் கரத்தினில்வைத் தொருமானைச்
சிரத்தினில்வைத் துலகமேழுந்
தருமானை யிடத்தினில்வைத் தருள்வானைப்
பவளநெடுஞ் சயிலமபோல
வருமானை முகத்தானை யளித்தானைப்
பெருமானை மகிழ்மேவுறும்
பெருமானை யருணகிரிப் பெம்மானை
யடிபணிந்து பிறவித்தீர்ப்பாம்

இ-ள். தாருகவன இருடிகள் வரவிட்டமானைக் கையிலேவைத்தும், ஒரு மான்போன்ற கங்கையை முடியில்வைத்தும், எழுலகத்தையும்பெற்ற உமாதேவியை வாமபாகத்தில்வைத்தும், அடியார்க்கருள்செய்கின்றவரும், பவளம்போல்வருகின்ற ஆனைமுகத்தையுடைய கணபதியைப்பெற்றவரும், போர்செய்கிற இடபவாகனத்திலெழுந்தருளுகின்ற ஆண்டவருமாகிய (அருணாசலதலத்தில் வீற்றிருக்கின்ற) பரமசிவனுடைய திருவடிகளை வணங்கி இனிவரும் பிறப்பைத் தீர்த்துக்கொள்ளுவோம். எ-று. (அ)

உண்ணாமுலையம்மைதுதி.

காரொழுகுங் குழலாளைக் கருணைவழிந்
தொழுகுமிரு கடைக்கண்ணாளை
மூரலின நிலவொழுகப் புழுகொழுக
வழகொழுகு முகத்தினாளை

வாரொழுகுந் தனத்தாளை வடிவொழுகித்
 தெரியாத மருங்குலாளைச்
சீரொழுகும் பதத்தாளை யருணையுண்ணா
 முலையாளைச் சிந்தைசேர்ப்பாம்.

இ-ள். மேகம்போன்ற கூந்தலையும், கிருபைவழிந் தொழுகுகின்ற இரண்டு கடைக்கண்களையும். தந்தங்களின்காந்தி இளமையாகிய சந்திரிகைபோற்பிரகாசிக்கப் புழுகுவசிக்கின்ற அழகுபொருந்திய முகத்தையும், கச்சணிந்த தனங்களையும், அதிகவழகையுடையதா யொருவருக்குந்தெரியாத இடையையும் சிறப்புப் பொருந்திய பாதங்களையுமுடைய அருணசலதலத்தில் வீற்றிராநின்ற உண்ணாமுலையம்மையை மனத்தில் வினோதமாகக்கொள்ளுவோம். எ-று. (க)

யானைதிரைகொண்ட விநாயகர்துதி.

மதமூன்று மாறாக வருங்களிற்று
 முகத்தானை மனத்தி லேத்தான்
பதமூன்று மருந்தவர்க்குப் பதமூன்றுங்
 கடந்தபதம் பாலிப் பானை
விதமூன்று புரங்கடிந்தா ரளித்தருளு
 மொருமுதலை வேறோ டேசஞ்
சிதமூன்று பிறப்பொழிக்கு யானைதிறை
 கொண்டவனைச் சிந்தைசேர்ப்பாம்.

இ-ள் மும்மதங்களும் ஆறாகி ஓடிவருகின்ற யானைமுகமுள்ளவரும். மனதில் தம்முடைய திருவடிகளைச் சிந்திக்கின்ற அரியதவத்தை யுடையவர்களுக்கு நான்காம்பதமாகிய சாயுச்சியத்தைக் கொடுப்பவரும், முப்புரங்களை நீறுசெய்த சிவபிரானால் அளிக்கப்பட்டவரும் ஒப்பற்ற முதலாகியவேர் ஓடுகிற சஞ்சித (ஆகாமியம் பிராரத்தம்) வினையையுடைய பிறப்பைக் கெடுக்கின்றவருமாகிய யா

னே நிறைகொண்டவரென்னும் விநாயகரை மனத்திற் சேர்த்துக்கொள்வாம். எ-று. (௧0)

### சிவசுப்பிரமணியர் துதி.

கொந்தாரு மலர்ச்சோலை யருணைநெடுங்
  கோபுரத்திற் குமர வேளை
வந்தாரை வாழ்விக்க வடவீதி
  தனிலுறையு மயிலெ ஞனைக
கந்தாருங் கடகளிற்று மகவாறகுத
  தருநிழலுங கனக நாடுந
தந்தானை யலர்கடப்பந தாரானைப பணிபவர்தா
  டலைமேற் கொள்வாம்

இ-ள். பூங் கொத்துகளையுடைய சோலைசூழ்ந்த அருணசலத்துக்குக் கிழக்குக் கோபுரவாயிலுககுதெதமேறபுற மணடபத்திலிருக்கின்றவரும், தம்மை யுடைந்தவாகளைப் பிழைப்பிக்கசசெய்ய வடவீதியிலே வாசஞ்செய்கின்ற மயில்வாகனத்தை யுடையவரும், தறியிற் கட்டப்பட்ட மதமபொருந்திய ஐராவததிலேறுகின்றதேவேக்திரனுக்குத் தேவலோகததையும், கறபக விருக்ஷததினிழலையுங் கொடுத்தவரும், கடப்பமாலையைத் தரிசிததவருமாகிய சிவசுப்பிரமணியக்கடவுளை வணஙகுகின்ற அடியார்களுடைய பாதங்களைத் தலைமேல் வைத்துக்கொள்ளுவோம். எ-று. (௧௧)

### மூவர்முதலிகள் துதி.

வாதுகொண்ட பரசமய கோளரியை
  யடிவணங்கி வன்கற் றூணைத்
தீதுகொண்ட கருங்கடலைக் கடந்தசெழுந்
  தமிழ்க்கடலின் றிருத்தாள் போற்றி

காதுகொண்ட விழிப்பரவை திருமனைக்கெம்
பெருமானைக் கால்க ளேவத்
தூதுகொண்ட சுந்தரனைத் தம்பிரான்
றோழனையாந் துதிசெய்வோமே

இ-ள். வாதுகொண்டு செயிக்கவந்த சமணர்களாகிய யானைக ளுக்குச சிங்கமாகிய திருஞான சம்பந்தமூர்த்தி சுவாமிகளது திரு ப்பாதத்தை வணங்கி, வலியகருங்கல்லோடு பிணித்துச் சமணர்கள் சமுத்திரத்திற்போட அக்கல்லையே தெப்பமாகச் சமுத்திரத்தைக் கடந்த செந்தமிழ்க்கடலென்று சொல்லப்பட்ட அப்பர் சுவாமிக ளது பாதத்தைவணங்கி, காதளவுந்தாவிய கண்களையுடைய பர வைநாயகியாருடைய திருமனைக்கு இரண்டு பாதங்களும் நோக நடந்ததாண்டவரைத் தூதாகவனுப்பிய தம்பிரான்றோழராகிய சுந் தரமூர்த்தி சுவாமிகளை வணங்குவோம்-எ-று. (கஉ)

திருவாதவூரடிகள் துதி.

தரவு கொச்சகக் கலிப்பா.

அத்தனார் பெருந்துறைபுக் கரியவினைக் கடல்கடந்து
புத்தனார் மதங்கடிந்து புனிதமா கியசிவன்
முத்தனார் மாணிக்க வாசகனார் முத்திக்கு
வித்தனார் வாதவூர் வித்தகனார் தாள்போற்றி.

இ-ள். பரமசிவன் குருமூர்த்தமாக எழுந்தருளியிருந்த திருப் பெருந்துறைக்குப்போய் அச்சுவாமியினுடைய அநுக்கிரகம் பெற் றரிதாகிய தீவினைக்கடலைத்தாண்டி அக்காலத்தில் வியாபித்தி ருந்த பௌத்தர்களுடைய மதத்தைக் கண்டனஞ்செய்து பரிசுத் தமாகிய சிவன்முத்தி நிலையடைந்தவரும், அம்முத்தியாகிய சிவத்

திற்கு விதையாகியும் * திருவாதவூரிற்பிறந்த ஞான சொரூபியா யும், (அரிமாத்தன பாண்டியனுக்கு முதன்மந்திரியாகியும்) இரு ந்த மாணிக்கவாசக சுவாமிகளுடைய பாதத்திற்கு வந்தனம். எ-று.

## திருத்தொண்டர் துதி.

அறுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்

மனைபாலை யாற்களித்து மனங்களித்த
வியற்பகையார் மலர்த்தாள் போற்றி
தனையாளுமபெருமானுக் கெச்சிலிடுங்
கண்ணப்பர் சரணம் போற்றி
வினையாள ரறியாத திருநீல
கண்டரடி விரும்பிப் போற்றி
யெனையாளு மிளையான்றன் குடிமாற
ரிணையடியை யிறைஞ்சுவாமே

இ-ள். பரமசிவன் அடியாரவேடம் பூண்டுவந்து மனைவியை யெனக்குக் கொடுவென்று கேட்க அதற்காக அதிக சந்தோஷத் தையடைந்து. அவர்க்குத் தம்மனையாளைக் கொடுத்து அதனால் அதிக மகிழ்ச்சியடைந்த இயற்பகைநாயனாருடைய மலர்போன்ற பாதங்களுக்கு வந்தனம், தன்னையாட்கொண்ட சுவாமிக்குத்தான் தின்று உருசிப்பார்த்த எச்சிலைக்கொடுத்த கண்ணப்ப சுவாமிக ளது பாதத்திற்கு வந்தனம், வினையையுடையவர்கள் அறியாத திருநீலகண்ட நாயனாருடைய பாதத்தைமகிழ்ந்துவணங்கி. அடி யேனை ஆட்கொண்டருளும் இளையான்றன் குடிமாறநாயனாருடைய பாதத்தை வணங்குவாம்-எ-று. (க

* திருவாதவூர் என்பது வைகையாற்றின் கரையிலுள்ளது

ஐயடிகள் காடவர்கோ னீரடியை
　வணங்கிமக வறுத்தெம் மாற்கு
நெய்யடிசி லுடன்படைத்தார் திருவடியைத்
　தொழுதுதிரு நீற்றுச் சோழன்
மெய்யடியைப் புகழ்ந்துதெய்வ வுலாச்சொன்ன
　சேரனடி விரும்பி யேத்திப்
பொய்யடிமை யில்லாத புலவர்முத
　லனைவரையும போற்றுவோமே

இ-ள். ஐயடிகள் காடவர்கோ னுடைய இரண்டு பாதத்தை
வணங்கி. எமது சுவாமிக்குப் பிள்ளையை அறுத்துச் சமைத்த
ய நெய்விட்ட அன்னத்துடன் படைத்த சிறுத்தொண்ட
ருடைய மெய்ம்மையாகிய பாதத்தை வந்தித்து, தெய்வீகம்
ந்திய திருவுலாப் பிரபந்தம் பாடிய சேரமான் பெருமானு
டைய பாதத்தையும் ஆசையுற்றுப் பணிந்து, மெய்யடிமை
டைய புலவர்கள் முதலாகிய யாவரையும் வணங்குவோம்.

**நந்திதேவர், துர்க்கை, கௌதமர், சண்டேசுரர் துதி.**

நந்திதிரு வடியிறைஞ்சி விந்தையடி
　புகழ்ந்துமறை நான்கிற் கைந்தாய்
வந்தருளுங் கோதமனார் மலரடியென்
　முடிக்குமுடி மாலையாக்கித்
தந்தையிரு பதஞ்சிதைத்துச் சிதையாத
　பதத்திருந்த தண்டி தாளைச்
சிந்தையிசைக் குடியிருத்தி யருணகிரி
　நினைப்பவர்தாள் சென்னி சேர்ப்பாம்.

இ-ள். நந்திதேவருடைய அழகிய பாதங்களைத் தொழு துர்க்காதேவியினுடைய பாதத்தை வணங்கி, நான்கு வேத ஙளின்றும் ஐந்தாம்வேத சொரூபமென்று சொல்லப்பட்ட கௌ மருடைய தாமரைபோன்ற பாதத்தை என் சிரத்துக்குத் கப்பட்ட மாலையாகச்செய்து. தம்முடைய தகப்பனாது இர பாதங்களையும் வெட்டி அதனால் கெடாத மோக்ஷபதத்திலிரு சண்டேசுரருடைய பாதத்தை இருதயத்திற் குடியிருக்கச் செய் அருணாசலத் தலத்தை நினைப்பவருடைய பாதத்தையுஞ் சிரத சேர்த்துக்கொள்ளுவோம். எ-று.

## அவையடக்கம்.

தேறுகின்ற பலகலையுந் தெளிந்தசுவை
பிருநான்குந் திகழும்பாடல்
கூறுகின்ற புலவர்முன்னே தமியேனுஞ்
சிலபுகல்சொற் குறித்த வாறு
வீறுகின்ற மறைவிரிஞ்ச னேறிவரு
மனத்தின் முன்னும் விரிஞ்சன்றாதை
யேறுகின்ற கருடன்முன்னு மொருமசகம்
பறவை கொடுத்திடுதல் போலும்.

இ-ள். பலநூற்களையுங் குறைவறக்கற்று * எட்டுச் சுவை பொருந்திய தமிழ்ப்பாடல்களைச் சொல்லுகின்றவித்துவான்கள் ன்னே ஒன்றுமறியாத யானுஞ் சிலபாடல்களைப் பாடினைத்த விளங்கிய நாலுவேதங்களையுடைய பிரமனேறிநடத்தும் அ தின் முன்னும் அவன் தகப்பனுகிய விட்டுணு ஏறும்படியா

* எட்டுச்சுவையாவன:—சிருங்காரம், வீரம், பெருநகை இரௌத்திரம், குற்சை, அற்புதம் பயம் என்பனவாம்.

டன் முன்னும் ஒரு சிறியகொசு பறந்திடுதலைக் காண்பித்தது போலும். எ-று. (கஎ)

நீரிருக்கு தெனப்பழித்து விடுவரோ
வதுபாலி னிகழு மாறு
ஞாரிருக்கு தெனக்கழித்து விடுவரோ
வதுமலரி னன்று மாறு
லாரிருக்குஞ் சடைமுடியார் விடமிருக்குந்
திருமிடற்று ரருணை நாதர்
பேரிருக்குந் தகைமையினு லெனதுரையை
யிகழுவரோ பெருமை யோரே.

இ-ள். பாலொடு கலந்திருக்கின்ற நீரைச் சகவாசயோக்கியத்தால் தள்ளாம லெடுத்துக்கொள்ளுவார்கள், புட்பமாலையோடு சேர்ந்த நாரையும் அப்படியே கொள்ளுவார்கள், ஆத்திமாலையைச் சூடிய சடைமுடியையும் ஆலகாலமிருக்குங் கண்டத்தையுமுடைய அருணாசலேசுரருடைய நாமமிருக்கிற பெருமையினாலே என்னாற்செய்யப்பட்ட புன்பாடல்களையும் பெரியோர்கள் ஒப்புக்கொள்வார்களேயன்றி இகழார்கள். எ-று. (கஅ)

அழுந்தரக் கனிந்தரசசு மரம்பழைய
தெனினுமதி னமுதுண் டாமோ
விழைவுதரு சுவைக்கரும்பு புதியதுவே
யெனினுமது விரதம் போமோ
விழிவுறுபா டலுமுயர்வு தங்கியசெய்
யுளுமவையோ லிருக்கு மாயிற்
பழமையென நலந்தருமோ புதுமையென
விதம்படுமோ பயன்கொள் வோர்க்கே.

இ-ள். அழகிய சிவப்புநிறம்பொருந்தப் பழமபழுத்த எட்டிமரம் வெகுநாளைய மரமாயிருந்தபோதிலும், அதில் மாதுரியமுணடாகாது; யாவராலும் இசிக்கப்பட்ட இனிப்பாகிய கரும்பு கொஞ்சநாளையதாயிருந்தாலும, அதில் கசப்புணடாகாது; அதுபோற் பிரயோசனத்தைக் கொள்ளுவோர்களுக்கு, குற்றத்தோடுகூடிய செயயுள் பழமையா யிருந்ததினாலேயே ஒரு நனமையைத் தராது; யாதொரு தோஷமில்லாத உயர்வானபாடல் சிலநாளைக்குமுன் உண்டாயிருந்ததினாலேயே இகழப்படாது. எ-று (க-

திணையளவுந் தமிழ்மிடியுற் றதிமதுரம
பிறந்தகல்வித் திறமை யோரு
நிணையுமியற் சுவையறியா மூடர்பளுவ
வறிவின் முனமேன நிறகலாமோ
விணையடருங் குவளைவிழி யனிசசமல
ரணையதிரு மேனி மாதா
புணைவின்மதன் மலர்க்கணையைப் பொறுப்பதெல்லா
லமரினமபு பொறுந்திடாரே

இ-ள் மகால்லுக் தொழிலடைகின்ற லோறபலம் போன்ற கண்களையும் அனிசசப்பூவொத்த உடமபிணையுமுடைய பெணகள் கருப்புவில்லைத் தரிக்கின்ற மன்மதனாலேவிடப்பட்ட புஷ்பபாணத்தைப் பொறுப்பார்களே யல்லாமல் கொடிதாகிய யுத்தத்தில் விடுகிற அம்பைப் பொறுக்கார்கள். அதுபோலத் தினையளவுகூட செந்தமிழ்த் தரித்திரம் இன்றி அதிக மதுரம்பிறந்த கல்வி வல்லவர்களும் இலக்கணரசமே யறியாத மூடர்களுடைய மிகுந்த அறிவுடைய கல்விப்பிரசங்கத்தின் முன் னிற்கார்கள். எ-று.

## நூல் வரலாறு.

கருத்துருக விறைவனந்திக் கருள்புரிய
நந்தியுமார்க் கண்டற் கோத
விருத்திமறை வியாதமுனிக் கவனுரைக்கச்
சூதனுக்கு வியாதன் சொல்லப்
பொருந்துமன விருடிகளுக் கருட்சூதன்
மொழிந்த சிவபுராணங் கோடி
யுருத்திரசங் கிதையுரைத்த வருணகிரி
வளத்தினையா னுரைக்கலுற்றேன்.

இ-ள். மனமுருகப் பரமசிவன் நந்திகேசுரருக்கு அருள்புரிய, நந்திகேசுரரும் மார்க்கண்டேயருக் கருள்செய்ய. மார்க்கண்டேயர் வேதங்களை யொழுங்குசெய்த வியாசருக்கருள்செய்ய, வியாசர் சூத முனிவருக்குச் சொல்ல. சூதர் ஒருவழிப்பட்ட மனமுடைய சௌனகர்முதலிய முனிவர்களுக் கருள்செய்த, சிவபுராணங் கோடியாகும் அவைகளில் முக்கியமாகிய காந்தத்தில் உருத்திர சங்கிதையிற் சொல்லிய அருணாசலத் தலமகிமையைச் சொல்லத் தொடங்கினேன். எ-று. (உ௧)

அருணைநகர் வளமையுமா லயனகந்தை
விட்டவழல் வெற்பானவாறும்
பொருவின்மக மறித்ததுவு மருணுமையை
மணந்ததுங்கண் புதைத்த வாறும்
வருமங்கிடற் றொலைத்ததுவு மிறைவியிடங்
கலந்ததுவும் வயிரப் பூண
ணிருவினையை யகற்றியது மற்றுமுள
சரிதையெலா மியம்பு வேனே.

இ-ள். அருணாசலத்தலமகிமையும், பிரம விட்டுணுக்களுடைய கர்வமடங்க அக்கினிமலையான வரலாறும், ஒப்பில்லாத தக்கனு

டைய யாகத்தை அழித்ததும், பரமசிவன் பார்வதி தேவியாரை மணஞ்செய்ததும், அப்பார்வதிதேவியார் சுவாமியினுடைய திருக்கண்களை மூடியதும், மகிடாசுரனை உமாதேவி கொன்றதும், அப்பார்வதி தேவியார் வாமபாகத்திற் சேர்ந்ததும், வச்சிராங்கத பாண்டியனுடைய பாவத்தை நீக்கினதும் மற்று முள்ளவுஞ் சொல்வேன். எ-று. (௨௨)

அங்கிகுல மோங்கவரு வலலாள
பூபன்ற னரிய தொண்டுந்
துங்கமிகுந் தீர்த்தமுடன் றிருமலையை
வலம்புரியுஞ் சுடரோன் பேறும்
பொங்குபிர தத்தனொடு வினைதீர்த்த
வாறுபுள காதி யாவு
மிங்கிதஞ்சேர் வடகலையி லிருந்ததனைத்
தென்கலையா லியம்ப லுற்றேன்.

இ-ள். உலகின்கண் ஓங்குமுக்குலவேந்தருள், அக்கினி குலோத்துங்கனென்று வழங்குஞ் சேரகுலாதிபனாகிய வல்லாளமகாராஜனுக்குப் பிள்ளைகலிநீக்கி முத்தியளித்ததும், அத்தலத்தி லோங்குந் தீர்த்தங்களின் பெருமையும், அவ்வருணாசலத்தை வலஞ்செய்பவர்கள் பெறும் பேறும், கதிரவனுடைய கர்வத்தையடக்கி முத்தி யளித்தவாறும், பிரதாபம்பொருந்திய பிரதத்தனென்னும் வேந்தனது சரிதையும், பாவந்தீர்த்த சரிதையும், புழுகு பூனையாக விருந்து மூன்று லோகங்களினுஞ் சஞ்சரித்துவந்த புளகாதிபனென்னு மாக்கனுடைய சரிதமும், இங்கித மிகுந்த வடமொழியி லிருந்ததைத் தென்மொழியாகிய தமிழினாற் சொல்லத் தொடங்கினேன் எ-று. (௨௩)

பாயிரம் முற்றிற்று.
ஆக திருவிருத்தம் - ௨௩.



கைலாசபதிக்குத் தொண்டுபூண்டொழுகும் நந்திகேசுரர், மார்க்கண்டேய மகாமுனிவருக்கு அருணசலத்தினுற்பவமும், அதன் மகிமையையும். தரிசிக்கவேண்டிய விதிமுதலியவைகளையு முபதேசித்தல்—6.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருநகரச் சருக்க வசனம்.

உயர்வாகிய மழு மான் பிரம்பு உடைவாள் என்னும் இவைகளைத் தாங்கி, விபூதியை உத்தூளனமாகத் தரித்து, சடைமுடி, திரிநேத்திரம், புலித்தோல், உபவீதம் என்பவற்றை யுடையவராய், சிவபெருமானது ஆணைப்படி வெள்ளிமயமாகிய கயிலை மலையைக் காத்தருளுவோர் திருநந்திதேவர். அவர் முழுமுதற் கடவுளாகிய சிவபெருமானாலே திருவாய்மலர்ந்தருளப்பட்ட சைவசித்தாந்தமென்னும் பயிர்தழைப்ப, கருணையாகிய மழையைப் பொழியும் இயல்பினையுடையவர் சிலாதர முனிவர்க்குப் புத்திரராயவதரித்தவர். விட்டுணுமுதலிய தேவர்கள் யாவரும் வணங்கும் திருவடிகளை யுடையவர் திருக்கயிலாய மலையிலே நவரத்தினங்களாலுஞ் செய்யப்பட்ட ஒருமண்டபமுளது. அதன் நடுவேயிடப்பட்ட சிங்காதனத்தின்மேல் கணத்தவர்களும், குற்சன், உரோமசன், குமுதன், குமுதாக்கன் முதலிய முனிவர்கள் பலருஞ்சூழ்ந்து துதிக்கத் திருநந்திதேவர் பரமசிவனைப்போல வீற்றிருந்தார். அப்போது மிருகண்டுயு முனிவரின் புத்திரரான மார்க்கண்டேய முனிவர் அங்குவந்து திருநந்தி தேவரின் பாதாரவிந்தங்களைப் பணிந்து துதித்து, தனிமுதற் பொருளே! சிவசாயுச்சிய முத்தியை யடையும் வழியை யடியேங்கள் அறியும்படி உபதேசித் தருளவேண்டுமென்று விண்ணப்பித்தார்.

நந்தியம்பெருமான் மகிழ்ச்சியுற்று, சிவபிரானுக்கு அன்புடையீர்! கம்பைநதி, கும்பநதி, காவிரி, கோதாவிரி, கிருட்டிணை, வேகவதி, வேத்திரவதி, சரயு, கங்கை, தாமிரபர்ணி, பொன்முகலி யமுனை, நருமதை, சோணை முதலிய புண்ணிய தீர்த்தங்கள் பூவுலகில் அளவில்லாதனவுள. அவைகளில் மூழ்கினும் பாவத்தைப்

போக்கும். அன்றியும், காசி, திருவாரூர், சிதம்பரம், விட்டுணு பூசித்த விருத்தாசலம், திருக்கேதாரம், மல்லிகார்ச்சுனம், திருக்காளத்தி, காஞ்சிநகர், சிவசருமா என்னும் ஆதிசைவப் பிராமணர்க்குத் திருவருள்புரிந்த விரிஞ்சிபுரம், சீகாழி, திருவையாறு, கும்பகோணம், திருவானைக்கா, திருவிடைமருதூர், மதுரை, இராமர் பூசித்த இராமேசுரம் என்னும் இத்தலங்களிலே இறந்தாலும், பிறந்தாலும், தரிசித்தாலும், அபிடேகஞ் செய்தாலும், சிவாலயம், நந்தவனம், மடம் முதலியபணிகளை மெய்யன்புடன் இயற்றினாலும் பரகதி யடைவார்கள் என்றுரைக்க, மார்க்கண்டேயமுனிவர் கூறுவார்.

ஐயனே ! இத்தலங்களினும் தீர்த்தங்களினும் சென்று சென்று அவ்வாறுசெய்தல் தேவர்கள் முதலாயினோர்க்கும் முடியாது அவ்வாறாயின் அற்ப அறிவினையும், சிறு ஆயுளையும் உடைய விலங்கு பறவை முதலியவற்றிற்கு முடியுமோ? அன்றியும் மனிதர்களினும் கைகால் முதலிய அங்கவீனர்களுக்கும், பொருளிலாதவர், கோபாளர் முதலாயினோர்க்கும் இயலுமோ ? யாவர்க்கும் எளிதிற்கிட்டும் இலகுவில் பரகதியளிக்கும் தலமொன்றை அருளிச்செய்யவேண்டுமென்று பணிந்திரக்க, திருநந்திதேவர் திருவாய்மலர்ந்தருளுவார் ஆயினர்.

மார்க்கண்டேயரே ? அவ்வணம் கொடுக்கும் ஒருதலம் உளது அதன்பெருமை சொல்லவல்லவர் யாவர். ஆயினும் ஒருவாறு கூறுகின்றேம் என்று பரவசமுற்று, சிவபெருமானை உள்நினைந்து துதித்து, நடு நாட்டிலிருக்குந் திருவண்ணாமலையே அதுவாகும். அந்தத் தலத்திற்கு வாயு நகரம், கௌரிநகரம், தேசுநகரம், அருணாசலம், சோணகிரி, சிவலோகபுரி, முத்திபுரி, ஞானநகரம், தலேச்சுரம், சுத்தநகர், தக்கிணகயிலாயம் முதலாக அநேகபெயர்கள் உள்ளன. அதுவொன்றே மெய்யன்புடன் றன்னை நினைத்தவர்க்குச் சிவசாயுச்சிய முத்தியையளிக்கும், இது சத்தியம், சத்தியம் முக்காலுஞ் சத்தியமேயாம். பிரமன் முன்னர் தூலத்துப்

பூவுலகிலுள்ள தலங்களெல்லாவற்றையும் ஒருதட்டிலும் இவ்வரு ணசலத்தை ஒருதட்டிலும் நிறுத்திப் பார்க்கும்போது அருணசலத் தட்டே மிக்க கனமுடைத்தாகக் காணப்பட்டதென்று வேத வேதாந் தங்கள் முழங்குகின்றன. அருணசலம் என்னும் அத்தலமோ எக் காலத்தும் அழியாது விளங்குவது. எழு மேகங்களாலும் வேதனை யடையாதது. பிணி, நோய், பசி, இடையூறு முதலிய தீமைகள் அணுகப்பெறாதது இதுகாறும விட்டுணுவின் உந்தியினின்றும் பிறந்திறந்த தொண்ணூற்றுறு பிரமாகளாற் பூசிக்கப்பட்டது. உல கம் எந்தககாலத்து உணடாயிறறோ அந்தக் காலததுத்தானே இத் தலமும உணடாயிறறு. வேதவேதாநதங்களும் அதன்பெருமையை யெடுததுக கூறுகிறகும். இவ்வருணசலப்பதியில் எககாலத்தும் அழிதலிலலாத ஒருமலை இருககினறது.

அதன்பெயா திருவண்ணாமலை. அருணசலம் என்பர். அது அத்தலததின தெறகுத திசையிலே விளங்கிப பிரமாணட கோள கையை யூடுருவிநிறகும. மறறைத் தலங்களிற பலவகையிலிங்கங கள் ஆங்காங்குப் பிரகாசிககும் இததிருநகரிலோ பராபரலிங்கமா கிய பரசிவப்பிரபுவே இலஙகவடிவுள்ள மலையாகப் பிரகாசித்து விளங்குகின்றார் திருவண்ணாமலை முதலாவதுயுகமாகிய கிருதயுகத் தில் அக்கினிமலையாவும், இரணடாவது யுகமாகிய திரேதயுகத்தில் மாணிககமலையாகவும், மூன்றாவது யுகமாகிய துவாபரயுகத்திற பொன் மலையாகவும், நாலாவதுயுகம் கலியுகத்திற் கன்மலையாக இலங்காநிற்கும். எழு மேகங்களும் பற்பலகோடியூழி எண்ணில் லாதகாலம் பனைபோன்ற துளிகளைக்கொணடு ஓயாமற் பெய்தாலும் மலையின்மேல் விழுந்தசலம் சிறிதாயினும் கீழிறங்காது. இது வொன்றே அண்ணாமலை அக்கினிமலை யென்பதற்கு அத்தாட்சியா கும். விட்டுணுக்கள் பலர் பூசித்தார்கள். ஒரு காலத்து ஒருவிட் டுணு தன்மகனாகிய பிரமனுடன் சணடையிட்டுப் பன்றியாகத்தேட, பிரமன் அன்னமாகத்தேடி. ஆயிரந் தேவவருடம் ஆராய்ந்தும் அடி

முடிதெரியாமல் அலைந்துவருந்திப் பணிந்து அருள்பெற்ற தலம். கார்த்திகைமாதத்தில் அம்மலையின்மீது தீபமேற்றுதல் பூமிதேவியின் கிரிடத்திற்பதித்த மாணிக்கரத்தினத்தைப்போற் றோன்றும்.

அருணாசலத்திற்குக் கீழ்த்திசையிலுள்ள அர்க்கமலையில் இந்திரனும், தென்பாகத்திலுள்ள தெய்வமலையில் இயமனும், மேற்பக்கத்துள்ள தண்டமலையில் வருணதேவனும், வடதிசைக்கணுள்ள சூலமலையில் குபேரனும், மற்றையதென்கிழக்கு, தென்மேற்கு, வடமேற்கு, வடகிழக்கு என்னுந்திசைகளிலுள்ள மலைகளினிடத்து அக்கினி, நிருதி, வாயு, ஈசானன் என்னுந் திக்குப் பாலகர்களும் இருந்து நாடோறும் பூசிக்கின்றார். அவைகளின் பின்னருள்ள கிரிகளில் ஏனையதேவர்களும் முனிவர்களும்சித்தர்களும் இனமான சகலகணர்களும் இருந்துவழிபடுவார்கள். பார்வதிதேவியார் அங்குத்தவம்புரிந்து இடப்பாகம் பெற்றனர். விட்டுணு பிரமாகள் தங்கள் அலங்காரமொழிந்து சிவபெருமானே பரமபதியென் றுய்ந்தனர். வச்சிராங்கத பாண்டியன் வலம்வந்து தன் பாவங்களையெல்லாம் போக்கினான். கலாதரன் காந்திசாலி என்னுமிருவரும் வலம்புரிந்து முத்தியடைந்தார். இவ்வாறு எண்ணிலார் முத்தியடைந்தார். அவ்வருணாசலத்திற்குப் பெண்ணைநதியும் செய்யாறும், கமலைநதியும் முறையே இடை, பிங்கலை சுழுமுனையென்னு நாடிகளாகும். அந்நதி ஸ்நானம் ஒன்றுக்கு ஆயிரமடங்குபலம் உண்டாம். திருவாரூர்ப் பிறத்தலும், காசியில் இறத்தலும், சிதம்பரத்திற்றரிசித்தலும் கஷ்டமாகலால், இவ்வருணாமலையை நினைத்தவுடன் சிவசாயுச்சியமுத்தி கிடைக்கும். இது திண்ணம் திண்ணம். உலகத்திலுள்ள தலங்கள் யாவும் உடலாகவும், அருணாசலம் முகமாகவும், சோணகிரிப்பெருமான் கண்ணாகவும் வேதாகமங்கள் உரைத்தன. இதற்கு ஒப்பான தலம் வேறுண்டென்று சொல்வோர் மீளா நரகத்தையடைவர். இதன்பெயரை நினைத்தாலே முத்தியெனின் சொல்வோர்க்கும் தரிசிப்போர்க்கும், அங்குத்திருப்பணி, வழிபாடுசெய்வோர்க்கும் வரும் பலம் யாவரேசொல்ல வல்லவர் என்றார் நந்தியம் பெருமானார். மார்க்கண்டேயர் முதலாயினோர் யாவரும் தம்மை மறந்து பரவசமாய் ஆனந்த முற்றனர்.



ஒரு கற்பகத்தில் பிரம விட்டுணுக்கள் தாம் தாம் பிரமம் எனவாதிட்டுப் போரிடுந்திறத்தைத் தீர்த்தாளச சிவபெருமான் அவர்கள் நடுவி லக்கினிமலையாய் நின்று அவ்விருவருடைய வெண்ணங்களை மாற்றியருளியது—7.





உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

முதலாவது,

# திருநகரச் சருக்கம்.



அறுசீர்க்கழிநெடில் ஆசிரியவிருத்தம்.

ஓங்கமழு வுழைபிரம்பு சுரிகையக
லாதகையான் றகிர்க்குன் றாடே
திங்களுமிழ் நிலவனைய வெண்பொடியான்
சடைமுடியான் செறிமுக் கண்ணான்
பொங்குதிரு வரையகலாப் புலித்தோலான்
புயநாலான் புரிமுந் நூலான்
கங்கைமதி தவழ்சடையான் றிருவாணை
செலுத்தி வெள்ளிக் கயிலைகாப்பான்.

இ-ள், உயர்வாகிய மழுவும்; மானும், பிரம்பும், உடைவாளும், நீங்காத கையையுடையவர்; பவளமலையில் சந்திரன் பொழிகின்ற

நிலவுபோலத் தேகத்தில் அணிந்த விபூதியை யுடையவர்; சடைமுடியை யுடையவர்; நெருங்கிய மூன்று கண்களையுடையவர்; விளங்குகின்ற இடுப்பில் நின்று நீங்காத புலித்தோலை யுடையவர், நான்கு புயங்களையுடையவர்; மூன்றுபுரியாகிய பூணுநூலையுடையவர். கங்கையும், சந்திரனும் தவழ்கின்ற சடையையுடைய பரமசிவனது கட்டளையைச் செலுத்திக்கொண்டு வெள்ளி மயமாகிய கைலாசகிரியைக் காக்கின்றவர். எ-று. (௧)

கொய்வனச மலர்நிறத்தான் மைவளருந்
திருமிடற்றான் குலவெள்ளேற்றான்
சைவமெனும் பயிர்தழைக்கக் கருணைமழை
பொழிமேகந் தன்னைப் பொய்ப்பர்
ஐவரையு மகத்தடக்குஞ் சிலாதரற்குப்
புறத்தாவு மாவி போல்வான்
றெய்வமெல்லாந் தொழச்சிவந்த மலர்ப்பதத்தா
னந்தியெனுந் திருநாமத்தான்

இ-ள். கொய்யப்பட்ட தாமரை மலரொத்த நிறத்தையும், விஷம் பொருந்திய கண்டத்தையும், நல்ல வெண்மையாகிய இடபவாகனத்தையுமுடைய பரமசிவன் சம்பந்தமாகிய சைவ சமயமென்னும் பயிர் தழைப்பக் கருணையாகிய மழையைப் பொழிகின்ற மேகம் போன்றவர்; பஞ்சேந்திரியங்களையும் அகத்தில் நின்றும் புறத்தில் தீமையாகிய பொருள்களிற் போகவொட்டாமல் அடக்கிய சிலாதரிஷிக்குப் புறத்தில் சஞ்சரிக்கின்ற உயிர்போன்றவர்; விஷ்ணுமுதலாகிய தேவர்களெல்லாம் வணங்க அதனால் சிவப்பேறிய தாமரை மலரையொத்த பாதங்களை யுடையவர்; இப்படிப்பட்ட தன்மையையுடைய நந்திகேசுர ரென்கிற அழகிய திருநாமத்தைப் பெற்றவர். எ-று. (௨)

ஈசனணி நதிமதியுந் திருவுருவந்
திருவுருவி லிசைந்த நீறும்
தேசுவென விளங்குமொரு கயிலாயச்
சிலம்புளதச் சிலம்பின் மீதே
வாசவனே முதலிமையோர் நெருங்குதலான்
மகுடமொடு மகுடந் தாக்கி
யோசையுடன் கனகமணிப் பொடியுதிர்ந்து
கனகமலைக் குவமையாகும்.

இ-ள். பரமசிவன் தரிக்கின்றகங்கையுஞ் சந்திரனும் அவரது வெண்மையாகிய திருவுருவமும் அவ்வுருவத்திலணிந்த திருநீறுமாகிய இந்நான்கினுடைய காந்திபோலப் பிரகாசிக்குங் கயிலாயமென்னும் ஒப்பற்ற திருமலையுண்டு அத்திருமலைமேல் வணங்குகிறதற்காகத் தேவேந்திரன் முதலாகிய தேவர்கள் நெருங்குகிறபடியால் கிரீடத்தோடு கிரீடம் இடிபட்டுச் சத்தத்துடனே பொற்பொடிகளும் இரத்தினப்பொடிகளும் உதிர்ந்து மகம்மேருகிரிக்குச் சமானமாகக்குவியும். எ-று. (ரு)

இந்திரநீ லச்சிலையா * லிசைத்தகடந்
தெரியாம லெழுதிச் சேர்த்து
மந்தரமா மெனவயிரத் தூணிறுத்தி
மாணிக்க மதலை கூட்டிச்
செந்துகிராற் † போதிகையு மரகதத்தா
லுத்திரமுஞ் செறித்து மீதே
சந்திரகாந் தத்தகடு பரப்பியமண்
டபமுளதச் சயில மீதே.

* கடம் – அருநெறி. † போதிகை – நிகுறந்த.

இ-ள். இந்திரநீலக் கல்லினாலே ஒன்றோடொன்று சேர்த்த சந்துதெரியாமற் சித்திரமெழுதிச் சுவர்வைத்து மந்தரகிரிபோல் வயிரத்தூண்களை நிறுத்தி மாணிக்கத்தினாற்செய்த கொடுங்கை சேர்த்துச் சிவப்பாகிய பவளத்தினாற் போதிகையும் மரகதத்தினால் உத்திரமுஞ்சேர்த்து அதன்மேல் சந்திரகாந்தத் தகடு பரப்பிய மண்டபம் ஒன்று அந்த மலையின்மேலுளது. எ-று. (௪)

இருமருங்குந் தாளமணி யிழைத்தவரி
யாசனத்தி லிருந்து நீலப்
பருமணியா லிழைத்தவொரு பாதபீடிகை
யின்மலர்ப் பதத்தை யூன்றி
மருவுபெருங் கயிலையின்மீ திருந்துமுய
லகன்முதுகில் வலத்தா ளூன்றி
யருமறைய முனிவருக் குரைக்குமிறை
யெனவிருந்தா னந்தவேளை.

இ-ள். நந்திகேசுரர் அந்த மண்டபத்தில் இரண்டு பக்கமும் முத்துகளிழைத்த சிங்காதனத்திலிருந்து பருத்த நீலரத்தினத்தினா லிழைக்கப்பட்டிருக்கிற பாதகுறட்டின்மேலே மலர்போன்ற பாதங்களை வைத்துக்கொண்டு சிவகணங்களால் மருவப்பட்ட பெருமையாகிய கயிலாயகிரியில் எழுந்தருளியிருந்து முயலகன்மேல் வலப்பாதத்தை வைத்து அரிதாகிய சித்தாந்தப்பொருளை * முனிவர்களுக்குத் திருவாய்மலர்ந்தருளிய பரமசிவம்போல் இருந்தார் அந்தவேளையில். எ-று. (௫)

* முனிவர்—சனகர், சநந்தனர், சனாதனர், சனற்குமாரர் என்பார்.

குற்சனு ரோமசன் குமுதன் குமுதாக்கன்
சகடாயன் கும்ப சாதன்
வற்சர்வைசம் பாயனர்கணுசி முனி
புலிக்காலன் வாம தேவன்
நற்சனகன் சனற்குமரன் வாதரா
யணன் மதங்க னடனத்தானை
யர்ச்சனைசெய் பனந்தமுனி முதலனந்த
முனிவரர்தம மருங்கிற் சூழ.

இ-ள். குற்சர், உரோமசர், குமுதர், குமுதாட்சர், சகடாயர், அகத்தியர், வற்சர், வைசம்பாயனர், கணுசிமுனி, வியாக்கிரபாதர், வாமதேவர், சனகர், சனற்குமாரர், வியாசர், மதங்கர், சுவாமியினுடைய நடனம்பொருந்திய திருவடிகளில் அருச்சனை செய்கின்ற பதஞ்சலி முதலாகிய அனந்த முனிவர்கள் தம்முடைய பக்கத்திற்சூழ எ-று.

மன்னியமார்க் கண்டமுனி யுடனெழுந்து
பணிந்துயிர்கண் மழைமின் போல
வின்னிலத்திற் பிறப்பதுவு மிறப்பதுவு
மிருவினையு மெமக்குத் தோன்றச்
சொன்னவொரு தனிமுதலே முத்திபெறும்
பரிசெமக்குச் சொல்வா யென்று
ன்னவுரை செவிப்புகலு நந்தியருள்
சுரந்துமுனிக் குருள்வ தானான்.

இ-ள். நிலைபெற்ற வயதினையுடைய மார்க்கண்டேய முனிவர் சீக்கிரத்தில் எழுந்திருந்து நந்திதேவரை வந்தனஞ்செய்து சுவாமி

மேகத்தில் தோன்றி அதிசீக்கிரத்தில் அழியுமின்னல்போல் உயிர்கள் இவ்வுலகத்தில் பிறப்பதும் இறப்பதும் இவைகளுக்குக் காரணமாகிய நல்வினை தீவினைகளாகிய இரண்டும் எங்களுக்கு விளங்கும்படியாக அருளிச்செய்த ஒப்பற்ற கடவுளே! நாங்கள் மோக்ஷத்தை யடைவதற்குத் தக்கவழியை கிருபைசெய்ய வேண்டுமென்று கேட்க; அந்தவார்த்தையைக் கேட்டவுடனே மிகுந்த கிருபையுடையவராகி நந்திதேவர் மார்க்கண்டேயருக்கு அருளிச்செய்யத் தொடங்கினார். எ-று. (எ)

கம்பைநதி கும்பநதி காவிரி கோ
தாவரியே கண்ணை வேணி
பம்பைநதி வேகவதி வேதவதி
சரயுநதி பரமாங் கங்கை
செம்புநதி பொன்முகரி யமுனைநதி
நருமதைமேற் செப்புஞ் சோணை
பம்புவியில் மிகவுளவவ் வாடினார்தம்
வினையகற்று மதுவல் லாமல்

இ-ள். கம்பைநதி, கும்பைநதி, காவிரி, கோதாவிரி கிருஷ்ணவேணி, பம்பைநதி, வேகவதி, வேதவதி, சரயுநதி, எல்லாநதிகளுக்கு மேலாகிய கங்காநதி, தாமிரபருணி, பொன்முகரி, யமுநாநதி, நருமதாநதி, மேன்மையாகச் சொல்லப்பட்ட சோணை நதியென்று அழகான பூவுலகத்தில் அநேக நதிகளுண்டு. அவைகள் தம்மிடத்தில் ஸ்நானஞ்செய்தவர்களுடைய பாவத்தை நீக்கும் அதுவல்லாமல். எ-று. (அ)

காசியெனு மொருதலமிக் கயிலையினுஞ்
சிறப்புளதுங் கங்கை தீர்த்தம்

வீசுதிரைக் கொழுந்தோட்டிப் பரகதிக்கு
வேரோட்டுமே வியந்து மூழ்கின்
மாசினுடல் தீவிறந்தான் மரமேனும
விலங்கேனு மனிதரேனு
மீசனருளுபதேசஞ் செவிப்புகலா
லிறைவனென விருக்கலாமே.

இ-ள் காசியென்கிற ஒருதிவ்வியதலம் இந்தக்கைலாயத்தைப் பார்க்கிலுஞ் சிறப்புள்ளது. அந்தக்காசியில் வருகின்ற கங்காப்பிரவாகம் எறிகின்ற அலைகளைக் கொழுந்தாக ஓடச்செய்து தன்னிடத்தில் விரும்பி (திரிகரணசுத்தியுடன்) முழுகினால் அவர்களுக்கு மோட்சத்துக்கு வழிகாட்டும் களங்கமுள்ள தேகம் அவ்வூரில் விட்டால் மரமாவது மிருகமாவது மனிதராவது பரமசிவனுடைய தாரகப் பிரமோபதேசம் செவியிற் சேர்தலாலே சிவசாரூபியத்தை யடைந்திருக்கலாம் என்று. (௯)

போகியொரு புறமிடங்கொண் டிருப்பதுகண்
டிடுதலல்லாற் புனிதர் போற்றும்
யோகியொரு புற்றிடங்கொண் டிருந்ததலங்
கண்டதுண்டோ வுரைப்பக் கேளு
நாகமிசை நடித்தவருக் குயிர்வேண்டித்
திருந்தவஞ்செய் நளினக் கோயில்
சேருமனத் தவரான மருவாரூர்
தனைப்பரித்தார் திருவாரூரே.

இ-ள். சர்ப்பம் புற்றை யிடமாகக் கொண்டிருந்ததைப் பார்த்ததேயல்லாமல் ஞானிகள் போற்றுகின்றயோகி புற்றினிடத்திலேயிருந்த தலத்தைப் பார்த்ததுண்டோ? அது யாதெனில் சொல்லக்

கேளுங்கள், காளிங்கனென்னும் பாம்பின்மேலேறி நடனஞ்செய்த விஷ்ணுவுக்கு உயிர்ப்பிச்சை வேண்டி இலட்சுமி பூசை செய்துக் கொண்டிருந்த கமலாலயமென்னும் தலமாகி வஞ்சம் பொருந்திய மனமுடைய திரிபுராதிகளையெரித்த சிவபிரான் வாசஞ்செய்கின்ற ஊராகிய திருவாரூர் என்னுந் திவ்யஸ்தலந்தான். எ-று. (௧௦)

தக்கவிராட் புருடன்மனத் தலமெனுமோர்
 தலமுளதத் தலத்தின் பீதே
முக்கணனா் நடிப்பரவர் மூர்த்தியிலா
 யிரத்திலொரு மூர்த்தி தானே
யிக்கயிலை யிடத்துறைவ தென்னிலதின்
 பெருமைநம்மா லிசைக்க லாமோ
வக்கனக சபைகண்டா ரரியயன்
 காணுத முத்தி யடைகுவாரே.

இ-ள். பெருமை பொருந்திய விராட்புருடனுடைய * இதய தலமாகிய சிதம்பரமென்று ஒருதலமுண்டு அதிலுளதாகிய கனகசபையில் மூன்று கண்களையுடைய பரமசிவன் ஆனந்தத் தாண்டவஞ்செய்வார்! அவருடைய மூர்த்திகரத்தில் ஆயிரத்திலொன்று தான் இக்கைலாச பதத்தி லிருக்குமென்றால் அத்தலத்தின் பெருமையை நம்மாற் சொல்லக்கூடுமோ! அப்படிப்பட்ட அழகுபொருந்திய கனகசபையை (உள்ளன்புடன்) கண்டு தரிசித்தவர்கள் விஷ்ணுவினாலும் பிரமாவினாலும் காணப்படாத முத்தியை யடைவார்கள். எ-று. (௧௧)

---

* ஸ்ரீபர்வதஞ் சிரஸ்தானே கேதாரந் துல்லாடலோ' எனவரூஉம் உபநிடத சுலோகத்தால் சிதம்பரம் இதயதல மாதல் காண்க.

தாங்காழி யவன்சிவனை வழிபடுமு
 துவரையந்தத் தலத்தைப் பார்க்கி
லோங்கார வடிவதிலே யுயிரிழந்தா
 லுடலழியா தொளி கெடாது
வீங்காது நெகிழாது பிறவுயிரால்
 வருந்தாது வெடித் திடாது
தீங்கான மணங்கிருமி பிறவாது
 கிடைக்கும்வலச் செவி மேலாக.

இ-ள். சக்கரத்தைக் கையில் தரிக்கின்ற விஷ்ணுமூர்த்தி பரம சிவனைப் பூசைபண்ணிய விருத்தாசலமென்று ஒருதல முண்டு; அந்த தலத்தைப் பார்க்குமிடத்தில் அது பிரணவ சொரூபமாயிருக்கும், அந்தத் தலத்தில் உயிர்விட்டால் தேகமழியாது, நிறங்குன்றாது. வீக்கமாட்டாது. கட்டு நழுவாது, மற்றப்பட்சி மிருகங்களால் பின்னமாகாது, வெடிபடாது. அதில் துர்க்கந்தமும் புழுவும் உண்டாகாமல் வலதுகாது மேலாகக் கிடைக்கும். எ-று. (கஉ)

பொய்ம்மகிட முகனைவென்ற வம்மையிட
 மகலாத புனித மூர்த்தி
செம்மையிட மென்றிருந்த கருமகிட
 முகமாக்ச் சேறிகே தாரம்
இம்மையிடர் மறுமையிடர் ஞானமில்லாச்
 சிறுமையிட ரெல்லாந் தீர்க்கும்
மும்மையிடம் பெறுமுலகுக் கெனிதாகத்
 தனியிருந்த மூத்தி போலும்.

இ-ள். பொய்ம்மையாகிய எருமை முகத்தினையுடைய மகிடா சுரனைசெயித்த பார்வதி வாமபாகத்தில் நீங்காத பரிசுத்தராகிய பரமசிவன் செம்மையாகிய இடம் இதுதானென்று எழுந்தருளியி ருக்கிற கறுப்பாகிய எருமையினது முகம்போல் விளங்கிய திருக் கேதார மென்னும் தலம்; இந்த சென்மத்தில் வருகிற துக்கமும் மறுமையில் வருகிறதுக்கமும் ஞானமில்லாததனாலே உண்டாகின்ற துக்கமுமாகிய எல்லாத்துயரத்தையும் தீர்ப்பதற்கு மூன்றுலகத்தா ருக்கும் எளிதாகித் தனியேயிருந்த முததித்தானம்போல் இருக்கின் றது. எ-று. (கரு)

இருப்பனத்தன் பருப்பதத்திற் பிரமராம்
பிகையுடனென் றிரண்டு போதும்
விருப்பனத்தன் பணிந்திமையோ ருலகுமுத
லனைத்துலகும் விதித்தான் மற்றைத்
திருப்பதிக்கே யிருப்பவனுந் தேவர்களுஞ்
சராசரமாய்ச் செனித்தவ் வூரி
லிருப்பதற்கு முயல்வரென் றெலத்தலமு
மத்தலத்துக் கிணைய தாமோ.

இ-ள். மல்லிகார்ச்சுனமென்னும் பர்வதத்தில் பிரமராம்பிகை யுடனே பரமசிவன் எழுந்தருளி யிருக்கின்றாரென்று அன்னவா கனத்தையுடைய பிரமன் வந்து பத்தியோடு இரண்டுவேளையும் வணங்கி அவருடைய அருள்பெற்றுத் தேவலோகமுதல் எல்லா லோகத்தையும் படைத்தார்; மற்றைத் திருப்பதியிலிருக்கிற வைகுண்டாசவபதியும் தேவர்களும், அந்தத் தலத்தில் சரமாகவும், அசரமா

கவும் பிறந்திருப்பதற்குத் தவஞ்செய்வார்களென்றால் எப்படிப்பட்ட தலங்களும் அந்த க்ஷேத்திரத்திற்குச் சமானமாகுமோ. எ-று. (கச)

விருப்படியார் சொரிந்தவறு கலருடனே
　விழிபிடந்த வேடர் காலிற்
செருப்படியு முகந்தபிரான் காளத்தி
　நகரமெனுந் தெய்வ பூமி
பருப்பதமா கியும்விளங்குந் தண்ணறுக்
　கொரிக்கு மலர்ப் பதுமையோடு
மருப்படியுந் துழாய்மார்பன் வடமலைமே
　லிருந்துகண்டு வணங்க மாதோ.

இ-ள். திருக்காளத்தி யென்னுந் தெய்வீகம்பொருந்திய தலத்தில் ஆதிசைவப் பிராமணராகிய சிவகோசரியார் பக்தியோடு மிகுதியாக அருச்சனைசெய்த அறுகுபுட்பங்கள் இவையுடனே கண்ணைப் பிடுங்கிப் பதித்த கண்ணப்பதேவரது காற்செருப்பையும் விருப்பமாக ஏற்றுக்கொண்ட இலிங்கசொரூபமாகிய சிவபெருமான் தனே குளிர்ச்சிபொருந்திய தேனைசசொரிகின்ற தாமரைமலரி லிருக்கின்ற இலக்குமியோடு வாசனையுள்ள துளபமாலையையணிந்த மார்பினையுடைய விட்டுணுமூர்த்தி திருவேங்கடமென்னுந் திருப்பதியில் நின்றுகொண்டு தரிசனஞ்செய்து வணங்கும்பொருட்டு அந்தக் காளத்தியில் மலையாகியும் விளங்குகின்றார். எ-று. (கரு)

தேக்குநா லிருதிசையும் புகழ்ந்தொண்டை
　நாடேனுமோர் தெய்வ நாட்டி
னோக்கினோர் வினையகற்று மொருதலமுண்
　டக்கணிப்பச்சை நவலக் கேகளும்

வாக்குநா யகிகணவன் படைத்தபுவி
தழைக்கவறம் வளர்த்தெந்நாளுங்
காக்குநா யகியுடனே கம்பநா
யகருறையுங் கச்சி மூதூர்.

இ-ள். அகன்ற எட்டுத்திக்கிலுள்ளவர்களும் புகழ்ந்துகொண்டிருக்கின்ற * தொண்டை மண்டலமென்னுந் தெய்வீகம் பொருந்தியநாட்டில் தரிசனஞ் செய்தவர்களுடைய பாவத்தைப் போக்குகின்ற ஒருதலமுண்டு; அதன்பெயரைச் சொல்லக் கேளுங்கள் சரஸ்வதியின் கணவனாகிய நான்முகன்படைத்த உலகத்திலுள்ள உயிர்கள் பிழைக்கும்படி முப்பத்திரண்டு தருமத்தையும் பரிபாலனஞ் செய்து எக்காலும் காக்கின்ற காமாட்சியம்மையுடனே ஏகாம்பரேசுரர் எழுந்தருளியிருக்கின்ற ஸ்ரீகாஞ்சிபுரமாகும். எ-று. (கக)

பழுதறவே யெழுகடலு மெழுகிரியு
மெழுதலமும் படைத்த வேதக்
கிழவனறி யாமுடியை யொருபால
னறிந்தபதி கிளத்தக் கேளு
மழகுதரு நடம்புரியு மிறைவருக்கம்
பிகைபூசை யயனார் பூசை
விழைவுதரு மரிபூசை கரன்பூசை
புரிந்ததிரு விரிஞ்சை மூதூர்.

* தொண்டைமான் என்னும் அரசனாலாளப்பட்ட மண்டலமாதலின் தொண்டைமண்டலம் என்னும் பெயர்த்து. இவ்வுண்மையறியார் தொண்டைமண்டலம் எனக்கொண்டு இடர்ப்படுவர்.

இ-ள். யாதொரு பழுதுமில்லாமல் எழுசமுத்திரத்தையும் எழுமலையையும் எழுலகத்தையும்படைத்த பிரமனால் அறியக்கூடாத * சிரத்தை ஓர் ஆதிசைவப் பிராமணப்பிள்ளை அறிந்த தலத்தைச் சொல்லக்கேளுங்கள் : ஆநந்தத்தாண்டவஞ்செய்த சுவாமிக்குப் பார்வதியாரும் பிரமனும் சிவநேசமிகுந்த விஷ்ணுவும் கரனும்பூசித்த விரிஞ்சிபுரமென்னும் தலமாம் எ-று. (கஎ)

---

* சுவாமி சிரத்தைப் பாலன் அறிந்ததாவது — 'பயனாரும்பதி பசுபாசம்புகல் பலநூலுந்தெளிவோ, னியலாகும்பெயர் சிவநாதன் றின மிவனோடின்புறுமா, னயனாரந்தினி வடமீனுந்தொழு நலமார்பணபுடையா, டயவாமகவ டருபாலன்சிவ சருமாவென்பவனே."—

இ-ள். பயனுள்ள பதி பசு பாசங்களைச் சொல்லுகின்ற ஆகமமுதலிய பலசாத்திரங்களையு முணர்ந்தவன், சிவநாதன் என்னுமியற்பெயரையுடையவன், நாடோறமிவனுட னின்பமுறறிருக்கு மனைவி நயனாரந்தினி அருந்ததியுந் தொழத்தக்க கற்புடையவள். அன்புள்ள அவள்பெற்றபுத்திரன் சிவசருமா எனப் பெயருள்ளவன். (அப்போர்கொடுத்த சிறுபாலன் அபிஷேக முதலியவை செய்கிறதற்கு மார்க்கசகாயர் சந்நிதிக்குட்சென்று பார்க்குமளவில். அந்தோ! பூசாகாலந்தவறுகின்றதே!)—"இருகரத்தினுலிவர் முடிதொட வரிதென்றே, கருதியெய்த்துநொந் தினியென்கொல் செயலெனக் கவன்றான், பரகதிக்குவந்தருள்புரி பதவிசகாயன, மரகதக்கொடியிடத்திஞன் றிருமுடிவளைத்தான்."—(இ-ள்.) நம்முடைய இரண்டு கைகளால் இம்மார்க்க சகாயருடைய திருமுடியைத் தொடுவது நமக்கு அரிதென்றுகருதி மனமிளைத்துவருந்தி இனியாது செய்வதென்று துயரமடைந்தான்; அப்போது பரகதிக்குவந்தருள்செய்த மரகதவல்லியம்மையை யிடப்பாகத்திலுடைய மார்க்கசகாயராகிய பரமசிவம் தன்றிருமுடியை வளைத்தார்:—(இவ்வரலாற்றை திருவிரிஞ்சைப்புராணம் பாலனுக்குத்திருமுடிவளைத்த சருக்கத்திற் பரக்கக்காண்க.)

பொய்பாது புனல்பெருங் காவேரி
நதிக்கரையிற் பூந்தராயு
மையாறுமிடைமருதுந் திருக்குடந்தை
வளநகரு மானைக் காவு
மையாரு மிடற்றதிரி சிரமலையு
மாணிக்க மலையுந் தோன்று
மெய்யாக வவற்றினது பெருமையெல்லாம்
விரித்துரைக்கு மவேதந்தானே.

இ-ள். பொய்க்காமல் பெருகிவருகின்ற காவேரி நதியினிருகரையிலும் சீகாழி, திருவையாறு, திருவிடைமருதூர், வளம்பொருந்திய கும்பகோணம், திருவானைக்கா, விஷம்பொருந்திய கண்டத்தையுடைய மாதுரு பூதேசரர் எழுந்தருளியிருக்கின்ற திரிசிரபுரம், இரத்தினகிரி இவைமுதலான தலங்களில் விளங்கிக்கொண்டிருக்கும் அந்தத் திவ்விய க்ஷேத்திரங்களுடைய பெருமையெல்லாம் வேதமானதுதான் மெய்ம்மையாக விரித்துச்சொல்லும். எ-று. (கஅ)

பருவளையார் புரிக்கும் வைகை நதிக்கரையின்
மதுரை யறுபத்துநாலு
திருவிளையாட் டிறைவனியற் றியதலமா
மதன்பெருமை செப்பலாமோ
கருவிளையாட் டகற்றுமிரா மேச்சுரந்தென்
கடற்கரையிற் காணு மங்கே
செருவிளையாட் டிராகவனு மிராவணனைத்
தொலைத்தபழி தீர்த்திட்டாரே.

இ-ள். பெரியசங்குகள் முழங்குகின்ற வைகையாற்றின் கரையின் சோமசுந்தரக்கடவுள் அறுபத்துநாலு திருவிளையாடல் செய்த

பூவாகவும் தாராகவும் சங்கநிதி பதுமநிதி என்னும் இருநிதிகளும் பூசித்தமையால் சீகாழி பூந்தராய் எனப் பெயர்பெற்றது.

ருளிய மதுரை என்னும் ஒரு தலமுண்டு; அந்தத்தலத்தின் பெருமை யாவராலுஞ் சொல்லப்படாது. தென் சமுத்திரத்தின் கரையில் சனன துக்கத்தைப் போக்குகின்ற இராமேசுரமென்று ஒரு தலமுண்டு, யுத்தத்தை விளையாட்டாகச் செய்கின்ற இராமபிரான் இராவணனைக் கொன்றதனால் வந்த பிரமகத்தியை அந்தத் தலத்தில் சிவனைப்பூசித்துத் தீர்த்துக்கொண்டார். எ-று　(கக)

அத்தகைய தலங்கடமிற் பிறக்கவட
　　விறக்கவிழி யமையக் காணச்
சுத்தவெளி தனிலாடுஞ் சுடரொளிக்கு
　　மனங்களிக்கத் தூய்நீ ராட்ட
வித்தமதை யெடுத்திரைத்துச் சிவாலயமும்
　　விரிபொழிலு மிகவுண் டாக்க
வுத்தமமா கியபரம கதியுளதென்
　　றுரைக்குமுனி யுரைப்பதானான்.

இ-ள். அப்படிப்பட்ட தன்மையையுடைய தலங்களிலே யாவரானாலும், பிறந்தாலும், இறந்தாலும், போய்த்தரிசித்தாலும், பரிசுத்தமாகிய சிதாகாசத்தில் நிருத்தஞ்செய்யும் மிகுந்த பிரகாசமே சொரூபமாகிய பரமசிவனுக்குத் திருவுளங் களிக்கும்படி தூய்மையாகிய நீரினால் அபிஷேகஞ்செய்தாலும் திரவியங்களைச் செலவுசெய்து சிவாலயங் கட்டுவித்தாலும், விரிந்த பூஞ்சோலை மிகவைத்தாலும், உத்தமமான பரகதியுண்டாமென்று நந்திதேவர் அருளிச்செய்யக்கேட்டு மார்க்கண்டேயர் சொல்லத்தொடங்கினார். எ-று. (உ0)

இங்கிரா நதிதோறுந் தலந்தோறு
　　மிப்படியே யியற்ற வென்றான்
முன்னியசீ ரமரருக்குஞ் சித்தருக்கு
　　முனிவருக்கு முடி வுறுதா

மின்னிகருஞ் சிறுவாழ்க்கை மனிதர் தமக்
கெளிதாமோ மேவி னாலு
மன்னியமாம் பிறவுயிர்க்கு மரத்தினுக்குங்
கிடையாதே யமல வென்றான்.

இ-ள். இப்படிப்பட்ட தன்மையையுடைய நதிகள் தோறும் தலங்கள் தோறும்போய்த் தேவரீர் கட்டளையிட்டவிதமாகவே தீர்த்தமாடி வழிபாடு முதலானவைகளைச் செய்யவேண்டுமென்றால் மிகுந்த சிறப்புப்பொருந்திய தேவர்களாலும் சித்தர்களாலும் முனிவர்களாலும் முடியாது. அப்படி மின்னல்போற்றோன்றி க்ஷணத்தி லழியுஞ் சிறியவாணாளையுடைய மனிதர்களுக்கு எளிதில் முடியுமோ! அப்படி முடிந்தாலும் மிருகங்களுக்கும் பட்சிகளுக்கும் விருட்சங்களுக்குங் கிடைக்கமாட்டாதே சுவாமி என்று சொன்னார் மார்க்கண்டேயர். எ-று. (உக)

ஆடுமந்த நதிதோறு மினிதெனுமத்
தலந்தோறு மனந்த காலந்
தேடுகின்ற பயனுதவுஞ் சிவஞானம்
வருந்தாமற் சிறிது போதி
னாடுகின்ற வுறுப்பிலர்க்கு மறிவிலர்க்கும்
புலையருக்கு நரகாள் வார்க்கு
மோடுகின்ற விலங்கினுக்கு மற்றெவைக்குந்
தருமொரொன் றுரைப்பா யென்றான்.

இ-ள். மனிதர்கள் ஆடுகின்ற அந்த நதிகள்தோறும் இனிதாகிய அந்தத்தலங்கடோறும் அநேக காலமாக ஸ்நானஞ்செய்து தரிசன முதலியவைகளைச் செய்ததனால் உண்டாகிய பிரயோசனமாகிய சிவஞானத்தை, வருத்தப்படாமல் கொஞ்சகாலத்தில் தானே பிரதட்சணஞ்செய்தல் கும்பிடுதல்தரிசனஞ்செய்தல்முதலியவற்றிற்கு ஏது

வாகிய கை கால் கண்க ளற்றவர்களுக்கும், விவேக ஞானியர்களுக்கும் நீசர்களுக்கும், நரகத்தில் வீழத் தகுந்த பாவஞ் செய்தவர்களுக்கும், சஞ்சரிக்கிற மிருகஙகளுக்கும் மற்றுமுள்ள எல்லாச் சீவராசிகளுக்கும் கொடுக்கின்ற ஒருதலம் அருளிச்செய்ய வேண்டுமென்று கேட்டார் மார்க்கண்டேயர். எ-று. (உ௨)

இப்படியே நமனைவென்ற பெருந்தவனு
மிருந்தவரு மியம்பி யேத்திக்
கைபபதும மலர்கொடுதன் காற்பதுமந்
தீண்டுதலுங் கருணை யாகி
யபபடியே முத்திதரு மொருதலமுண்
டுரைக்குதுமென் றமைததான் பின்னை
மைபபடியுங் கண்டத்தா னருணகிரி
நினைந்துபரவசதத ஞனன்.

இ-ள். இயமனைசசயித்த பெருமையாகிய தவத்தினை யுடைய மார்க்கண்டேயரும மற்றுமுள்ள முனிவர்களும் இந்தப்பிரகாரமாகச்சொல்லித் தோத்திரஞ்செய்து தாமரை மலர்போன்ற கைகளால் நந்திதேவருடைய தாமரை மலரையொத்த திருவடிகளைப் பரிசித்து வந்தனஞ்செய்யுமளவில் அவர் கிருபையுள்ளவராகி, நீங்கள் சொன்னபடியே மோக்ஷங் கொடுக்கிற தலம் ஒன்றுண்டு. அதைச் சொல்லுகின்றேம் என்று கையமர்த்திப் பின்பு விஷந்தங்கிய கண்டத்தையுடைய பரமசிவம் எழுந்தருளியிருக்கிற அருணசலமென்னுந் தலத்தை நினைந்து பரவசமானார் நந்திதேவர். ()

அங்கமெல்லா மயிர்பொடிப்ப கடுகடுங்கி
விழியிரண்டு மருவி பாயச்
செங்கையிணை மலர்குவிய மொழிதளர
வெடுபபோது தெளிவில் லாமற்

கங்கையணி சடையானே யருணகிரிப்
பெருமானே கனற்கண் ணானே
யெங்களையா ளுடையானே யெனத்துதித்து
விழித்ததற்பின் னிசைப்ப தானான்

இ-ள். தேகமெல்லா மயிர்க்கூச்செறிய நடு நடுங்கிக்கொண்டு இரண்டு கண்களிலும் நின்று அருவிபோல் ஆனந்த பாஷ்பம் வர, மலர்போன்ற இரண்டு கைகளும் ஒன்றாய்க்குவிய வார்த்தை தடுமாற அநேகநாழிகை தம் வயமில்லாமல் கங்கையைத் தரித்திருக்கின்ற சடையை யுடையவரே! அருணகிரியிலே எழுந்தருளியவரே! அக்கினிக் கண்களை யுடையவரே! எங்களை யாட்கொண்டவரே! என்று தோத்திரஞ்செய்து விழித்துக்கொண்டு அதன்பின்பு சொல்லத்தொடங்கினார் நந்திகேசுரர் எ-று. (உச)

சத்தியமா மொழிவன் முத்திதரு மூர்
தனக்குரிய நாமமிக வுண்
டத்தனையு நான்மொழிய வேதத்தனை யல்லன திரா
ரர்பவள மேவுபுகலு மேவன்
சித்தியுதவுங்கிரி தேசுநக ரென்றுபெயர்
தென்னருணை யென்று பெயர்சீர்
வைத்தசிவ லோகநக ரென்றுபெயர் நீடுசதுர்
வாயுநக ரென்று பெயரே.

இ-ள். அப்படி தோத்திரஞ் செய்தபின்பு நந்திதேவர் சொல்லுவார். கேளும் மார்க்கண்டேயரே? சத்தியமாகச் சொல்லுகின்றேன், மோக்ஷத்தைக்கொடுக்கிற தலமொன்றுண்டு. அதற்குரிய நாமங்களோ அநேகம். அத்தனைபெயரையுஞ் சொல்லுகிறதற்கு நான்

எவ்வளவுசக்தியுடையவன், ஆனாலும் அவைகளில் சிலநாம மாத்திரம் சொல்லுகின்றேன. சித்திகளைக் கொடுக்கிற கவுரிநகரமென்றும், தேசுநகரமென்றும். அழகிய அருணசலமென்றும், சிறப்புப் பொருந்திய சிவலோகநகரமென்றும். நாகரிகமிருந்த வாயுநகரமென்றும். நூல்களிற்சொல்லப்பட்ட திருநாமங்களையுடையது. எ-று.

சததபுரி யேழுமுத லெத்தலம யாவுமொரு
 தட்டுமொரு தட்ட தனிலே
யத்தலமு மிட்டெதிர் நிறுக்கவவை கடகதிக
 மானநெறாளி ரநத நகர
முத்திநக ரென்றுபெயர் ஞானநக ரென்றுபெயர்
 முநதியத லேச்சுர மெனுநு
சுத்தநக ரென்றுபெயர் தென்கயிலை யென்றுபெயர்
 சோணகிரி யென்று பெயரே.

இ-ள். பின்னும் நந்திதேவர் சொல்வார்; சத்தபுரிகளென்கிற அயோத்தி, மதுரை, மாயாபுரி, காசி, காஞ்சி, அவந்தி, துவாரகை முதலாகிய எலலாததலஙகளையும ஒருதட்டிலும், அந்த அருணசலத்தை ஒருதட்டிலும்வைதது நிறுக்க அநதத தலஙகளுக்கெல்லாம் அதிக கனத்தையுடைத்தாயிருந்து பிரகாசிக்கின்ற அத்தத்தலத்துக்கு முத்திநகரமென்றும், ஞானநகரமென்றும் முதன்மையாகிய தலேச்சுரமென்றும். சுத்தநகரமென்றும், தக்ஷணகைலாயமென்றும், சோணகிரியென்றும் பெயராம். எ-று. (உக)

வாதமிகு காலவழ லூழியிலே யேழுபுயல்
 வாதைபுரி யாத நகரஞ்
[illegible]முத லானபிணி தீமையிடை யூறுபசி
 [illegible]வுறி தான நகரம்

மாதவர்கண் மாதவர்கள் பூசைபுரி மாநகர
  மாதவர்க ளுபி மலராம்
போதிலுறை வேதியர்தொ ளுாறுபெய
  ரோடறுவர் பூசைபுரி தேவநகரம்.

இ-ள். இறுதிக்காலத்திலுண்டாகிய பிரசண்ட வாயுவினாலும், ஊழித்தீயாகிய வடவாமுகாக்கினியினாலும், சமுத்திர பிரளயத்தினாலும், யுகமுடிவில் பொழிகின்ற எழுமேகங்களினாலும், யாதொரு வேதனையும் அடையாததலம்; சைத்தியமுதலான பிணிகள் தீமையாகிய இடையூறுகள் பசி இவைகள் சேராததலம்; மகத்தாகிய தவசிகள் அனேக விட்டுணுக்கள் பூசைசெய்ததலம்; அப்படிப்பட்டவிட்டுணுக்களுடைய நாபிகளாகிய தாமரைமலர்களில் உண்டாகிய தொண்ணூற்றாறு பிரமர்கள்பூசித்த தெய்வீகம்பொருந்திய தலம் அருணாசலமென்னுந் தலமாம். எ-று. (௧௭)

ஒன்றுளது பூமிதனி லின்றுபுதி தன்றுலகு
  மும்பரு முயர்ந்த வெளியு
மென்றுளதந் நாளுளது வேதமுடி மீதினி
  லிருப்பதக லாம லதிலோர்
குன்றுதவி லாதவொரு வெற்புளது புண்டரிக
  கோளகையு மூடுருவியே
நின்றுளது தென்றிசையி லென்றுமழி யாதுநெடு
  நீருலகு வாழ்வு பெறவே.

இ-ள். இப்படிப்பட்ட தன்மையையுடைய தலம் ஒன்றுண்டு அந்தத்தலம் இன்றைக்குப்புதிதாக வந்ததல்ல; இந்தப் பூவுலகமும், மேலுலகங்களும், ஆகாயவெளியும் என்றுண்டாயினவோ அன்றே உண்டாயிருக்கின்றது. நீங்காமல் வேதத்தின் முடியிலுள்ளது; அர்

தத்தலத்தில்கெடுதலில்லாத ஒருமலையுண்டு; அதனொடிய கடல்சூழ்ந்த பூமியிலுள்ளவர்கள் வாழும்படிக்கு தென்திக்கில் என்றும் நிலைபெற்றுப் பிரமாணடகோளகையை யூடுருவிநிற்கின்றது. எ-று.(உஅ)

கலி விருத்தம்.

ஆரிட மிராக்கத மசுரந தேவதந்
தாருடை மானிடஞ் சம்பு வென்றுநாம்
பேரிடு லிங்கமே பிறங்கு மெங்கணு
மேருடைய பருப்பத லிங்க மாவது.

இ-ள். * ஆரிஷமென்றும ராக்ஷஸமென்றும், ஆசுரமென்றும், தைவதமென்றும, மாலையைத்தரிக்கின்ற மானுடமென்றும், நாமங்கள்பெற்ற இலிங்கங்கள் எந்தத்தலங்களிலும் பிரகாசிக்கும்; இந்தத்தலத்திலோவென்றால் மலையே இலிங்கமாயிருக்கின்றது.

செங்கணன் முதலயுகந் தீஞ்சுடை மாமணி
பொங்கிய துவாபரம பொலிந்த பொன்னிறந்
தங்கிய கலியுகந் தன்னிலே சிலை
யங்கமா மதனபெய ரருண பூதரம்.

இ-ள். முதலயுகமாகிய கிருதயுகத்தில் சிவப்பாகிய அக்கினிமலையாகவும், திரேதாயுகத்தில் மாணிக்கமலையாகவும், துவாபரயுகத்தில் மிகுந்த பிரகாசத்தையுடைய பொன்மலையாகவும், கலியுகத்தில் கன்மலையாகவுந் திருவுருக்கொள்ளும் அந்தமலைக்கு அருணாசலமென்னுந் திருநாமமாம். எ-று.　　(உ௯)

---

* இருடிகளாலே பூசைசெய்யப்பட்டது ஆரிடலிங்கம். ராக்ஷசர்களாலே பூசைசெய்யப்பட்டது இராக்கதலிங்கம், தேவர்களாலே பூசைசெய்யப்பட்டது தைவதலிங்கம், மானுடராலே பூசைசெய்யப்பட்டது மானுடலிங்கம் என்பர்.

கதியா முகக்கணை சொரியுங் காரின
முருவமே முன்றியொவ் வொன்று கோடிய
பருவமா யிரத்துளி பனையிற் பெய்யினு
மருவியா யடங்குமவ் வசல மீதினில்.

இ-ள். எல்லாச்சீவராசிகளும் கருவறும்படி யுகாந்தகாலத்தில் பொழிகின்ற மேகங்கள் எழென்கிற எண்ணிக்கையில்லாமல் ஒவ்வொன்றுகோடியாகி ஆயிரம்வருஷம் ஒவ்வொருதுளிபனையின்கனி போலப் பருமனாகப்பெய்தாலும் அந்தமலையின்மேல்சிறிய அருவியாகச்சுவறி அடங்கிப்போமல்லாமல் புறத்தில் வரமாட்டாது.

அரியய னெனவிடா தனந்த காலமாய்த்
திரிதரி னதற்கிணை செப்ப லாகுமோ
சுரநதி பரவுதிற் சுனையி னீருண
விரவிதன் புரவிமே லேறிச் செல்லுமே

இ-ள். விட்டுணு பன்றியாகியும், பிரமன் அன்னமாகியும் அநேககோடிகாலமாயத்தேடி அடிமுடிகாணாமல் வருந்துவார்களானால், அந்த அருணாசலத்துக்கு ஒன்றைசசமானமாகச சொல்லக்கூடுமோ! அதல்லாமல் ஆகாசகங்கை தன்னிலுமுக்கியமென்று துதிசெய்கின்ற அந்தமலையிலிருக்கின்றசுனையிலே நீருண்ணச்சூரியன் தேரிற்கட்டிய குதிரைகள் தாவிசசெல்லும். எ-று. (௩௨)

வெண்மைசேர் புயலத னடியின் மேவுத
வெண்மகிழ் கயிலைமீ திருப்ப தொக்குமா
றண்மைசேர் கார்த்திகை விளக்கு சாற்றுதன்
மண்மகன் மகுடமா மணியிற் றோன்றுமே.

இ-ள். வெள்ளைநிறமுள்ள மேகங்கள் அந்தமலையடிவாரத்தில் சேருதல் யாவரானும் எண்ணப்பட்ட கைலாயகிரிமேல் அந்த மலை

யிருக்கிறதை யொக்கும். குளிர்ச்சிபொருந்திய கார்த்திகை மாதத்தில் கிர்த்திகாதீபம் அந்தமலைமேல் ஏற்றுதல் பூமிதேவியினுடைய கிரீடத்தில் பதித்த இரத்தினம்போற் றோன்றும். எ-று. (௩௩)

அன்றுமா றிசைமுக னளவி டாமுதன்
மன்றல்சேர் திருமலை வடிவு கொள்கையா
னன்றுநம் மருகனு நாமு மோர்குல
மென்றுள மகிழ்ந்தனே யிமைய பூதரம்

இ-ள். முற்காலத்தில் விட்டுணுவினாலும் பிரமனாலும் அறியப்படாத பரமசிவன் கீர்த்திபொருந்திய அந்தமலை யுருவங் கொண்டதினால் இமயபர்வதராசனானவன் நல்லது (இத்தனைகாலம் வரைக்கும் வேறுசாதியாயிருந்த) நம்முடைய மருமகன் இப்போது நங்குலமேயென்று மனஞ் சந்தோஷித்தான். எ-று. (௩௪)

பன்னிரு திங்களும் பரிதி யானது
மன்னிய மதியமும் வலம தாய்வரு
மந்நிலை யுரைக்கவென் னறிவு போதுமோ
வுன்னிய வாசையா லுரைக்க லுற்றனன்.

இ-ள். பன்னிரண்டுமாதமும் சூரியசந்திரர்கள் மகாமேருவை வலஞ்செய்தல்போலப் பிரதட்சணஞ்செய்து வருவார்களென்றால் அந்த அருணாசலத்தின் பெருமையைச் சொல்வதற்கு அற்பமாகிய என்னுடையபுத்தி போதுமோ! ஆனாலுஞ் சொல்லவேண்டுமென்று நினைவுகொண்ட அவாவினால் சொல்லத் தொடங்கினேன். எ-று.

அர்க்கமா மலையுள நடுத்த கீழ்த்திசை
நற்கணா யிரத்தவ னண்ணி வாழ்த்துவன்
றெற்கிலே யுளதுபுத் தேளிர் மாமலை
பொற்கையர் தகன்றினம் புகழ்ந்து போற்றுவான்.

இ-ள். அருணாசலமென்னு மலைக்கு அடுத்த கீழ்ப்பக்கத்தில் அர்க்கமலையென்று ஒருமலையுண்டு; அதில் ஆயிரங்கண்களையுடைய தேவேந்திரனிருந்துகொண்டு சுவாமியைத் தோத்திரஞ் செய்வான் அவ்வருணகிரிக்கு அடுத்ததென்பக்கத்தில் தெய்வமலையென்று ஒன்றுண்டு; அதில் சிவந்தகைகளையுடைய இயமன் புகழ்ந்துகொண்டு வணங்குவான். எ-று. (கூசு)

மேற்றிசைத் தண்டமா விலங்க லுண்டதிற்
சேற்றிசை வருணன்முன் செங்கை கூப்புவன்
தோற்றிடும வடதிசைச் சூல மால்வரை
போற்றிய வளகையான் பொருந்தி வாழ்த்துவான்

இ-ள். அந்த அருணாசலமென்னுந் திருமலைக்கு மேற்பாரிசத்தில் தண்டமலையென்று ஒருமலையுண்டு; அதில் மகரவாகனத்திலேறுகின்ற வருணராஜன் சிவந்தகையைக்கூப்பி அந்தமலையை வணங்குவான். வடபாரிசத்தில் சூலமலையென்று ஒருமலையுண்டு, அதில் எல்லாராலும் போற்றப்பட்ட குபேரன் இருந்துகொண்டு துதிசெய்வான். எ-று. (கூஎ)

மற்றுநால் வரைகளில் வாயு தீயவ
னெற்றிசேர் விழியவ னிருதி போற்றுவன்
சுற்றுள மலைதொறுஞ் சுரருஞ் சித்தரு
முற்றசீர் வசுக்களு முறைந்து போற்றுவார்.

இ-ள். மற்ற நான்குதிக்குகளிலும் இருக்கிறமலைகள் நான்கிலுமிருந்துகொண்டு வாயு, அக்கினி, ஈசானன், நிருதி இந்நால்வர்களும் வணங்குவார்கள். அவைகளைச்சுற்றியிருக்கிற மலைகளிலெல்லாம் தேவர்களும், சித்தர்களும், சிறப்புப்பொருந்திய அஷ்டவசுக்களும் இருந்துகொண்டு வணங்குவார்கள். எ-று. (கூஅ)

தன்னையே நிகருமத் தலத்திலே புவிக்
கன்னமா தவம்புரிந் ததிக மாகவே
என்னையா ளுடையவ னிடங்க லந்தனள்
பின்னையு மதிநலம் பேச லாகுமோ.

இ-ள். தனக்குத்தானே ஒப்பாகிய அத்தலத்தில் பூலோகத்துக்குத் தாயாகிய பார்வதியம்மை மகத்தாகிய அரியதவஞ்செய்து என்னையாட்கொண்ட பரமசிவனுடைய இடப்பாகத்திற் சேர்ந்தாள். ஆனபடியினாலே அந்த அருணாசலத்தின் பெருமையைச் சொல்ல முடியுமோ. எ-று. (௩௯)

தனணிகர் மந்திரம புவனந தததுவம
வனனமாய் விளஙகுமவ் வரையை மாலய
னனனமு மேனமு மாகி நாடினு
ரின்னமு மளவிடா திடும்பை நீஙகினூர்.

இ-ள். தனக்குத்தானே ஒப்பாகிய மநதிரம, புவனம், தததுவம் இவைகளினுருவமாய விளஙகும அருணாசலததை விட்டுணு பிரமன் இருவரும் பன்றியும் அன்னமுமாகித்தேடி இத்தன்மையையுடையதென்று அறியக்கூடாமையினாலே தஙகளுடைய காவததை நீஙகினார்கள். எ-று. (௪௦)

மருவிய பெருமபுகழ் வசசி ராங்கத
னருணையை வலமபுரிந தமல னுயினுன்
கருவிய கலாதரன் காநதி சாலியென்
றிருவரும பரகதி யெய்தினு ரதில்

இ-ள். மகத்தாகிய கீர்த்திபெற்ற வசசிராஙகத பாண்டியன், அருணாசலத்தைப் பிரதட்சணம் வந்ததினாலே தன்னுடைய பாவத்தைப்போக்கி மலமில்லாதவனாகிக்கொண்டானன்; பெருமைபொ

ருந்திய கலாதரன், சார்ந்திசாலி இவ்விருவரும் அந்தத் தலத்தை வலம்வந்து மோட்சத்தையடைந்தார்கள். எ-று. (சக)

ஆதியாமிவர்க டொடங்கியின் றளவுக்
கனேகருண் டருணையை நினைததுங்
காதலா லுரைததுங கேட்டுமுன் கண்டுங்
கால்களால் வலஞ்செய்து மதிலே
நீதியா யிருநது நெறியிஞ னடநது
நெடுங்கயம் படிநதறம் புரிநதுஞ
சோதிதா டொழுதும பணிவிடை செய்துந்
துளக்கிலா முததிபெற றிருநதார்.

இ-ள். முன்சொல்லப்பட்ட இவர்கள் ஆதியாகத் தொடங்கி அன்றுமுதலின்றுவரைககும் அநேகம்பேர் அருணாசலத்தை நினைத்தும், ஆசையோடு தோத்திரஞ்செய்தும், கேள்விப்பட்டும். தரிசனஞ்செய்தும், கால்களாலே பிரதட்சணஞ்செய்தும், அதில் நீதி பொருந்திய வேதமார்க்கததை அனுசரிததுக்கொண்டிருந்தும். மகத்துவம்பொருந்திய தீர்த்தஙகளிலேமுழுகியும, தருமங்களைச செய்தும், சோதிசொரூபமாகிய சிவனதுபாதஙகளை தொழுதும். திருப்பணி செய்தும், கெடுதலில்லாத மோட்சத்தைப் பெற்றிருந்தார்கள். எ-று. (சஉ)

அப்பதி தமிழ்நாட் டுளதிடை பெண்ணை
யாறுசெய் யாறுமிங் கலையாஞ்
செப்பிய கமலை நதிசூழ் முனையாஞ்
செய்தநீரன் றுயிரம் பலமாம்

முப்பத்து மூன்று கோடி தேவர்களு
முனிவருந் தவஞ்செய்வா ரதற்கோ
ரொப்புமேவி றில்லை யிம்பர் நாட்டிடத்து
மும்பர்நாட் டிடத்துமென் றுரைத்தான்.

இ-ள். அவ்வருணாசலத்தலம் தமிழ்நாட்டிலிருக்கிறது. அ பதிக்கு வலப்பக்கத்தில்வருகிற பெண்ணையாறு இடை என்னுநாடியாகும்; இடப்பக்கத்தில்வருகிற செய்யாறு பிங்கலையென்னு நாடியாகும்; கமலை என்கிறநதி சுழிமுனை என்னுநாடியாகும்; அந்த நதிகளில் ஸ்நானஞ்செய்தால் ஒன்றுக்கு ஆயிரம்பங்கு பலன்வரும்; முப்பத்து முக்கோடி தேவர்களும் முனிவர்களும் அத்தலத்தில் தவஞ்செய்வார்கள். அதற்கு ஒப்பு இந்த உலகத்திலும் மேலுலகத்திலும் இல்லையென்று சொன்னார் நந்திதேவர். எ-று. (௩௩)

அற்றமி லவன்சொ ருணையின் சிறப்பா
லகமகிழ்ந் துருகிய முனிவன்
மற்றுள தலத்தி லதிகமென் றுரைத்த
வாய்மையை மனங்கொளா துரைப்பான்
சிற்றறிவுடையே னுதலா லொருசொற்
றெளிந்திலே னெனசசொன்னு னதனை
முற்றுள முணர்ந்தான் மொழியென மொழிந்தான்
முனிவனு மவர்க்கிவை மொழிவான்.

இ-ள். சிவபக்தியிற் சோர்வில்லாத நந்திதேவரால் சொல்லப்பட்ட அருணாசலத்தின் மான்மியத்தினாலே மனமகிழ்ந்து உருக்கத்தையடைந்த மார்க்கண்டேயர் மற்ற சிவத்தலங்களைப் பார்க்கிலும் அருணாசலத்தலம் அதிகமென்று சொன்ன வுண்மையை மனத்தில் ஒப்புக்கொள்ளாமல் சொல்வார்; சுவாமி? நான் சிறிய அறிவையு

டையவனுதலால் நீங்கள் திருவுளம் பற்றியருளியது தென்றாய்த் தோன்றவில்லை யென்று சொல்ல, அதுகேட்டுச் சகலத்தையும் உள்ளத்திலுணர்ந்த நந்திதேவர் உமக்குண்டான சந்தேகத்தைச் சொல்லுமென்று கேட்க, மார்க்கண்டேயர் அவருக்குச சொல்லுவார். எ-று. (௬௬)

தில்லையைக் காணக் காசியி லிறக்கச்
சிறக்குமா ரூர்தனிற் பிறக்க
வெல்லையில் பெருமை யருணையை நினைக்
வெய்தலா முத்தியென் றுரைத்தி
ரொல்லையி னான்கு தலங்களுந் தம்மி
லொக்குமென் றுரைத்திடா தடிகே
ளல்லிசூ ழருணை யதிகமென் றுரைத்த
தருளென வருள்செய்வா னவனும்.

இ-ள். சிதம்பரத்தை தரிசனஞ்செய்தாலும், காசியிலே தேகத்தை விட்டாலும், சிறப்புள்ள திருவாரூரிலே பிறந்தாலும், அளவில்லாத பெருமையையுடைய அருணாசலத்தை நினைத்தாலும், முத்தி கிடைக்குமென்று அருளிச்செய்தீர், இந்நான்கு தலங்களையும் ஒன்றுக்கொன்று ஒப்பென்று திருவுளம்பற்றாமல் சுவாமீ? அல்லிமலர்களையுடைய தடாகஞ்சூழ்ந்த அருணாசலத்தை மாத்திரம் அதிகமென்று கட்டளையிட்டதை அநுக்கிரகஞ் செய்யவேண்டுமென்று மார்க்கண்டேயர் கேட்க அதற்கு நந்திதேவரும் அருளிச் செய்கிறார். எ-று (௬௭)

இறந்திடுந் தொழிலும் பிறந்திடுந் தொழிலு
மெண்ணிய படியவை முடியா
பறந்திடு மவைக்குஞ் சிலவிலங் கினுக்கும்
பாதப முதலவோ ருயிர்க்கு

நிறைந்த புன்னீச ரந்தகர் தமக்கு
நிருத்தமண் டபந்தொழ நேரா
தறந்திகழ் பயனாற் சிலர்சிலர்க் கெளிதா
மல்லவர்க் கரியதா மதுவே.

இ-ள். கேளும் மார்க்கண்டேயரே, ஒருவன் இறக்குந் தொழிலும், பிறக்குந்தொழிலும் நினைத்தபடிமுடியாது. அதிருக்கட்டும், பட்சிசாதிகளுக்கும் மிருகங்களுக்கும் விருட்சமுதலாகிய ஓரறிவுயிருக்கும், புனமைநிறைந்த நீசருக்கும் குருடருக்கும் நடராசனது நிருத்தசபையைத் தரிசனஞ் செய்யக்கூடாது. பூர்வஜனன புண்ணியத்தினாலே அந்த சபைக்குப்போய்க் காணத்தகுந்தவர்களாகிய சிலர்க்குமாத்திரங் கிடைக்கும்; மற்றவர்களுக்கு அரியதாகும்; அந்தத் தலமாம். எ-று. (சகூ)

குண்டகர் பதிதர் கோளகா புலையர்
கொலையின ருறுப்பினிற குறைந்தோர்
கண்டகர் நெடுந்தூ ரத்தினி லிருப்போர்
கருணைசே ரருணபூ தரத்தை
எண்டக வொருகா னினைத்திட முத்தி
யிவரலால் விலங்குபுண் மரங்கண்
முண்டக முதலா யினவுமுன் காண
முளைத்திட முத்தியே பெறுமால்

இ-ள். ஒருமாது தன் கணவனுக்கன்றி வேறொருவனுக்குப் பெறப்பட்ட குண்டகர்களுக்கும், பாவிகளுக்கும், விதவை பெறப்பட்டகோளகருக்கும், நீசருக்கும், கொலைசெய்கிறவர்களுக்கும், அவயவங் குறைந்தவர்களுக்கும், தீமை செய்கின்றவர்களுக்கும், நெடுந்தூரத்திலிருப்பவர்களுக்கும் கிருபைபொருந்திய அருணாசலத்தை

நன்முக ஒருதரம் நினைக்க முத்தியுண்டாகும், இவர்களல்லாமல் மிருகங்கள் பட்சிகள் மரங்கள் தாமரைமுதலிய பூண்டுகளும் அவ்வூரில் முளைத்தால் முத்தியையடையும். எ-று. (௬௭)

சிலையெலா மிலிங்க மதுசிவ லோகந்
தேவர்பா தவங்கள்பா தவங்க
ளலையுலாம புனல்கள் சடையுலாங் கங்கை
யருந்துமூ ணமரருண் ணமுதா
முலவியே வருதல் புவிவலம் வருத
லுரைத்தசொ லசுருதியா முறங்கன்
மலைவறு சமாதி யாகுமந் தலத்தை
மானுமோ மற்றொரு தலமே

இ-ள். அத்தலத்திலிருக்கிற கற்களெல்லாம் லிங்கங்களானபடியினாலே அது சிவலோகமாகும். அத்தலத்திலிருக்கிற விருட்சங்களெல்லாம் கற்பக விருட்சங்களாகும்; அத்தலத்திலிருக்கிற அலைபொருந்திய நீரெல்லாம் சுவாமியின் சடையிலிருக்கிற கங்கையாகும்; அத்தலத்திலிருக்கிறவர்கள் சாப்பிடுகிற உணவுகளெல்லாம் தேவாமிர்தமாகும்; அத்தலத்தில் சஞ்சரித்தல் பூமிப்பிரதட்சணஞ் செய்தலாகும்; அவ்வூரிற்சொல்லும் வார்த்தைகள் வேதமாகும்; அத்தலத்தில் நித்திரைசெய்தல் நிஷ்டைகூடிச சமாதியிருத்தலாகும்; ஆனபடியினாலே அதற்கு மற்றொருஸ்தலம் சமானமாகுமோ. எ-று. (௬௮)

முத்தழல் புரிந்தோ நான்மறை தெளிந்தோ
ரைவகை வேள்வியு முடித்தோ
ரத்தவம் புரிந்தோ ரெவ்வறஞ் செய்தோ
ரெண்வகை யோகிய ரெனினு

மத்தல நினையா தவர்க்கிலை முத்தி
யாதலா லமரர்வா னிருந்துஞ்
சுத்தமா னிடராய்ப் பிறந்ததை நினைத்துந
துளக்கிலா முத்திபெற் றிருப்பார்.

இ-ள். காருகபத்தியம். ஆகவனீயம், தக்கிணாக்கினியம், என்கிற மூன்றக்கினியை வளர்த்தவர்களும், இருக்கு, யசுர், சாமம் அதர்வணம் என்னும் நான்கு வேதங்களை வுணர்ந்தவர்களும், பிரமயாகம் தெய்வயாகம், பூதயாகம், பிதிர்யாகம், மானுடயாகம் என்கிற ஐவகையாகங்களையும் நிறைவேற்றினவர்களும், எத்தன்மையாகிய தவஞ் செய்தவர்களும், எப்படிப்பட்ட தருமஞ்செய்தவர்களும் இயமம், நியமம், ஆதனம, பிராணாயாமம். பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதியெனப்படுகின்ற அஷ்டாங்கயோகஞ் செய்தவர்களுமாகிய எப்படிப்பட்டவர்களா யிருந்தாலும் அவ்வருணாசலத்தை நினையாவிட்டால் அவர்களுக்கு முத்தியில்லை ; ஆனபடியினாலே தான் தேவர்களாய்ச சொர்க்கலோகத்தி லிருந்தவர்களும் ஞானமுள்ளமானிடராகப் பூமியிற் பிறந்து அவ்வருணாசலத்தைத் தியானஞ்செய்து கெடுதலில்லாதமுத்தியை அடைந்திருப்பார்கள். எ-று.

பொருவிலாச் சுவாகத் தமிர்தமுண் டிருப்போர்
போகபூ மியைத்தனி புரப்போ
ரருணைமா நகரிற் கிருமியாய்ப் பிறப்ப
ததிகமென் றுதரங் கொள்வார்
மருவமப் பதியிற் பிறப்பது நூறு
மகம்புரிந் தவர்க்கலாற் கிடையா
திருவருள் படைத்தார்க் கெளிதலான் மற்றைத்
தேவர் யாவருக்குமரிதே.

இ-ள். ஒப்பில்லாத சொர்க்கலோகத்தில் நரை, திரை, மூப்பு, உண்டாகாதபடி அமிர்தமுண்டிருப்போர்களாகிய தேவர்களும், போகத்தை அனுபவித்தற்குரிய அந்தசசொர்க்கமுதலான உலகஙகளைத் தனித்தனியாளுகின்ற தேவேந்திரன் முதலாகிய திக்குப் பாலகர்களும், அருணைசலதலத்தில் கிருமியாகிப் பிறக்கிறது சொர்க்கத்தின் பதத்தை அனுபவிததலைப் பார்க்கினும், அதிகமென்று பிறப்பதற்கு ஆசைபபடுவார்கள், தெய்வத்தன்மை பொருந்திய அந்தப்பதியில் பிறக்கிறது நூறுயாகஞ் செய்தவர்களுககு அல்லாமற் கிடையாது. சுவாமியினுடைய, கிருபைப்பெற்றவர்கட்குக் கிடைக்கும, அவாகளன்றி மற்றததேவாகள முதலான மகத்துவம்பொருந்திய யாவர்க்கும் அப்படிபிறப்பது கிடைககமாட்டாது எ-று. (கூ0)

வெறறிரும் பிடததிற செமபிலவெண் கலததில
வெளளியில வெளளிய பொனனிற
குறறமொன் றிலலாத குயிறறிய மணிபோற்
குலவிய சிவனிருந திடுவன்
மற்றைய தலத்தி லருணையென் றுரைக்கும
வளம்பதி தனிலெழுந தருளவன்
பொற்கட் டிடதது மணியென வுரைத்தான்
புனிதனு கிபவரு ணந்தி

இ-ள். சொற்பவிலைபெற்ற இரும்பிலும், செம்பிலும், வெண்கலத்திலும், வெள்ளியிலும், வெள்ளைப்பொன்னிலும் பதிக்கப்பட்டயாதொரு தோஷமில்லாத மாணிக்க ரத்தினம்போல் மற்றத் தலஙகளில் எஙகும் நிறைந்த பரமசிவன் எழுந்தருளியிருப்பார் பொன்னாற் செய்த தகட்டில் பதிக்கப்பட்ட அந்த இரத்தினமபோல் அருணைசலமென்று சொல்லபபட்ட வளம்பொருந்திய தலத்தில் எழுந்தருளியிருப்பாரென்று பரிசுத்தராகிய வருணந்திதேவர் திருவுளம் பற்றினார், ஆதலால் எல்லாத தலத்திருக்கும் இத்தலம் அதிகமாம் எ-று.

கண்ணினால் விளங்குந் திருமுக முக்த்தாற்
கரியகண் விளங்குமவ் விரண்டின்
பண்ணினால் விளங்கு முடலெலா மவைபோற்
பரமனால் விளங்குமவ் வருணை
யண்ணருன விளங்கு மருணைமா நகரா
லமலனே டருணைமா நகரா
லெண்ணிலாப் பதிக ளவைகளும் விளங்கு
மெவற்றினுஞ் சிறந்ததென் றிசைத்தான்.

இ-ள். கேளும் மார்க்கண்டேயரே? கனக ளிருக்கிறதினால் முகம் பிரகாசிக்கும்; முகத்தினிடத்தி லிருப்பதால் அக்கண்கள் விளங்கிக்கொண்டிருக்கும்; இந்த விரண்டினுடைய சேர்க்கை அழகினாலே தேகமெல்லாம் விளங்கும்; அவைபோல் பரமசிவனாலே அருணாசலம் சிறப்படைந்திருக்கும்; அந்த அருணாசலத்தால் சுவாமியும் அமிசையையுடையவராய் விளங்குகிறார்; அத்தலத்தினாலும் அதில் எழுந்தருளியிருக்கிற சுவாமியினாலும் எண்ணிக்கையில்லாத எல்லா க்ஷேத்திரங்களுஞ் சிறப்பாய் விளங்கும்; ஆனதினாலே எல்லாத்தலங்களிலும் அது சிறந்ததென்று திருவாய்மலர்ந்தருளினார். எ-று. (கூஉ)

இதனால் எல்லாத்தலங்களும் உடலாகவும், அருணாசலத்தலம் முகமாகவும், அதிற் சுவாமி கணணாகவும் சொல்லப்பட்டது.

வீசல ரிலைமெய் குளிர்ந்திடுங் கொடியின்
வேரினீர் சொரிந்திடு னதுபோற்
பூசனை யருணை நகரிலே சிறிதும்
புகையற நடக்குமே யாகிற்
காசியே முதலெத் தலமெலாம் பூசை
கனம்பெற நடந்ததா மிலையே
யீசர்வாழ் முந்தத் தலமெலாம் பூசை
யியற்றிய னியற்றிடா திருந்தென்.

இ-ள். ஒரு கொடியினது வேரில் நீர்வார்த்தால் அக்கொடியும் அதிலிருக்கிற மணம் வீசுகின்ற புஷ்பங்களும இலைகளும் குளிர்ச்சியையடையும். அதுபோல அருணாசலததலததில் சுவாமிக்கு எவ்வளவாகிலும் பூசை குற்றமில்லாமல நடக்குமானல் காசி முதலாகிய எல்லாத தலஙகளிலும மேன்மையாகப் பூசை நடநததாகும. அததிருவண்ணமலையில பூசை நடவாவிட்டால மறறததலஙகளில் நடந்தாலென் நடவாவிட்டாலென ஒருபயனுமில்லை எ-று. (ருங)

நிலநதொழு மருணா சலநதனி லிருநது
நெஞசினி லையமாயப பிரிநதோர
தலந்தனை விருமபி நடநதவர முனசெய்
தவஙகளுந மறஙகளுந தவறுந
குலந்தனி லுதிததோ ராயினும புலையா
குணததவ ராயினுங கொடிய
ருலந்தவ ருயிரோ டிருநதினு மதறகோ
ருவமைசொன னவாகருமீ தொகருமம

இ-ள். உலகததார போறறுகின்ற அருணாசலத தலததிலிருந்து இதைவிட உயர்ந்த தலஙகள் இருககுமெனறு மனதில சநதேகங கொணடு பிரிந்து ஒரு க்ஷேததிரததை நாடி நடநதவாகளுக்கு அவாகள் அதற்குமுன் செய்யப்பட்ட தலஙகளும், தருமஙகளும், பிரயோசனப்படமாட்டா ; அவர்கள நல்லகுலததிற் பிறந்தவாகளானலும் நீசராவார்கள் ; நல்ல குணஙகளை யுடையவாகள்ானலும் கொடிய குணத்த ராவார்கள். அவர்கள் உயிரோடிருநதாலும் இறநதவர்களாவார்கள் ; அந்த அருணாசலத்துக்கு வேறொரு தலஙகளை ஒப்பாகச்சொன்ஞலும் இந்தத் தோஷங்களெல்லாம் உணடாகும் எ-று.

என்றுதா னருணைச் சிறப்பெலா முனிவர்க்
கேதுவோ டெடுத்தினி தியம்பிக்
கன்றுமான் மழுவுஞ் சுரிகையுந் தரித்த
கடவுணன் திருந்தன னவனைச்
சென்றுசென் றிறைஞ்சி நெக்குநெக் குருகிச்
சென்னிமேற் செங்கைமே லோட்டி
யொன்றுமா னந்தப் பெருங்கட லிடைப்புக
குணர்ச்சியாய் முனிவனீ துரைப்பான.

இ-ள் இப்படி அருணசலத்தின் பெருமையை யேதுவோடு முனிவர்களுக் கினிதாக எடுத்து அருளிச்செய்து, மான், கனலு, மழு, உடைவாள் இவைகளைத் தரித்த நந்திதேவர் களிப்புற்றிருந்தார் அந்த நந்திதேவரைப் பலதரம் வந்தனஞ்செய்து நெக்குநெக்குருகிச் சிரசின்மேல் சிவந்த கைகளை நெடுநேரம் கூப்பி ஒன்று பட்டவராய் ஆனந்தசமுத்திரத்தில் முழுகித் தன்னைமறந்தவரா யிப் பின்பு ஞாபகம் வந்து இதனைசசொல்லுவார் மார்க்கண்டேயா எ-று. (௫௩)

முதலாவது,

திருநகரச்சருக்கம்

முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-எஅ.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருமலைச் சருக்க வசனம்.

நந்தியந்தேவே! திருநகரச் சிறப்புக்களை யெல்லாங் கேட்டு ஆனந்த மடைந்தேன். திருமலையின் வரலாறுகளைக்கேட்க எளியேன் மனம் பெரிதும் அவாவுகின்றதென்று மார்க்கண்டேயமுனிவர் உரைக்க, திருநந்திதேவர் திருவாய்மலர்ந் தருளுவார். மார்க்கண்டேயரே! மகாசங்காரகாலத்திலே சராசரங்கள்யாவும் பிரமனிடத்தில் ஒடுங்கும். அவ்விதியோன் மாயனிடத்தும், அவன் உருத்திரனிடத்தும், அவர் மகேசுரர் என்னும் அநந்த வேதநாயகனிடத்தும், அவர் சதாசிவ மூர்த்தியிடத்தும். அவர் விந்துவினிடத்தும், அது நாதத்துவம், அது குடிலை யென்னும் மகாமாயையினிடத்தும் அது தற்பர சிவத்தினிடத்தும் ஒடுங்க. அந்தப் பரசிவப் பிரபுவே தானுவாகவிளங்கும். மீளவும் உலகந் தோன்றுங்கால் அவ்வாறே தோன்றப் பிரமன் தான் ஒடுங்கிய விட்டுணுவினிடத்தினின்றுந் தோன்றிப் பலவகைச் சிருட்டிகளையும் படைத்தான். முதலில் மரீசிமுதலிய எழு முனிவர்களும் பிரமனதுமனதினின்றுந் தோன்றினர். தக்கன் வலக்காற் பெருவிரலினும், பிருகு மார்பினும், தருமதேவதை முகத்தினும் பிறந்தனர். அவர்களினின்றும் தேவர் முனிவர், அசுரர், கருடர், சர்ப்பங்கள், தேவப்பெண்கள், கந்தருவர், இராக்கதர், வானரர், கின்னரர், விலங்குகள், பசுக்கள் தாவர்முதலிய யாவுந் தோன்றக்கண்டு பிரமன் அகங்காரங் கொண்டான், விட்டுணுவினிடஞ் சென்று, திருமாலே யானே பரப்பிரமம். உலகங்களெல்லாம் எமது படைப்பாகும். ஆங்காங்குள்ள உயிர்கள் யாவும் எம் படைப்பே. ஆதலால் நம்மைப் புத்திரனெனக் கொள்ளாதே. யாம் படைக்கா விடின்

நீ யெங்ஙனம் காப்பாய். சுவரில்லாமற் சித்திரம் எழுதுவாருண்டோ? உன்தொழிலுக்கு வேறொருவரை நியமிக்கும் வல்லமை யெமக்குண்டு என்றுபலவாறுகூற, திருமாலுங்கோபத்தினால் பற்பல வீரமொழிகளைக்கூறி நானே பிரமம் என்று அகங்கரித்தார். அதனால் இருவர்க்கும் போர் மூண்டுகொண்டது. உலகங்கள் பெருந் துன்பங்களுற்றன.

இதனையறிந்த தடங்கருணைப் பெருங்கடலாகிய சிவபெருமான் அக்கினிவடிவாக அவர்நடுவேதோன்றிக் கீழுமேலும் ஓங்கிப் பரந்து நின்றார். அதனால் உலகங்களெல்லாஞ் சிவந்துதோன்றின. அச்சோதிவடிவத்தைக்கண்ட பிரமனும் விட்டுணுவும்பயந்து ஒதுங்கிநின்றார். பின்னர்ச் சண்டையிடுவதையொழித்து, இச்சோதியுருவின் அடியையாவது முடியையாவது காண்போம். கண்டவர் யாவரோ அவரே பரப்பிரமம் ஆவார் என்று ஒருவர்க்கொருவர் சொல்லியிசைந்தார். அப்போது பாம்பிற்படுத்துக்கொள்ளும் மாயவன் பன்றிவடிவெடுத்து நான் அடிதேடியறிவேன் என்று பூமியை அரைக்கணத்தில் ஆயிரங்காதந் தோண்டிக் கீழேசென்றான். பிரமன் அன்னப்பறவையுருவெடுத்து நான் முடியைத் தேடிவருவேனென்று அண்டமுகட்டை ஓர் அரைக்கணத்து ஆயிரங்காததூரத்தைத் தாண்டிச்சென்று பறந்தான். திருமாலாகிய பன்றி பூமியைக் கடந்துசென்று, அதன்கீழுள்ள ஏழுலகையுந் துளைத்துப் போய், மாவலிவாழும் போகவதியென்னும் நகரத்தையுந் தாண்டி, ஆடகேசுரபுவனத்தையும்பணிந்து துதித்து அப்பாலுஞ் சென்று அதன் அடியைக்காணப்பெறாமல் தன் இரண்டுகொம்புகளுந் தேயப்பெற்று, குளம்புகளும் முகத்தினுனியுந்தேய்ந்து வலிகுறைந்து தேடும் ஆசையுமற்றுப்போக ஆயிரந்தேவவருடந் தேடியுங்காணாமல் மெலிந்து, தெளிவுற்றுச் சிவன்செயலென்று பூமிக்குவந்தது.

பிரமனாகிய அன்னப்பறவை ஆகாயமுகட்டைக் கடந்து சென்று மேலுலகங்களையெல்லாந் துருவிப்போய்; ஆயிரந்தேவவருட

ர் தேடிச்சென்றுங் காளகண்டச்சோதியின் முடியைக் காணாதாயிற்று. பின்னும் நூறாயிரங் காததூரம்போய்ப் பார்த்தாலும் முதலிற்பார்த்ததுபோலவே எட்டப்படாதிருந்தது. அன்னப்பறவைக்குச் சிறகுகளெல்லாம் உதிர்ந்துபோயின. விசையும் அடங்கினது. துக்கமும் பெருமூசசுமிகுத்தன. தனியே அன்னமாகியபிரமன் ஆலோசிக்கின்றான். இச்சோதிவடிவைச் சிவபெருமானென்று அறியாதவனாயினேன். விட்டுணுவையாவது நட்புகொள்ளாதுபகைத்தேன். இவை எனது புத்திக்குறைவினாலும் பாவத்தினாலுமே. இவ்வளவுதூரம்வந்தும் முடியையறியாமற் போவதோ ? பொய்சசாட்சி சொல்வதற்கும் ஒருவருமில்லையே என்செய்வேனென்று வருந்தும்போது, தாழம்பூவொன்று வருதல்கண்டு அதனைப்பிடித்தான். என்னை விட்டுவிடு என்றுகூற, பிரமன் தாழைமலரே யெங்கிருந்து வருதியென்றுகேட்க. விதியோய்! பரமசிவனாது திருமுடியினின்றுந்தவறிவிழுந்தேன். நாற்பதினாயிரம் வருடமாகியும் இவ்வளவு தூரந்தான்வந்தேன் இன்னும் எவ்வளவுதூரம் போகவேண்டும் பூமியையடைதற்கு எனக்கேட்டது. பிரமன்சொல்வான். நான்ஆயிரம்வருடம்பறந்து இவ்வளவுதூரந்தான்வந்தேன். அதுநிற்க எனக்கு ஒருதவிசெய்யவேண்டும். விட்டுணுவும்நானும் அடிமுடிதேடுவதற்காகச சபதஞ் செய்துகொண்டோம். நான்முடியைக் கண்டதாகச சாட்சி சொல்லவேண்டும். அதுபாவமாகாது என்றுவேண்டிய உபாயமொழிகளைச் சொல்லிச சம்மதிக்கப்பண்ணி விரைவாகவிட்டுணு யிருக்கும் பூமியிடத்தில் வந்துசேர்ந்தான். தாழம்பூ விட்டுணுவாகிய பன்றியை நோக்கி, பிரமன் சிவனதுமுடியையபார்த்தான். நானும் அங்கிருந்துவருகிறேனென்று பொய்ச்சாட்சிசொல்லிற்று. அக்கணத்தில் அக்கினிமலை யடேரென்றுவெடித்தது. உலகத்துள்ள வுயிர்களெல்லாமொடுங்கின. சிவபெருமான்சோதியினின்றுந் தோன்றிப் பிரமனை நீசொல்லியசொல் அன்றுநன்று என்று நகைத்தருள; பிரமன் இறந்தவர்போலாகி விழுந்தான். திருமால்வணங்கினர்; பாடினார்;

துதித்தார். அவ்விட்டுணுவுக்குக் கேட்டவரங்களையெல்லாங்கொடுத்தருளி. மூர்ச்சைதெளிந்து எழுந்து நாணமும் அச்சமுங் கொண்டு துதித்த பிரமனை நோக்கி, உனக்குப் பூமியிலே பூசையுங் கோயிலுமில்லாமற் போசக் கடவன. தாழை மலரே! பொய்ச் சாட்சி கூறினமையால் இன்றுமுதல் என்னைத் தீண்டேம் என்று சபித்தருளினார், பிரமன் அழுது தேம்பித் தேம்பித் துதித்தான். சிவபெருமான் திருவுளமிரங்கி, விதியோய்! அஞ்சாதே பிராமணர்க்குச செய்யப்படும் பூசை நினதாகக்கடவது. முன்போலப் பூமியைப் படைக்குதி என்று, திருவாய்மலர்ந்தருளுவார். பிரம விட்டுணுக்களே! இத்தலத்தைச்சுற்றி மூன்றுயோசனை தூரம் சுத்த ஞானத்தலமாகுக. இச்சோதிமலைபாகும் இதற்கு அருணை எனப்பெயர் வழங்கப்படுக. இதனை வழிபடுவோர்யாவர்க்கு முற்றதுன்பங்களையொழித்துப் பேரின்பமுத்தியைக் கொடுப்பேம். பூமியிற் பலபிறவிகளையெடுத்துத் தவஞ்செய்தார்க்கு இத்தலத்தில் பிறக்கும் பெருமையையளிப்பேம். இங்கு ஓர் தானஞ்செய்யின் ஆயிரமாக விருத்தியாகுக. இத்தலத்தில் பாவமேவிளையாது. இவற்றிற் சந்தேகமுள்ளார்க்கு முத்தி கிடைக்காது என்றார். உடனே சோதிவடிவு மலையாக குறுகி நின்றது இவ்வொளியினால் எங்கண்கள் வருந்துவதால் மலைவடிவாக இருக்க வேண்டும். அதனுச்சியில் ஒரு பிரகாசங் காட்டியருள வேண்டுமென்றார் பிரமவிட்டுணுக்கள்.

அவ்வாறே கார்த்திகை மாதத்துக் கார்த்திகை நட்சத்திரத்தினத்தில் ஒருபிரகாசங் காண்பிப்பேம் அதனைத் தரிசித்தவர்க்கு எல்லாப் பெருமையும் எல்லா வின்பமும் கிடைக்கும். அவர்களுக்கன்றி அவரது கோத்திரத்திற் பிறந்த இருபத்தொரு தலைமுறைச சந்ததியிற் பிறந்தவர்கள் யாவர்க்கும் முத்தியளிப்பேம் இறப்பினையும் பிறப்பினையும் நீக்குதற்கு மருந்தாதலால் மலை மருந்து என்று பெயர்பெறுக. சிவப்புநிற முடைமையாலும், உலகைச் சிவந்த நிற

மாக்கினமையாலும் அருணாசலம், அருணகிரி என்று வழங்கப்படுகே. அருணாசலம் என்று ஒருதரம் கூறினால் பஞ்சாக்கர மந்திரத்தை மூன்றுகோடிதரம் உச்சரித்த பலங்கிடைக்கும் என்று அருளினார். பிரம விட்டுணுக்கள், சுவாமி! இவ்வாறு மலைவடிவானால் அபிடேகம், மலர்மாலை. கந்தம் முதலியன கொண்டு பூசை செய்யத்தக்கவர் யாவர். ஆதலால் கீழே இலிங்கவடிவாக எழுந்தருள வேண்டுமென்று பிரார்த்தித்தார்கள். அவ்வாறு ஆலகண்டப் பெருமான ஆயினர். அதுகண்டு சந்தோஷித்து தேவதச்சனைக் கொண்டு, கோயில், மண்டபம், தூபி, கோபுரம், மதில்கள் செய்வித்து மூன்று தீர்த்தங்களையு முண்டாக்கிப் பூசித்து மேலான பதவி பெற்றார்கள். சிவபெருமான் இம்மலையுருவாய பின்னாக கயிலைமலையின் விருப்பு நீங்கிற்று. மற்றைய தலங்களும் இதற்கிடல்ல என்று திருநந்திதேவர் திருமலையின் சிறப்புக்களை எடுத்துரைத்தார்.

திருமலைச் சருக்க வசனம்

முற்றிற்று.

---



சிவபிரான் முடியையும், அடியையுங்காணப் பிரமன் அன்னமாயும், விட்டுணு வராகமாயுந்தேடி யலுத்துநிற்க, கயிலேயி னின்றுதவறிய கைதைப் பிரமனுக்காகப் பொய்சொல்லக் கைதைக்கும் பிரமனுக்கும் சாபநேரிட்டது—8.





உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

இ ர ண் டா வ து,

# திருமலைச் சருக்கம்.



கலிநிலைத்துறை.

எந்தை யேயரு ணந்தியே யடியவர்க் கெளியாஞ்
சிந்தை யானந்த மகிழ்ந்தன னருணையின் சிறப்பா
லந்த மாநக ரிடத்திலே சிவனழல் வடிவாய்
வந்த வாறுட னதுமலை யாகிய வகையும்

இ-ள். அருணாசலத்தின் மகிமையைக் கேள்வியுற்ற மார்க்கண்டேயர் சொல்லுவார்; எம்முடைய ஆண்டவரே! அடியேனுக்கு அருள்செய்த நந்திதேவரே! அடியார்க்கெளியவரே! நீர் அருளிச்செய்த திருவண்ணாமலையென்னும் தலத்தின் மகிமையினால் மனக்களிப்படைந்தேன்; அப்படிப்பட்ட தலத்தினிடத்திற் பரமசிவன் அக்கினிசொரூபமாய்த் திருவுருக்கொண்டதும், அதன்பின்பு மலையுருவமானதும். எ-று. (க)

---

நெடிலடி நான்காய் நிகழ்வது கலித்துறை யென்பதிலக்கணம்.

அம்மலைச்சுட ரடிதலை தெரிதலா தயன்மால்
விம்மலுற்றது மவர்க்கருள் செய்ததும் விளம்பாய்
கைம்மலைக்கடல் கரியுரி புனைந்திடுங் கயிலைச்
செம்மலைத்தொழுஞ் செல்வனே யெனவவன் செப்பும்.

இ-ள். அந்த அக்கினிமலையின் அடியும் முடியும் அறியக்கூடாமல் பிரமதேவரும், விட்டுணுமூர்த்தியும், வருத்தப்பட்டதும், பின்பு சுவாமி அவர்களுக்கு அநுக்கிரகஞ் செய்ததும் திருவுளம்பற்றவேணும், கையுள்ளமலையை ஒத்ததாய் மதத்தையுடைய யானையின்தோலைத்தரித்தருளிய கைலாயவாசகராகிய பரமசிவனை வணங்கும்படியான செல்வத்தை யுடையவரேயென்றுசொல்ல, அதற்கு நந்திதேவர் சொல்லத்தொடங்கினர். எ-று. (உ)

பஞ்ச பாதக மொருவனப் பதியிலே பண்ண
நெஞ்சி னினைத் திடுகினு நினைத்தகே பரமாய்த்
தஞ்ச மாகிய முத்தியா மெனமறை சாற்று
மஞ்சொ லாலது மொழிந்தபேர்க் கென்னபே றரிதே

இ-ள். ஒருவன் அந்த அருணசலத்தலத்தில் பஞ்சபாதகங்களைச் செய்யவேணடுமென்று நினைத்தாலும், அப்படி நினைந்தவர்க்கே மேற்பட்ட புண்ணியமாகி அதனல் பற்றுக்கோடாகிய முத்தியுண்டாகுமென்று வேதங்கள் முறையிடும்; அன்பையுணடாக்கும் நல்ல சொற்களினல் தோத்திரஞ் செய்தவர்களுக்கு என்னபேறுகிடைக்க மாட்டாது. எ-று. (௩)

ஆகையா லுமக் கன்றியே யெமக்குமுண் டதிகஞ்
சோக மோகங்க ளகிர்ப்பவ [illegible] சுடராய்
மாகமூடுற வளர்ந்தது மாலய[illegible]
போகலிங்கமென் றுன[illegible] புகல்வேன்.

இ-ள். ஆனபடியினாலே மார்க்கண்டேயரே? இந்தமஹான்மியத்தைக்கேட்கின்ற உமக்கேயல்லாமல், எனக்கு அதிக பலனுண்டாம்; துக்கத்தையும் மோகத்தையும் நீக்கிவிடுகிற சிவபெருமான் ஒப்பற்றபெரிய சோதிவடிவமாய்ப் பிரமவிட்டுணுக்காக ஆகாசம் அளாவி வளர்ந்தும், யாவருக்கும் போகத்தைக் கொடுக்காநின்ற இலிங்கமென்று சொல்லும்படி திருவுருக்கொண்டதும் எனக்குத் தெரிந்த அளவிற் கொஞ்சம் சொல்லுகின்றேன். எ-று. (௰)

ஒடுங்கு நாளினி லயனரி யுருத்திரன் மகேச
னொடுஞ்ச தாசிவன் விந்துநா தஞ்சத்தி நெறியே
யடங்கி டும்பர சிவத்திற் பரசிவ மனைத்துங்
கடந்த தத்துவ முடிவிலே நின்றது கருதி.

இ-ள். சர்வ சங்கார காலத்தில் முறைப்படி சகல உயிர்களும் பிரமனிடத்தி லொடுங்கிப் பிரமதேவர் விஷ்ணுவினிடத்தி லொடுங்குவார்; விஷ்ணு உருத்திரனிடத்தி லொடுங்குவார்; உருத்திரன் மகேசுரனிடத்திலொடுங்குவார். மகேசுரன் சதா சிவனிடத்திலொடுங்குவார்; சதாசிவன் விந்துவினிடத்தி லொடுங்குவார்; விந்து நாதத்தினிடத்திலொடுங்கும்: நாதம் சத்தியினிடத்தி லொடுங்கும்; சத்தி பரமசிவத்திலொடுங்கும்; அந்தப்பரமசிவம் திருவுளங்கொண்டு எல்லாங்கடந்த தத்துவமுடிவிலே நின்றது. எ-று. (௧௧)

பரசி வத்தினில் வருபரா சத்திபாற் குடிலை
விரவி டும்பர தத்துவ மடைவிலே விரிந்த
மருவு மைவரு மொடுங்கிய முறையிலேவந்தா
ரிம கன்பண்டத்திடுவது நினைந்தன னகத்தில்.

இ-ள். அப்படியெல்லாம் ஒடுங்கின காலத்திலே தனியாய்நின்ற பரமசிவம், உலக முண்டாகவேண்டுமென்று திருவுளங்கொண்ட அளவில், அந்தச் சிவத்தினிடத்திற்றோன்றிய பராசத்தியினிடத்தில்

குடிலை என்னுஞ்சத்திதோன்றியது; அதில் பெருமையமைத்த மற்றத்தத்துவங்கள் முறையே உண்டாயின; பஞ்சகிர்த்தியங்களுக்குரிய பிரமன், விஷ்ணு, உருத்திரன், மகேச்சுரன், சதாசிவன்முன்னே ஒடுங்கிய முறையே உண்டானார்கள்; விஷ்ணுவினுடைய புத்திரனாகிய பிரமாவானவர் உலகத்தைச் சிருட்டிப்பதற்கு மனதில் எண்ணினார். எ-று. (சு

மரீசி யங்கிரன் புலத்தியன் புலகனோ டமறையோர்
கிருது வத்திரி சனபதி யெழுவருங் கிளைத்தா
ருரிய தக்கனும் வலப்பதப் பெருவிர லுதித்தான்
பிருகு மார்பினு மறத்திறை முகத்தினும் பிறந்தார்.

இ-ள். அப்படிப் பிரமன் நினைத்தவுடனே, மரீசி, அங்கிரர், புலத்தியர், புலகர், கிருது, அத்திரி, சனபதி என்கிறவிருடிகளெழுவர்களும் பிறந்தார்கள்; தக்கன் வலக்காற் பெருவிரலிற் பிறந்தனன்; பிருகு மார்பிடத்திற்பிறந்தான்; தருமதேவதை முகத்திற் பிறந்தது. எ-று. (எ

உன்னு மைந்தரின் மரீசிபாற் காசிப னுதித்தான்
பன்னு தக்கனு * மறுபது பெண்களைப் பயந்தா
னன்ன காசிப னவர்பதின் மூவரை யணைந்தான்
முன்ன ளாகிய வதிதியா லிமையவர் முளைத்தார்.

இ-ள். பிரமனிடத்திற் பிறந்தபிள்ளைகளாகிய எழுவரில்மரீசிரிஷிபினிடத்திற் காசிபரிஷிபிறந்தார்; தக்கனென்பவன் ஐம்பது பெண்களைப்பெற்றான், அந்த ஐம்பது பெண்களில் பதின்மூன்று

* அறுபதின்பெண்களுள் தருமனுக்குப் பதின்மரையும், காசி பர்க்குப் பதின்மூவரையும் சந்திரனுக்கு இருபத்தெழுவரையும் அரிட்டநேமிக்கு நால்வரையும், வெகுபுத்திரனுக்கும், அங்கிரசனுக்கும் இவ்விருவரையும், கிருசாசுவனுக்கு இருவரையும் விவாகஞ்

பெண்களைக் காசியர் விவாகஞ்செய்தார்; மூத்தவர்களாகிய அதிதி வயிற்றில் முப்பத்து முக்கோடி தேவர்களும் பிறந்தார்கள்.எ-று. ()

இருமை சேர்ந்திடு மிரணிய விரணியாக் கர்களைத்
தெரிய வீன்றனள் சிறப்புறுந் திதியெனு மிளையா
டருண மைந்தரி லிரணியன் பிரகலா தனனோ
டருமை மைந்தர்க ணால்வரைப் பயந்தன னவருள்.

இ-ள். அதன் பின்பு அதிதிக்கு இளையவளாகிய சிறப்புள்ள திதியென்பவள் இரணியன் இரணியாக்க னென்னும் இரண்டுபேரையும் பிரசித்தமாகப் பெற்றாள்; இந்த இருவரில் இரணியன் பிரகலாதன், அனுகிலாதன், கிலாதன், சயகிலாதன் என்றும நான்கு பிள்ளைகளைப் பெற்றான், எ-று. (௯)

பிரக லாதனன் றவத்தினான் மூவரைப் பெற்றா
னருளு மைந்தரில் விரோசனன் மாவலி யளித்தான்
பரவு மாவலி வாணனென் றொருவனைப் பயந்தா
னரன் றுச்சனை புரிந்தவ னயுன்றொழு விருந்தான்.

இ-ள். அவருட் பிரகலாதனன் தவத்தினால் * மூன்று பிள்ளைகளைப் பெற்றான்; அந்த மூவரில் விரோசன னென்பவன் மாவலியென்பவனைப் பெற்றான; மாவலி வாணாசுரனைப் பெற்றான; அவ்வாணாசுரன் பரமசிவனைப் பூசித்துப் பிரமன் தொழும்படியான வாழ்வுபெற்றிருந்தான். எ-று. (௧௦)

தனுவ ளித்தவன் சம்பரன் முதலினோர் பதின்ம
ரனைய தானவர்ப் பெற்றனன் சிங்கிகை யனைக்கு
டனிவி ராகுவே முதலொரு நால்வரைப் பயந்தாள்
பினைய ளாங்கொரு மூன்று 

* மூவராவார்—

இ-ள் மலைகளினுடைய சிறகை யறுப்பதற்குத் தேவேந்திர னுக்குத் தன் முதுகெலும்பைக் கொடுத்தத தேகத்தை விட்டவரா கிய ததீசிரிஷி என்பவர் சம்பரன் முதலாகிய பத்து அசுரர்களைப் பெறறார்: அப்பத்துபேரில் சிங்கிகை என்பவள் இராகுமுதல் நான் குப் பிள்ளைகளைப் பெற்றாள்; அவளுக் கிளையவள் மூன்றுபே ரசுர ரைப் பெற்றாள். எ-று. (கக)

கால கேயர்க ளறுவரைப் பயந்தனள் காலை
சால நீள்சிறைக் கருடனு மருணனுந் தவிர
நாலு பாலரைப் புதல்வரா வினதையு நயநதா
ளால நோவிழிக் கத்துரு பணியெலா மளிததாள்.

இ-ள். காலை என்பவள் கால கேயர்கள் ஆறுபேரையும் பெற் றாள்; மிகவும் நீண்டிருக்கிறசிறகினையுடைய கருடன் அருணனோடு கூட நான்குபிள்ளைகளை வினதை என்பவள் பெறறாள், விடத்தை யொத்த கண்களையுடைய கத்துரு என்பவள் பாம்புகளெல்லாவற் றையும பெற்றாள். எ-று.

அரிட்டை யென்பவ ளிடத்திலே யரமபையே முதலா
வரட்டி மங்கையர் பிறந்தன ரிலங்கிளை முனிவ
னருட்ட வததிலெண் ணிரட்டிகந தருவரை யளித்தா-
ளருட்டு வாள்விழிக் கபிலைபாற் பதினமர்வந துதித்தார்.

இ-ள். அரிட்டை என்பவளிடத்தில் அரம்பை ஊர்வசி முத லான பெணகள் பிறந்தார்கள்; விளங்காநின்ற இளை என்பவள் முனிவனுடைய திருவருளினாலே பதினாறு வகையாகிய கந்தருவர் களைப் பெற்றாள்; வாள்போன்ற கண்களையுடைய கபிலையினிடத் தில் பத்துப்பிள்ளைகள் பிறந்தார்கள். எ-று. (கஉ)

[illegible] யளித்தார்

பொங்கி ராக்கதர் வானரர் கின்னரர் புலக
னங்கு மைந்தர்கிம் புருடர்பின் விலங்கையு மளித்தான்.

இ-ள். அங்கிரர் சனபதி என்கிற இருவரும் காந்தருவரைப் பெற்றார்கள்; அத்திரி என்பவர் சூரியசந்திர ரிருவரையும் பெற்றார்; புலத்தியர் இராக்கதர், வானரர்; கின்னரர் இவர்களைப் பெற்றார்; புலகரிஷி என்பவர் கிம்புருடரையும், மிருகங்களையும் பெற்றார். எ-று. (௧௪)

தருண ராகிய வசுக்களைச் சனபதி தந்தான்
பிருகு வென்பவன் கவியுடன் சவுனரைப் பெற்ற
னிருவ ரோடுசெந் திருவையும் பிருகுபெற் றெடுத்தான்
பருவ மைந்தரிற் கவியுமோ வெள்ளியைப் பயந்தான்.

இ-ள். சனபதி என்பவர் பின்னும் தருணம் பொருந்திய அஷ்டவசுக்களைப் பெற்றார்; பிருகு என்பவர் கவி என்பவனையும், சவுனகரையும் பெற்றார்; இவ்விருவரைப் பெற்றதுமல்லாமல். பின்பு இலக்குமியையும் பெற்றார் ; அப்பருவம் பொருந்திய பிள்ளைகளில், கவி என்பவர் சுக்கிரனைப பெற்றார். எ-று. (௧௫)

பரிய தானதன் றேவிமூக் கிரண்டினும் பரிதி
யுரிய வாண்பரி யாகியிந் திரியத்தை யூற்ற
வரிசை பற்றிய மருத்துவ ரிருவரும் வந்தார்
விரிச ராசரம் பிறந்தன பலபல விதமாய்

இ-ள். சூரியன் தன் மனைவியைச் சேருகிறதற்கு எத்தனப்பட்டபோது, அவளவற்குப் பொருந்தாமல் பெண்குதிரையா யோடினாள்; சூரியன் ஆண் குதிரையாய்த் துரத்த அவள் திரும்பிப் பார்த்தாள், அப்போது சூரியன் தனது பெண்சாதியின் இரண்டு மூக்கிலும் இந்திரியத்தை ஊற்ற, வரிசையாகிய அசுவினி தேவர்களிருவர் பிறந்தார்கள்; அதன் பின்பு விரிந்த *சரமும் அசரமும் அநேக விதமாயுண்டாயின. எ-று. (௧௬)

*சரம்—நடையுள்ளனவும், அசரம் — நடையில்லனவுமாம்.

* கலிவிருத்தம்.

கண்டுலகெ லாநமது கற்பனைகளென்றே
புண்டரிக வேதியன் மதத்தரி புரத்திற்
றண்டியெதிர் கொண்டுபகை தங்கவிசை வண்டார்
வண்டுளப மாயவனை வைதுரை வழங்கும்

இ-ள். இப்படி எவற்றையும் உண்டாக்கிய பிரமதேவன் இந்த உலகெல்லாம நம்முடைய சிருட்டியினு லல்லவோ உண்டாயின வென்று அகங்காரங்கொண்டு, அதனால் வைகுந்தத்தில் வலிதிற் போய் எதிர்த்துப் பகைகொள்ளும்படி சங்கீதம் பாடுகின்ற வண்டுகள் சூழ்ந்த துளபமாலையைத்தரித்த விட்டுணுவைப் பார்த்து அவமதித்துச் சிலவார்த்தைகள் சொல்லத் தொடங்கினன், எ-று.

எழுலக மேழுபில மேழு புயலோரே
ழாழிமுத லேழுகிரி யாம்வகை யியற்றி
வாழுமுயிர் யாவையும் வகுத்திட மனத்தாற்
பாழிகொண் மரீசிமுதன் மைந்தர்கள் படைத்தேன்

இ-ள். விட்டுணுவே? பதினான்கு லோகங்களையும், கறுத்த மேகங்களையும், சத்த சமுத்திரங்களையும், முதன்மையாகிய சத்த குலபருவதங்களையும் உண்டாகும்படி மனத்தினாற் புடைத்து இப்பொழுதுவாழ்கின்ற எல்லாவுயிர்களையும் உண்டாக்க வலிமையமைந்த மரீசிமுதலிய விருடிகளைப் பெற்றேன், எ-று. (௧௮)

மைந்தரா துமைந்தர்கள் குருக்களுடன் வானோர்
சந்திரன் முதற்பெரிய தானவர்க ளானோர்
கந்திருவர் கிம்புருடர் சித்தர்களொ டாதி
யிந்திரன் முதற்றிசைக ளெட்டினு மிருப்போர்.

* "அளவடி நான்கின் கலிவிருத்தமே" என்பதிலக்கணம்.

இ-ள். விட்டுணுவே? என்னுடைய பிள்ளைகளுடைய பிள்ளைகள் குருவாகிய பிரகஸ்பதியுடனே எல்லாத் தேவர்களும், சந்திர சூரியர்களும், அசுரர்களும், கந்தருவர், கிம்புருடர், சித்தர், சனகாதர்களும், தேவேந்திரன் முதலாகிய திக்குப்பாலகர் எட்டுப்பேருமாயிருக்கிறார்கள். இவர்களெல்லோரும் என்னாலல்லவோ உண்டானார்களென்று பின்னுஞ்சொல்லுவார் பிரமதேவர். எ-று. (௧௯)

எஞ்சுதலிலாவிறைவை னென்பதனையென்பேர்
கஞ்சனெனு மைந்தனை மறந்திடுகரத்தா
லஞ்சலில்படைப்பொழியி லெப்படியளிப்பாய்
செஞ்சுவரிலாதெழுது சித்திரமுமுண்டோ

இ-ள். குறைவில்லாத சகலத்துக்கும் நானே கர்த்தாவென்பதையும். என்பிள்ளைதான் பிரமனென்பதையும் மறந்துவிடு; நான் கையினாலே உலகத்தைப் படைக்காவிட்டால், நீ எப்படிக்காப்பாற்றுவாய்! சுவரில்லாமலெழுதுகிற சித்திரமுமுண்டோ! வென்று பின்னுஞ்சொல்லுவார் பிரமதேவர். எ-று. (௨௦)

அளித்திடுகளிப்பினை யகத்தினில்விடாயேல
வெளிப்படவொருத்தனை யளித்திடவிதிப்பேன்
குளிர்ச்சியகடற்கிடை குதித்திடதனுள்ளே
யொளித்திடுகரத்திர னுனைச்சருவுமுன்னே.

இ-ள். விட்டுணுமூர்த்தியே? சகலத்தையும் இரட்சிக்கின்றோமென்கிற மதத்தைவிட்டுவிடு; நீ விடாமற்போனால், உன் உத்தியோகத்தைநீக்கி மற்றொருவனையுண்டாக்கி இரட்சிக்கும் தொழிலுக்கு நியமித்துப்போடுவேன்; நம்முடைய புத்திர பௌத்திரர்களாகிய தேவர்கூட்டங்கள்வந்து உன்னைக்கொல்லும்படி வளைந்துக்கொள்ளுவதற்கு முன்னே திருப்பாற்கடலுக்குள்ளே குதித்து ஒளித்துப்போவென்று சொன்னார் பிரமதேவர். எ-று. (௨௧

விதந்தகமுனிப்பிருகு விட்டமுனிவாலே
பதந்துருவெடுத்தனை பகுத்தறிகிலாயோ
வதந்தனையுடற்களு மமைத்தபடியாலென்
கைத்தலமுமிப்படி கறுத்தபடிபாராய்.

இ-ள். ஞானசொரூபியாகிய பிருகுரிஷியிட்ட சாபத்தினால் பதந்துகரம் பூமியில் பிறந்தாய்: நீ அந்த பகுத்தறியவில்லையோ அப்படி நீபிறந்தபோதெல்லாம் அவ்வளவு பெரியவுனது உடல்களையெல்லாம் படைத்துப்படைத்து என்கைகள் காய்ப்பேறி இப்படிக் கறுத்துப்போயிற்று பாரென்று பின்னுஞ் சொல்வாராயினர். எ-று.

உந்திமலரோனென விகழ்ச்சியுரையாதே
முந்தமொருதூணிடை முளைத்தனையுனக்குத்
தந்தையெனவோவலது தாயெனவோசொல்
செந்தழல்பிறந்துகிலை தெப்பதறியாயோ,

இ-ள். ஓ விட்டுணுவே? நம்முடைய நாபிக்கமலத்தினால் தானமையமென்று நிந்தனை சொல்லாதே; முன்னாலே நீ ஒரு தூணினிடத்திலே பிறந்தாயே, அந்தத்தூணை உனக்குத் தகப்பனென்று சொல்லட்டுமோ! அந்தத் தூண் உனக்குத் தந்தையானால் எனக்கு நீ தகப்பனாவாய்; செந்நிறம்பொருந்திய நெருப்புருவிலினிடத்திலே பிறந்த மூங்கிலைத்தானே கொளுத்திப்போடுகிறதை அறியாயோ! அப்படி உன்னிடத்திலே நான்பிறந்தாலும் உன்னை அழித்துப் போடுவேனென்னுஞ் பிரமதேவர் எ-று. (உ௭)

மெய்தனிவைசொற்றன கொடும்பணையுவெதுப்பிக்
காதிடைதுளைத்தனல் புகட்டினகடுப்பக்
கோதமொடெழுந்துபுகை கொண்டனகைதொண்டே
மாதவன்மதித்தவன் மறுத்தினையுரைப்பான்.

இ-ள். பிரமன் இப்படிச்சொன்ன வார்த்தைகள் விட்டுணுவுக்கு இரண்டுகாதிலும் வேலாயுதத்தைப் பழுக்கக்காய்ச்சித் தொளைக்கவிட்டு உள்ளேசெலுத்திய நெருப்புப்போல் தகிக்க மிகுந்த கோபங்கொண்டு புகையெழும்பும்படியாக நகைத்து இவனுக்கு இந்த அகங்காரமவந்தது எந்தவிதத்தினாலேயென்று ஆலோசித்துச் சில வார்த்தைகளைச்சொன்னார் விட்டுணுமூர்த்தி. எ-று. (உச)

வந்தவழி தன்னையு நினைத்திலைமனத்தெ தன்
னுந்தியுன தன்னையுடன வுன்னுதலையில்லாய்
தந்தைகசிறுமைந்தர்பிழை தன்னையுணராரென்
றிந்தவுரைசொல்லினை யிகழ்ந்ததுபொறேனே.

இ-ள். பிரமாவே? நீ வந்தவழியையும் நினைத்தாயில்லை! என்னுடைய நாபியை யுனதுதாயென்று ஆலோசிக்கவும் இல்லை; தந்தைகளாயிருக்கிறவர்கள் பிள்ளைகளசெய்த பிழையை ஒருகுற்றமாக நினையாகளென்று இந்தவார்த்தை சொல்லினையோ! இனிமேல இப்படி பொறுக்கமாட்டேனென்று பின்னுஞ்சொல்லுவார் விட்டுணுமூர்த்தி. எ-று. (உரு)

கன்றுமதுவுங்கைட வபபகடுதானு
மென்றனையாாகவு மிழந்துயிர்குடித்தேன்
மன்றவொருதீமைசெயின் மைந்தனெனவுண்டோ
வன்றியுடனேனையு மறந்தெரிகிலாரோ.

இ-ள். கோபத்தையுடைய மதுவும், யானைபோன்ற கைடவனும் எனக்குப் பிள்ளைகளல்லவா! என்னையிகழ்ந்து எதிர்த்தபடியினாலே கொன்றுவிட்டேன்; நிலைபெற்ற ஒரு தீங்குசெய்தால் மகனென்று பார்க்கக்கூடுமோ! அஃதல்லாமல் தேகத்திலே ஒரு கட்டி கண்டால் அதையறுத்தெறிந்து சொஸ்தப்படுத்திக்கொள்ளாமலிருக்கின்றார்களோ மனிதர்கள். எ-று. (உசு)

பித்தனானதோர் தலை பிடுங்கியெறிபோதி
லத்தலைநமக்கென வமைக்கவிதியில்லா
யெத்தலைவனென்பதுனை யித்தகைமைகொண்டோ
னைத்தலையராமுடிகொள் பாரிடம்விதித்தாய்.

இ-ள்: ஓபிரமனே? பயித்தியக்காரனாகிய சிவன். உன்னுடைய தலைகளிலொன்றைப்பிடுங்கி எறிந்தகாலத்தில், அந்தத் தலையை மறுபடியுண்டாக்கிக்கொள்ள வகையில்லை; உன்னை எப்படித்தலைவனென்று சொல்லுகின்றது; இந்தத் தலையைக்கொண்டு தானோ படத்தையுடைய ஆதிசேடன் முடியிலிருக்கின்ற பூமியைப் படைத்தாயென்றார் விட்டுணுதேவர். எ-று. (உஎ)

மச்சவுருவங்கொடு மறைத்தொகுதிதந்தேன்
விச்சையுளதானவரை வென்றுயிர்குடித்தே
னச்சுமரமாமெனினும் வைத்தமரமொன்றே
யச்சமுறுகின்றனனழிக்கவரிதென்றே.

இ-ள். பிரமனே! சோமுகாசுரன் உன்னிடத்தில் வேதங்களைப் பிடுங்கிக்கொண்டு போனபோது. நான் மச்சாவதாரங்கொண்டு அவ் வசுரனைக்கொன்று வேதங்களை வாங்கித்தந்தேன்; அஃதல்லாமல் சாமர்த்தியமுள்ள அநேக அசுரர்களைக் கொன்று தேவர்களோடு உன்னையுங் காப்பாற்றினேன்; எட்டிமரமானாலும் தான்வைத்த மரமாகவிருந்தால் வெட்டார்கள்; அதைப்போல பிள்ளையான உன்னைக் கொல்லக்கூடாதென்று பயப்படுகிறேனென்றார் விட்டுணு. எ-று.()

என்றொருவருக்கொருவ ரெத்தனையுரைத்தார்
குன்றினர்புயத்தின்மிசை கைத்தலமடித்தார்
நின்றுலைகுதித்தனர் நெருக்கினர்சிரித்தார்
துன்றியகனற்பொறி யருக்கெழவிழித்தார்.

இ-ள். இப்படி ஒருவர்க்கொருவர் எத்தனை வார்த்தைகளையோ சொல்லிக்கொண்டிருந்தார்கள்; கோபித்துக்கொண்டு புறத்தின்மேல் கைகளாலே அடித்துக்கொண்டார்கள்; நின்று பூலோகத்தில் குதித்தார்கள்; நெருங்கினார்கள்; நிமிர்ந்தார்கள்; நெருப்புப்பொறி நெருக்கமாய்விழ சுறுக்கெனக் கண்களை விழித்தார்கள் எ-று. (உகூ)

வெற்புகள்பொடித்தன வெடித்ததுகடாகம்
பற்பலசுடர்க்கதிர் பனிக்கதிரொளித்த
சர்ப்பமுநெளித்தது தலைச்சுமைபொறாதே
கற்பமுடிவென்றமரர் கண்களையிமைத்தார்.

இ-ள். பிரமதேவரும், விட்டுணுமூர்த்தியும், சண்டைசெய்கிறபோது மலைகளெல்லாம் பொடியாய்ப் போயின; அண்டகடாகம படீரென்று வெடித்தது, பற்பல கிரணங்களையுடைய சந்திர சூரியர்கள் ஒளித்தார்கள் ஆதிசேஷன் தலைச்சுமை பொறுக்கமாட்டாமல் உடல் நெளித்துக்கொண்டான்; கற்பகாலம் வந்து உலகமழியப் போகின்றதென்று (இமையாநாட்டமுடைய) தேவர்கள் கண்களை இமைத்துக்கொண்டார்கள். எ-று. (ங0)

உடுக்கணமுகிற்கண முதிர்ந்தவுலகெல்லா
மிடிக்கலினில்விழுந்தன வெழுந்தனபராக
மடக்கினபகீரதிமுன் னைநதியெல்லாந்
திடுக்கொடுமுழங்கின திசைக்கரிகளெட்டும்.

இ-ள். நக்ஷத்திரக் கூட்டங்களும், மேகக்கூட்டங்களும் உதிர்ந்தன; உலகமெல்லாந் துன்பங்களோடு அடுக்குக் குலைந்து விழுந்து தூளெழும்பின; கங்கை முதலான நதிகளெல்லாம் தண்ணீரில்லாமல் வற்றிப்போயின; அஷ்டதிக்கிலு மிருக்கிற யானைகள் திடுக்கிட்டுப் பயந்தன. எ-று. (ஙக)

மேலினிதெடுத்தெறிவர் வீழ்வர்கடிதோடிக்
கோலியெதிர்குத்துகென நின்றிடுவர்குத்திச்
சாலமடிதொட்டளவில் சாரிகைதிரிந்தார்
மாலையுமிருட்டும்வல மாய்வருதன்மான.

இ-ள். ஒருவரையொருவர் மேலே யெடுத்தெறிவார்கள் கீழே விழுவார்கள்; மறுபடியும் எழுந்து விரைவில் ஓடிவளைந்து எதிரே நின்று குத்தென்று சொல்லுவார்கள்; அப்படிக் குத்திக்கொண்டு மிகுதி மடியைப் பிடித்துச் சூறைபோல வேகவிசை சுழன்று திரிந்தார்கள்; அந்திநேரமும் இருளும் வலமிடமாக வருதலை யொத்திருக்கும்படி. எ-று. (௬௨)

ஊருவனதத்துவன செல்வனவிண்ணோடே
சேருவனநின்றன திரிந்தனதிரட்டார்
தாருவகையிற்றன ரழைந்ததிருளெங்கு
மேருவரையுக்கதெழு வேலையளறுக.

இ-ள். அவ்வேளையில், உலகத்தில் ஊர்ந்து போகின்ற சீவன்களும், தவழ்கின்றவைகளும், நடக்கின்றவைகளும், பறகுஞ்சீவராசிகள்போல ஆகாயத்தில் பறந்தன; நிலையாகநின்ற விருக்ஷமுமலைகளுந் திரிந்தன; திரளாக நிறைந்த ஐந்துவகையாகிய தேவதருக்கள் பொடிப்பொடியாய்ப் போயின; எவ்விடமும் அந்தகாரம் நிறைந்தது மகாமேரு அசைந்தது; சத்தசமுத்திரங்களுஞ் சேறாயின. எ-று. (௬௩)

அந்தமுடிவெல்லைதனி லஞ்சிமையோர்தா
மிந்திரனையெய்தினர்க ளெய்தியுதைரைக்கு
முந்தியவனுற்றதுயர் யாவையுமொழிந்து
வந்தவரவேதென வருத்தமைசெய்கின்றார்

இ-ள். சருவசங்காரகாலம் வந்ததென்று சொல்லும்படி இருவருஞ் சண்டைசெய்யும் அந்த வேளையில், தேவர்களெல்லாரும்

பயப்பட்டுத் தேவேந்திரனிடத்திற்போய்ச் சேர்ந்து தங்களுடைய துக்கத்தைச் சொல்லுவதற்கு முன்னே, தேவேந்திரன் தான்பட்ட துன்பங்களெல்லாஞ் சொல்லிப் பின்பு நீங்கள் வந்தகாரியம் என்னவென்றுகேட்கத் தேவர்கள் சொல்லுவார்கள். எ-று. (௩௪)

ஆரணனுநாரணனு மானவிருவோருந்
தாரணியின்மேலமிகு சமர்த்தொழில்விளைத்தார்
பேரணியவேறுகதி யில்லையெவருக்குங்
காரணனையேதொழுதல் காரியமிதென்றார்.

இ-ள். பிரம விட்டுணுக்களாகிய இருவரும் பூமியில் மிகுந்த யுத்தத்தைச் செய்கின்றார்கள்; எமக்குப் பிழைக்கத்தகுந்த மார்க்கம் வேறேயில்லை; எல்லாருக்குங் காரணமாயிருக்கிற பரமசிவனைத் தொழுது இந்தச் செய்தியைச் சொல்வதே காரியமென்று சொன்னார்கள் தேவர்கள். எ-று. (௩௫)

நாயகனிசைந்துடனா காகவுலகத்தோர்
தூயமலர்போலடி துதித்தரிவைபாகா
மாயமுடன்மாலயன் வருத்தமதுதீராய்
தாயலதுமைந்தர்துணை தாரணியிலுண்டோ.

இ-ள். இப்படிச் சொல்லத் தேவேந்திரனும் சம்மதித்துப் பின்பு, அவனோடு தேவர்களெல்லாரும் போய்ச் சிவனுடைய பரிசுத்தமாகிய தாமரை மலர்போன்ற பாதத்தைத் தொழுது, மங்கைபாகனே! மாயஞ்செய்கின்ற விட்டுணுவும், பிரமனும் சண்டைசெய்வதனால், வருந்துக்கத்தைத் தீர்க்கவேண்டும்; பிள்ளைகளுக்குத் தாயையல்லாமல் மற்றொரு துணை பூமியிலுண்டோ! என்று சொன்னார்கள் தேவர்கள். எ-று. (௩௬)

உருட்படுசகட்டைநிக ருற்றுலகின் மீதே
யிருட்படுபிறப்பினோ டிறப்பினையுறாதே
பொருட்பெறவுனக்கடிமை புக்களவிலாவுன்
னருட்கடல்குளித்திட வடைக்கலமதானோம்

இ-ள். உருண்டுகொண்டுபோகின்ற வண்டியினுடைய சக்கரம் போல், அஞ்ஞானம் பொருந்திய பிறப்பையு மிறப்பையும் மாறிமாறி யடைந்து வருத்தத்தை யனுபவியாமல் மோட்சத்தைப்பெறவுனக் கடிமையாகப் புகுந்து உன்னுடைய அளவில்லாத கிருபைக்கடலில் குளிக்க அடைக்கல மானோமென்றார்கள் தேவர்கள். எ-று. (௧௭)

புழுக்குடையுடற்சுமை பொறுக்கமுடியாத
விழுக்குடையவிச்சைகெட விசைசயருள்வானே
முழுக்கடலிடைத்தின முழுகுறினுமாறா
வழுக்கமலமற்றிட வடைக்கலமதானோம்

இ-ள். அநேக புழுக்கள் குடைந்து கொண்டிராநின்ற உடற்பாரத்தைப் பொறுக்கமுடியாத இழுக்காகிய அஞ்ஞானங்கெடப் பிரியத்தினாலே கிருபைசெய்கின்ற சுவாமியே! பெரிய சமுத்திரத்தினிடத்தில் தினம்முழுகினும் போகாத மும்மலமாகிய அழுக்கற்றுப்போக அடைக்கலமா யும்மைச சேர்ந்தோ மென்றார்கள். எ-று. (௧௮)

எண்ணமினிவேறிலை யெமக்கருள்செயென்றே
கண்ணுதலைவிண்ணவர்கள் கற்றுமொழிபோதி
லண்ணலுமுணர்ந்தன னனைத்துயிரினுள்ளே
யெண்ணெயெனநிற்குமலை யீசனிகரிலானே.

இ-ள். இனிமேல் வேறே ஆலோசனை யில்லை, எங்களுக்குக் கிருபை செய்யுமென்று சிவனைத் தேவர்கள் புகழ்ந்து தோத்திரஞ்

செய்கையில், சுவாமியும் அவ்விருவருக்கும் வந்த சண்டையின் மூல த்தையறிந்தார்; எல்லா வுயிர்களிடத்திலும் எள்ளினிடத்து நெய் போல் நிற்கும் சுவாமி இது அறியமாட்டாரோ! அறிவார். எ-று. ()

அறுசீரடியாசிரியவிருத்தம்.

நடுக்கமுறு முனிவரெலா மமரரெலாம்
　பயந்தவிர நாகமீது
படுக்கைபுரி திருமாலும் பங்கயத்தி
　லுறுமயனும் பகைமைதீர
வடுக்கியிடும் புவனமெலா மடுக்கழியா
　திருக்கமனத் தருள்வ தாகித்
தடுக்கரிய * தழலுருவத் தொருவரையா
　யிருவரையுந் தடுப்ப தானான்.

இ-ள். நடுக்கமடைந்த முனிவர்கள் தேவர்களெல்லாரும் பயம் நீங்கும்படிக்கு சர்ப்பசயனத்தில் நித்திரைசெய்கின்ற விட்டுணுமூர்த்தியும் தாமரைப் புட்பத்தில் வீற்றிருக்கின்ற பிரமதேவரும், ஒருவருக்கொருவர் பகையை நீங்கவும். அடுக்கடுக்காயிருக்கும் அண்டங்களெல்லாம் அடுக்கழியாம லிருக்கவும் கிருபை செய்வதாய்த் தடுத்தற்கரிய அக்கினி சொரூபத்தோடு கூடிய ஒருமலையாகி இவ்விருவரையுந் தடுக்கும்படி எழுந்தருளினார் பரமசிவன். எ-று.　　(௩௦)

பாதலத்திற் பணிகளெலாம் விழுதாக
　வதன்கீழிற் பருவே ரோடிப்
பூதலத்திற் கிளைத்திமையோ ருலகெல்லா
　மலர்ந்து மலர்ப் புண்டரீகன்

* மாசிமாதத்திலே அமரபக்கத்துச் சதுர்த்தசிதிதியிலே இரவு, மகா நிசிக்காலத்திலே சோதியாகத் தோன்றினார்.

மீதலத்து முகடுடைத்துக் கடாகவெளி
  கடந்துபெரு வெளிக்கு மேலா
மாதலத்துக் கிதுவுமொரு கனன்மேரு
  வடுத்ததெனை வளர்ந்த மாதோ

இ-ள். பாதாள லோகத்திலிருக்கிற பாம்புகளெல்லாம் அம்மலைக்குச சல்லிவேராகவும், அதின்கீழ் பருத்த வேரோடி பூமியிற்பெரிதாய் கிளைத்துத் தேவ லோகங்களெல்லாந் தாண்டி பிரமலோகத்து முகட்டையுடைத்து அண்டகடாக வெளியைக் கடந்து அதற்கப்பாலிருக்கும் பெரியவெளிக்கு மேலாயிருக்கிற இடத்துக்கும் அக்கினிசொரூபமாகிய மகாமேரு அடுத்ததென்று சொல்ல வளர்ந்தது. ()

முளைக்குநெடுஞ் சுடரிரவி புரவியுல
  வாவுலகை முழுது மோடிக்
கிளைக்குமணி யிருளகற்ற வேற்றிவைதத
  விளக்கெனவே கிளர்கை யாலே
யளக்கரெலா மளப்பரிய வடவையழல்
  பரந்ததெனை வரத்த மானத்
திளைக்குமெழு கிரிகளெல்லா மதுசொரிந்த
  சிறுபொறிபோற் சிவந்த மாதோ

இ-ள். உதயமாகி நெடுந்தூரங் கிரணங்களை வீசுகின்ற சூரியனுடைய தேரிற்கட்டிய குதிரைகள் சஞ்சரிக்கக்கூடாத உலகமெல்லாம் ஓடி கிளைத்த நீலமணிபோலும் கரிய இருளை யோட்டுவதற்கு ஏற்றிவைத்த விளக்குபோல் பிரகாசிப்பதனால், சமுத்திரமெல்லாம் கொளலுவதற்கரிய வடவாமுகாக்கினிபரந்ததுபோலச சிவப்புநிறம் பொருந்த சத்தகுல பர்வதங்களெல்லாம் அந்தப் பிரகாசத்தினால் அந்த அக்கினிமலைசொரிந்த அக்கினிப் பொறிகள் போலச் சிவந்தன. எ-று. (அ௨)

கலி நிலைத்துறை.

வானக்கண்ணழ லாயதுகண்ட மலரோனுங்
கானக்கண்ணனு மஞ்சியகன்றார் கரைகாணார்
ஞானக்கண்ணினர் காணுமதல்லா னவைசேரு
மீனக்கண்ணின ருக்கெளியானோ வெம்மானே.

இ-ள். இப்படி ஆகாச பரியந்தம் அக்கினி சொரூபத்தைக், கண்ட பிரமனும், வேணு நாதத்தைச செய்கின்ற கிருஷ்ணனாகிய விட்டுணுவும், பயப்பட்டு ஒதுங்கி நின்றார்கள்; ஞானக் கண்களை யுடையவர்கள் காணுவதல்லாமல் குற்றம் பொருந்திய ஈனமாகிய மூசதகிற கண்ணுடையவர் காணகிறதற்கு எளியவரோ! நம்மு டைய பரமசிவன். எ-று. (சங)

அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

கண்ணிலள விடவரிய சுடரினைக்கண்
டிருவ ருமாய்க் கவலையாறு
ரெண்ணிலெதி னடிமுடியை யறிபவரே
பெரியவரென் றிசைத்தா ரிங்க
மண்ணினடி யறிவனெனப் பணவிடை யிற்
றாககமிக்கோன் வராக மானான்
விண்ணின்முடி யறிவெனன வெகினவடி
வெடுத்தயனும் விரைந்து போனான்.

இ-ள். கண்களாலே இவ்வளவுதூரம் இந்த மலை போயிருக் கிறதென்று. அறியக்கூடாத பிரகாசமான மலையைப்பார்த்து. இர ணடுபேரும் துன்பத்தையுடையவராய் இந்த மலையினது அடியை யாவது முடியையாவது அறிகிறவரே பெரியவரென்று ஒருவருக் கொருவர் சொல்லிக் கொண்டார்கள்; அப்பொழுது சர்ப்பததில

நித்திரை செய்கிறவராகிய விட்டுணுமூர்த்தி இந்த மலையினடியை நாணிந்து வருகின்றேனென்று வராகவடிவானான்; இந்த மலையின் சிகரத்தைக் காணுகின்றேனென்று பிரமனும் அன்னபட்சியாகி ஆகாயத்திற் பறந்தான். எ-று. (சச)

மெத்தாமரைக் கணத்தினுக்கா யிரங்காதம்
பறந்தயனார் விரைந்து போனார்
துத்தியரா வெடுத்தபுவி கணத்தினுக்கா
யிரங்காதந் துளைத்துப் போனா
ரத்தகையோர் செயலுரைக்கிற் கனகமணி
நெடும்பூட்டுக் கருகி லோடு
நித்திலப்பொற் குண்டிகையு நீலமணிக்
குண்டிகையு நிகர்த்த மாதோ.

இ-ள். சொல்லப்பட்ட அரைக் கணத்தில் பிரமதேவா ஆயிரங் காதவழி பறந்து மேலாகப்போனார்; படத்தையுடைய ஆதிசேடன் சுமந்த பூமியை அரைநொடியில் ஆயிரங் காததூரம் தொளைத்துக்கொண்டு விட்டுணு கீழாகப் போனார்; அஃதெப்படியிருந்ததென்றால், அம்மலை தங்கமயமாகிய ரத்தினப் பூட்டைப் போலவும், அதில் இறைக்கிறதற்குக் கட்டிவிட்டிருக்கின்ற நீலரத்தினத் தோண்டிபோலவும் முத்துக்களிழைத்திருக்கிற அழகிய தோண்டி போலவு மிருந்தது. எ-று. (சரு)

பூவுலகை யரியகன்று கீழுலகின்
முறைமுறையே புகுந்து போந்து
காவலுறு மாவலிதன் போகவதி
யெனும்புரமுங் கடந்து மேவித்

தேவர்தொழும பரஞ்சுடர்வா ழாடகே
சுரங்கரத்துஞ் சிரத்தும் போற்றி
மூவுலகை முதலளந்தோ னேழுலக
மளந்துமதன் முடிவு காணான்.

இ-ள். வராகவடிவமெடுத்த விட்டுணுவானவர் பூலோகத்தைக் கடந்து, அதின்கீழிருக்கிற ஏழுலகத்தையும் முறையே தொலைத்துக்கடந்துபோய் மாவலிசக்கிரவர்த்தி காவலிலிருக்கிற போகவதி பட்டினத்தைத்தாண்டி, அப்புறம் தேவர்கள்வணங்கும் பிரமசொரூபமாய் விளங்குகின்ற ஆடகேசுரத்தைக்கண்டு கைகளினாலும் சிரத்தினாலும் வணங்கி முன்னே மூன்றுலகத்தையு மளந்தவர் இப்போ தேழுலகங்களை அளந்தும் அந்தமலையினடியைக் காணமற்போனார் எ-று. (சசு)

வளர்ப்புடைய பிறைபோல வளர்மருப்புந்
தேய்பிறைபோல் மழுங்கிப்போகக்
குளப்படியு முகநுனியும் பின்னைத்தேடு
மாசையைப்போற் குறைந்துபோக
வளப்பரிய துயரளவிப் பத்துநூறாண்
டகன்றதற்பி னரனை வாழ்த்தி
யிளைப்பதுவுஞ் சலிப்பதுமற்
றெழுதலமு மிடர்க்கடலு மேறினனே.

இ-ள். அப்படி மகாவிட்டுணு வராகவடிவங்கொண்டு தேடுகிற போது வளர்பிறைபோல் நாளுக்குநாள் வளர்ச்சியுற்ற இரண்டுகொம்புகளும் தேய்பிறைபோல்குறைந்து மழுங்கிப்போகவும், குளம்புகளும் முகத்தினுனியும் தேடுமாசை பின்பு எப்படி குறைந்துபோயிற்றோ ! அப்படித்தேய்ந்து குறைய எண்ணக்கூடாத துக்கசமுத்திரத்தில்விழுந்து ஆயிரந்தேவவருஷகாலம் தேடியுங்காணமல் பின்

புதெளிவுவந்து இது சிவனுடையசெயலென்றறிந்து அவரைத்தியானஞ்செய்து இளைப்புஞ்சலிப்பும் நீங்கித் தன்னுடைய துக்கசமுத்திரத்தையும் எழுதலத்தையும் தாண்டிவந்தார். எ-று. (௪எ)

தம்போரை முதற்றடுக்கத் தழற்பிழம்பா
யெழுந்துவந்தத் தலத்தைச் சார்ந்தா
னம்போத னிதன்முடியி னளவறியா
னெனமனத்தி லையந் தீர்ந்தா
னம்போருக் கரியானைச் சேயானைத்
தனதுவிழி நயனத தோடே
யைம்போதைப புனைவானைப் பலகாலும்
பணிந்துருகிப் பரவிநின்றான்.

இ-ள். தனக்கும்பிரமனுக்கும் வந்தகலகத்தைநீக்கும்படி. அக்கினிசொரூபமாக எழுந்தத்தலத்தைச்சேர்ந்து அழகியதாமரைப் பூவிலிருக்கிறபிரமன் இந்த மலையின்முடியை அறியமாட்டானென்று நிச்சயஞ்செய்துகொண்டு, நமபாதமனிதாகளுக்கு அரியவரை எப்படிப்பட்டவர்களுக்கும் தூரமாகவிருக்கிறவரைத் தம்முடைய கண்ணுங் புட்பத்தோடு அழகியபுட்பங்களைத் தரிக்கின்றவரைப் பலதரமும் வந்தனஞ்செய்து உள்ளமுருகிப்பரவினா விட்டுணுமூர்த்தி. எ-று. (௪அ)

கலி விருத்தம்.

இன்னதா மிவன்செய விருக்க விங்கிதன்
முன்னமே யழற்கிரி முடியைத் தேடவே
யன்னமாய்ப் பறந்தவ னரைக்க ணத்திலே
மன்னுமோ ராயிரக் காதம் வாவினான்.

இ-ள். இந்தப்பிரகாரம் இந்தவிட்டுணுவிருக்க, இதற்கு முன்னே அக்கினிமலையின்முடியைத்தேட அன்னப்பட்சியாகிப் பறந்த பிரமன் அரைக்கணத்திலே ஆயிரங்காதவழிதாண்டினார். எ-று. (௪௯)

கீறியே யண்டகோ ளகையுங் கீழுற
வேறி * யோராயிர மாண்டுமேவினு
னூறுநூ றாயிரங் காத நோக்கினு
மீறிலா திருந்தகவ் வெரியின் றாணமே.

இ-ள். அண்டகோளகையும் கிழிபடக்கிழித்துப்பறந்து ஆயிர வருடங்தேடினார்; அப்படி அநேக நூறாயிரங்காதங் காண்டிப்போ பப்பார்த்தாலும் முதல்பார்த்ததுபோலவே முடிவில்லா திருந்தது அந்த அக்கினிஸ்தம்பம். எ-று. (௯௦)

சிறையெலா முதிர்ந்தன விசையுந் தீர்ந்தன
நிறைவதா மிடுக்கணு முயிர்ப்பு நீண்டன
குறையெலாம் வளர்ந்திடத் தனிமை கூர்தலான்
மறையினை னிவையிவை மனத்தி னெண்ணினான்.

இ-ள் அப்படி பிரமன் அன்னமாய்ப் பறந்து போம்போது, சிறகெல்லா முதிர்ந்துபோயின; விசையும் அடங்கிற்று; குறைவில்லாத துக்கமும் பெருமூச்சும் அதிகப்பட்டன; மனக்குறைகளை ஒருவருமில்லாமல தான ஒன்றியானபடியினாலே பிரமா சிலவற்றை மனத்திலெண்ணினான். எ-று. (௯௧)

அரியமா லிதனடி யறிந்து மீளுமோ
தெரிவுறா திடையிலே திரும்பு மோவென
வரியதா கியதுய ரூச லாடினு
னெரியுறு மெழுகுபோ லிளகுஞ் சிந்தையான்.

இ-ள் அரியமகாவிட்டுணு இந்த அக்கினிமலையினுடைய அடியையறிந்து திரும்புவானோ! கொஞ்சதூரந்தேடி இனிமேல்தேடக்கூடாதென்று திரும்பிவருவானோ! என்கிறதுக்கமாகிய ஊசலி

---

* விட்டுணுவும் பிரமனும் பன்றியும் அன்னமுமாகத் தேடினார் என்பதை "விஷ்ணுர்வை வாராகம் ரூபமாஸ்தாய, எனவும், ப்ரஹ்மாவை ஹம்சோபூத்வா" எனவும் வரூஉம் இருக்குவேத மகாமந்திர வசனங்களால் தெளிக.

லிருந்தாடினார். நெருப்பிலேயிட்ட மெழுகுபோல் இளகிய மனமுடையவனாகிய பிரமதேவன். எ-று. (௫௨)

மற்றிது சிவனென மனத்தி னெண்ணிலே
னுற்றரி கன்னையு முறவு கொண்டிலே
னிறுதைநாள் வரைக்குமிவ் விடர்க்குண் மூழ்கினேன்
சிற்றறி வுடைமையோ செய்த தீமையோ.

இ-ள். இந்தமலையைச் சிவனென்று அறியாமற் போனேன் பகைத்துக்கொள்ளப்பட்ட விட்டுணுவையாவது உறவுகொள்ளாமற் போனேன்! அனாதிமுதலின்றுவரையிலும் வெகுகாலமாய்த் துக்க சமுத்திரத்தில் மூழ்கினேன்! என்னுடைய சிறியபுத்தியினாலே யோ! பூர்வம் நான்செய்த பாவத்தினாலேயோ! என்று விசனத்தையடைந்தான் பிரமன். எ-று. (௫௩)

எய்தினே னுடியறிந் தேகிலே னெனும்
பொய்களை யுரைக்கினும் பொருந்தவே யுரை
செய்துணை பிறிதிலை யென்று தேம்பினான்
* கைதைபூவின் மடல்வரப் பின்பு கண்டனன்.

இ-ள். இவ்வளவுதூரந் தேடிவந்தும் முடியையறியாமற் போனேன்! ஆனாலும் இனிமேற்போய் விட்டுணுவினிடத்திற் பார்த்தேனென்று பொய்சொன்னாலும், ஒத்தாசையாகப் பார்த்தானென்று பொய்ச்சாட்சிகொள்வதற்கு ஒருதுணையுமில்லையேயென்று விசனப்பட்டான்; அச்சமயத்தில் தாழம்பூமடல் ஒன்றுமேலே யிருந்திறங்கப்பார்த்தான் பிரமன். எ-று. (௫௪)

இம்மட லெங்குற்று வருவ தென்னுமுன்
னம்மட லணைந்ததங் கதனை யேற்றனன்
செம்மறன் முடியில்வீழ் † செம்ம லானையால்
மெய்ம்மைமே ருயிர்ப்பதாய் விடுமி னென்றதே.

* கைதை—தாழம்பூ. † செம்மல்—பழம்பூ.

இ-ள் இந்தத் தாழைமடல் எங்கேயிருந்து வருகிறதென்று ஆலோசிக்குமுன்னே, தாழம்பூ பிரமனுக்குச சமீபத்தில் வர, அதைக் கையினாலே பிடித்தான்; அது பரமசிவனுடைய சிரத்திலிருந்து தவறிவிழுந்த பழம்பூ வாகையால் மெய்மையான பெருமூச்சோடு என்னைச் சீக்கிரத்தில் விட்டு விடுவாயென்று சொல்லிற்று. எ-று. (௫௫)

ஏரணி கைதையே யிங்கு நீவருங்
காரண மேதெனக் கமலன கூறினான்
ஆரண னாரண னளவிடா முதற்
றாரணி முடியினுந் தவறி வீழ்ந்தனன்.

இ-ள். அந்தச் தாழம்பூ சொலலியதைக் கேட்டு, அழகான தாழம்பூவே? எங்கேயிருந்து இங்குவந்தாயென்று பிரமன்கேட்க டாமனாலும், விட்டுணுவினாலும் அறியக்கூடாத பரமசிவத்தினுடைய சிரத்திலிருந்து தவறி விழுந்தேனென்று சொல்லிற்று. எ-று (௫௬)

தார்ப்பொலி முடியினுந் தவறி வீழ்ந்தபின்
னாற்பதி னாயிரம வருட நண்ணினே
னேற்பது விடுகவென றிசைப்ப வெந்தையைப்
பார்ப்பது விடுத்தயன் பகரவ தாயினான்.

இ-ள். கொன்றைமாலை பிரகாசிக்கின்ற சுவாமியின் திருமுடிமேல் நின்றுவிழுந்து நாற்பதினாயிரம் வருஷங்களாக வந்தேன். இன்னும் நான் பூமியிற் போகவில்லை; வருத்தத்தோடு வருகிறேன், என்னைப் பிடிக்கவேண்டாம், விட்டுவிடென்று தாழம்பூ சொல்ல, பிரமன் சுவாமியைத் தேடுவதை வெறுத்துச் சிலவார்த்தை சொலலத் தொடங்கினான். எ-று. (௫௭)

துன்னிய கைதையே துணையுமாய் நமக்
கின்னமு மலைவுறு திடுக்க ணீக்கினு

னுன்னிலு முயிர்த்துணை யுறவுவேறிலை
யன்னிய னல்லனு னனமு மல்லனே.

இ-ள். என் சமீபத்திலடைந்த தாழம்பூவே? நீ எனக்குத் துணையாயிருந்து நானின்னமுந் தேடி யலையாமல் என் வருத்தத்தை நீக்கினால், 'உன்னைப் பார்க்கினும் உயிர்போன்ற துணையும் உறவும் வேறில்லை; நானும் அன்னிய னல்லன். அன்னப் பக்ஷியுமல்லன் என்று சொன்னான் பிரமன். எ-று. (௩அ)

நாமமோ நான்முக னுனு மாலுமா
யேமமா மிதற்கள விசைக்க வெண்ணினோம்
பூமிகீ ழிடந்தவன் போயினான் மனத்
தீமையேன் றிருமுடி தேடிக் காண்கிலேன்

இ-ள் என் பெயரோ பிரமன்; நானும் விட்டுணுவுங் கூடி அக்கினி சொரூபமாகிய இந்தமலையி னளவைத் தெரிந்துகொள்ள வெண்ணினோம்; பூமியின் கீழிடத்தைப் பிளந்துகொண்டு அடியை அவன் தேடப்போனான்; பாவியாகிய நான முடியைக்காண வெகு நாள் தேடியுங் காணகிலன். எ-று. (௩௯)

அடிதலை வரவிது வதுகொண் டென்பய
னொடியயின் வரவினு னினைத்த தெய்தினாற்
படியளந் தவனுடன் பறவை யாமிவன்
முடியறிந் தானென மொழிதல் வேண்டுமே.

இ-ள். ஆதியந்தமாக நடந்த செய்தியிது, அதைக் குறித்துப் பேசுவதினாற் பலனென்ன; பொருமை பொருந்திய உன்னுடைய சல்லாவினாலே நினைத்தகாரிய முடிந்தால் தான் பயன்; பூமியை யளந்த விட்டுணுவினுடன் பறவையா யுருவெடுத்த இப்பிரமன்

சிவனுடைய முடியை யறிந்தானென்று நீ சொல்லவேண்டுமென்று பின்னுஞ் சொல்லுவான் பிரமன். எ-று. (௬௦)

வஞ்சமென் றிகழ்ந்திடேல் வருந்தி னார்க்குயிர்த்
தஞ்சமா மெனிற் பெறும் பொய்யுஞ் சாற்றலா
மஞ்சியே சொலத்தகா மொழியு மன்றிது
நஞ்சமுண் டமைவரே நண்பு வேண்டினார்.

இ-ள். தாழம்பூவே? கேள், இது வஞ்சனைத் தொழிலென்று இகழாதே; யாதோ ஒரு துன்பத்தை யடைந்தவர்க்கு உயிர்ச்சேதம் வருமாயின், அது பிழைத்தற்கும் பெரிதாகிய பொய்யையும் சொல்லலாம், இது பயப்பட்டுச் சொல்லக் கூடாத வார்த்தையுமல்ல; சிநேகம் வேண்டினவர்கள் தம்முடைய நண்பன் விஷத்தைத் தின் என்றாலுந் தின்று சினேகிதன் பேச்சைத் தட்டாமல் கீர்த்தி நிலைக்கச் செய்வார்கள். எ-று. (௬௧)

[உண்ணு என்னும் செய்வே னெச்சம் உண்டு எனச்செய்தெனெச்சமாகத் திரிந்து அங்கு இழிவு சிறப்பும்மை தொக்குநின்றது. ஏகாரம் தேற்றத்தின் கண் வந்தது.]

கண்ணுதன் முடியில்வாழ் கைதையே பிறி
தெண்ணுவ தொழிகென விசைந்து போந்தது
விண்ணினு மிருந்துகீழ் விரைந்து வேதியன்
மண்ணுல களந்தமான் மருங்கு நண்ணினான்.

இ-ள். பரமசிவனுடைய முடியில் வாழ்கின்ற தாழம்பூவே? வேறே ஓர் ஆலோசனையுஞ் செய்யவேண்டாம்; இதற்குடன்படென்றுசொல்லித் தாழம்பூ அதற்கிசைந்து வந்தது; ஆகாயத்தினின்றும் சீக்கிரத்தில் பிரமன் மண்ணளந்த விட்டுணுவினிடத்தில் வந்து சேர்ந்தான். எ-று. (௬௨)

சீதரா கேட்டி யென் வரவின் செய்கையைக்
காதநூ றாயிரங் கணத்தி லேகடந்
தாதியான் முடியறிந் தணுகி னேனென
வோதினான் கைதையு முள்ள தென்றதே.

இ-ள். விட்டுணுவே? என்னுடைய நல்வரவைக் கேள், ஒரு நொடியிலே நூறாயிரங்காதம் பரந்து எல்லாருக்கும் ஆதியாகிய சிவனுடைய சிரம்பார்த்து வந்தேனென்று சொன்னான்; தாழம்பூவும் நிஜந்தான் பிரமனே பார்த்தானென்று சொல்லிற்று. எ-று. (சுஙு)

எழுசீரடி யாசிரியச் சந்த விருத்தம்.

அக்கண மழற்கிரி வெடித்தது வெடித்தவிர்
வித்தினி லரக்க ரிமையோ
ருக்கனர் திசைக்களிறு கக்கின வரக்கரை
யுருக்கிய தெனக் குருதிநீர்
செக்கரொளி மிட்கிட முருக்கிதழ் கறுக்குமெய்
சிவப்பொளி வெளுத்த வடிவாய்
முக்கண னதற்கிடை முளைத்தனன் முகத்திலவ
முப்புர மெரித்த நகையே.

இ-ள். அப்படி பிரமன் சொன்ன அந்தக்ஷணமே, அக்கினி மலை படீரென்று வெடித்தது; வெடித்த சத்தத்தில் இராட்சதாகளு தேவர்கள் திகைகிட்டு உயிர் சோர்ந்தார்கள்; திக்கில் உள்ள யானைகள். சூரியர்களை உருக்கிசசாய்த்தா லெப்படியோ அப்படி இரத்தஜலத்தைக் கக்கின; செக்கர் வானத்துப்பிரகாசம் மழுங்கிப் போம்படியாகவும், முருக்கம்பூவிதழ் கறுக்கும்படியாகவும், சிவந்த தமது திருவுருவின் ஒளிவுபொருந்திய நிறம் விபூதியினால் வெளுத்த,

வடிவாய்த் தோன்ற அந்த வெடிப்பில் நின்றும் பரமசிவன் முப்புர
த்தை எரித்த நகை அவர் முகத்தில் தோன்ற எழுந்தருளினார்.
எ-று. (சுஅ)

முண்டக வகந்தையின் மொழிந்தவுரை நன்றென
மொழிந்து நகை கொண்ட வளவே
அண்டபகி ரண்டமு நடுங்கின வொடுங்கின
வடங்கின விடுஞ்சு டரெலாந
கொண்டலு மறைந்தன சிறந்தன விறந்தன
குறைந்தன நிறைந்த னகுவா
லெண்டிசை திரிந்தன கரிந்தன பொரிந்தன
வெரிந்தன விரிந்த தருவே

இ-ள். ஓ பிரமனே? உன்னுடைய அகங்காரத்தினாற் சொன்
னசொல் நன்றாயிருந்ததென்று சொல்லி நகைத்தபோது, அண்டப
கிரண்டங்களெல்லாம் கிடுகிடென்று நடுங்கி யொடுங்கிப்போயின,
சூரிய சந்திரருடைய பிரகாச மடங்கிப் போயின; மேகங்கள் மறை
ந்தன; சிறந்து நிலையாயிருக்கிறவைகளெல்லாம் இறந்தன; குறை
ந்தவைகளெல்லாம் நிறைந்தன; கூட்டமாகிய திக்குகள் அலைந்த
ன; பரவியிருந்த மரங்களெல்லாம் கரிந்தும் பொரிந்தும் எரிந்தும்
போயின. எ-று. (சுகூ)

கலி விருத்தம்.

அழிந்தன னயனென வமர ரஞ்சினார்
குழிந்தது நிலமெனக் கொள்ளை யாமலர்
பொழிந்தனர் நெடியவற் குவகை பூத்தது
கழிந்தது மலரவற் கிடும்பைக் கங்குலே.

இ-ள். தேவர்களெல்லோரும் பிரமன் இன்றே அழிந்துபோனா
னென்று பயப்பட்டார்கள்; பூமி பள்ளமாகும்படி கொள்ளைகொள்ளை

யாகப் புட்பமாரி பொழிந்தார்கள்; நெடுமாலுக்குச் சந்தோஷம்வந்த து; பிரமனுக்கு அகங்காரமென்கிற இருணீங்கிப்போயிற்று. எ-று.

பாடினான் பரவினான் பரவ சத்தினு
லாடினு னோடினு னளவிடா முதல்
கூடினு னெவ்வரங் கொள்ளுகே னெனத்
தேடினான் சிவனையத் தெளிந்த செங்கண்மால்.

இ-ள். அப்போது தெளிவையடைந்த விட்டுணுதேவர், அக்கி னிமலையி னிடத்திலிருந்து எழுந்தருளிய பரமசிவனைப் பாடினார்; வந்தனஞ் செய்தார், பரவசங்கொண் டானந்தக் கூத்தாடினார்; நா ன்கு திக்கிலும் ஓடினார், யாவராலு மளவிடக்கூடாத இச்சுவாமியை த்தரிசித்துக் கூடினவனுகி, இனிநா னென்னவரங் கேட்பேனென னுலோசனை செய்தார். எ-று. (சுஎ)

ஆசையா லுருகுமவ் வரித னன்புகண்
டீசனும் பலவர மினிது நல்கினான்
வாசமா மலரவ னுனக்கு மண்ணின்மேல்
பூசையுங் கோயிலும் போக வென்றனன்

இ-ள். இப்படி மிகுந்த பக்தியினுற் றேகம் உருகாநின்ற விட் டுணுவினுடைய அடிமைத் திறத்தைப் பார்த்துக் கேட்ட வரங்களை ல்லாஞ் சிவன் அருளிச்செய்து, பிரமனைப்பார்த்து உனக்குப் பூமியி லே கோயிலும் பூசையு மில்லாமற் போகக் கடவதென்று திருவுளம் பற்றினார். எ-று. (சுஅ)

கைதையே யிவ்வொடு கரவு நீயுரை
செய்ததாற் றீண்டிலே மென்று தீர்த்தன்
னெய்திய முனிவுகண் டேங்கி நான்முகன்
மெய்துறை யிறப்பதம் வீழ்ந்து போற்றினு

இ-ள். ஓ தாழம்பூவே? இப்பிரமனோடு சேர்ந்து பொய்சாட்சி சொன்னபடியினால், உன்னை யிதுமுதற்கொண்டு நீண்டேனென த் தள்ளினார்; அதன்பின்பு சுவாமிக்கு இப்படிப்பட்டகோபம் வந்ததைப்பார்த்து எக்கமெடுத்துப் பிரமன் தன்னுடைய தேகம் பூமியில் நன்றாய்ப் படவிழுந்து வந்தனஞ்செய்தான். எ-று. (சுகூ)

வேறு.

பொடிமூடிய தழலேநிகர் புலையாணவ மலமாஞ்
செடிமூடுகை யாலேயுழல் சிறியேனொரு பொருளோ
வடிவேபெரு வெளியேசதுர் மறையேசதுர் மறையின்
முடிவேதனி முதலேயெனை முனியேலெனை முனியேல்.

இ-ள். நீறுபூத்த நெருப்பையொத்த சுவாமியே! சண்டாளதுவமாகிய * ஆணவமலமென்கிற செடிமூடிக் கொண்டிருப்பதினால். அவிவேகியாய்த் திரியாநின்ற சிறியேனொரு பொருளோ. உருவமானவரே! அகண்ட வெளியானவரே! நான்குவேதமானவரே! நான்கு வேதத்தினுடைய அந்தத்தி லிருக்கின்றவரே! ஒப்பற்ற முதலாகியவரே! கோபித்துக்கொள்ள வேண்டாம், கோபித்துக்கொள்ளவேண்டாம். எ-று. (எ0)

எந்நீர்களு மொன்றாகிய வெழுவாரியு மறுகி
வெந்நீரது வானாலுடன் விளாவப்புன லுண்டோ
[illegible] தென்றாலுல குயிரெப்படி நிகழும்
முந்நீர்விட முண்டோயெனை முனியேலெனை முனியேல்.

இ-ள். எல்லா நதிகளி னீரும் விழுந்து ஒன்றாகிய எழுசமுத்திரமும் காய்ந்து வெந்நீராய்ச் சுட்டால், அதையாற்றுவதற்கு வேறேசலமுண்டோ! உமக்கே யிப்படிப்பட்ட கோபம் வந்தால் உலகத்தி[illegible]

* ஆணவமென்பது செம்பிற்குக் களிம்புபோல அநாதியே யுடன்கலந்து, நிற்பது. அணுத்தன்மைப் படுத்தலின் ஆணவமாயிற்று.

ருகிற சிவராசிகள் எப்படிப் பிழைக்கும்! முன்னே சமுத்திரத்தில் பிறந்த ஆலகால விடத்தையுண்ட மூர்த்தியே! கோபஞ்செய்ய வேண்டாம் கோபஞ்செய்ய வேண்டாம். எ-று. (எக)

மறைபிறைய மழு மதியேயுறை பெண்ணே பிறவாணே
நறையேநறு மலரேயென நானாவித மாவை
பொறையேதிரு வருளேபொழி புயலேயிய லிசையே
முறையேபல முறையேயென முனியேலென் முனியேல்

இ-ள். இளம்பிறையாகியும், பூரண சந்திரனாகியும், பெண்ணாகியும், ஆணாகியும். தேனாகியும், புட்பமாகியும், மலைகளாகியும், திருவருளைப் பொழிகின்ற மேகமாகியும் சொல்லாகியும், ராகமாகியும், மற்றும் நானாவிதரூபமாகிய மிருககின்ற மூர்த்தியே! உமக்கு முறையோ முறை எனவே கோபிக்கவேண்டாம் கோபிக்க வேண்டாம். எ-று. (எஉ)

வெம்மைச்சர மலராகிய வில்வேடனு மன்றே
செம்மைத்தலை மதவாறெழு கோபக்களி றன்றே
செம்மைக்கன லன்றேகொலை செயுமந்தக னன்றே
மும்மைப்புர மன்றேயொரு பொருளாயெனை முனியேல்

இ-ள். மிகுந்த வெப்பத்தைக் கொடுக்கின்ற புஷ்பபாணங்களையுடைய மன்மதன் தேகமல்லவே! தாருகாவனத்து ரிஷிகள்விட எழுமபின தலையும் ஆறுபோன்ற மதத்தையுமுடைய கோபமாகிய யானையல்லவே! அந்தரிஷிகள் பின்பு விட்ட சிவப்பாகிய அக்கினியல்லவே! கொலைசெய்யுந் தொழிலையுடைய எமனல்லவே! திரிபுரமல்லவே! நான் எவ்வளவு! உமக்கு என்னை ஒரு பொருளாகக் கோபஞ்செய்யவேண்டாம். எ-று. (எ௩)

அரிதற்கரிதாமுன்முடி யறிவேனெனுமளவே
பறவைப்படிவானேனினி மேலோவிடர்படுவேன்
சிறுமைப்படுமென்பாலருள் செய்யென்றுரைசெய்தான
மறுகிக்குளிரனல்போலிறை மகிழ்வாயிவைமொழிவான்

இ-ள் யாவராலுமறியக்கூடாத உம்முடைய முடியை யறிகிறேனென்ற மாத்திரத்திலே பறவையுருவமானேன்; இனிமேலோ துக்கத்தையடைவேன்; சிறுமையையடைந்த என்னிடத்தில் கிருபை செய்யுமென்றுசொல்லி வியசனப்பட்டபோது, மறுகக்காய்ந்து குளிர்ந்த ஜலம்போலச சிவபிரான் சந்தோஷமாய்த் திருவாய்மலாந்து சிலமொழிகளை அருளிசசெய்வார். எ-று (௭௭)

அம்போருகவஞ்சேலினி யவனித்தலமறையோர்
தம்பூசனையுன்பூசனை யாகித்தபனியமாஞ்
சம்பூதரவுலகேழையும் விதியென்றருள்செய்தான்
கம்பூர்கடல்விடமுண்டருள் கருணைக்கடலானான்.

இ-ள். பிரமனே? இனிமேல் நீ பயப்படாதே, பூமியில் பிராம்ணாகளுக்குச் செய்கிற பூசை உன் பூசையாகக்கொண்டு, பொன்னுருவமாயுண்டாகிய மகாமேருமலை தாங்கும் ஏழுலகத்தையும் எப்போதும்போல் படையென்று அருளிசசெய்தார்; சங்குகள் தவழுகின்ற சமுத்திரத்தின் விஷத்தையுண்ட கிருபைக்கடலாகிய சிவபெருமான். எ-று. (௭௮)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

இத்தலத்தி லுமக்குவரங் கொடுத்தலினால்
யோசனைமூன் றெல்லைதூரம்
சுத்தபவித் திரஞானத் தலமாகப்
பொலிகவிந்தச் சோதிதானுஞ்

சிற்றுருவ மலையாகி வரமுதவக்
கடவதின்பஞ் சிறந்ததான
முத்திதனைத் தங்கியாம் லுதவுமிதற்
கருணைபுரி மொழியு நாமம்.

இ-ள். பிரமவிட்டுணுக்களே! உஙகளுககு இந்தத்தலததிலே அநுக்கிரகஞ்செய்து வரஙகொடுத்தபடியினால் இததலத்தைச சுற்றி மூன்று யோசனைதூரம்வரைககும் சுத்தபவித்திரமாக விருக்கவேண டும்; இந்தசசெந்தீமலை சிறிய வுருவத்தோடுஙகூடிய மலையாககக்கட வது; பேரின்பஞ் சிறந்தமோட்சததை தடையில்லாமற கொடுககும் இந்தத்தலத்திற்கு அருணைபுரியென்று பெயராம. (எசு)

வாதைபடு மிந்திரனு மிமையவரு
நினைக்கவவர் வருத்தத் தீர்த்தோம
ஆதலினு லித்தலததை நினைப்பவறகுப
பிறபபிடுமபை யகற்றுவோமிப்
பூதரமு மித்தலமும பிரளயத்து
மழியாத பொற்பதாகி
மோதியகாற றண்டந்திசைச் சராசரஙக
ளெவையுமுயர் முத்திசேர்க்கும்.

இ-ள். துன்பத்தையடைந்த தேவேந்திரனும், தேவர்களுமநம மை நினைக்க அவர்களுடைய துன்பத்தைத தீர்த்தோம், ஆனபடியா லிந்தத தலத்தை நினைக்கின்றவர்களுக்குப் பிறவித்துக்கத்தை நீககு வோம்; இந்தப் பர்வதமும் இந்தத்தலமும் பிரளயகாலத்திலும் நாச மடையாத லக்ஷணத்தை யுடையதாகி மோதுகின்ற வாயுசஞ்சரிக் கின்ற திக்குகளிலுள்ள சராசரங்க ளெல்லாவற்றையும் மேலான முத்தியிலே சேர்க்கும் எ-று. (எஎ)

வையகத்தி லரியதவம் புரிந்தவருக்
கினியமுத்தி வழங்கவேண்டிச்
செய்யவிந்தத் திருநகரி லவதரிக்க
வரந்தருவோந் செய்ததான
மெய்பெறவொன் றாயிரமாய் வளருமிதிற்
கொடும்பாவம் விளையாதீதை
யையமென வுணர்வார்க்குப் பரகதிகிட்
டாதுநம தாணைதானே.

இ-ள். பூமியிலரிதாகிய தவத்தைச் செய்தவர்களுக்கு இனிமையான மோட்சத்தைக் கொடுக்க விரும்பிச் சோதி வடிவமாகிய இந்தத்தலத்தி லவதரிக்க வரத்தைக் கொடுப்போம்; இஃதிலோர் தானஞ்செய்தால் ஒன்று ஆயிரமாய் விருத்தியாகும்; இந்தத் தலத்தில் பாவமே யுண்டாகாது; இதைச் சந்தேகமாக நினைப்பவர்களுக்கு மோக்ஷங் கிடைக்கமாட்டாது; நம்முடைய ஆணைப்படியென்றான் பரமசிவன். எ-று. (எஅ)

அண்ணலிவை மொழியளவி லழற்றூண
மதுகுறுகி யசலமாகி
வண்ணநெடுஞ் சுடர்விரிந்து விளங்குதல்கண்
டயன்றிருமால் வணங்கிச் சொல்வார்
விண்ணவர்க்கு மெங்களுக்கு மிதன்சோதிக்
கெதிர்குறுகி விழிக்கப்போகா
தெண்ணரிய சுடர்களெல்லா மடக்கிந்த
மலையாக விருக்க வென்றார்.

இ-ள். இந்தப்பிரகாரஞ் சுவாமிசொன்ன அளவில், அக்கினி மலை குறுகி ஒருசிறியமலையாய் நிறம்பொருந்திய மிகுந்த பிரகாசம்

விரிந்து பிரகாசித்தலைப்பார்த்த பிரமவிட்டுணுக்களும் சுவாமியை வணங்கிச்சொல்லுவார்கள்; தேவர்களுக்கும் எங்களுக்கும் இந்தமலையின்சோதிக் கெதிராகப்போய் விழிக்கக்கூடவில்லை; ஆனபடியினாலே எண்ணுதற்கரிய கிரணங்களெல்லா மறைந்து ஒருமலையா யிருக்க வேண்டுமென்றார்கள். எ-று. (௭௯)

அன்னமிசை வருவானுங் கருடன்மிசை
வருவானு மமலமூர்த்தி
வன்னியொளி மறைத்துமற்றை மலையாக
விருத்தியென மலையாச்செய்தார்
சென்னியிலே யொருசோதி யனுதினமுந்
தெரியவருள் செய்வாயென்று
ரென்னுமந்த வடியவர்க்கா லிறையவனு
மிரங்கியிவை யியம்பலுற்றான்.

இ-ள். அன்னவாகனத்திலேறுகின்ற பிரமனும், கருடவாகனத்திலே வருகின்ற விட்டுணுவும், மலரகிதராகிய சுவாமி அக்கினிப் பிரகாசத்தை மறைத்து, மற்ற மலைகள்போ லிருக்கவேண்டுமென்று கேட்க, அப்படியே மலையுருவாகச்செய்தார்; இந்த மலையினுச்சியிலே ஒருபிரகாசம் எந்நாளுந் தெரியும்படியாகக் கிருபைசெய்யவேண்டுமென்றார்கள்; அப்படிச்சொன்ன தொண்டர்களுக்காக இரங்கிச் சுவாமியுந் திருவாய்மலர்ந்தார். எ-று. (௮௦)

கார்த்திகைக்குக் கார்த்திகை யொருநாட்சோதி
மலைநுனியிற் காட்டாநிற்போம
வாய்த்தவந்தச் சுடர்காணிற் பசிபிணியி
லாதுலகில் மன்னிவாழ்வார்

௪௰ திவாக்கு மருந்தவர்க்கு மிடையூறு
தவிருமிது பணிந்தோர் கண்டோர்
கோத்திரத்தி லிருபத்தோர் தலைமுறைக்கு
முத்திவரங் கொடுப்போ மென்றார்.

இ-ள். பிரமவிட்டுணுக்களே? * கார்த்திகைமாதத்தில் இருத்திகை நட்சத்திரத்தில் மலையினுச்சியில் ஒருபிரகாசங் காண்பிப்போம்; அப்படி பொருந்திய சுடரைக்கண்டால் பசியும் வியாதியு மில்லாமல உலகத்தில் நிலைபெற்று வாழ்வார்கள்; இந்தச் சோதியைக்கண்ட அரசாகளுக்கும் அரியதவசிகளுககும் இடையூறுநீஙகும்; இதைப்பணிந்தவர்கள் தரிசித்தவர்களுடைய கோததிரத்தில் இருபததொரு தலைமுறைக்கும் முத்திவரஙகொடுப்போமெனறார் அருணாசலேசா. எ-று. (௪௧)

மரணபவ மறுக்கநல்ல மருந்தாகு
மதற்குமலை மருந்தென் றோர்பே
ரருணைவடி வாதலினு லருணகிரி
யெனுமொருபே ரதனை யோர்கால்
தரணியிலே யுரைத்தவர்க்கு முக்கோடி
யஞ்செழுத்துச் சரித்த தாமென்
றிருநிலவு மிடற்றிறைவ னிசைக்கமகிழ்ந்
திறைஞ்சியவ ரிசைப்ப தானார்.

இ-ள். இறப்பினையும் பிறப்பினையும் நீக்குதற்குமருந்தானபடியினாலே இந்தமலைக்கு மலைமருந்தென்றும்பெயர், இந்தமலை சிவப்புநிறமானபடியினாலே அருணகிரியென்றும் ஒருபெயர், அதை ஒருதரம் பூமியில் சொன்னவர்களுக்குப் பஞ்சாக்ஷரத்தை மூன்று கோடிதரம் உச்சரித்ததற்குச்சமானமாகுமென்று நீலகண்டத்தை யுடைய

* அனல்வடிவினின்றும் இலிங்கமாகக்காட்சி கொடுத்தகாலம மகாநிசிக்காலமாகிய அர்த்தராத்திரிக் காலமாகலின், மானுடதினபபடி கார்த்திகைமாதக் கார்த்திகை கொள்ளப்பட்டது.

சிவன் அருளிச்செய்ய, பிரமவிட்டுணுக்கள் சந்தோஷத்தை யடைந்து சுவாமியைவணங்கிச் சொல்லுவார்கள். எ-று. (அஉ)

அடுத்தருண கிரியோனே யுனக்குவிண்ணீ
ரலதுபுன லாட்டுவா ரார்
தொடுத்தவுடுத் திரளலது திருமுடிக்கு
மணிமாலை சூட்டுவா ரார்
கடுத்திகழு மிடற்றானே கதிர்களன்றி
மணித்தீபங் காட்டுவா ரா
ரெடுத்திறைஞ்சிப் பூசைசெய்ய விதன்கீழோ
ரிலிங்கவடி வெடுப்பா யென்றார்.

இ-ள். அருணாசலேசுரரே? மலையாகியவுமக்கு ஆகாயத்தில் நின்றும்பெய்யாநின்ற மழையேயல்லாமல் ஜலங்கொண்டுவந்து அபிஷேகஞ்செய்கிறவாகளார்? நக்ஷத்திரக்கூட்டங்களே முத்துமாலையாவதல்லது வேறேமுத்துமாலை சூட்டுகிறவர்களார்? சூரியகிரணமே தீபமாவதல்லாமல் தீபங்கொண்டுவந்து வேறே காட்டுகிறவாகளார்? ஆனபடியினாலே. நாங்கள் அபிஷேகமுதலானவைகள்செய்துபூசை செய்வதற் கிந்தமலையின்கீழ் ஓரிலிங்கவடிவமா யெழுந்தருளவேணுமென்று கேட்டுக்கொண்டார்கள். எ-று. (அங)

அன்னதுவா யிருக்கதுநீர் காமியத்தி
லருச்சியுமென் றசலப் புக்கா
ரெங்கிலமும் புகழுவங்கோர் சிவனுருவ
முளைத்ததுகண் டிறைஞ்சி யேத்தி
மன்னியபூ மழைபொழிந்து பரவசமாய்
மகிழ்ந்தாடி மயங்கிக் கூவித்
தன்னிகரில் கோபுரமு மண்டபமு
மணிமதிலுஞ் சமைப்பித் தார்கள்.

இ-ள். அப்படியே இலிங்கமாகிறோம் பக்தியுடன் பூசியுமாக வென்று அந்தமலையினுள்ளே மறைவுகோலஞ்செய்தார்; எந்தத்தேசமும் புகழும்படி யவ்விடத்தில் ஓரிலிஙகந்தோன்றிற்று; அதைக்கண்டுவணங்கித்தோத்திரஞ்செய்து. புட்பவருஷம்பொழிந்து, பரவசமாயசசந்தோஷமடைந்து, ஆநந்தக்கூத்தாடிமயனென்கிற தேவதச்சனைககூப்பிட்டு ஒப்பில்லாத கோபுரஙகளும் மண்டபஙகளும் அழகு பொருந்திய மதிலுஞ் செய்வித்தார்கள் எ-று. (அச)

அழியாத வளநகருந் தீர்த்தமுந் நூற்
றறுபதுங்கண் டழகுசெய்தார
வழியாநீர்ச் சுரநதியுஞ் சுரதருவுங்
கேணிகளு மரமுமான
வொழியாம லிமையவரு மிருடிகளு
மனிதரென வுருவங்கொண்டார
விழியால விடமனைய கணிகையரா
யரமபையரு மேவினாரே

இ-ள் ஒருகாலத்துமழியாத வளப்பமுள்ளநகரமும், முந்நூற்றறுபதுவகையாகிய தீர்த்தமும் உண்டானது கண்டழகுசெய்தார். வழியாத சலத்தையுடைய ஆகாயகஙகையும, கற்பகவிருட்சமும்; கிணறுகளும் மரஙகளாயின; நீங்காமல தேவர்களும் ரிஷிகளும் மனித வடிவஙகொண்டு பிறந்தார்கள்; விஷம்போனற கணகளையுடைய தாசிகளாக அரம்பாஸ்திரீகள் பிறந்தார்கள். எ-று. (அரு)

காலையிலே முழுகிமரவுரியுடுத்துச்
சிவந்தசடை கட்டிநீறு
மேலணிந்து கண்டிகைபூண் டனமுதலா
மஞ்சனத்தான் மிகுந்தசாந்தான்

மாலையினாற் சிவபூசை புரிந்தண்ணா
மலையதனை வலங்கொண்டேத்தி
யேலவொரு பதினைா யிரவாண்டு
கழிந்ததற்பின் னிறைவரானார்

இ-ள். பிரமவிட்டுணுக்கள் இருவருங்காலையில்முழுகி மரவுரி தரித்துகொண்டு. சிவர்த்தசடைகட்டி விபூதியைத் தேகமெல்லாந் தரித்து உருத்திராக்கமாலை பூண்டுகொண்டு. அன்னமுதலாகிய திருமஞ்சனத்தினாலும் சந்தனத்தினாலும் மாலையினாலுஞ் சிவபூசைசெய்து திருவண்ணாமலையைப் பிரதட்சணஞ்செய்து வணங்கியபதினைாயிரம்வருஷம் ஆனபின்பு சுவாமியினிடத்தில் விடைபெற்றுக்கொண்டு தங்கள்பதிகருப்போய்த் தங்களதிகாரத்தைப் பெற்றுக்கொண்டார்கள். எ-று. (அசு)

ஆசைதருந் திருவருணை சமைத்ததற்பின்
கயிலைமலை யாசைபோயிற்
றீசனுக்குங் கனகமலை யிதுவாயின்
வெள்ளிமலை யினிமேலென்னாங்
காசிமுத லெடுத்துரைக்குஞ் சிறப்புடைய
தலமேழுங் கனகநாடு
மாசகன்ற கதிர்தோன்ற வொளியிழந்த
வுடுக்கணம்போல் வளமைதேய்ந்த.

இ-ள். சுவாமிக்கு ஆசைகொள்ளும்படி திருவருணாசலத்தலம் அமைத்தபிறகு, கயிலைமலையிலிருக்கும் ஆசைவெறுத்தது; இந்தமலையே பொன்னுருவங்கொள்ளுமாயின். வெள்ளிமலையின்மேலாசையுண்டாகுமா? காசிமுதலாகச் சொல்லப்பட்ட * எழுதலங்களுந்தேவலோகமும் குற்றம்நீங்கிய சூரியனுதயமாகப்பிரகாசமிழந்த நக்ஷத்திரங்கள்போல ஒளிமழுங்கிப்போயின. எ-று. (அஎ)

* காசி, காஞ்சி, அவந்தி, துவாரகை, மதுரை, மாயா, அயோத்தி என்பன சத்தமுத்தித் தலங்களாம்.

* அரியயனு மளவிடுதற் கரியமலை
　　நிலையுரைக்க வரிதென் றாலுந்
தெரியவுனக் கறிந்தபடி சிறிதுரைத்தே
　　னினியுரைக்குந் திறமே தென்றான்
வரிசைபெறு ‡ மார்க்கண்ட முனிமகிழ்ந்து
　　பணிந்துமையாண் மலையிற் றேன்றி
யுரியசிவ னிடங்கலந்த கதையுமுரைத்
　　தருளுகென வுரைப்ப தானார்.

இ-ள். நந்திதேவர் மார்க்கண்டேய ரிஷியைப்பார்த்து, ஸ்ரீமந் நாராயணமூர்த்தியும் பிரமதேவரும் அறிதற்கரிதாகிய திருமலையின் சிறப்பை என்னால் சொல்லுதற்கரியதென்றாலும், எனக்குத்தெரிந்த அளவில் சிறிது உமக்குத்தெரியும்படி சொன்னேன்; இனிச் சொல்லவேண்டிய தென்னவென்றால், வரிசைபெற்ற மார்க்கண்டேயரிஷி சந்தோஷித்து வணங்கி, சுவாமி! பார்வதியார் இமாசலத்தில் அவதாரஞ்செய்ததும், சுவாமியைநோக்கித் தவஞ்செய்து அவரிடப்பாகம் பெற்றதுவுஞ் சொல்லவேண்டுமென்று கேட்கச் சொல்லத்தொடங்கினார். எ-று. (அஅ)

இரண்டாவது,
திருமலைச்சருக்கம்
முற்றிற்று.
ஆக திருவிருத்தம்-கசுசு.

---

* அரி - பகைவரையழிப்பவன். அயன் - பிறத்தலில்லாதவன் இவை உபசாரம். ‡ மார்க்கண்டர் - மிருகண்டேய முனிவரின் புத்திரர் இது வடமொழித் தத்திதாந்தபம்.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருவவதாரச் சருக்க வசனம்.

காலகாலன்றன் றிருவருள்பெற்றுச் சீவன்முத்த நிலையடைந்த மார்க்கண்டேயமுனிவரே! முன்னர்நாளிற் பிரமாவினது புத்திரர்களுள் ஒருவனான தக்கனென்பவன் சிவபெருமானை நினைந்து பற்பலவருடம் அரிய தவத்தைப்புரிந்து, அகில அண்டகோடிகளை யெல்லாம் பெற்றருளிய பரம மாதாவாகிய உமாபரமேசுவரியைத் தனக்குக் குழவியாகப்பெற்று. இறைவனுக்குத் திருமணஞ்செய்து கொடுத்தான் சிவபெருமான் இவனது அகங்காரத்தை நோக்கி, அங்குத்திருமணக்கோலத்தினின்றும் மறைந்தருளினார். அதனால் தக்கன் சினந்து நிந்தித்தான். பின் ஒருகால் கயிலைக்குப்போய் தனக்குமிக்க மரியாதை நடக்குமென்று நினைத்துச்சென்றான். அங்கு இவன் வரவுணர்ந்த சிவகணங்கள் இவனைப் பிடித்துத் தள்ளி, நீ இவ்விடம் போவாயாகவென்று கூறினர். தக்கன் பின்னரும் கொடுங்கோபமுற்றுச் சிவபெருமானுக்கு எதிராகச் சகலதேவர்களையும் அழைத்துவைத்து, ஓர் யாகஞ் செய்யத்தொடங்கினான். அதுகாலை எம்பிராட்டியார் சிவபெருமானது திருவடிகளில் வணங்கி, எந்தைசெய்யும் யாகத்தைப்போய்ப்பார்த்துவருதற்கு விரும்புகின்றேனென்று கேட்டார். ஆதிபகவன் அவ்வாறு பார்த்துவர விடைகொடுத்தருளினார், அம்மையார்சென்று

தமது வளர்த்த தாயெனப்படும் வேதவல்லியைக்கண்டு நின்றார் அவள் யாதொன்றும் பேசாமலும் உபசரியாதும் வாளா இருந்தாள். தந்தையெனப்படும். தக்கனிடம் போயினர். அப்பாதகனும் யாதோர் உபசாரணையும் பண்ணாது வாயில்வந்தவாறு பரமபதியாகிய சிவபெருமானையும் தேவியாரையும் நிந்தித்தான். நாராயணியாகிய அம்மையார் செவிபுதைத்து எம்மை நிந்தித்ததைப் பொறுத்தோம் எமது பரமனை நிந்தித்தனை அது மகாபாதகமாகும் அந்நிந்தனைகளையெல்லாங் கேட்டுச் சும்மாவிருந்தீரெல்லாமதிபாதகராய் அத்தண்டனையை யநுபவிப்பீர்கள் இந்த யாகசாலை பிணங்கள் மலிந்த சுடுகாடாகக்கடவதாக என்று சபித்துச் சினத்துடன் கயிலைவந்து கண்டுற்றது பகர்ந்தார்.

சிவபெருமான் தேவியாரது திருவுள்ளத்தையுணர்ந்து, சிறிது வெகுளிகொண்டு ஆயிரமுகங்களையுடைய உக்கிரவடிவத்தைப் பெருகநின்றார் நெற்றிக்கண்களினின்றும் அக்கினிப்பொறிகள் சிதறத்தொடங்கவே, அக்கண்களினின்றும் ஆயிரந்திருமுடிகளும், செக்கர்வானம்போன்ற மேனியும், மகா உக்கிரமும், முக்கண்களும், சிவந்தசடாமுடியும், நரசிங்கத்தின்றோலாகிய உத்தரியமும், புலித்தோலாகிய கச்சையும் உடையவராய், நஞ்சுகால் திருவாய்கள் இடிமுழக்கஞ்செய்யாநிற்ப; நெற்றிக்கண்கள் கொதிப்ப, கூப்பியகரத்துடன் எமது ஐயனாகிய வீரபத்திரக்கடவுள், அடியேனையழைத்ததென்னை? அழைத்ததென்னவென்று தோன்றினர். சிவபெருமான்; குமாரனே! த 

ளுதியென்றுகட்டளையிட்டார். வீரபத்திரக்கடவுள் மிக்க சந்தோஷமுடையராய்த் தந்தையாரது திருவடிகளைவணங்கி விடைபெற்றுப் பக்கத்தினின்ற பூதகணங்களும் பேய்களும் சூழச்சென்றார். (பரமேஸ்வரி தமது திருமேனியின் கருநிறத்தைக் கையாற்றடவியெடுத்துவீச பத்திரகாளி தோன்றினள் என்றும், அவளையும் இவருடன்கூட்டி, அவட்குவேண்டிய காளிக்கூட்டங்களையும் அலகைகளையும் சேர்த்து அனுப்பினராம். ஏனெனில் யாகசாலையிலிருந்த தேவப்பெண்கள், முனிவபத்தினிமார், தக்கன் மனைவியாம் வேதவல்லி இந்திராணி சரசுவதி இலக்குமிமுதலிய பெண்களைத் தண்டிக்கும்பொருட்டாக, இவ்வாறுகந்தபுராணம் உரைத்தது.) சகலபூதங்கள் சூழ்ந்து சாமமிரட்டவும், வாத்தியங்கள் கொட்டவும், குடை, கொடி, ஆலவட்ட முதலியன பறந்தும் வீரபத்திரக்கடவுள் ஆயிரம் யானைகள் பூட்டப்பட்ட தேரிலேறிச்சென்றார் பலப்பல பூதங்கள் பலபல வடிவங்களைக்கொண்டு சென்றன. அப்பூதங்களின் வல்லமையைச் சொல்லுதல் யாக்குமரிதேயாம்.

இவ்வாறு யாகசாலைக்குச்சென்றவுடன் பூதங்கள் தேவர்களாகிய அதிதியின் பிள்ளைகளை யெடுத்தெறிந்தார்கள். அப்போது திக்குப்பாலகர் எண்மரும் வந்துவளைத்தார்கள். எட்டுப்பூதங்கள் அவர்களையும் வாகனங்களையும் எடுத்தெறிந்தன. எறிபட்டவர் மீளவும் வந்து போர்புரிதல் கண்டு வீரபத்திரகடவுள் எட்டுப்பாணங்களைச்செலுத்தி அவற்றால் [illegible]. இந்திரன் குயிலாகப்பறந்தான். மற்றத்

யோர் வீழ்ந்து மூர்ச்சிக்கலாயினர். இயமன் இறந்தான். அக்கினியின் ஏழு எனும் நாக்கள் வெட்டப்பட்டன. யாககர்த்தாவாகிய எச்சதத்தன் றலை வெட்டப்பட்டது. வேதவல்லியின் காதுகளிரண்டையும் அறுத்தார். தக்கன் றலையை அறுத்து வீழ்த்தினார். மற்றைய முனிவர், வசுக்கள், ஆதித்தியர் முதலாயினோர்க்கு தக்க தண்டனை செய்ய இறந்தனர். பகன், பூடா என்னும் இருசூரியர்களுக்கும் முறையே கண்களும் பற்களும தகர்ப்பட்டன. சந்திரன் நிலத்தில் தேய்க்கப்பட்டான் இறந்த தேவர்கள் பசாசுகளாகி மீளவும்போர் புரிய அவற்றையெல்லாம அடித்துக்கொன்றார். பூதங்கள் யாகசாலையிலுள்ள பொருள்களையெல்லாம் வாரிவாரியுண்டன. பிரமன் ஒளிந்திருந்து இறந்தவர்களைப் படைத்துப் படைத்து வந்தான். அதுவறிந்த யானைமுகவனுக் கிளையோராம் வீரபத்திரர் அவனுடன் போர்செய்து அவன் றலைகளையும், மானச புத்திரர்களையுங்கொன்றார். விட்டுணு கருடன் மேல் வந்து பாணங்களைச் செலுத்த, அவற்றையெல்லாம் இமைக்குமுன் விலக்கி வில்லையுமறுத்தார் மாயன் விற்போர் செய்தற்கு வலிமையின்றிக் கத்தியை யெடுக்க அதனையும் தகர்த்தார். கருடனையொரு பாணத்தாற் கொன்றார். கிரீசணம என்னுஞ் சக்கரத்தை வாசுதேவன் பிரயோகித்தான் அது பயந்து சுவாமியின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கிற்று. விட்டுணு பயந்து வருத்தமுற்று, முன்போலவே ஒரு மீன் வடிவமெடுத்துக் கடலிலோடி யொளித்தான். எல்லோரும் இறந்து யாகசாலை சுடுகாடாயிற்று. வீரபத்திரக்கடவுள் சென்று அம்மையார்க்கும் அப்பனுக்கும் அறிவிக்க, அவர் கருணையுற்றுச்சென்று அனைவரையு மெழுப்பினர், அவர்கள் எழுந்து தம்குற்றங்களை எல்லாம்பொறுத்தருள வேண்டுமென்று துதித்துப் பன்முறை வணங்க,

அவர்க்கருள்புரிந்து விடையளித்து, பரமனுந் தேவியுங் கயிலைவந்தடைந்தார்.

அப்போது பரமேசுவரி, சிவநிந்தைபுரிந்த தக்கனுக்கு மகளென்னும் தாக்ஷாயிணி யென்னும் பெயரையும், அது போதுகொண்ட உடலையும் வைத்திரேன் என்று சிவபெருமான் றிருவருளால் அவ்வுடலைவிட்டு வேறோருருவுருவம் எடுத்து, மலையரசனுக்கும் மேனைக்கும் குமாரியெனத் தாமரை மலர்மீது கிடந்தார். அதனைத் தவஞ்செய்த மலையரையனும் மனைவியும் எடுத்து அன்புடன் வளர்க்க விருந்தனர். நாரதர் ஒருநாள் அங்குவந்து, அம்மையாரது விசேடங்களை யறிந்துச்சென்றார். சிவபெருமான் ஞானயோகம் புரியாநின்றார் இறைவி அவரது திருத்தொண்டாகிய தவத்திலே காலத்தைக் கழித்துவந்தார். இங்ஙன மிவ்வாறிருக்கத் தேவர்கள் யாவரும் பிரமனை நினைத்துத் தொழுதார்கள். அவன்றோன்றி நும்முகம் வாட்டமுற்றதென் எனறு வினவ, எம்மையெல்லாம் தாரகன் என்னும் அசுரன் எதிர்த்து இவ்வாறு பங்கஞ்செய்தான் என்றார். மலரோன் சொல்வான். தேவிர்காள்! என்னாலாவது, விட்டுணுவினாலாவது, வேறெவராலாவது அவனைக் கொல்லல்முடியாது. சிவபெருமானுக்கும் உமைக்கும் குமாரர் தோன்றினாறன் அவன் அழிவான். ஆதலால் அவர்களிருவருங் கூடும்படி மன்மதனை யனுப்புவேமென்று, அவனைப்போய் மயக்குமாறு கேட்டனர். மன்மதன் பலவாறெடுத்து உண்மைகளைக்கூறியும் பிரமன் முதலினோர் சம்மதிக்காது சாபமிடுவேமென்ன, அதற்குப் பயந்து மன்மதன் றன் சேனைகளோடும், விருதுகளோடுஞ் சென்று, விருப்பு வெறுப்பில்லாத சிவபெருமான்மீது மெல்ல மெல்ல அம்பையேவினான். தேவராசனையை சங்கரன் விழித்துப்பார்த்த அளவில் அவனுடலெரிந்து சாம்பராயிற்று.

## திருவவதாரச் சருக்க வசனம்.

சிவபெருமான் கயிலையில் முன்போலிருந்தார். இரதிதேவி புலம்ப அவளைத் திருமணக்காலங்காறும் பொறுத்திரு வென்றுகூறி, தேவர்கள் யாவரும்வந்து துதித்து இரங்குதல் கேட்டு, இறைவன் உமையைத் திருமணஞ் செய்தருளத் திருவுளங்கொண்டு, அகத்தியர் முதலாய எழு முனிவர்களையும் இமயமலை யரசனிடம் திருமணம் பேசும்படியனுப்ப அவர்கள்போய்ப்பேச அளவிறந்த மகிழ்ச்சியுற்றுத் தம்விருப்பத்தையறிந்து, திருமணத்திற்கு அலங்காரஞ்செய்தனர் மலையரையன் யாவர்க்கும திருமணவோலை போக்கினன் உலகத்திலுள்ள யாவரும் வந்தனர். பிரமன் முதலாயினோர் இறைவனை வணங்கி, உலகத்தவராகிய யாங்களுய்யக்கொண்ட திருவிளையாட்டன்றி வேறென்னை. அவ்வணஞ் செய்தருளுந் திருவிளையாடலுக் கேற்பத் திருமணக்கோலங்கொண்டருள வேண்டுமென்று ஆபரணங்களை முன்கொண்டு வந்து வைத்தார். அவைகளை யடியார்க்கெளிய பெருமான இசைந்து ஏற்க, திருமணக்கோலஞ் செய்தனர். சிவபெருமான் இமயமலைக்குச சகல கணத்தவர்களோடுஞ் சென்றருள, அங்குள்ளார் யாவரும் அரகர மகாதேவ! என்றார்ப்பொடு கரையிறந்த மகிழ்ச்சியுடன் பணிந்து துதித்தனர். இறைவனார் அவரவர்கருத் தக்க அருள்புரிந்து, திருமணச்சாலைசென்று அரியணைமீது அமர்ந்தனர். பலபல விநோதங்கள் நிகழாநின்றன. இலக்குமி சரஸ்வதி முதலாயினோர் இறைவியை யலங்கரித்து மணச்சாலைக்குக் கொண்டுவந்தனர். யாவரும்போற்றும்படி மலையரையன் தன்மனைவிமேனை என்பாள் நீர்வார்க்க, இறைவி திருக்கரத்தைப் பெருமான் கரமலரில் வைத்துத் தத்தஞ்செய்து கொடுத்தான். மற்றைய திருமணச் சடங்குகளைப் பெருமான் ஆஞ்ஞையால் பிரமன் முடித்தான். யாவரும் வணங்கினர். அதுகாலை இர

திதேவிவந்து மங்கிலியப்பிச்சை யென்றுவணங்கிநிற்ப, விட்டுணு முதலினோரும்போற்ற இறைவன்றிருவுளக் கருணையால் அவனை முன்போலத் தோன்றச்செய்து யாவர்க்கும் விடையளித்துக் கயிலைசேர்ந்தார். அங்குத் தாமும் உமாதேவியாரும் சகலவுயிர்களுக்கும் போகம் நிகழுமாறு இனிதுற்றார். பின்னர்ச் சுப்பிரமணியப்பெருமான் றோன்றி, தேவர்க்கு வைரியாயிருந்த * தாரகன் என்னும் அசுரனுடன் பதினாட் போர்புரிந்து அவனைக்கொன்று தேவரைக் காத்தருளினார், இவற்றுள்ளே பார்வதிதேவியார் இமயமலையரசனுக்கு மகளாகத் திருவவதாரஞ் செய்ததும், சுப்பிரமணியப்பெருமான் அவதரித்ததும் கூறினும்.

திருவவதாரச சருக்க வசனம

முற்றிற்று.

---

* இந்தத் தாரகன் என்பான் சூரபன்மனது தம்பியாந்தாரகனல்லன் திரிபுரத்து அசுரர்களாகிய தாரகாக்கன், கமலாக்கன் வித்துன்மாலி என்னும் மூவர்க்கும் தந்தையிவனாகும். இவன் சரித்திரவிரிவைச் சிவரகசியம் திருக்கூவப்புராணம் என்பவற்றினும் யாழ்ப்பாணத்து மேலைப்புலோலி மகாவித்வான் ஸ்ரீ-கதிரைவேற்பிள்ளை அவர்களால் இயற்றப்பட்டு, இவ்வித்தியாரத்னாகர அச்சியந்திர சாலைக்காரரால் பதிப்பிக்கப்பட்ட சுப்பிரமணிய பராக்கிரம் என்னும் நூலினும் பார்க்கக் காண்க.



தக்கன் பரமனைநிந்தித்து யாகஞ்செய்யவும், அதையறிந்த பரமன் வீரபத்திரரால் யாக
ந்தையழிக்கவும், பின்பு பரமனைப் பாணிக்கிரகணஞ்செய்ய பார்வதி பர்வதராஜனுக்குப் பெ
ண்ணாயவதாரஞ் செய்ததுமறிக—9.




உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

மூன்றாவது,

## பார்வதிதேவியார்

# திருவவதாரச் சருக்கம்.



அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

பன்னிருவர் பதினொருவ ரெழுவரெண்மர்
திசைக்கிறைவர் பணிநாட் டுள்ளோர்
கின்னராகிம் புருடர்சித்த ரியக்கரிமை
யவர்முனிவர் கிளையி னுள்ளோர்
மன்னுமல ரவன்றிருமால் கலைமடந்தை
மலர்மடந்தை மகிழ்ந்து சூழ
முன்னைவினை யிகழ்ந்து தக்கன்
முடியாத பெருவேள்வி முடிக்கலுற்றான்.

பூருவகதை.

கேளும் மார்க்கண்டேயரே! முன்னுளிலே பிரமனிடத்திற் பிறந்த [illegible] அரிய [illegible]

பெற்றுக்கொண்டு மிகவும் பிரசித்தனாகி வாழுகிறகாலத்தில், பார்வதிதேவியார் தன்னிடத்தில் பிறக்க அவரைச் சுவாமிக்குத் திருக்கலியாணஞ்செய்து கொடுத்து மாமனாராகும்படி வரம்பெற்று, அந்தப்படி செய்தபின்பு, ஒருநாள் இவன் சுவாமியினுடைய சபைக்குப்போனான் ; அவ்விடத்தில் சுவாமி தனக்கு எழுந்து மரியாதை செய்யவில்லையென்கிற கோபங்கொண்டு தன்னுடைய வீட்டுக்குவந்து சுவாமியைப் பார்க்கிலும் உயர்வை யடையவேண்டுமென்று எண்ணங்கொண்டு.

இ-ள். பன்னிரண்டு சூரியர்கள், பதினோருருத்திரர்கள், சத்தரிஷிகள், அஷ்டதிக்குப் பாலகர், நாகலோகத்தார், கின்னரர், கிம்புருடர், சித்தர், யக்ஷர், தேவர்கள் முனிவர்கள், நிலைபெற்ற பிரமன், விட்டுணு, சரஸ்வதி, இலக்குமி மிகவுஞ் சந்தோஷம் அடைந்து சூழ்ந்துகொள்ள, எல்லோருக்கும் முதல்வராகிய பரமசிவனைநிந்தித்து நிறைவேறாத பெரியயாகஞ் செய்யத் தொடங்கினான். எ-று. (க)

எந்தைசெயு மகம்பார்க்க விடையருளென்
றிறைக்கிறைவி யிசைத்தா ளெந்தை
புந்தியிலா திகழ்ந்தனனென் றுரைத்தனனீ
யெனைவேண்டிப் பொறுப்பா யென்று
வந்தனஞ்செய் தனளவளை நகைபுரிந்து
கடிதுசென்று வருவா யென்றான்
கந்தமலர்க் குழலாளுந் தந்தைமகந்
தொடங்குகன தலத்தைச் சார்ந்தாள்.

இ-ள். பார்வதிதேவியானவள் தகப்பனாகிய தக்கன் யாகம் பண்ணுவதைக்கேட்டு, சுவாமீ ! என்னுடைய தகப்பன்செய்கிற வேள்வியைப் பார்த்து வருகிறதற்கு உத்தரவு கொடுமென்று கேட்க, அதற்குச்சுவாமியானவர் உன் தகப்பன் புத்தியில்லாமல் என்னை மதியாமல் இகழ்ந்திருக்கிறானே, நீ போகலாகா தென்று சொல்ல, அதைக்

கேட்டுச சுவாமி என் தகப்பன்செய்த இந்தக் குற்றத்தை என்னைவேணடிப் பொறுககவேணடுமென்று நமஸ்காரஞ் செய்தபோது அந்த அம்மையைப்பார்தது நகைதது நல்லது நீபோய்சசீக்கிரத்திலே வந்துசேரென்று சொல்லப் பாாவதியும் தகப்பன் யாகஞ்செய்கிற இடத்துக்குப்போனாள எ-று. ௨)

தூயரைக்கண் டடிதொழுதா ளவடழுவா
திருந்தனடன் றநதை யான
தீயவனைப் பணிநதனளங் கவளுமிகழ்ந
தானிகழ்நத செயலை நோககிப
பேயிருக்குநெ சுடலையெனப பிழைபிறந்து
விடுக வுஙகள் பெருவாழ் வெனறு
வாய்பிறககுங கொடுமைசொசி மறைநதனளச்
செயலறிநதான் மங்கை பாகன்

இ-ள். பாாவதி தக்கன் யாகசாலைக்குப்போய்த் தன்னுடைய தாயை வணஙகினாள், அவள இந்த அம்மையைத்தழுவி உபசாரஞ் சொல்லாமலிருந்தாள்; அதன்பினபு தீமைபொருந்திய தகப்பனைவணதனஞ்செய்ய, அவனும் இகழ்ந்தான, அதைப்பாாதுக் கோபங கொண்டு உனனுடைய யாகசாலை வாழ்வு, பேயிருந்து விளையாடுஞ் சுடலையாகிப் போககடவதென்று சபித்து, பிராட்டியார்மறைந்தார். அதலையறிந்தவர் உமாதேவி பாகராகிய சிவபெருமான். எ-று. ()

கலி விருத்தம்.

உன்னரிலாவு வஞ்சிசெல்ல வொருவனுவி யுய்யுமோ
தலையணிலா முடிக்குனின்று கழலைமொண் டிறைக்கையா
மன்னையுமெய்ம் முனிவுகொன்று மளவிலெற்றி விழிதனில்
விண்ணுலகிற்க பண்ணரக்க வீரன்வந்து தோன்றினான்.

னையழைத்தது என்னகாரணம் என்னகாரணமென்று வீரபத்திரர் வந்தார். எ-று.  (௬)

முக்கணத்த னீர்கொடாது கனல்கொடுக்கு முகிலெனத்
தக்கன்வேள்வி யைத்தகர்ந்து மீள்தியென்று சாற்றினு
னக்கணத்தி னுவகைபொங்கி யடிவணங்கி யேகினன்
பக்கநின்ற பூதநாதா பாரிடங்கள் சூழவே.

இ-ள். என்னையழைத்தகாரியம் என்னவென்றுகேட்ட வீரபத்திரரைப்பார்த்து. மூன்று கண்களையுடைய பரமசிவன். சலத்தைப் பொழியாமல் நெருப்புகளைக்கக்கும் மேகம்போற்போய்த் தக்கனுடையயாகத்தை யழித்து வாவென்று கட்டளைசெய்ய, அக்கணமேவீரபத்திரர் அதிக சந்தோஷமடைந்து சுவாமியினது திருவடியைத்தொழுது பக்கத்தினின்ற பூதக்கூட்டங்களும் பேய்களுஞ் சூழப்போனார். எ-று.  (எ)

நாகங்கொடிய பரிதி நாகங் காலி னிகிழ்மாலையா
யாகசிரட்டி புதிய லாலமாய வீசவும்
குஞ்சரங்க ளொட்டமாய்க் குண்டலமாக விட்டவெண்
கருக்கைதா காலவாய பகவரினரு வீசவே.

இ-ள். விஷநாகங்களாகிற * அஷ்டமா நாகங்களை மாலையாகத் தரித்துக்கொண்டு பதுமப்பூக்கள் நீலவர்ணமான ஆலவட்டம்வீசிக்கொண்டுவரவும். திக்கிலிருக்கும் † யானைகளெட்டையுங்காதிலே குண்டலமாகத்தரித்துக்கொண்டு, வெள்ளைச்சடையணிந்த நால்வர் பரிசுத்தமாகிய சாமரம்வீசவும்புறப்பட்டார்வீரபத்திரர். எ-று.  (அ)

---

அஷ்டநாகங்கள்—அநந்தன், வாசுகி, தக்கன், கார்க்கோடகன், பதுமன், மகாபதுமன், சங்கபாலன், குளிகன். † யானைகளெட்டு—ஐராவதம், புண்டரீகம், வாமனம், குமுதம், அஞ்சனம், புட்பதந்தம், சார்வபௌமம், சுப்பிரதீபம்.

யிருந்த வுதரவெம்மை விண்பிழிந்து தீர்த்திடும்
பேயிரண்டு நூறுநூறு காகளம் பிடிக்கவே
வாயிரண்டு போதுமாலை மதிபடைத்த பூதமோ
ராயிரங் கவிகைமுத்தி னதபத்தி ரங்களே.

இ-ள். வடவாமுகாக்கினி குடிகொண்டிருந்த வயிற்றினுடைய பசியை மேகங்களைப்பிழிந்துகுடித்து ஆற்றிக்கொள்ளுகின்ற இரண்டாயிரம் பேய்கள் எக்காளம் பிடிக்கவும், சந்திரனை இரண்டாகப்பிளந்து இரண்டுகடைவாயிலும் வைத்ததுபோலிருக்கும் ஆயிரம்பூதங்கள் முத்துக்குடைகள் பிடிக்கவும் புறப்பட்டார். எ-று.

மாயுமாயர் தந்தசங்கு கோடி கோடி மாறவே
தீயின்வாயி லூர்திறந்த சிங்கநாத மூதவே
வாயுமெண்ணில் காலமேதி தந்தகொம் பிசைக்கவே
யாயிரங்க ளிற்றெருத தணைத்ததேரி லேறினான்.

இ-ள். இறந்திறந்து பிறக்கிற அநேககோடி விஷ்ணுக்களுடைய கையிலிருந்த சங்குகளை அநேக பூதங்கள் வாயில்வைத்தூதிவரவும், இறந்த அக்கினிபகவான் வாயுபகவானேறுகின்ற ஆட்டுக்கடா கலைமான் இவைகளுடைய கொம்புகளை வாயில் வைத்து அநேகபூதங்களூதவும், இறந்துபோன யமராசர்களேறிய எருமைக்கடாக்களுடையகொம்புகளைவாயில்வைத்து அநேகபூதங்களூதவும், ஆயிரம்யானைகள் கட்டியிழுக்கிற தேரிலேறினார் வீரபத்திரர். எ-று.

சிலகணங்க ளானையான சிலகணங்க டோதரா
யுலவுகின்ற சிலகணங்க ளோடுகின்ற வாசியாய்
[illegible]வுகொண்டு சிலகணங்கள் மனிதர் தேவராயினை
வலங்கதூர்ந்து மலகிலா தனந்தவேட மானதே.

இ-ள் அப்படி வீரபத்திரர் தேரிலேறினபோது, சிலபூதங்கள் யானையுருவங் கொண்டன; சில பூதங்கள் தேரினுருவங்கொண்டன சில பூதங்கள் குதிரையாயின; சில பூதங்கள் மனிதரும் தேவருமாயின; எண்ணில்லாத பேய்கள் எண்ணிறந்த ரூபங்கொண்டு புறப்பட்டன. எ-று. (௧௧)

நீரையே முடங்கவுண்டும் விடாய்கெடாது மீளுமே
பாரமேழு பாருமுண்டு பசிகெடாது படருமே
கூரவேலெறிந்துகால னாடுகொள்ளை கொள்ளுமே
போரையே விரும்பிமுன் னடந்தசென்ற பூதமே

இ-ள். வீரபத்திரர் புறப்பட்டவுடனே, யுத்தஞ்செய்ய விரும்பி அவருக்குமுன்னே நடந்த பூதங்கள் * எழுசமுத்திரத்து நீரடங்கலும் குடித்தாலும் விடாய்தீராமல் திரும்பும; பாரமாகிய எழுலகத்தையும் சாப்பிட்டும் பசிபோகாமல் அலைந்துகொண்டிருக்கும் கூர்மைபொருந்திய வேலாயுதத்தை எறிந்து எமனுடைய நாட்டைக் கொள்ளைகொள்ளும். எ-று. (௧௨)

கொண்டலேழை யுஞ்சிவந்த குஞ்சிமீது சுற்றுமே
புண்டரீக ரண்டமும புகைகொளுந்தி மீளுமே
யெண்டிசா முகத்தைநாடி யாகசாலை தேடுமே
சண்டவாயு வென்னவங்கை தட்டியோடுபூதமே.

இ-ள். பூதங்கள் எழுமேகங்களையும் பிடித்துச சிவந்த தலைமயிரிலே சுற்றிக்கட்டிக்கொள்ளும்; அனேக பிரமாண்டங்களையும் புகையுண்டாக நெருப்பினால்கொளுத்தும்; எட்டுத்திக்குந்தேடி யாகசாலையெங்கேயென்று தேடும்; பிரசண்டவாயுபோலக் கைகளைக் கொட்டிக்கொண்டு வீரபத்திரர் பின்னே ஓடாநிற்கும். எ-று. (௧௩)

* எழுசமுத்திரங்கள் - உப்பு, தேன், கருப்பஞ்சாறு, தயிர், நெய், பால், சுத்தநீர் என்பன.

வெள்ளவாழி மதுநுகர்ந்து வீறுகின்ற சிலகணந்
துள்ளவந்து புவனமுற்றுஞ் சுற்றுகின்ற விறையியார்
தள்ளுகின்ற பேர்களென்று சாய்க்கநின்று நகைசெயும்
பள்ளிகொள்ளு முடனெழுந்து பரிவுகொண்டு பாடுமே.

இ-ள். வெள்ளமாகிய சமுத்திரம்போன்ற மிகுந்த மதுவைப் பானஞ்செய்து அதனால் வீறுப்புமேலிட்டுச் சண்டைக்கு எழுந்தன; சில பூதங்கள் துள்ளிக்கொண்டு உலகமெல்லாஞ் சுற்றிவரும், சில பூதங்கள் நம்முடைய சுவாமியைத் தள்ளுகிறவர்கள் யாரென்று கேட்டு அவர்களைக் கொல்லுகிறதற்காக நின்று வீரநகை கொள்ளும்; சிலபூதங்கள் நித்திரைசெய்யும்; சிலபூதங்கள் உடனேயெழுந்து அன்புகொண்டு சிவனைக்குறித்துப் பாடும். எ-று. (௧௪)

வெதிர்சிலம்பு முரசுசங்கம விருதுபம்பை யதிரவே
புதியகண்ட மணிதவண்டை புரிபதங்க மறுகநீள
கதிகடந்து யாகசாலை கண்டுபூத கணமெலா
மதிதிமைந்த ரானபோக ளாவிவாரி வீசினா

இ-ள். வீரபத்திரர் புறப்பட்டவுடனே புள்ளாங்குழல், சிலம்பு, முரசு, சங்கங்கள், விருதாகிய உடுக்கை முதலான வாத்தியமுழங்கவும், பெரியமணி, தவண்டை, மிருதங்கம, சத்திகளும், வழிமுழுதும்போய்த் தக்கனுடைய யாகசாலையைக் கண்டு எல்லாப்பூதக்கூட்டங்களும் அதிதியினுடைய பிள்ளைகளாகிய சகல தேவர்களையும் தாக்கி வாரிவீசினார்கள். எ-று. (௧௫)

காரிமேலேறி மையிமேலேறி கடாவிமேலேறி யலகைமே
லேரிமேனேறி மகரமேறி யிரலைமேறி யளகையாம்
பாரிமேலேறி மானமேறி பகவிமேலேறி யெண்மருக்
கூரிமேலேறி வந்தவீரர் சேனைமான போதினர்.

இ-ள். மேகவாகனனாகிய தேவேந்திரனும், ஆட்டுக்கடாவிலே றுகின்ற அக்கினியும், எருமைக்கடா வாகனனாகிய யமனும், பேய் வாகனனாகிய நிருதியும், மகரவாகனனாகிய வருணனும், மான்வாக னனாகிய வாயுபகவானும், அளகாபுரியையாண்டு விமானத்திலேறு கின்ற குபேரனும் எருதுவாகனனாகிய ஈசானியனுமாகிய எட்டுப் பேர்களுந் தேரிலேறி எதிர்த்துக் கொண்டுவந்த வீரபத்திரருடைய பூதகணங்களை யெதிர்த்தார்கள். எ-று. (கசு)

வாளிசூலம் வேலுலக்கை வச்சிரங்க ணிச்சிவாள்
மீளிசேனை காவலாளர் வீழுமாறு வீசினார்
கூளிநா லிரண்டுசென்று கொடியவெண்மர் பரியெலா
மாளியோ டெடுத்தெறிந்த * வம்மனைக்கு நிகரவே.

இ-ள். அட்டதிக்குப் பாலரும் பாணம், சூலாயுதம். வேல், உலக்கை, வச்சிராயுதம், மழு, கத்தி இவைகளை வீரபத்திரருடைய சேனைத்தலைவர்கள்விழும்படி பிரயோகஞ் செய்தார்கள்; அப்போது எட்டுப் பூதங்கள் புறப்பட்டுத் திக்குப்பாலகர் எட்டுப்பேரையும், அவர்களேறிய வாகனங்களெட்டையும் அம்மனைக்குச் சமானமாக எடுத்தெறிந்தன. எ-று. (கஎ)

அலைகடா லிரண்டுமேவீழ மவர்செய்பூத மோடவே
மலைவுகண்டு திக்குபாலர் வாகைமாலை சூடினார்
கலிதல்கண்டு வீரன்வாளி நாலிரண்டை யேவினா
னுலகபால ருடல்புகுந்து ளமுதமுண் டிலாயதே.

இ-ள். முன்னே எட்டுப்பூதங்களால் எறிபட்டு வீழ்ந்த திக்குப் பாலகரெண்மரும், அந்த எட்டு பூதங்களும் மேலெழவும், மற்றைப் பூதங்களெல்லாம் ஓடிப்போகவும் யுத்தஞ்செய்து, வெற்றிமாலை

* அம்மனை என்பது மகளிராடும் ஒருவிளையாட்டு.

கூடிக்கொண்டார்கள்; அதுகண்ட வீரபத்திரர் எட்டுப்பாணத்தை விட்டார்; அவைகள்போய் எட்டுப்பேர்களுடலைத் துளைத்து அவ்வுடல்களுள் இருக்கிற அமிர்தத்தைப் புசித்து சஞ்சரித்தன. எ-று.

மருங்கிழிந்து குயிலதாகி வச்சிரத்த னேகினு
னொருங்குமீச னளகையாளி நிருதிவாயு வருணனுஞ்
சுருங்கினுற் கடாவிலேறி தூஞ்சினு னழற்பிரான்
பெருங்கையேழு மீசனன்பர் பிறவிபோ லறுத்தனன்.

இ-ள். தேவேந்திரன், தன் வாகனத்தைவிட்டுக் குயில் வடிவங்கொண்டு ஓடினுன்; ஈசானன், குபேரன், நிருதி, வாயு, வருணன் இவர்கள் தோற்று வெட்கத்தை யடைந்தார்கள்; எமன் இறந்தான்; அக்கினிபகவானுடைய எழுகையையும், சுவாமி அன்பருடைய பாவங்களை அறுப்பதுபோல் அறுத்துத் தள்ளினுர் வீரபத்திரர். எ-று. (கக)

கச்சமற்ற வச்சமோடு கலையதான வெச்சனு
ரச்சனுக வுயிரைவாரி யுடலுரித் தெறிந்தனன்
பச்சைவல்லி யன்னையான பன்னிகா திரண்டையும்
வச்சிரத்தி னுலரிந்து மாமன்முன்பு சென்றனன்.

இ-ள். அளவில்லாத பயங்கொண்ட யாககர்த்தாவாகிய கலைக்கோட்டு மகாரிஷி பிராணனும் தேகமும் வேறாகக்கொன்று உடலை உரித்து எறிந்தார்; பார்வதியின் தாயாகிய தக்கனுடைய பெண்சாதியின் இரண்டு காதையும் அறுத்துத்தள்ளி, மாமனுகிய தக்கனிடத்திற்குப் போனுர் வீரபத்திரர். எ-று. (உ0)

மிக்கருந்து சோமபானம் விரபான மாகவே
பொக்கநின்ற பாகசூதன்ட மொண்டுகொண்டு ருண்டுபோற்

றக்கனு ரெதிர்த்தபோது தலையரிந்து தள்ளினு
னக்கணத்தி லொன்றுசென் றரைக்கணத் தயின்றதே.

இ-ள். தேவர்கள்கூடிச் சோமபானஞ்செய்வதைநீக்கித் தன
க்கு வீரமே பானமாகும்படி யாகசாலையிற் புகுந்து, யாகத் தம்பத்
தைப் பிடுங்கிக்கொண்டு எதிர்த்த தக்கனுடைய தலையை மலைபோல்,
கீழேவிழ அறுத்துத் தள்ளினர்; அப்போது அக்தப் பூதகணங்களி
லொன்று அரைநொடியிற்றானே அத்தக்கன் தலையைத் தின்றுவிட்
டது. எ-று. (உக)

பசுக்களே ருருத்திரப் பசுக்களாவி தன்னையும்
வசுக்களாவி தன்னையு மருத்துதேவ ராவியும்
முசுக்கள்போ லொளித்திருந்த முனிவராவி தன்னையு
மசிக்கவீரன் விட்டசூல மள்ளியள்ளி யுண்டதே.

இ-ள். மாடுகளிலே றுகின்ற பசுப்போன்ற உருத்திரக்கூட்டங்
கள் பிராணனையும்; அஷ்டவசுக்களுயிரையும், மருத்துவர்களுயி
ரையும், குரங்குகள்போல் ஒளிசறுப் பதுங்கியிருந்த முனிவரு
டைய பிராணனையும். பரியாசஞ்செய்ய வீரபத்திரர்விட்ட சூலாயுத
மானது எடுத்து எடுத்து * தின்றுவிட்டது. எ-று. (உஉ)

விழியிலே டருக்கர்பல்லை வேரறுத்து வாணிமா
வெழில்படைத்த துண்டமாகி ரண்டுதுண்ட மாக்கினன்
கழலமைத்த கான்மிதிக்க வயிக்தமுண்ட கலைநிலா
வழலவிக்கு மாறுதானி லப்புவெண்ணெ யொத்ததே.

இ-ள். சூரியன் பற்களும் கண்ணும் தெரித்துக் கீழேவிழ அடி
த்துச் சரசுவதியைப் பிடித்து இரண்டாக சாக்கையறிந்தார்; இவ்

* தின்றுவிட்ட தென்றது, இக்கலம் பிளந்துசென்றது என்
று பொருள் செய்க.

குமிலை மூக்கறுத்தார்; வீரகண்டாமணியைத் தரித்தகாலினால் சந்திரனை மிதிக்க, அவன் சகன்கித் தக்கனுடைய யாகசாலை நெருப்பை மிதித்ததனால் அந்த வெப்பந்தீர அப்பிய வெண்ணெய்போலானான். எ-று. (உ௩)

காயமண்ணில் விட்டதேவர் கரியமேனி வலகையாய்
மாயமாகி முன்னையாகம் வந்துதோன்றி யமர்செயத்
தூயசேனை யாய்பேர் தொடர்ந்துசாக வமர்செய்தார்
பேயதா யிருக்கவும் பிணக்ககன்ற தில்லையே.

இ-ள். பூதகணங்களாலே இறந்துபோன தேவர்கள், கரியதேகத்தையுடைய பசாசாகி. மறுபடியும் முன்யாகத்திலே மாயமாய்த் தோன்றி எழுந்து சண்டைசெய்ய, அவர்களை வீரபத்திரசேனை அடித்துக்கொன்றார்கள்; ஆகையால் பேயாய்ப் போகியும் துக்கம் நீங்கவில்லை. எ-று. (உ௪)

விதிபுனைந்த வோம குண்டம் வேறுபட்ட தென்னினும்
புதியசோறு மெள்ளினோடு பொரியும்வாய் புகட்டிமுன்
குதிகொணெய்க் கடாமெடுத் தொழுக்குபோதொர் கூளி
னுதரகுண்ட மனலெழுந்த வோமகுண்ட மானதே.

இ-ள். பிரமனாலே விதிக்கப்பட்ட யாகசாலை ஓமகுண்டம் அழிந்தாலும், அதற்குபயோகமாக வைத்திருந்த சோறும், எள்ளும், பொரியும், ஒருபூதம் வாயிற் கொட்டிக்கொண்டு, நெய்க்குடங்களை யெடுத்து மடமடவென்று உட்கொள்ளும்போது, அதனுடைய வயிறே ஓமகுண்டமாகவும் உதராக்கினியே நெருப்பாகவும் இருந்தது. எ-று.

எட்டுதிக்கு பாலரும் வசுக்களும் குருக்களு
முட்டிலாத முப்பதிற்று மூன்றுகோடி தேவரும்

பட்டபோ தவர்தம்மெய்கள் பழுதுறாது தன்னுளே
பிட்டபூத வுதரமுன்னை யாகசாலை யொத்ததே.

இ-ள். அஷ்டதிக்குப்பாலகரும், அஷ்டவசுக்களும் தலைவராக வந்த குருக்களும், முட்டுப்பட்டவராகிய முப்பத்துமுக்கோடி தேவாகளும் இறந்தபோது, அவர்கள்தேகம் வீணாகப்போகாமல், வீரபத்திரருக்கு முன்னே அவருடைய சேனைகள் சாப்பிட்டபடியினால் அந்த பூதகணங்களுடைய வயிறு யாகசாலையையொத்தது. எ-று. ()

கற்பகால முங்கெடாத கணமிதிக்க வமரர்த
மற்பமா முடம்பிரத்த மாவிகார மொத்ததால்
பற்பல ரியக்கர்சித்தர் பண்டிசிந்து குடற்களாற
சர்ப்பயாக மொத்ததன்று தக்கன்செய்த யாகமே.

இ-ள். கற்பகாலத்திலும் அழிவில்லாத பூதகணங்கள் மிதித்தபடியினால், தேவர்கள் அற்பமாகிய உடம்பினின்றும் பீரிட்ட உதிரம் யாகத்துக்கு நெய்யெடுத்துச சொரிதல்போலிருந்தது; பலபல யட்சர்சித்தர்களுடைய வயிறு பிதுங்கப்பட்டு அவர்களுடைய குடல் கொடிகொடியாகச சிந்திக்கிடந்தது, சர்ப்பயாகஞ் செய்தலை யொத்தது அன்று தக்கன்செய்த வேள்வி. எ-று. (உ௭)

இறந்ததிக்கு பாலராதி தேவர் சித்தர் முதலினோ
ரிறந்திறந்து போகவேத னிறையிலே யியற்றினன்
பிறந்துவந்து வந்துபோர் பெருக்கினர் பிறந்தபேர்
மறந்துவீழ வீரன்மோதி மலரினானை யண்டினன்.

இ-ள். சிறப்புப்பொருந்திய திக்குப்பாலகர் முதலாகிய தேவர்கள், சித்தர்கள் முதலானோர் இறக்க இறக்கப் பிரமன் கோடிப்பொழுதில் அவர்களைப் படைத்துக்கொண்டே வந்தார்; அவர்கள் மறு

படியும் யுத்தஞ்செய்தார்கள்; (பிறக்கும் வரலாற்றையுணர்ந்து) அவர்கள் பின்னும் பிரக்காமலிருக்கும்படி பிரமனையடுத்து யுத்தஞ் செய்யத்தொடங்கினார் வீரபத்திரர். எ-று. (உஅ)

செகதகதேவர்பிழைகளவுஞ் செருச்செயப் படைத்திடுங்
கைத்தலங்கள் வீழுமாறு கமலனைமோதினன்
* முத்தலைக்கொள்படையெடுத்துமுண்டகத்தர்சிங்கைசேர்
பத்துமைமர்தர் சென்னியும படிககுளெ பரப்பினன்

இ-ள். இறந்துபோனதேவர்கள மறுபடியுஞ் சண்டைசெய்யப் படைகளும் பிரமனுடைய கைகளையறுத்துத் தள்ளினார்; மூன்று தலையையுடைய ஆயுதத்தினால் அவர்மனத்தில் உண்டாகிய பத்துப் பிரமருடைய தலைகளையும் குத்திப், பூமியில்விழத் தள்ளினார் வீரபத்திரர எ-று. (உகூ)

அண்டகூட முண்டுமிழ்ந்த வாதிமாய னமர்செயத்
தண்டமேரு வெனவிளங்கு கருடன்மீது தோன்றியே
கண்டவாளி வருடமாக வீரன்மார்பில் வீசினன்
தண்டதுண்ட மாகவீரன் கையின்வாளி யேவினன்.

இ-ள். அண்டங்களை விழுங்கி உமிழ்ந்த முதல்வராகிய விட்டுணுமூர்த்தி சண்டைசெய்ய மேருகிரகாகவிளங்கிய மூக்கையுடைய கருடன்மேல் ஏறிக்கொண்டு அநேகபாண வருஷங்கள் வீரபத்திரர் மார்பில் படும்படியாகப் பொழிந்தார்; அப்படிவிட்ட பாணங்களை எல்லாம் கண்டதுண்டமாகத் தன்கைப் பாணத்தினால் அறுத்தெறிந்தார் வீரபத்திரர். எ-று. (௩0)

வையமுண்ட மால்வெகுண்டு வான்விதிர்த்து வீசின
[illegible]ன்கொர் வாளியா வறுத்தெறிந்தே ரம்பினாற்

* முத்தலைகொள்படை - சூலாயுதம்.

பையசர் வருந்தியழவி பருகினான்மெய் கருகினான்
கையிலாழி யேவினான் பணிந்த தண்ணல் காலிலே.

இ-ள். விட்டுணு வில்யுத்தம் பண்ணுகிறதற்குச் சத்தியில்லாமல் கோபங்கொண்டு, ஒருசத்தியை எடுத்துச்சுற்றி வீசினார்; வீரபத்திரர், அச்சத்தியை ஒருபாணத்தை விட்டறத்தெறிந்து ஒருபாணத்தினால் பாம்பைக் கொல்லுகின்ற கருடனைக் கொன்றுவிட்டார்; அதுகண்டு துக்கத்தினால உடம்பு கருகிப்போய்க் கையிலிருக்கிற சக்கிரத்தை வீரபத்திரர்மேல் பிரயோகஞ்செய்தார்; அஃதோடி வந்து சுவாமிகாலில் விழுந்துபணிந்தது எ-று. (௩௧)

எந்தைமுன் னளித்தவாளி யெங்கைதானில வீழவே
யந்தமெய் யொழிந்துபன்றி யுரியினவேட மாகிய
வந்துவிந்து போர்தொடங்கி வாளினவேலினை வலவினா
னந்திவேறு சேலதாகி வாரிமீ தொளித்தனன்

இ-ள். முற்காலத்தில். விட்டுணு ஆயிரம் தாமரை மலரைக் கொண்டு பரமசிவனைபூசித்து வருகிறபோது, இவர் பத்தியைப் பரிசோதிக்கவேண்டி * ஆயிரம்பூவிலே ஒருபூவைச்சுவாமிமறைத்து வைத்தார் விட்டுணு பூசைசெய்து அருச்சனை பண்ணிக்கொண்டு வரும்போது ஒரு புட்பங்குறைய அதற்குப் பதிலாகத் தன்னுடைய தாமரைப்பூவொத்த கண்ணைப்பிடுங்கி அருச்சிக்கச் சுவாமிக்கு மனத்தில் சந்தோஷம்வந்து சக்கிராயுதம் கொடுத்தார்! அந்தச் சக்கிரத்தைத்தானே சுவாமிமேல்விட. அதுபயந்து காலில விழுவே, இனிமேல் இந்த ரூபத்தோடே நின்றால் பிழைக்கமாட்டோமென்று அந்த உருவத்தையொழித்துப் பன்றியாகவும், சேலமாகவும், ரூபமெடுத்துவந்து யுத்தஞ்செய்ய அந்தந்த உருவங்களை வரையுதத்தா

* "யோவாமபாதார்ச்சித விஷ்ணுநேத்திரஸ் தஸ்மைதத்தௌ சக்ரமதிவரிஷ்டம்" தஸ்மை ருத்திராயநமோ அஸ்து என்றது வேதம் தமிழ்வேதங்களாலு முணர்க.

லும் வேலாயுதத்தாலும், வீரபத்திரர் கொன்றார்; அதன்பின்பு மிக வும் பயந்து மீனுருவமெடுத்துச சமுத்திரத்தில் விழுந்து ஒளித்தார். எ-று. (௩௨)

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

புவியுண்ட நெடுமாலும் பழையபடி
புவியுண்டு போனன் வேதா
தவியுண்டு தலைநாலுந் தடியுண்டா
ரிமையவர்தந் தடியூ றுண்டார்
கவியுண்ட களற்குண்டம் பேயிறைச்சி
யருந்துகன கலமே யான
தவியுண்டு மனமகிழ்தற் கெய்துமுனி
வரரெல்லா மவியுண் டாரே.

இ-ள். மண்ணையுண்ட மகாவிட்டுணுவுந் தோற்றுமண்ணை வா யிற்போட்டுக்கொண்டு (அலைகடலில்) ஒளித்துக்கொண்டார்; பிர மன் தவிர்த்து நான்கு தலையும் அறுப்பட்டிறந்தார்; தேவர்களுந் தண்டத்தாலடியுண்டு இறந்தார்கள்; பூதகணங்கள், இறைச்சி சாப் பிடுதற்கு ஓமகுண்டம் பாத்திரமான து அவிர்ப்பாகஞ் சாப்பிட்டு மனமகிழ வந்த முனி சிரேஷ்டர்கள் எல்லாரும் வீரபத்திர சுவாமி யினு லிறந்தார்கள். எ-று. (௩௩)

இங்கிதுவாய் முடிந்ததற்பின் வீரனிறை
பதம்பரவி யிசைத்த னெல்லா
மங்கணனு முனிவாறி யருள்கூர்ந்து
மகத்திறந்தார்க் காவி யீந்து
மங்கரிய பதங்களெலாம் பழையபடி
புதவுதலும் வணங்கிப் போனார்
சங்கரியை முன்பெற்ற னென்பெற்றன்
றன்காட்டுத் தலை பெற்றனே.

இ-ள். இவ்விடத்தில் இவ்வாறாக யாகசாலையோடு யாவரும் நாசமடைந்த பிற்பாடு, வீரபத்திரர் கைலாயத்திற்குப்போய்ச் சுவாமியினுடைய பாதத்தில்வணங்கி அங்குநடந்த சமாச்சாரமெல்லாஞ் சொன்னார்; அதுகேட்டருளிப் பரமசிவனுங் கோபமாறி இருவிப பிறந்து யாகத்திலிறந்தவர்கள் அனைவரையும் பிழைப்பித்துக் கேடில்லாத அவரவரிடங்களை யவரவர்க்குப் பிழையபடியே அருளிச் செய்தலும்; அவர்கள் சுவாமீ! நாங்கள் விவேகமில்லாமையினால் செய்தகுற்றத்தைப் பொறுக்கவேண்டுமென்று நமஸ்கரித்து விடை பெற்றுக்கொண்டார்கள்; பார்வதியைப்பெற்ற தக்கனுக்கு மாத்திரம் நிக்ரைசெய்ததற்கு அபராத அடையாளமாக ஆட்டுத்தலையை அவனுடலில் வைத்துப்பொருத்தி எழுந்திருக்கும்படி செய்தார். எ-று. (௬௪)

எந்நாதன் றனையிகழ்ந்தோன் புதல்வியென
வுலகுரைக்கு மிடுக்கண் டீரத்
தன்னைத் தன்யோக சாதனத்தால்
விடுத்திமவான் றவத்தி னாலு
முன்னாக மைநாகன் றனைப்பயந்த
மேனையது முயற்சி யாலு
மின்னாக வவதரித்தா ளமரரெலாங்
கற்பகப்பூ வீசி னாரே.

இ-ள். எமக்கு நாதராக இருக்கின்ற பரமசிவனை நிந்தித்த தக்கனுடைய குமாரியென்று பழிப்பாக உலகம் சொல்லுமே நம்மை யென்று பார்வதி அந்தத் தக்கந்தரத் தன்னுடைய தேகத்தை யோகாக்கினியினாலே நிவர்த்திசெய்து, மலையரசன் தபோமகிமையினாலும் முன்னே மைநாக னென்கிற பிள்ளையைப்பெற்ற மேனாதேவியினது தவமுயற்சியினாலும், அவர்களுக்குக் குமாரியாக அவதாரஞ் செய்தார்; தேவர்கள் கற்பகப் புட்பங்களை வருஷமாகப் பொழிந்தார்கள். எ-று. (௬௫)

* சித்தாந்தத் தொன்றுசத்தி சிவத்திரண்டாய்
ஞானமிச்சை செயலின் மூன்று
கொத்தாகிக் குடிலைதரு நாதவிந்து
விரண்டினுக்குங் கொழு கொம்பாகி
முத்தாகிச் சிவனிடத்தே யுருத்திரன்மா
லயன்முதலோர் முளைத்த மூல
வித்தாகி நின்றவளைப் பயந்தவர்க்கு
முடிந்தவம் விளம்ப லாமோ

இ-ள். சித்தாந்தமாகச் சொல்லப்பட்ட சிவனிடத்தில் ஒன்றுபட்ட அபின்னசத்தியாய்ப் பின்பு அச்சிவத்தினின்றும் பின்னசத்தியென்று வேறுபட்டுப் பின்பு ஞானசத்தி. இச்சாசத்தி கிரியாசத்தியென மூன்றுவகையாகிக் குடிலையினுண்டாகிய நாதவிந்துகளுக்கு கொழுகொம்பாகியும், சுவாமிக்கு முத்தாகியும், பரமசிவனிடத்தில் உருத்திரன் விட்டுணு பிரமன் முதலானவர்கள் உண்டாகிறதற்கு மூலமாகிய வித்தாகியும், எங்குநிறைந்த பார்வதியைப் பெற்றவர்க்கு முடிந்ததவப் பெருமையைச் சொல்லக்கூடுமோ. எ-று.

கலைவளரு மதிபோன்று சிவனை வெல்ல
மதன்வளர்க்குங் கரும்பு போன்றும்
பலகலையுந் தெளிந்தடைந்து கழங்கூச
லெயற்றியுமை பயிலு நாளில்
மலையரச னிடத்தின்மறை நாரதனோ
ரொருநாளின் மகிழ்வா யெய்தி
யுலகமெலாங் குடியிருக்குந் திருவயிற்று
விலக்கணம்பார்த் துரைக்க லுற்றார்.

---

* சித்தாந்தம்-தீர்க்கமுடிபு. வேதாந்தத்தின்முடிபே சித்தாந்த மென்றவாறு. "வேதாந்தத்தெளிவாஞ் சைவசித்தாந்தத்திறனிங்கு தெரிக்கலுற்றாம்" என்றது சிவப்பிரகாசமும்.

இ-ள். பார்வதி இமாசலராசனுக்கும், மேனாதேவிக்கும் குழந்தையாகி வளர்பிறைபோல் நாளுக்குநாள்வளர்ந்து மன்மதன் சிவனைவெல்லவில்வேண்டி அதற்குவளர்த்த கரும்பையொத்துப் பலபல சாஸ்திரங்களையுங்கற்றுப்பயர்ந்து. கழங்கு; ஊசல், விளையாட்டு முதலானவை பார்வதிசெய்துக்கொண்டுவருகிறகாலத்தில், மலையரசனிடத்தில் வேதமுணர்ந்தநாரதர் ஒருநாள்வந்து உலகங்களெல்லாம் வயிற்றில்வைத்திருந்த அம்மையுடைய இலக்ஷணம்பார்த்துச்சொல்லுவார். எ-று. (௬௭)

நெறறியிலோர் புறத்திலரை நேத்திரமுண்
டாமொருகை நெடிய சூலம்
பற்றுமொரு தனமறையு மொருபாக
மரகதம் பாய்ப் பவள மாகும
கற்றைநறுங் குழல்பாதி சடையாகு
மொருகைவளை கழன் றுபோகு
முற்றுவர விவைகளென மலையரசன்
மனமுருகி யுவகை யானான்.

இ-ள். பருவதராஜனே? உம்முடைய குமாரத்திக்குச சிலபொழுதில்நெற்றியில் ஒருபக்கத்தில் அரைக்கண்தோன்றும்; ஒருகையில் சூலமுண்டாகும்; ஒருபக்கத்துத்தனம் மறைந்துபோகும; பாதிசரீரம் பசசைநிறமபோய்ப் பவளமாகும், கூந்தலிற்பாதி சடைகளாகும். ஒருகையில்வளைகளில்லாமறபோகும்; இவைகள் சம்பவிக்குமென்று நாரதர்சொல்லப் பருவதராஜன் உள்ளமுருகிச சந்தோஷத்தை யடைந்தான். எ-று. (௬௮)

அறுசீர்க்கழிநெடியாசிரியவிருத்தம்.

வையநீர்க் கங்கை பாயும்
புனிவரை மருங்கி லக்காள்
ஐயநீச் சடையான் வந்தல்
கோர்தவத் தொடங்கக் கேட்டு

வையக மளித்தா டாதை
வள்ளலைப் பணிந்து மானை
யையனின் றவத்துக் கேவல்
கோடியென் றளித்துப் போனான்.

இ-ள். இப்படி நாரதர்சொன்னதைக்கேட்டுப் பார்வதியேசமக்குப் பெண்ணாகவந்தபடியினால், பரமசிவன் மருமகனாகவரவேண்டுமென்று பிரார்த்தித்துக்கொண்டிருக்கிறாளாயில், பூமியில் கங்கையைச் செலுத்திக்கொண்டிருக்கிற அந்த இமயபர்வதத்திலொருபக்கத்தில் பரமசிவன் யாதோவொரு நினைவினால் யோகத்திலிருக்கிறாரென்கிறவார்த்தை கேள்வியாகித் தன்மகளாகிய பார்வதியையும், சிலதோழிப்பெண்களையும், அழைத்துக்கொண்டுபோய நமஸ்காரஞ்செய்து என்னுடையபெண்ணை உம்முடையதவத்துக்காக ஏவல்செய்ய ஒப்புக்கொள்ளுமென்று அவரிடத்தில அம்மையை விட்டுப்போனான் பருவதராசன. எ-று. (௩௪)

ஓங்குமா லயன்மற் றுள்ளோ
ரொழிவிலாத் தவம் புரிந்தால
தாங்குபெ றளிப்பான் றானோர்
கருத்தினாற் றவஞ்செய் போதிற்
பூங்குழல் கனியும் போது
முஞ்சியும் புனலுங் கொண்டு
பாங்கியர் பலருஞ் சூழப
பணிவிடை பலவுஞ் செய்தாள்.

இ-ள். எல்லாத்தேவரினு முயர்ந்த விட்டுணு, பிரமா மற்றவர்கள் பெருமையாயொழிவில்லாத தவஞ்செய்தால் அவர்களுக்கு வேண்டியவரத்தைக்கொடுக்கிற சுவாமியானவர் யாதோ ஒரு கருத்தி

ஞற்றவஞ் செய்கிறபோது பார்வதி, பழம், புஷ்பம், தருப்ப ...ரு மஞ்சனமுதலானவைகளைக் கொடுத்துத் தன்னுடைய பாங்கிமார்களுடனே பல பணிவிடையுஞ் செய்துகொண்டிருந்தாள். எ-று. ()

இங்கிவை யிருக்கத் தேவ
ரியாவரு மிமையோர் கோவும்
பங்கயத் தவனை யெய்திப்
பணிந்தனர் பதுமத் தோனு
மங்கவராக் கிருக்கை யீந்தா
னவரவா முகந்திற சோரவுங்
குங்குமக குழம்பு நீத்த
புயங்களிற் குழைவுங் கண்டான

இ-ள். இவ்விடத்தில் இப்படியிருக்க, எல்லாத் தேவர்களும் தேவேந்திரனுங்கூடிப் பிரமனைசசோந்து தொழுதார்கள்; அந்தப் பிரமனும் அவாகளுக்கிருக்க ஆசனங்கொடுத்துப் பிற்பாடு, அவர்களுடைய முகஞ்சோாந்து இருப்பதையும் குங்குமம் பூசியிருந்ததோளகள இளைத்திருப்பதையும் பாாத்தாா. எ-று. (சஅ)

வசசிர மொடிந்த தானன்
கணிச்சிவாய் மடிந்துங் காலன்
முசசிரம் வளைந்து மற்றோ
படையெலா முறிந்துந தேவா
மெய்ச்சிர மகுட நீத்து
மெலிந்தமை விளம்பு மென்று
னச்சுரா் தமக்குக் கோமான்
ருாக ளழித்தா னென்றான்.

இ-ள். வச்சிராயுதம் ஒடிந்துபோயும், ஈசானன் மழுவாயுதத் தின்வாய்மழுங்கியும், எமனுடைய சூலாயுதம்வளைந்தும், மற்றவர்க ள் ஆயுதமுறிந்தும். தேவர்கள் சிரத்திலிருக்கிற மகுடம்பிடுங்கப்பட் டும். வருத்தத்தையடைந்தீர்கள்; அவ்வருத்தத்தைச்சொல்லுவதென் றகேட்டதேவேந்திரன தாரகாசுரன் இப்படி அவமானஞ்செய தானென்று சொன்னான். எ-று. (சஉ)

காலையம் புயத்தோன செகல்வான்
காலனாற கனலொடு காறறுன
மாலினொ லென்னொ லுன்னொ
லவன்வலி தொலைக்க லாமோ
வாலமா மிடறறான் மைந்
யசலமா திடதத தான்றும
வேலனாா லெலவா ருங்கள
சிறையெலாம விடுபபா ரென்றான்

இ-ள். அப்படி தேவேந்திரன் சொல்லக்கேட்ட பிரமன் சொ ல்லுவான்; இயமன், அக்கினி வாயு, விட்டுணு இவர்களாலும். எ ன்னாலும், உன்னாலும், அந்தத் தாரகாசுரனைக் கொல்லக் கூடுமோ! சிவனுடைய பின்னையாய். இமாசல புத்திரியான பார்வதியினிடமாக சிவசுப்பிரமணியர் அவதரித்து அவனைக்கொன்று உங்கள் சிறையை மீட்பாரென்று சொன்னான். எ-று. (சஙு)

யோகத்தி லிருக்கு மீச
னுமைக்கு நாண்டளிக்கு மாறு
வேகத்தி லியற்று மென்றே
யயன்கிடை கொடுத்தான் மீண்டு

மாகத்தி லணுகித்தேவர்
    மதனனை நினைத்தார் மாரன்
சோகத்தை யொழிக்குந் தென்றற்
    றேருடன் றோன்றிச் சொல்வான்.

இ-ள். யோகத்திலிருக்குஞ் சிவபிரான் பார்வதிக்கு மங்கிலிய தாரணஞ் செய்யும்படிச் சீக்கிரதகில் முயற்சி செய்யுங்களென்று பிரமன் சகலருக்கும் உத்தரவுகொடுக்கத் தேவர்களெல்லாம் அமராபதிக்குவந்து மன்மதனை நினைத்தார்கள்; அவன் விடாய் தீர்க்கத் தகுந்த தென்றலாகிய தேரிலேறிவந்து சொல்லுவான். எ-று. (சஅ)

எவன்றவ மழிக்க மாத
    ரெவர்களை மயக்க நீவிர்
கவன்றதெத் துயரா லெம்மை
    யழைத்ததென் னருமென்று
னவன்றனை யிறுகப் புல்லி
    யமரர்கோ னருளி னோக்கிச்
சிவன்றவ மழிக்க வேண்டி
    யழைத்தமை தெரியச் சொன்னான்

இ-ள். மன்மதன், தேவர்களைப்பார்த்து எவனுடைய தவத்தை அழிக்கவேணும்? எந்தப்பெண்களை மயக்கவேணும்? நீங்கள் எந்தத் துக்க நிமித்தமாக என்னை யழைத்தீர்களென்று கேட்கத் தேவேந்திரன் அந்த மன்மதனை இரண்டு கையினாலும் இறுகக்கட்டித் தழுவி உபசாரத்துடனே பார்த்துச் சிவனுடைய தவத்தை யழிக்கும்படி உன்னைவேண்டி யழைத்ததென்று தெரியச்சொன்னான். எ-று. ()

விண்ணிலார் மகவான் சொல்ல
    வெருண்டுவேள் பயந்து கூறும்
பெண்ணலா னலியா னல்லன்
    பிறப்பிலா னிறப்பு மில்லான்

கண்ணினா லளவை நூலாற்
கருத்தினா லளவா வந்தத்
தண்ணிலா முடியான் செய்யுந்
தவத்தையார் தவிர்க்க வல்லார்.

இ-ள். தேவலோகத்திலிருக்கும் இந்திரன்சொல்லக் கோபித்தாச சுவாமிக்குப் பயப்பட்டுச் சொல்லுவான்; தேவேந்திரனே? சிவன் பெண்ணுமல்லர்; ஆணுமல்லர்; அலியுமல்லர்; பிறப்பும் இறப்புமில்லாதவர்; காட்சிப் பிரமாணத்தினாலும், ஆகமப் பிரமாணத்தினாலும், கருத்தினாலும் இப்படிப்பட்டவரென்று நிதானிக்கக்கூடாத குளிர்ச்சிபொருந்திய சந்திரனைத்தரிக்கும், முடியையுடைய அந்தச்சுவாமி தவத்தை யழிக்கின்றதற்கு யார் வல்லவர். எ-று. (சச)

கன்னிகை கவுரி யீசன்
கதமிலாப் பிரம சாரி
சந்நிதித் தன்மை யாலே
யுயிரெல்லாந் தழையா நிற்கு
முன்னிய வுயிர்கள் போல
வொடுங்கிடு மவன்பாற் செல்லு
மன்னிய பொருளுந் தோன்றி
மனதிலே யொடுங்கு மாபோல்.

இ-ள். அம்மனே; கன்னிகை; சிவனே! குற்றமில்லாத பிரமசாரி, இவர்களிருவடைய சந்நிதி மகிமையினாலே சகல உயிர்களுமுண்டாகி விருத்தியாகும்; முன் எப்படி சுவாமியிடத்திருந்து சீவன்கள் உண்டாயினவோ, அப்படியே அவரிடத்தில் ஒடுங்கும்; மனதிலே தோன்றிய அனேக வஸ்துக்கள் அதிலே ஒடுங்குவதுபோல். எ-று. (சரு)

தாமத குணத்த னென்பர் சங்கரித் திட்லா லீசன்
சேமமா முயிர்கட் கெல்லா மிளைப்பொழித் தருள்வ தாரு
மாமல குணமொன் றில்லை வடிவமுங் கனலா மென்கைப்
பூமலர் சொரிந்தக் காலும் புகையெழுப் பொரிந்து போமே.

இ-ள். உலகத்தில் சங்காரத்தொழில் செய்வதனால், சிவன் தமோகுணத்தை யுடையவரென்று சொல்வார்கள்; அப்படி அன்று; அஃதுயிர்களுடைய இளைப்பை யொழிப்பதாகும், மற்றத் தேவர்களுக்கு உண்டாயிருக்கின்ற • மும்மலகுண சம்பந்தமில்லை; இவருடைய சொரூபமும் நெருப்பாகும்; அவர்மேல் நான் புஷ்ப பாணத்தைவிட்டால் அவைகள் புகையாய்க்கரிந்துபோகும். எ-று. (௪அ)

உருவெனத் தெரியா தானை யுருவினே டருவா வானை
யருவெனத் தெரியா தானை யமர்செயி லரிதென் றஞ்சி
வெருவரப் புருகதா னந்த வேளையில் வேளை நோக்கித்
தருவனந திடையில் வாழுஞ் சதமக னுரைபபா னுறான்.

இ-ள். உருவென்ற யாவராலும் தெரியக்கூடாதவரை உருவமாகியும். அருவமாகியும். இருக்கின்ற சிவனை அருவமென்றுந் தெரியாதவரை மிகவும் யுத்தஞ்செய்து செயிக்கப்படாதென்று மன்மதன் பயப்பட்டுத தன்னுடைய தானத்திற்குப்போகப்புறப்பட்டான்; அக்காலததில் மன்மதனைப்பார்ததுக கற்பகத்தருவி னிழலில் வாசஞ்செய்யாநின்ற தேவேந்திரன் சொல்லத் தொடங்கினான். எ-று. ()

மாயவ னுரத்தின் மீது மலரவ னாவின் மீது
நாயகன் சிரத்தின் மீதும் பொறுத்ததுன் வலமே யன்றோ
காயுநற் கதிரின் மேனி கடைந்தது மெனக்கு மிந்த
வாயிர நயனக் தந்த செயலு முன் னாண்மை யன்றோ.

---

• மும்மலகுணங்களை "அஞ்ஞானப்போ யயர்வேமோகம்பை சாஞர்க்கியமாச்சரியம்பயம்" எனவரும் இருபாவிருபதின் செய்யுளானறிக.

இ-ள். விட்டுணு, தம்முடைய மார்பினிடம் இலட்சுமியை வைத்துக் கொண்டதும், பிரமன் சரசுவதியை நாவில் வைத்துக் கொண்டதும், மகாதேவர் தலையிலே கங்கையென்கிற பெண்ணை வைத்துக்கொண்டதும், உன்னுடைய சாமர்த்தியமல்லவோ! சூரியனை சாணையில கடையசசெயததும். எனக்கு ஆயிரங்கண்கள் வந்ததும், உன்னுடைய ஆண்மையல்லவோ! என்றான் தேவேந்திரன். எ-று. (௩௰)

செல்வத்தின் றமைககா யங்கே
தருவது தேவாககாவி
வெல்வது சிவனை வெனறு
கொடுப்பது காம வேட்கை
சொல்வது மறகக வேண்டா
மெனசசொல்ந துணைகக்கைப் பற்றி
நலவர மீதுதா வென்ன
மதனவே ணயநது கூறும்

இ-ள். பின்னும் தேவேந்திரன் சொல்வான்; மன்மதனே! எனக்காக அங்கேசென்று சிவனை ஜயித்து அவருக்குக் காமலாகிரியுண்டாகும்படி செய்தால் அவருக்குப் புத்திரனுண்டாகும்: அந்தப் புத்திரன். அசுரர்களைக்கொன்று தேவர்களைப் பிழைக்கும்படி செய்வார்; அதற்குநீயே காரணமாயிருக்கிறாய்; நான் சொன்ன வார்த்தையை மறுக்கவேண்டாமென்று கையைப் பிடித்துக்கொண்டு எனக்கு இக்க நல்லவரத்தைக் கொடுவென்றுகேட்க, மன்மதன் சந்தோஷித்துச்சொல்வான். எ-று. (௩௧)

அரன்சிலை மலையென் றாலு
மடுங்கணை யரியென் றாலும்
வரம்புற வின்சந்த நாணும்
வாசுகி யரவென் றாலும்

கரும்பெனுஞ் சிலைபா லேந்து
  கணையெனு மலரா னீலச்
சுரும்பெனுங் குணத்தால் வெல்வே
  னெனச்சொலித் தொழுது போனான்

இ-ள். தேவேந்திரனே? சிவனுக்கு வில் மலையாகி யிருந்தாலும். விட்டுணுவே பாணமாகி யிருந்தாலும், வாசுகியே நன்றாக ஏற்றுகின்ற நாணியானாலும், என்னுடைய கரும்பாகிய வில்லினாலும் பஞ்சபுட்பங்களாகிய பாணங்களாலும் நீலநிறம் பொருந்திய வண்டென்கிற நாணியினாலும், அந்தச்சிவனை ஜயித்துப்போகிறேனென்றுவணக்கஞ்செய்து சுவாமியிடத்துக்குப் போனான் மன்மதன். எ-று. ()

ந்தனமணமுந்தெய்வத்தமிழ்ப்புதுமணமுங்கொண்டு
நந்துமலையத்தென்றலசைதமந்திரியுஞ்சேர்ந்த
துந்துவநிலவாமவெள்ளைவலையினையெறிந்ததெங்கும்
கொந்தலரிளமாவெல்லாங்கோகிலமுழங்கிற்றன்றே

இ-ள். மன்மதன் சிவனைஜெயிக்கும்படி புறப்படும்போது, பொதியமலையிலிருந்து அவ்விடத்திலடங்கிய சந்தனவாசனையும், திவ்யமான தமிழ்வாசனையுங்கொண்டு தென்றற்காற்று வந்தது; வசந்தனாகிய மந்திரியும் வந்துசேர்ந்தான்; சந்திரனுடைய கிரணமாகிய வெள்ளை வலையினை நான்குபக்கமும் வீசினான்; புஷ்பகொத்துகளையுடைய இளமையுற்றமாமரத்திலெல்லாங் குயில்முழங்கியது. எ-று.

மல்லிகை முகையாஞ் சங்க
  மதுகர முழக்கஞ் செய்ய
முல்லைசண் பகமசோகு
  முளரியே முதலா யுள்ள

வெல்லையில் மலருந் தேனு
மிறைத்தன ரிரும்பைச் செம்பைக்
கல்லினை யுருக்குஞ் சொல்லார்
குறிஞ்சியாழ் கரத்திற் கொண்டார்.

இ-ள். மல்லிகையரும்பே சங்கமாகவும், அவ்வரும்பில் சப்திக் கின்றவண்டுகள் அச்சங்கத்தை வாயில்வைத்து ஊதுகிறவீரனாகவும் விளங்க முல்லை, சண்பகம், அசோகு, தாமரை முதலாகிய கணக்கி ல்லாத புஷ்பங்களையும், தேனையும், நான்குபக்கமு மிறைத்துக்கொ ண்டு கடினமாகிய இரும்பு, செம்பு, கல், இவைகள்கூட உருகும்படி சொல்லுகிற வார்த்தையுடைய பெண்கள் குறிஞ்சி யாழென்னும்வா த்தியத்தைக் கையிலே கொண்டார்கள். எ-று. (கூஅ)

பொங்கிய வுடுக்க ளான
புகரணி முகத்துச் செக்கர்
தங்குசிந் தூர மாருந்
தனியிருட் கரியுங் கிள்ளைப்
பைங்குர கதமுஞ் செல்லப்
பணைமுலைப் பவளச் செவ்வாய்
மங்கைய ரெனும்போர் வீரர்
வடிக்கண்வாள் விதிர்த்துச் சென்றார்,

இ-ள். மிருகசீரிட நட்சத்திரங்கள் முகத்திலிருக்கிற புள்ளிகளாக வும், செவ்வானம் ஒரு திலதப்பொட்டாகவும், விளங்குகின்ற ஒப்ப ற்ற இருட்டாகிய யானையும், பகைமைபொருந்திய கிளிகளாகிய குதிரை யும், நடக்கப்பருத்த முலையையும் பவளம் போன்ற வாயையுமுடை ய ஸ்திரீகளாகிய சத்தவீரர்கள் தங்கள் தங்கள் கண்களாகிய கத்தி களை அசைத்துக்கொண்டு புறப்பட்டார்கள். எ-று. (கூகூ)

கோணிய கரும்பு மைந்து குலமலர்க் கணையுங் கொண்டு
வாணுத லிரதி செல்ல மீக்ரகே தனத்தினோடு [ண்டஞ்சி
தாணுமா வனத்தைச் சேர்ந்தான் றவஞ்செய்வான் றனைக
நாணினா னறுகால் வண்டு நாணினா னடுங்கி னானே.

இ-ள். வளையாகிய கரும்புவில்லையும், புட்பங்களாகிய ஐந்து பாணங்களையும் எடுத்துக்கொண்டு ஒளிபொருந்திய நெற்றியையுடைய இரதிதேவி கூடவர மீனக்கொடியுடனே பரமசிவன் யோகத்திலிருக்கிற வனத்தைச்சேர்ந்து அவ்விடத்தில் தவஞ்செய்கிற அந்தச்சுவாமியைப்பார்த்து இவரை எவ்வாறு செயிப்போமென்று பயந்து வெட்கத்தையடைந்து நடுங்கினான். வண்டுநாணுடைய மன்மதன். எ-று. (ருக)

வெளித்தலத் தெதிர்த்தா லென்ன
விளையுமோ தனக்கென் றெண்ணி
யொளித்தனன் முன்னே பின்னே
யுமையவள் வரவு கண்டு
களித்தனன் மயக்க மாமோ
கனத்துக ளிறைத்து வில்லை
வளைத்தன னளிநாண் பூட்டி
வடிக்கணை தொடுத்தான் மாரன்.

இ-ள் நேரே வெளியாகவந்து யுத்தஞ்செய்தால் என்னகேடு சம்பூண்டாகுமோ! என்றுநினைத்து சுவாமியின்பின் தெரியாமல் ஒளித்திருந்து சமயம்பார்த்துக் கொண்டிருந்தபோது, பார்வதி அக்கடவுள்முன்னேபணிவிடைசெய்யவருதலைக்கண்டு, பெண்துணை கமக்கிருக்கிறபடியினால் வெல்லக்கூடுமென்று சந்தோஷித்து மோகத்தை யுண்டாக்கும் புஷ்பபாணத்தைஇறைத்து வில்லைவளைத்து நாணேற்றிப் பாணங்களைத் தொடுத்தான் மன்மதன். எ-று. (ருஎ)

ஒருகரும் புருவச் சாப
மொடியினு முலக மீன்ற
விருகரும் புருவச் சாப
முளவெனு மெழுச்சி யாலே
பொருகணை தொடுத்தான் சென்று
புரஞ்சுடு கணையி னானு
மொருகணை விடுத்தான் மார
னுடலெலாங் கொளுத்திற் றன்றே.

இ-ள். மன்மதன், தானதிக சண்டை செய்தால் ஒருகரும்பு உருவமாகிய வில்லானது ஒடிந்தாலும், உலகத்தைப்பெற்ற பார்வதியின் இரண்டு கரும்புருவமாகிய வில் உண்டாயிருக்கின்றன நமக்கு யாதொரு குறைவுமில்லை யென்கிற செருக்கினுர் போய் அனேக பாணங்களைவிட்டபோது மூன்று புரத்தையும் எரித்த கணையாகிய அம்பையுடைய சிவன் அந்த மன்மதன்மேல் தன்நெற்றிக்கண்ணாகிய ஒருகணையைச் செலுத்தினார். அக்கணை மன்மதனுடைய உடம்பையெல்லாங் கொளுத்திவிட்டது எ-று. (௬௮)

அருக்கவெண் பஞ்சு போல
வழற்கண்ணா லனங்க னான
திருக்குளங் கனலக் கண்டு
தேவருந் திசையி னோரும்
வெருக்கொள வொளித்தார் பூத
கணத்துடன் விடையி னானும்
பொருக்கென மறைந்து வெள்ளிப்
பொருப்பிடைப் புகுந்தா னன்றே.

இ-ள். நெருப்புப்பட்ட எருக்கம்பஞ்சுபோல் மன்மதனாகிய மாறுபாடுபொருந்திய மனத்தையுடையவன் எரிந்துபோகக்கண்டு தேவர்களும், அஷ்டதிக்குப் பாலகரும்பயப்பட்டு ஒளித்துக்கொண்டார்கள்; அதன்பின் சுவாமி பூதகணங்களுடன் சீக்கிரமாக அந்தவிடம் விட்டுக் கைலாயத்துக்கு எழுந்தருளினார். எ-று. (௯கூ)

சங்கரன் மணத்தை வேண்டி
யுமையுநற் றவமே செய்தா
ளங்கது புணரு மாறேழ்
முனிவருக் கமலன் சொன்னான்
மங்கல முரைக்க வேழு
முனிவரு மகிழ்வா யெய்தித்
துங்கவெற் பிறையார்க் கிந்தச்
சோபனஞ் சொல்லி னார்கள்.

இ-ள். பரமசிவன் தன்னைக் கலியாணஞ்செய்துகொள்ளப்பார்வதிதவஞ்செய்கிறாள்; அவள்வந்துசோகசப்தரிஷிகளையழைத்துப் பருவதராஜனிடத்திற்போய்ச் சுவாமிக்கு உன்பெண்ணைக் கலியாணஞ்செய்துகொடுவென்று கேளுங்களென்று அனுப்பினார்; அந்தப்படியே அந்த எழுபேரும் பருவதராசனிடத்திற்குப்போய் இந்தச் சோபனசங்கதிசொன்னார்கள். எ-று. (௯ம)

மலையிறை மகிழ்ந்தா னந்த மலையிறை புதல்வன் வள்ளல்
குலமெது பயந்தோர் நாமங் குடிப்பெய ரேது வாழுந்
தலமெது புகலுமென்றான் றலத்தவர் நகைத்துச் சொல்வா
ரலகிலான் பிறப்பு நல்ல கிளையென வறிவித் தார்கள்.

இ-ள். இருடிகள்போய்ச்சொன்னவுடனே, பருவதராசன் சந்தோஷித்தான்; அவன் பிள்ளையாகிய மைநாகன் ரிஷிகளைப் பார்த்

து சிவன் என்னசாதி? அவருக்குத் தாய்தகப்பன் பெயரென்ன? குடிப்பெயரென்ன? அவரிருக்கும்வூரெது? சொல்லுங்களென்று கேட்டான்; அதை முனிவர்கேட்டு நகைத்துச் சிவனோ அளவிடக்கூடாதவர், அவர் பிறந்தவிடம் மூங்கில், அவர் நல்லசாதியென்று தெரிவித்தார்கள். எ-று. (கக)

பொருத்தமே தோருவகையாகிப்
பிறைமுடி யன்பேர் நாளிற்
பொருத்தமு நாளுந் தேர்ந்து
முனிவரைப் புகழ்ந்து போற்றி
விருத்தியார் வரவு நாளுங்
குறித்திறை விடுத்தா னன்னோர்
பரித்தகங் கையினாற் கிந்தப்
படியெலாம் பணிந்து சொன்னார்.

இ-ள். அப்படி சப்தரிஷிகள் சொன்னபிறகு பருவதராசன் முதலானவர்களெல்லாம் மகாசந்தோஷத்தையடைந்து சந்திரனைத்தரித்தமுடியையுடைய சிவபெருமானது பெயர் நட்சத்திரத்திற்கும், அம்மையாரது பெயர் நட்சத்திரத்திற்குத்தகுந்த பொருத்தமுங் கலியாணஞ்செய்கிறகாலமுமறிந்து நிச்சயஞ்செய்து ரிஷிகளினுடைய பாதத்தைப் புகழ்ந்துவணங்கி விருத்தி பொருந்திய திருக்கலியாணமுகூர்த்தவோலையும் எழுதிக்கொடுத்தனுப்பிவித்தான்; அந்த எழுரிஷிகளும் கங்கையைத்தரித்த சுவாமிக்கு நடந்த சங்கதிகளெல்லாம் வணங்கிச்சொன்னார்கள். எ-று. (கஉ)

இமையவெற் பிறைவ னோலை
முகத்திலேழ் கிரிக்கு மேருச்
சிமையமால் வரைக்குஞ் செம்பொற்
றிகிரிமால் வரைக்கு மேழு

தம்ரவான் கடற்குஞ் சித்த
  சாரணர் முனிவோ ருக்கும்
அமரரா னவர்க்கும் வஞ்சி
  மணத்தினை யறிவித் தார்கள்.

இ-ள். இமயபருவதராசன் பார்வதியம்மையின் திருக்கலியாணமுகூர்த்த ஓலையை அநேக தூதர்கள்கையிற் கொடுத்தனுப்பிவிக்க அவர்கள் சத்தகுல பருவதங்களுக்கும், கொடுமுடி பொருந்தியமேருவுக்கும், சக்கிரவாளகிரிக்கும், ஒளியையுடைய சத்தசமுத்திரத்திற்கும், சித்தர், சாரணர், முனிவர். தேவர் முதலானவர்களுக்கும், அம்மைத்திருக்கல்யாணத்தைத் தெரிவித்தார்கள். எ-று. (௬௨)

ஓலைகண்டளவேசேர்ந்த வுததிகளேழும்பூமி
மாலையாய்ச்செல்லுகின்ற மகிமைசேர்நதிகளேழும்
நீலமேமுதலாயுள்ள கிரியெலாநெருங்கிச்சென்ற
கோலமாமுனிவோர்சித்த ரிமையவர்குழாங்கொண்டார்கள்.

இ-ள். ஓலையைக் கண்டவுடனே ஏழுசமுத்திரத்திற்கும் பூமிதேவிக்கும் மாலைபோலப் பிரகாசிக்கின்ற மகிமைபொருந்திய ஏழுநதிகளுக்கும், நீலகிரி முதலாகிய சப்தகுல பருவதங்களும், அதிஷ்டானமாகிய தேவதைகள் நெருங்கிசேர்ந்தார்கள்; முனிவர்களும், சித்தர்களுந் தேவர்களுங் கூட்டங்கூட்டமாகச் சேர்ந்து வந்தார்கள். எ-று. (௬௩)

அட்டதிக் கனைத்துந் தோரக்
  கொடிகளா லடைத்தார் விண்ணை
மட்டறு விமானந் தன்னுன்
  மாலையான் மறைத்தார் வீதி

நெட்டிலை யரம்பை பூத
 நிரைகளால் நிறைத்தார் வெற்பிற்
றட்டிய புழுகி னாலே
 மெழுகினார் தரைக ளெல்லாம்.

இ-ள். எட்டுத்திக்கையுந் தேரினாலும் கொடிகளாலும் இடமில்லாமல் நிறைத்துவிட்டார்கள்; ஆகாயத்தை இடமில்லாமல்விமானங்களினாலும், மாலைகளினாலும் மறைத்துவிட்டார்கள்; வீதிகளில் நீண்ட இலைகளையுடையவாழைகளையும், கமுகுகளையும், நிரைநிரையாகக்கட்டி அலங்காரஞ்செய்தார்கள்; மலையிலிருக்கிற புழுகைக் கரைத்துத் தரைகளெல்லாம் மெழுகினார்கள். எ-று. (௯௫)

தோரணஞ் சமைந்தார் முத்தின்
 றொடையெலாந் தொடுத்தார் விண்ணிற்
பூரண கும்பம் வைத்தார்
 புதுமணி விளக்கு மிட்டார்
ஆரண னுலகு மற்றை
 யளகையு மமரர் நாடு
நாரண னுலகும் வந்து
 நகரமே நாணு மாறே.

இ-ள். தோரணங் கட்டினார்கள்; அதில் முத்து மாலைகளைத் தொங்கவிட்டார்கள்; ஆகாயங்களையைக்கொண்டுவந்து பூரணகும்பம்வைத்தார்கள்; நூதனமாக இரத்தினவிளக்கு ஏற்றினார்கள்; பிரமலோகமும், அளகாபுரியும், தேவலோகமும், வைகுந்தமும், இதைப்பார்த்து நாணும்படிச் சிங்காரித்தார்கள். எ-று. (௯௬)

மின்னிநிலை விளக்கேயும் மலைபரமகளிற்கூடிக்
கனிமலர்க்கண்கைப்பட்டிக் கன்னிறுன்மருங்கைவாட்டிப்

பணிமணியாரம்பூட்டிப் பரிமளத்தாமஞ்சூட்டி
யணிநுதற்றிலகந்தீட்டி யருமறைச்சடங்குசெய்தார்.

இ-ள். இரத்தின தீபம்போன்ற பார்வதியை மலையிலிருக்கிற பெண்கள்கூடிக் கற்பகமலர் வாசனைசேர்ந்த கங்காசலத்தினால ஸ்நானஞ்செய்வித்து, இடுப்புத்துவளும்படி சேலைகட்டி, ஆபரணங்களும் முத்துமாலையும்பூட்டிப் பரிமளம்பொருந்திய நறுமலர் மாலைசூட்டி, அழகியநெற்றியிற் றிலகப்பொட்டு அணிந்து வேதவிதிப்படிச சடங்குசெய்தார்கள். எ-று. (௬எ)

பூமணக்கோலஞ்செய்த பொடியணிபுனிதனுறைத்
தாமணக்கோலஞ்செய்யச் சதுரமுகனமுநலோரீண்டித்
தூமணித்துகில்களசாத்திச் சுரதருமாலைசாத்தி
மாமணிப்பணியைநீக்கி மாமணிப்பணிகள்பூட்டி.

இ-ள். வாசனை பொருந்திய புட்பபாணங்களை எய்தமாரனை நெற்றிக்கண்ணாலெரித்து அந்தப் பஸ்மத்தைப்பூசிய சுத்தராகிய பரமசிவனை மணக்கோலஞ் செய்யும்படியாகப் பிரமன் முதலானவர்கள் கூடிப் பரிசுத்தமாகிய இரத்தினமயமாகிய வஸ்திரஞ்சாத்திக் கற்பகப்பூமாலை தரித்து. முன்னேயிருந்த சர்ப்பாபரணத்தைக் கழற்றிப்போட்டு மாணிக்க இரத்தினங்களாலாகிய ஆபரணங்களைத் தரித்தார்கள். எ-று. (௬அ)

சடையிளம் பிறையைத் தங்க
 ளிறையெனத் தகைந்து சூழ்ந்த
வுடுக்குல மென்ன முத்தா
 லொளிவிடு மகுடஞ் சூட்டி
யடைவுடன் விழியாந் திங்க
 ளாதவர் காதின் மீது
குடியிருந் தனபோற் செய்ய
 குண்டல மிரண்டுஞ் சாத்தி

இ-ள். இலக்குமிகாந்தராகிய விட்டுணு பாக்குவெற்றிலை முதலானவை வைத்திருக்கிற அடைப்பையெடுத்துக்கொண்டு ஒருபக்கம் வரவும், கற்பகத்தருவிறகு நாதனாகிய தேவேந்திரன் படிக்கம் எடுத்துக்கொண்டுவரவும், பிரமன் சமீபத்தில் நின்று ஆலவட்டம் வீசவும் தும்புருநாரதரிருவரும் வந்தனஞ்செய்து இருபுறத்திலும் நின்று சங்கீதம்பாடவும். எ-று. (௭௬)

கூற்றனானவன் கனகபா துகைகொடு குறுகக்
காற்றுவேந்தனுந் திசையெலா நறும்புகைகாட்ட
ஏற்றுவாகனக் கடவுளுஞ் சிறியவாளெடுப்பத்
தோற்றுமாதவா கலைமதி விளக்கொடுசூழ.

இ-ள். இயமன் கனகத்தினாற் செய்திருக்கிற பாதகுறடுகளைக் கையாலெடுத்துக்கொண்டு வரவும், வாயுபகவான் திக்குகளெட்டினும் அகிருபுகை சாம்பிராணிப புகை காண்பிக்கவும், ரிஷபத்திலேறநின்ற ஈசானன் உடைவாளெடுத்துக்கொண்டு வரவும், சூரியர்களனேகரும் சந்திரரனேகரும விளக்கெடுத்துக்கொண்டு வரவும்.

கீர்மடந்தையர் துகிலின்மஞ் சிகைபல சுமப்ப
அரவமங்கையர் நவமணிப் பணிசுமந் தணுகப்
பரவுகின்னரர் முதலினோர் வீணையார்ப் பரிக்கப்
பொருவினான்மறை நடந்திறை தலைமையைப் புகழ.

இ-ள். தேவகன்னியரனேகர் வஸ்திரம் வைத்திருக்கிற பெட்டிகளைத் தூக்கிக்கொண்டுவரவும், நாகலோகப்பெண்கள் நவமணிகளிழைத்திருக்கிற ஆபரணங்களைச் சுமந்துகொண்டுவரவும். கின்னரர் கிம்புருடர் வீணைவாத்தியஞ்செய்யவும் நான்குவேதங்களுஞ் ச... பித்துச் சுவாமியெல்லாருக்கும் பெரியவரென்று புகழ்ந்து முறை... யிடவும். எ-று. (௭௭)

கிரகமேழு * மெண் வசுக்களு முனிவருங் கிளர
விரகர்விஞ்சைய ரிமையவர் மகிழ்ந்துகண் டுருக

* வசுக்களாவார்—தரன், துருவன், சோமன், ஆப..., அனலன், அனிலன், பிரத்தியூசன், பிரபாசன்.

இருகரங்களாலுருத்திரா மலர்மழைபிறைப்பத்
திருவும்வெண்கலை மடந்தையுமிசலந் தெளிப்ப

இ-ள். சந்திர சூரியர் இருவருந்தவிர, மற்றையேழுகிரகங்களும், அட்டவசுக்களும், முனிசுரர்களுங்களிகூர்ந்துவர ; நாகலோகத்தார், வித்தியாதரர்கள், தேவர்கள், பார்த்துச சந்தோஷத்தையடைந்துஉருக ; ஏகாதச ருத்திரர்களும் இரண்டு கைகளாலும் புஷ்பங்களை வருடமாக இறைப்ப, இலக்குமியும சரஸ்வதியும் பனிர் தெளிக்கவும். எ-று. (எசு)

திக்குப்பாலகர்தெரிவையர் திசைதொறுந்திகழ
க்க * மாதாகளெழுவருஞ் சோபனமவிளமப
த்துநேர்மொழிநீரர மகளிர்வாழ்த்தெடுப்ப
க்கவிஞ்சையர் மகளிறபலலாண்டிசைதழங்க.

இ-ள். திக்குப் பாலகருடைய தேவிகள அவரவர திசைகளில் நின்று சேவிக்கவும், சப்தமாதாகள் சோபனமபாடவும், கருப்பஞ்சாறுபோல் மாதுரியம் பொருந்திய வார்த்தைகளுடைய நீர மகளிர் வாழ்த்துசசொல்லவும். தகுந்த வித்தியாதர மாதாகள பலவாண்டுகூறவும். எ-று. (எஎ)

முரசடபேரிகைகுடமுழா முழவங்காகளந்த
ண்டைமல்லரிசல்லரி வலம்புரியொலிப்ப
ண்டகோடகைமடந்தையர் சிலம்பொலியதிர்ப்ப
ண்டிசாமுகந்தனிலுமெண் பிரம்பொலியிசைப்ப.

இ-ள். பெரிய மணியோசையும், பேரிகை, குடவாத்தியம் மத்தளவாத்தியம், காகளம் தவண்டை மல்லரி சல்லரி சங்கங்கள்சோ கவும், தேவப்பெண்கள் காலின்சிலம்பு கலீரென்று சப்திக்க

* மாதர்களெழுவர்—பிரமாணி, உருத்திராணி, நாராயணி, கௌமாரி, காளி, இந்திராணி யென்னு மிவர்களாம்.

வும் எட்டுத்திக்கிலும் சுக்திதேவர் வருகிற கூட்டங்களை விலக்க, டிக்கிற பிரம்பினது சப்தம் பிரகாசிக்கவும். எ-று. (எ

எண்ணும்வெள்ளிமால் வரையடியிறங்கியதிடப
மண்ணல்சேனையின் கொழுந்திமகிரித்தலமடைந்த
விண்ணும்மண்ணுமெள்ளிடமற நெருங்கியவிமானம்
நண்ணுமால்விடைநெறிகடந் தடைந்ததுபதியே.

இ-ள். யாவராலுந் தோத்திரஞ் செய்யப்பட்ட கைலாயகிரியடிவாரத்தில் ரிஷபவாகன மிறங்கியது; சுவாமியினுடைய சேனையின் முன்னணி இமைய பர்வதத்தை யடைந்தது; ஆகாயமும் பூமியும் எள்ளிருக்க இடமில்லாமல் விமானங்கள் நெருங்கின, அலங்கரித்திருக்கின்ற விட்டுணுவாகிய ரிஷபம சுவாமியைத் தூக்கிக்கொண்டு வழிமுழுதுங்கடந்து இமயபர்வதராஜன் பட்டணத்தில் வந்து சேர்ந்தது எ-று. (எ

இமகிரிப்பதியடைந்தது மிமகிரிமடவார
நிமலனார்திருவழகெலாம விழிகளானிறைந்தா
ருமைதவத்தினுக்கழிவிலை யெனப்புகழ்ந்துரைத்தா
ரமாசெய்காமனையழித்தகண் ணெதுவெனவறைந்தார்.

இ-ள். அப்படியே சிவன் இமய பருவதத்தில் எழுந்தருளின போது அந்தமலையிலிருக்கின்ற பெண்கள் சுவாமியின் அழகைப் பார்த்துப் பார்வதிசெய்த தவத்துக்கு ஒரு குறைவுமில்லாமல் ஸித்தியாயிற்று என்றார்கள். அவர்களில் சிலர்யுத்தத்துக்கு வந்த மன்மதனை எரித்தகண் எதுவோ அந்தக் குரூரமான கண்ணைப் பார்ப்போமென்பார்கள். எ-று.

ஆகமாரணிக்கிருக்கவு முலகெலாமயர்ந்த
யோகயீதிவரிருக்கையான் மதனுடலொழித்துப்

வர்விருப்புற வுயிர்க்கவைபுணர்ந்த
டுமுதலிவ ரெனசசிலாமொழிந்தார்.

மன்மதன் தேகத்தை யுடையவனு யிருந்தபோதும் இவ யோகத்தி லிருந்ததனால் உலகத்திலுள்ள சனங்களெல்லாம் விகா மில்லாமல் அயர்ந்து கிடந்தன, மன்மதன் தேகம்போயும், இவர் பாகத்தில் விருப்பம் உண்டானபடியினால் சகலருக்கும் போகத்தி ஆசையுண்டாயிற்று. ஆனபடியினால மோகத்தை யுண்டாக்குகிறவ இந்தச சிவனேயன்றி வேறொருவரு மில்லையென்று ஸ்திரீசனங் ள் சிலர் சொன்னார்கள். எ-று. (அக)

ாயவிறகைவே ளழகிவரெழின்மிகுவடிவி
ாயிரக்கிலொன றிலெயனத்தனைமதித்தவனைத்
யிடத்துடலகொளுத்திய தவத்தினறறிறனே
ாயுமுத்தமராழியபமோ வெனசசிலரறைந்தார

இ-ள். மாயஞ் செய்கின்ற கருப்புவில்லைக் கையிற் றரித்திருக் ன்ற மன்மதன அழகு இந்தச்சுவாமியினுடைய வடிவமாகிய அ லெ ஆயிரத்திலொரு பங்குகாணாது, அதனாலே அவனை இகழ் து தனனைமதித்தத தீயினால அவனைக் கொளுத்திப்போட்டது, போமகிமையினாலேயே ஆராயத தெடுக்கத்தகுந்த உத்தமர்கள் ஆ ல் அப்படிச்செயவார்களோ வென்று சிலமாதாகள சொன்னார்க ள-று. (அஉ)

லன் பொருங்கிளைஞரு மருகனைர் திரளுங
லனபினுலெதிரெதிர் தழுவினர்கலந்தா
தமுமதனிலே யளவிடலரியோன
ன் கரமபிடித்தினி திழிந்தனன் விடைமுன்.

இ-ள். மாமனாகிய மலையரசன் சுற்றத்தார் முதலிய சேனை ம், மருமகனாகிய பரமசிவத்தினுடைய சேனைசமூகமு மிகுந்த ஆ யோடு கூடினவர்களாய் எதிரெதிராகவந்து ஒருவருக்கொரு

வராகத் தழுவிக்கொண்டார்கள், முதலுமீறுமில்லாத [illegible] டாத சிவபிரான் பிறன்கையைப் பிடித்துக்கொண்டு [illegible] னத்தில் நின்று இறங்கினர். எ-று. (அரு

இலகுமங்கையரனேகர்நீ ராஞ்சனமெடுப்ப
வுலகபாலகரிருமருங் கினுநடந்தொதுங்கத்
திலகமாதவனிருகைமே லொருகரஞ்சேர்ந்திட்
டலகிலாமணியிழைத்தசோதிர் மண்டபத்தணைந்தார்.

இ-ள். இப்படிச் சுவாமி இடபவாகனம்விட்டு இறங்கினவுட னே அழகுள்ள அனேகம்பெண்கள் ஆலத்தி எடுக்கவும், திக்கு பாலகரெண்மரும் சுவாமியி னிருபுறத்திலும் நடந்தொதுங்கி வும், எல்லாருக்குந் திலதமாகிய விட்டுணுவினுடைய இரண்டு மேலும் தம்முடைய ஒருகையைச் சேர்த்துக் கணக்கில்லாத ர னங்களால் இழைக்கப்பட்டிருக்கின்ற மண்டபத்தில் வந்துசே தார்கள். எ-று. (அ

அரியமண்டபத்தமைந்தபீ டிகையின்மீதமைந்தார்
வரையிடைப்பிறந்தமை வளர்முலைசொலவருவார்
குருமலர்க்கையிலேந்திவந் தருள்குடியிருக்குந்
திருமுகத்திறையிறையவன் வலப்புறஞ்சேர்த்தார்.

இ-ள். சுவாமி அருமையாகிய அந்தமண்டபத்தில் இட்டிரு ஆசனத்தி லெழுந்தருளினர். ஸ்தனங்கள் மலைபோ லிருப்பத அந்தத் தனங்களே இவர்கள் மலையிற் பிறந்தார்களென்று க க்கும்படியாக வருகிறமாதர்கள் தங்களுடைய கிறம்பொருந்தி பம்போலும் கைகளி லேந்திக்கொண்டு கிருபையே குடியிரு கின்ற அழகிய முகத்தையுடைய பார்வதியைச் சிவனுடை புறத்தில் உட்காரவைத்தார்கள். எ-று.

முன்னையபிரானன்னதைவழியின் சடங்கெலாமுடித்து
வன்னிமேற்பெயரியிறைத்துசெய்சொரியமந்திரத்தா

லென்னையாளுடை யிறைவனுமேழுலகின்ற
கன்னிசெங்கரம்பிடித்தழு வலஞ்செய்தானகனலை.

இ-ள். இந்தப்பிரகாரம் சுவாமியும் அம்மனும் கலியாணமண்டபத்தி லெழுந்தருளியிருக்க, அந்தவேளையில் பிரமதேவர் கலியாணசசடங்கை விதிப்படிமுடிக்க. என்னை யாட்கொண்ட பரமசிவன அககினியிற பொரிசொரிந்து நெய்யாகுதிசெய்து, முன்னமே எழுலகத்தையும பெற்ற அம்மனை கையைபிடித்து அக்கினியை மூன்றுதரம் வலமாகச சுறறிவந்தார. எ-று. (௬௬)

ஒற்றைவால்வளை யொலித்தது சுருதியுமொலித்த
சுற்றும்வானவரி ருடிபர் மலைமழைசொரிந்தார்
பற்றியாசனத்திருந்தன னனைவருமபணிந்தார்
பெற்றதாதையோடன்னையைப் பணிந்தனள்பெதும்பை.

இ-ள். வெணமை பொருந்திய ஒப்பற்ற சஙகமுழங்கவும், நாலுவேதஙகளும் சப்திக்கவும, நான்குபுறமும் சுறறிக்கொணட தேவாகளும் ரிஷிகளும் புஷ்பமாரியைப் பொழியவும், சுவாமி ஓர் ஆசனத்தில் எழுந்தருளினா ; அப்போது, சர்வத்திரபேரும் வந்தனஞ்செய்தார்கள் ; பாாவதிதேவியாா தமது தாயையுந் தகப்பனையும வணஙகினார். எ-று. (௬௭)

எரித்தகாமனைத்தருகியென் றிமையவரயன்மா
லொருத்தரான்றியேயிறையவன் மகிழ்ச்சிகண்டுரைத்தார்
அழைத்தகாமனையழைத்தருள் புரிந்தனன்வள்ளல்
பொருத்தவன்பினலனைவரும் விடைகொடுபெயர்ந்தார்.

இ-ள் தேவர்களும், பிரமனும், விட்டுணுவும் மற்றயாவரும் எல்லாரிடத்திலும்வைத்த பிரியத்தைப்பார்த்துச் சுவாமி! நீர் முன்னே எரித்தமன்மதனை எழுப்பித் தரல்வேண்டுமென்று கேட்டார்கள் ; அப்படியே இறந்துபோன மன்மதனை வரவழைத்துச

கொடுத்துக் கிருபைசெய்தார் பரமசிவன்; பின்பு யாவரும் விடை பெற்றுக்கொண்டு போனார்கள். எ-று. (அஅ)

அதற்பினண்ணலுங் கவுரியுமுருகியொன்றாகி
மதத்தவானையைக்குமரனைப் பயந்தனர்மகிழ்வாய்
விதிர்த்தவேலினைக் குமரனுக்களித்திறைவிடுத்தான்
கொதித்ததாரகனுயிர்குடித் துவந்தனன்குமரன்.

இ-ள். அப்படியே திருக்கலியாணம் நடந்தபின்பு சுவாமியும் அம்மையும் மிகுந்த அன்புகொண்டு ஒருருவமாகிசசேர்ந்து வலிமை பொருந்திய யானைமுகததையுடைய விநாயகேசுவரரையும். சிவசுப்பிரமணியரையும் பெற்றார்கள்; அதன்பின்பு, சுவாமி சிவசுப்பிரமணியருக்கு அஞ்சத்தக்க வேலாயுதததை அருளிசசெய் தனுப்புவிக்க, அவர்போய் அந்தத் தாரகாசுரனை வேலாயுதத்தை விட்டெறிந்துகொன்று சந்தோஷத்தையடைந்தார். எ-று. (அக

மயிலெனத்திகழ்மலைமகள் பொருகரிவதன
னயிலெடுத்தசெங் கரனுடனிமயவெற்பகன்று
கயிலைவெற்பில்வந்திமையவர் முனிவர்கண்களிக்க
வெயிலுடைப்புரமெரித்தவ னிருந்தனனப்பால்.

இ-ள். மயில்போல விளங்குகின்ற பருவதராசன் மகளாகிய பார்வதி யானைமுகத்தையுடைய பிள்ளையார வேலாயுதத்தைத் த[illegible]த்த சிவசுப்பிரமணியருடன் இமயகிரியைவிட்டு நீங்கித் தேவர்க[illegible] முனிவர்களுடைய கணகளிகூரக் கைலாயத்தில் எழுந்தருளியி[illegible]தார் முப்புரததை யெரித்தவராகிய பரமசிவன அதன்பின்பு. எ-[illegible]

மூன்றுவது,

திருவவதாரச்சருக்கம்

முற்றிற்று.

திருவிருத்தம்-உ௫௬.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருக்கண்புதைத்த சருக்க வசனம்.

சிவபெருமான் உமாபிராட்டியாரை விவாகஞ்செய்ததும், குமாரர்தோன்றித் தாரகன் என்னும் அசுரனைக் கொன்று தேவர்களைக் காத்ததும் கூறினேம். தேவியார் இறைவன்றிருக்கண்களை மூடியதும் அதனாலுண்டாய பாவத்தை நிவாரணஞ் செய்ததும் புகல்கின்றேம். மார்க்கண்டேயமுனிவரே! திருக்கயிலாயமலையிலே இறைவனும் தேவியாரும் திருவிளையாடல் பலவற்றைப் புரிவாராயினர். ஊடல்கொள்ளுவார் அதனைநீக்கி மாலையை யொருவர்க்கொருவர் தரிப்பார்கள். வீணையிசைப்பர். வேதசிவாகம முழக்கங்களைச் செய்வார். ஆபரணங்களைத்தரிப்பர். இவ்வாறிருக்கும்போதில் பரமமாதாவாகிய தேவியார் சிவபெருமானை வணங்கிச் சூரிய சந்திரர்கள் யாவரென்று வினவினர். பெருமான் அருள்கூர்ந்து சொல்வார். அணங்கே! அவை நமது கண்களாகும் என்றார் உடனே தேவியார் மூடினர். கண்கள் மூடப்படவே, அண்டங்கள், புவனங்கள், திசைகள் ஆகிய எவ்விடத்தும் ஒளியின்றி யிருள்பரந்தது. நதிகள் எல்லாம் யமுனைபோலக் கறுப்புநிறத்தைக்கொண்டன. எல்லா உயிர்களுங் கண்கள்தெரியாத குருடர்போ லிருந்தன. இல்லற துறவறங்களொழிந்தன. பிரமன் முதலாயினோரது படைத்தல்முதலிய தொழில்களும் இல்லையாயின. இயற்கையே திருவருளுடைய பெருமான் உயிர்கள் தம் தொழில்களை விடுத்து உறங்குவார்போலக் கிடந்து மயக்கமுறல் கண்டு நெற்றியில் ஒரு திருக்கண்ணைத் திறந்தார். அதன் ஒளியால் அந்தகாரம் நீங்கி முன்போல உயிர்களெல்லாம் எழுந்தன. இறைவி கையை யெடுத்தாள். மூன்றக்கினி போல மூன்றுகண்களும் விளங்கின. பிரமன் விட்டுணு முதலாயினோரும்

மயக்கம் நீங்கித் தமது தொழில்களை நடத்தினர். உமாபிராட்டியார் பயந்து பெருமானுடைய திருவடிகளை வணங்கி, சுவாமீ! அடியாளாகிய யான் றேவரீரது திருக்கண்களை மூடியதனால் அந்தகாரஞ் செறிந்து, உயிர்கள் தாங்கள் செய்யும் புண்ணியத் தொழில்களினின்றும் நீங்கியிருந்தனவன்றோ? அதனாலுண்டாகிய பாவத்தைப் போக்குமாறு தவஞ்செய்ய நினைத்தேன. அதற்குரிய இடத்தை அருளிச்செய்யு வேணடுமென்று துதித்தார். சிவபெருமான், நங்கையே! காஞ்சிப்பதியிற்சென்று பூசிக்க என்றார்.

அம்பிகையார் விடைபெற்றுக்கொண்டு. துர்க்கை குடைபிடிக்க, ஜயலட்சுமி அடைப்பைதாங்க. அருந்ததியும் கமலினியும் சாமரமிரட்ட, சிவிகையிலேறிக் கங்காநதியைச் சார்ந்தார். ஆங்குள்ள காசித்தலத்தையடைந்து விசுவேசனைப்பணிந்து தொண்டைமண்டலம்வந்து காஞ்சிநகரையடைந்தார், ஆங்குள்ள பல வனப்புக்களையுடைய வீதிகளையெல்லாங் கடந்து மாவிருக்ஷத்தின் கீழெழுந்தருளியிருக்கும் ஏகாம்பரநாதரை வணங்கி. மணலை இலிங்கமாகக் குவித்துப் பூசைசெய்யும்போது. பார்வதிதேவியாரின் அன்புப்பெருக்கை யுலகர்க்கு அறிவிக்கவெண்ணிக் கம்பாநதிப்பெருக்கை வரச்செய்தார். அது ஆர்ப்பரித்து வருதல்கண்டு. சிவலிங்கப்பெருமானைக் கரைத்துச்செல்லுமேயென்று இரங்கி ஆசையினால் அணைபவரைப் போல இருகைகளாலும் கட்டிக்கொண்டார். அதனால் சிவலிங்கப் பெருமான் குழைந்து வளைத்தழும்பும் முலைத்தழும்பும் பொருந்தப் பெற்றார். கம்பாநதியானது அருணாசலத்தை யொருமுறை நினைத்தாரது நல்வினை தீவினைகள் பிரிவதுபோல இரண்டாகப் பிரிந்து சென்றது. தழும்புகள் விளங்கின. தேவர்களெல்லாம் அவ்வற்புதங்கண்டு துதித்து மகிழ்ந்தார். பரமசிவன் இடபாரூடராய்த் தோன்றினார். அம்மையார்கண்டு வணங்கி நின்றார். நங்கையே! உனக்குவேணடியது யாது என்ன! தேவரீர் இடப்பாகத்திலமரும்

பெருவாழ்வைத் தந்தருளவேண்டுமென்றார். சிவபெருமான் பெண்ணரசியே! நீ இங்குப் பூசைசெய்தமையால் நம் கண்களைமூடிய பாவம் அகன்றது. அழற்கிரிவடிவமாக நாம்வீற்றிருக்கும் திருவருணைத்தலத்தையடைந்து பூசிப்பையாயின் அவ்வரந் தருவோமென்றார். அப்போது அம்பிகையார் சொல்வார். பெருமானே! கைலாயம் காசி என்னு மிவ்விரண்டுதலங்களினும் காஞ்சிநகர் அதிகமென்ற. இப்போது காஞ்சியினும் அருணாசலம் என்னும் அக்கினிதலமே மிகவும் விசேடமெனறருளினீர். அதினும் விசேடமான தலம் வேறுளதோவென்றா. உலகத்தில் திருவருணைக்கு நிகரானவும், மேலானவுமானதலங்கள் எவ்விடத்திலு மில்லையென்றா. பார்வதிதேவியாா சுவாமியைவணங்கி விடைபெற்றுக் கணங்களோடுந் திருவருணைக்கு வெளிப்பட்டு இரண்டுகாததூரம்போ யிரங்கினா. சூரியன் அத்தமித்தான். சுப்பிரமணியகடவுள் ஒருபந்தல் அமைத்தார்.

அப்போது பிராட்டியார் குழந்தைவேற் பெருமானையணைத்து முத்தமிட்டுப் பன்னிருகைகளுஞ் சிவந்தனவோ என்றுரைத்து. சந்தியாவந்தனஞ் செய்வதறகுப பரிசுததமான தீர்த்தம் வேண்டுமென்றார் உடனே சுப்பிரமணியப்பெருமான் றமது திருக்கரத்திலுள்ள வேலாயுதத்தை யேவினார். அவ்வேல் போதவான், புத்திராண்டன், புருகூதன் முதலிய எழுவரையும் அவரிருந்த மலைகளையும் அழித்துச சலங்கொணாந்தது." அதனையே சேயாறு என்றுசொல்வர், அதன்கண் நீராடிச சந்தியாவந்தனமுடித்து வாழைப்பந்தரிலிருக்க, சுப்பிரமணியப்பெருமான் இத்தீர்த்தம் சிவப்பாயிருப்பதறகுக் காரணமென்னென்றா. எழுபிராம்மணர்கள் பாவிகளாய்த்தவஞ்செய்ய, பிரமன்வந்து, குமாரசுவாமி வேலாயுதத்தை யேவுவார். அதனால் அவர்களுடல்கிழிய இரத்தங்கலந்து சிவப்பாயிற்று என்று அம்மையார் கூறினர். விடிந்தவுடன் நித்தியகடனை முடித்துப்

பல்லக்கிலேறித் திருவருணாசலத்தையடைந்து வணங்கினார். அங்கே நடக்கானின்ற பற்பல விசேடங்களை யெல்லாம் பார்த்து உவகையுற்றுக் கௌதமமுனிவரின் ஆச்சிரமத்தை யடைந்தார். முனிவர் பத்தினியாகிய அகலிகையும் புத்திரரான சதானந்த முனிவரும் வந்து பணிந்தார். கௌதமன் எங்கேயென்று அம்மையார் வினவ, அவர் தருப்பை புட்பங்கள் கொய்யச்சென்றார். இதுபோதே யழைத்து வருவலென்றசென்று தந்தையார்க்கு அறிவிக்க அவர் கரையற்ற ஆனந்தக்கடலின் மூழ்கி, சதானந்தரை யெடுத்தணைத்து ஆனந்தக்கூத்தாடி. எளியேம் உய்ந்தேம்! உய்ந்தேம்!! என்று ஓடோடிச்சென்று அம்மையாரை வணங்கித் துதித்து நின்றார். அம்மையார் தம் வரலாறுகளைக்கூற. கௌதமர் தலமான்மியமுறைத்து செய்யவேண்டுந் தவத்தினையுமெடுத்துப் பகர்ந்தார். அங்கே தவசசாலையொன்று அமைத்து நோன்பு கொண்டார். பார்வதி தேவியார். அம்மையார்செய்த தவத்தின் அருமையும் வருத்தமுங்கண்டு அற்புதமும் துன்பமும் அச்சமுங்கொண்டு நின்றார் யாவரும் இங்ஙனம் இருக்கும்போது விட்டுணு முதலாயினோர் கூட்டமாகச் சேர்ந்து அம்மையாரது தவச்சாலையை யடைந்துவணங்கி வேதாகமத் தோத்திரங்களைக் கூறிநின்றார். உமாதேவியார் அவரைக் கடைக்கணித்து வந்ததென்னை யென்றார். தாயே! மகிடாசுரனாற் பெரிதும் வருந்துகின்றேம் என்று கூற, துர்க்கையை அழைத்து அவனைக்கொன்று வருதியென்று பணித்தார். இனி யவனைக்கொன்று இடப்பாகம் பெற்றதைக்' கூறுவேம். மார்க்கண்டேயரே கேட்பீராகவென்று சொல்வாராயினர்.

திருக்கண்புதைத்த சருக்க வசனம்

முற்றிற்று.



ஓர்சமையம் வேடிக்கையார்த்தமாய் பார்
வதியார் சுவாமியின் கண்களை மூட அதனற்
தோஷமடையப்பெற்றது.

மேற்படி தோஷம்நீங்க பார்வதியார் கா
ஞ்சிநகரிலே கம்பாநதியில் மணலால் இலிங்
கம் ஸ்தாபித்துப்பூசியது.—19.




உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

நான்காவது,

## பார்வதிதேவியார்

# திருக்கண்புதைத்த சருக்கம்.



அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

மின்னனையு முகிறவழு மிமகிரியின
றவ பலத்தான் மேனை யான
வன்னையிடத் தென்னன்னை யவதரித்த
கதைசிறிதே யறைந்தே னிப்பாற்
பொன்னனைய சடையிறைவன்
றிருநயன மிருகரத்தாற் புதைத்தவாறுந்
தென்னருணை மாநகரி லன்னைவினை
தீர்த்ததுவுஞ் செப்ப லுற்றேன்.

இ-ள். மின்னல்பொருந்திய மேகங்கள் தவழ்ந்துபோகின்ற இமயபருவதத்தின் தபோபலத்தால் மேனாதேவியிடமாக என் தாயாகிய பார்வதி அவதரித்த கதையிலே சிறிதுபாகஞ் சொன்னேன். அப்

பார்வதி பொன்போலுஞ் சடையையுடைய சிவனது அழகிய கண்களை இரண்டுகைகளினாற்பொத்தியதும, அஃதால்வரும்வினையைத் தெற்கின் கண்ணிருக்கின்ற அருணாசலத்தில அம்மை பூசைசெய்து தீர்த்துக்கொண்டதுவும் சொல்லததொடஙகினேன்-எ-று. (௮)

ஊடுவர் புலவிதீர்பப வொருவருக் கொருவர் மாலை
சூடுவர் மறைநூல் கேட்பர் சொல்லுவர் வீணைநாதம்
பாடுவர் பலவினோதம் பயிற்றுவா பலகாற் சூத
மாடுவர் செல்வர் தோற்ப ரணிகலம புனைவ ரன்பால்.

இ-ள். சிவபிரானும் பார்வதியும் பிணஙகிக்கொள்வார்கள். அதைமறுபடியும் தீர்த்துக்கொள்வார்கள். ஒருவர்க்கொருவர் மாலைகளைசசூடிக்கொண்டு வேதசாஸ்திரஙகளைத் தேவர்கள்முனிவாகள் சொல்லக்கேட்டும், அதன பொருளைசசிலருக்குச்சொல்லியும் வீணை முதலியவற்றை வாசிததும், மற்றும் பல விளையாட்டுகள்செய்தும், பலதரம் சூதாடியும். அஃதால் வெற்றியையும் தோற்பையு மடைந்து அழகிய ஆபரணஙகளைத் தரித்துக்கொணடு மிருந்தார்கள். எ-று.

அந்தவே ளையிலென் னன்னை யையனை யிறைஞ்சி யையா
விந்துவு மிரவி தானும் யாவரென் றிசைதநா ளெந்தை
சுந்தரக் கனிவாய் மின்னே சுடர்களெம் மிருகணென்றார்
கந்தனைப் பயந்தா ளீசன் விழிகளைப் புதைந்தாள் கையால்

இ-ள். அசசமயத்தில் என்தாயாகிய பார்வதி சுவாமியையவணஙகி ஐயா! சந்திர சூரியர்கள் யாவரென்று கேட்க. அதற்குசசுவாமி அழகிய கனிபோலும் வாயையுடைய பெணணே! அந்த இருவரும் நம்முடைய கணகளென்று சொன்னார். சிவசுப்பிரமணியரைப் பெற்ற தாயானவள்கேட்டு வேடிக்கையாய்ச் சுவாமியினுடைய கண்களை இரண்டு கைகளால் மூடினள். எ-று. (௯)

கலிநிலைத்துறை.

ஈச னார்விழி புதைத்தலு மிருட்பிழம் புருக்கிப்
பூசி னாலென விருண்டன திசைகளும் புவியி
மாசி னீலமால் வரையெனக் கருகிய மலைகள்
காசு லாவிய நதியெலாம் யமுனைபோற் கறுத்த.

இ-ள். பரமசிவத்தின் கண்களைப் பார்வதி புதைத்தலும் இருட்கூட்டத்தை யுருகச்செய்து பூசினதுபோல் திக்குகளும் பூமியுமிருண்டதுகள்; மலைகளெல்லாம குற்றமற்ற நீலகிரியைப்போல் கறுத்தன. மணிகள்பொருந்திய நதிகளெல்லாம் யமுனாநதிபோல் கறுத்ததுகள். எ-று. (௪)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

மறையவனு நாரணனு முனிவர்களும்
வசுக்களும்நான் மறையும் வானோ
ரிறையவனும் விழியொளி போய்ப பிறவிநெடுங்
குருடரென விருந்தார் மற்றைக்
கறவைவிடை முதல்விலங்கு பறவைகளு
மொளியிழந்த கண்ண தான
துறவறமு மிறவறமுந் தொலைந்தன மற்
றுளதொழிலுந் தொலைந்த தன்றே

இ-ள் பிரமாவும், விட்டுணுவும் முனிவர்களும், அட்டவசுக்களும், நான்குவேதங்களும், தேவேந்திரனும் கண்களினது பிரகாசமறப் பிறவிக்குருடரைப்போ லிருந்தார்கள்; பசு காளை முதலிய மிருகங்களும் பக்ஷிகளும் கண்ணொளியற்றன; துறவற மில்லற மிரண்டும் ஒழிந்தன; மற்ற எல்லாத் தொழில்களும் கெட்டதுகள். எ-று. (௫)

கலி நிலைத்துறை.

தேவர் மானிடரிராக்கதர் நிறமெனத் திரிந்தார்
கோவிலிந்திரன வெண்கரி கருநிறங்கொண்ட
தாவி லம்புயன் கொடி கொடி யானதவ்வளவின்
மூவர் தேவனுக் கனைவரு முறைசொலிப் புகன்றார்.

இ-ள். தேவர்களும், மனிதர்களும், இராட்சதர் நிறம்போலக் கறுத்தார்கள்; ஆகாயத்தில் இந்திரன் வாகனமாகிய வெள்ளையானை

யானை அரிபோலக் கறுத்தது; கெடுதலில்லாத பிரமன் கொடியாகிய அன்னம் காகம்போல் கருகியது; அப்படி எல்லாப்பொருளுங் கறுத்து மயங்குகின்ற காலத்தில் மும்மூர்த்திகட்கு முதல்வனான சிவனிடத்தில் எல்லோரும்போய் முறையிட்டுத் தங்கள்குறையைச் சொல்லிக்கொண்டார்கள். எ-று. (௬)

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

அஞ்சலென வமைத்தகரத் திறைவனுதல்
விழிதிறந்தா னவனி யேழுந
துஞ்சுமிருளகன்றதுபன் னிருகோடி
சூரியர்தந் தோற்றம போல
வஞ்சியுமை யிறைவன்விழி புதைத்ததிருக்
கரமலரை வாங்கி னின்றாள
விஞ்சுமறை யவர்வளர்க்குங் கனல்போல
விழிமூன்றும விளங்கிற றன்றே.

இ-ள். சிவபிரான் பயம் வேண்டாமென்று கையமைத்துப் பன்னிரண்டுகோடி சூரியருதயம்போலத் தம்முடைய நெற்றிக்கண்ணைத்திறக்க, ஏழுலகமும் அந்தகாரத்தை நீங்கியது; பார்வதியானவள் பரமசிவத்தின் விழிகளைப் பொத்திய கையை வாங்கி நின்றாள்; பிராமணர்கள் வளர்க்கும் யாகாக்கினிபோல் மூன்று கண்களும் விளங்கின. எ-று. (௭)

பார்புதைத்த திருவயிற்றாள் பணிந்துரைப்பா
ணெடுஞ்சூலப் படையாய் காலன்
மார்புதைத்த மலர்ப்பதத்தா யார்புதைத்த
சடாடவியாய் வைய மேழுங்
கார்புதைத்த விருளாக விழிபுதைத்த
கொடும்பாவக் கழுவு மாறு
ர்புதைத்த பாரிடத்திற் றவம்புரிதற்
கருள்விடை திகழ்த்து மென்றாள்.

இ-ள். எல்லாச் சேராசிகளேயும் கருவாக வைத்துக்கொண்ட வயிற்றையுடைய பார்வதி சுவாமியைப் பார்த்து கொடிய சூலத்தை யுடையவரே! எமனை மார்பிலேயுதைத்த மலர்போன்ற பாதங்களை யுடையவரே! ஆத்தி மாலையை யணிந்த சடைக்காட்டினை யுடையவரே! எழுலகமும் மேக நிறத்திலும் அதிக நிறமான இருளுண டாக உமது கண்களை மூடிய கொடியபாவம் போம்படிச சமுத்தி ரஞ்சூழ்ந்த பூமியினிடத்தில் தவஞ்செய்வதற்கு நல்ல இடமுஞ் சொல்லுமென்று கேட்டாள். எ-று. (அ)

ஈசனுமங் குரைதருள்வா னுனைவினைவந்
தணுகாதே யெனினும் யார்க்கு
மாசகலும் படிக்கரிய தவமபுரிய
விரும்பினையேன் மதுரை மாயை
காசியவந் திகைதுவாரை யயோத்தியினுஞ்
சிறப்புடைய காஞ்சி மேவிப்
பூசைபுரிந் தரியதவம் புரியென்றான்
விடைகொண்டாள் புகழ்ந்து போற்றி.

இ-ள். அப்படி பார்வதிகேட்கச சுவாமி பெண்ணே! உன்னைப் பாவம்வந்து சேராதாயினும், மற்றவர்களுக்குப் பாவம் நீங்கும் பொருட்டுத் தவஞ்செய்ய இச்சித்தாயானல் மதுராபுரி, மாயாபுரி, காசி, அவந்தி, துவாரகாபுரி, அயோத்தி இவைகளிற் சிறந்த காஞ்சிபுரத்திற்போய்ப் பூசையுடன் அரியதவஞ் செய்யென்று சொல்ல சுவாமியை வணங்கி விடைபெற்றுக்கொண்டாள். எ-று. (கூ)

விசயமகள் குடையெடுப்பச் சயமகள்பொன்
னடைப்பைகொடு விரைந்து மேவ
வசையுமணிக் கவரியிரண் டருந்ததியும்
சுமலினியு மெடுத்து வீசத்

திசையிலிள நிலவெறிக்குந் தாளம்மணிச்
சிவிகையின்மேற் சென்ற போது
நசைபெருகு மறம்பெருகப் புனல்பெருகும்
புகழ்க்கங்கா நதியைச் சேர்ந்தாள்.

இ-ள். பார்வதியம்மைக்கு வீரலட்சுமி குடைபிடிக்க, ஜயலட்சுமி பொன்னடைப்பை தாங்கிச சீக்கிரத்தில்வர, இரத்தினங்களிழைத்த சாமரைகளால் அருந்ததியும் இலட்சுமியும் இரண்டு பக்கங்களில் நின்று காற்றுகளைவீச, நான்குதிக்குஞ் சந்திரனைப்போலப் பிரகாசம்வீசும் முத்துப்பல்லக்கிலேறி யாவரும் விரும்புகின்ற தருமம்பெருகச் சலம்பெருகுகின்ற கீர்த்தியினையுடைய கங்காதீர்த்தத்தில் வந்துசேர்ந்தாள். எ-று. (௧௦)

இறந்தவுயி ரினிமீளப் பிறவாம
லிறவாம லிறைவனார் தஞ்
சிறந்ததிரு வுருவாகுந் திருக்காசித்
தலமடைந்து சிவன்றாள் போற்றி
வறந்தமழைக் குருகுமந்தத் தலத்தவர்கள்
பிழைக்கவறம் வளர்த்துப் பன்னாள்
நறுந்தொடையி னரசன்விடை கொண்டு நிற்பத
தொண்டைவள நாட்டைச் சேர்ந்தாள்.

இ-ள். இறந்துபோன உயிர் இனிதிரும்பிப் பிறக்காமலு மிறக்காமலும் பரமசிவத்தினுடைய திவ்விய சொரூபமான காசிப்பதியைசசேர்ந்து விசுவேசருடைய பாதம்போற்றி, மழையில்லாமல் வருந்துகின்ற சீவராசிகள் பிழைக்கும்பொருட்டு அத்தலத்தில் தருமத்தைப் பலநாள்வளர்த்துத் தேன்தங்கிய மலர்மாலையைத்தரித்த அத்தேசத்தரசன் விடைபெற்று நிற்கத் தொண்டைமண்டலத்தைச் சேர்ந்தனர் பார்வதிதேவியார். எ-று. (௧௧)

மழைதவழுந் தலைப்பலவின் பழமதுவாய்
விரிந்தாலு மகர வாழைப்
பழமதுவாய் விரிந்தாலும் புதுமதுவாய்
விரிந்தொழுகும் பழனை நீங்கக்
குழையளவு நடமாடு விழிமாதர்
நடமாடுங் குறிப்பு நோக்கிப்
பொழிலதனின் மடமயில்க ணடமாடுந்
திருக்காஞ்சி புரத்தைச் சேர்ந்தாள்.

இ-ள். மேகங்கள் தவழ்கின்ற தலையையுடைய பலாவினது பழங்கள் வாய்விண்டாலும், மகர வாழைப்பழங்கள் அழிந்தாலும் புதியதேன் பெருகக்கெடுத்து வாய்க்கால் வழியாக ஓடி விழுகின்ற கழனிகளைக்கடந்து குண்டலம்வரைக்குந் தாவுகின்ற கண்களையுடைய பெண்கள் நாட்டியஞ்செய்கின்ற குறிப்பைப்பார்த்துச் சோலைகளி லிளமையாகிய மயில்கள் நடனஞ் செய்கின்ற காஞ்சிபுரத்தைச் சேர்ந்தனர் பார்வதிதேவியார் எ-று. (௧௨)

தாவரத்தை யறிவாக்கி மணிதரையுள்
ளறிவழிக்குந் தடங்கண் மாதர்
நூபுரந்தம புயசரணஞ் சிவப்பேற
விதழ்மருங்கு லொடுங்க வேறு
மாபுரத்தின் மணிமேடை யரம்பையர்க்கு
விளையாட மலைக ளாகுங்
கோபுரத்தி னெடுங்கொடிகள் காமவல்லி
யெனுங்கொடிக்குக் கொழுக்கொம் பாகும்.

இ-ள். கற்களையும் மரங்களையும் உருகச்செய்து மனிதர்களுடைய உள்ளறிவைக்கெடுக்கின்ற விசாலமாகிய கண்களையுடைய பெண்கள் சிலம்பணிந்த தாமரை மலர்போலும் பாதஞ்சிவக்க, தவ

போலும் இடைவிளைய எறுகின்ற அப்பட்டணத்திலிருக்கும் இரத்தினமிழைத்த உப்பரிகைகள் அரம்பை முதலாகிய பெண்கள் விளையாடுதற்கு மலைகளாகவிருக்கும்; சிவாலயத்தின் கோபுரத்திற் கட்டியிருக்கிற கொடிகள் கற்பகவிருட்சத்திற்படர்ந்த காமவல்லியென்னுங்கொடிக்குப் படருகிறதற்குக் கொழுக்கொம்பாயிருக்கும். எ-று.

பரதநா டகமாடு மயில்போலுங்
கயிற்றுவழிப் பாவை போலுஞ்
சுரதநா டகமாடுந் துடியிடையார்
கணவருடன் றுவளும் போது
மரகதா திகளுறுத்த விழித்துமணி
மேடையினும வாரி வீச
வரதனு கரமான தன்றுமுத
லின்றளவு மாழி தானே.

இ-ள். பரதநாட்டியமாடுகின்ற மயிலுக்குச் சமானம்ாகவும் கயிற்றுவழியாக ஆடுகின்ற சிங்காரம்பொருந்திய பிரதமைபோலவும், சுரதவிளையாட்டைச் செய்கிற உடுக்கைபோன்ற இடையினையுடைய பெண்கள் புருடர்களோடுபடுத்துப்புரளும்போது, மரகதமுதலிய இரத்தினாபரணங்க ளறுத்தகோபித்து அவ்வுப்பரிகையில்னின்றும் எடுத்து வீசியெறிய, அவ்வாபரணங்கள் சமுத்திரத்தில் விழுந்ததனாலேதான் அது இரத்தினாகரமெனப் பெயர்பெற்றது. எ-று. (௪௪)

அனையமருங் ககன்றவஞ்சி யொருமாவின்
கீழிருக்கு மரனைப் போற்றிக்
கனலனைய வினைகளையு நடுங்குவிக்க
நடந்ததிருக் கம்பை மேனிப்
புனையமணற் குவித்திலிங்க வடிவாக்கி
யுமைபூசை புரிந்தா ளப்போ
தெனையுடையா னடைவத்தி னுறுதிரினைத்
தரியகங்கை யேவி னானே.

இ-ள். அத்தன்மையுடைய வீதியைக்கடந்து ஒப்பற்ற மாவிருக்ஷத்தின்கீழ் எழுந்தருளியிருக்கும் ஏகாம்பரநாதனை வணங்கி, நெருப்பையொத்த பாவங்கள் நமெங்கி ஓடிப்போகவருகின்ற கம்பைநதியருகேபோய் அலங்காரமாய் மணலேக்குவித்து இலிங்கரூபமாக்கிப் பார்வதி பூசைசெய்யும்போது, எம்முடைய சுவாமி அவள் தவத்தின் உறுதியையறிய அறிதாகிய கஙகையைப் பிரவாகமாக வரச்செய்தார். எ-று. (௧௫)

பூதலமேற் குறுமுனிவன் குண்டிகையிற்
கவிழ்ந்துவரும் பொன்னிதானே
வாதியிலே யநதமுனி யாசமித்தே
யுமிழ்ந்தவலே யாழிதானே
வேகமறத் தவமபுரியும பகீரதற்காச்
சன்னுமுனி யிரக்கத்தாலே
காதின்வழி யொழுக விடய
பரவியகங் காநதியோ கம்பையாறு.

இ-ள். பூமியில் அகத்தியமுனிவா கமண்டலங கவிழ்த்ததினல் வருகிற காவேரியோ! அந்த முனியானவர் ஆதிகாலையில் ஆசமனஞ்செய்து உமிழ்ந்த சமுத்திரத்தின் பெருக்கோ! குற்றமற்றத் தவஞ்செய்யும் பகீரதனுக்காகச சன்னுமுனியானவர் இரக்கத்தினல் காதின் வழியாகவிடப் பெருக்கெடுத்துவந்த கங்காநதியோ வென்று சந்தேகப்பட விருந்தது கமபைநதி. எ-று. (௧௬)

வேறு.

கங்காநதியின் மணலி லிங்க
மழியா திருக்கும் வகையுமையாள்
வெங்கா தலினு லணைபவள்போல்
வெற்பா ரிமைய வெற்பாடின்

சங்கார் கரத்தா ளிருதனத்தா
ளிறுக விறுகத் தழுவுதலுங்
கொங்கார் கதிபத் திருமார்பு
முருகி யுருகிக் குழைந்தாரே.

இ-ள். பார்வதி கெடாத கம்பையாறு பெருக்கெடுக்கும்போது மணலாற்செய்த இலிங்கத்திற்கு அபாயமுண்டாகுமென்று பயந்து காமங்கொண்ட ஆசையினால் அணைபவள்போல் பர்வதராஜகுமாரி வளையலணிந்த கைகளாலும் இரண்டு கொங்கைகளாலும், இறுகி யிறுகத் தழுவுதலும் வாசனைபொருந்திய சந்தனத்தையணிந்த திருமார்பு உருகிக் குழைந்தார். எ-று. (கஎ)

மனத்தா னினைந்த பெருந்தவரு
மணக்காப் பிரிவு முடன்றீரத்
தனத்தா னெருக்கி முகமழுத்தித்
தலைநாட் போலத் தழுவுதலு
மனத்தால் விளங்குங் கம்பைநதி
யருணா சலத்தை யொருபொழுது
நினைத்தார் வினைக ளிரண்டுபோ
லிரண்டாய்ப் பகுந்து நீங்கியதே.

இ-ள். தன்னுடைய தவத்துக்குப் பின்னம்வராமல் மனத்திருந்த துன்பமும், சுவாமிகூடாமற் பிரிந்த துன்பமும் நீங்கும்படித் தனங்களிலேநெருக்கி முகமழுத்தி முன்னாள்போல் அணைந்தவுடனே, அன்னங்கள் சூழ்ந்த கம்பை நதியானது, அருணாசலத்தை ஒருவேளை நினைத்தவர்களுடைய நல்வினை தீவினைபோல இரண்டாகப்பிரிந்து இலிங்கத்தைச்சுற்றிப்போனது. எ-று. (கஅ)

விடுத்தனள் கரத்தைப் பாங்கர்
　விளங்கிழை யவர்கள்சூழத
தொடுத்தபூந் தொடையுஞ் சாந்து
　மணிந்தவள் தொழுதா ளந்த
வடுக்கணாள் தனது கேள்வன்
　மார்பினைத் தொடாது நாணித்
தடுத்திடுங் குறிகள் போல
　விளங்கிய தழும்ப ரம்மா.

இ-ள். பார்வதி சுவாமியைத் தழுவிய கைகளை விட்டாள்; அருகில் பிரகாசிக்கின்ற ஆபரணத்தையுடைய அநேகம் பெண்கள் சூழப் புட்பமாலையுஞ் சந்தனமுந் தரித்து வந்தனஞ் செய்தாள்; மாவடுபோன்ற கண்களையுடைய அந்த அம்மை தன்னுடைய சுவாமிமாாபை மறறுப்பெணகள தொட்டதைதயடைத்து தொடாம லிருக்கும்படி தடுக்கவைத்த குறிகள்போல் தழும்புகள் விளங்கியது கள். எ-று.　　(௧௧)

அப்பொழு தானுமீற
　னடித்தழும பிருக்குந் தோளு
முபபொழு திறைஞ்சுந் தேவர்
　முடித்தழும் பிருக்குந தாளு
மைப்பொலி குழலாள் கொஙகை
　வளைத்தழும் பிருக்கு மார்பு
மெய்ப்பொலி நீறுமாகத்
　தோன்றினார் விடையின் மீது.

இ-ள். அக்காலத்தில் பரமசிவன் (அரிமர்த்தன) பாண்டியரா சன் அடித்தழும்பிருக்கத திருத்தோள்களும், மூன்று காலத்திலும்

வணங்குகின்ற தேவர்களுடைய கிரீடங்களின் தழும்பியிருந்த திருவடிகளும், மேகம்போல் விளங்குங் கூந்தலையுடைய பார்வதி முலைத்தழும்பும் வளைத்தழும்பு மிருக்கின்றமார்பும், தேகத்திற் பொலிந்த திருநீறுமாய் ரிஷபவாகனத்தில் எழுந்தருளினார். எ-று. (உ௦)

அந்தரத்தமரரெல்லா மலர்மழைசொரியவானற்
றுந்துமிமுழக்கத்தோடே சுருதிகண்முழங்காநின்ற
விந்திரன் றிருமாறதேவ ரிறைவியைத்தொழுதுநின்றார்
சுந்தரக்கனிவாய்மின்னு மீசனைத்தொழுதுநின்றாள்

இ-ள். ஆகாயத்தில் தேவர்களியாவரும் புட்பகவருஷம் பெய்யத தேவதுந்துமி முழகசுததோடு வேதஙகள முழஙகாநினறன. தேவேந்திரனும, விட்டுணுவும், தேவாகளும். பாாவதியைத தொழுதாாகள, அழகிய கனிபோலும் வாயையுடைய அமமையும பரமசிவனை வணஙகி நின்றாள். எ-று. (உ௧)

ஒண்ணுதல் விடைமுன் சென்று
பணிந்துள முருகிப் பூசை
பண்ணுதல் புகழ்த லாகிப்
பணிந்தன ளவனை நோக்கிக்
கண்ணுத லுனக்கு வேண்டும்
வரமெது கழறு கென்றா
னெண்ணுதல் பிறிதொன் றில்லை
யிடப்புறந் தருதி யென்றாள்.

இ-ள். விளங்குகின்ற நெற்றியையுடைய அம்மை, ரிஷபவாகனத்தின் முன்பாகச்சென்று மனமுருகிப் பூசைசெய்து புகழ்ந்து வணங்கினள்; சுவாமி பார்வதியைப்பார்த்து உனக்கு வேண்டிய வரம் யாது? சொல்லென்றார்; அதற்கு அம்மையும்

யாதும்வேண்டிலேன், உமது இடப்பாகத்தை அருளுமென்று கேட்டார். எ-று. (உஉ)

அத்தனு மொழிவா னென்கண்
 புதைத்ததா லடைந்த தீமை
யித்தலத் தினிய பூசை
 யியற்றலா லகன்ற திந்த,
மெய்த்தலந் தனக்குத் தென்பா
 லொருநகர் விளங்கித் தோன்று
முத்திமா நகரந் தன்னை
 நினைத்தபேர்க் களிக்கு மூதூர்.

இ-ள். அதற்குப்பரமசிவன் அருளிச்செய்வார்; என் கண்களை மூடியதனாலே அடைந்தபாவம், இந்தத்தலத்தில் இனிமையானபூசைசெய்தலினால் நீங்கியது; இந்த மெய்ம்மையான தலத்துக்குத் தென்பாரிசத்தில் ஒருநகரம்பிரகாசிக்கும், அதைநினைத்தால்முத்தியுண்டாகும். எ-று. (உ௩)

ஆரணன் திருமாறோட வடிமுடியொளித்துஞானப்
பூரணவொளியாய்மேல்கீழுலகெலாம்பொருந்திநிற்போந்
தாரணியவர்க்குமற்றைச்சயிலமாயிருப்போமங்கே
வாரணிமுலையாய்பாகந்தருகுவோம்வருதியென்றார்.

இ-ள். பிரமனும், விட்டுணுவுந்தேடப் பாதமுஞ்சிரசும் அவர்களுக்குத் தெரியாமலொளித்துப் பூரணமாகிய ஞானவொளியாய் மேல்கீழுலகங்களெல்லாம் ஒன்றாய்நிற்போம், பூமிகளிலிருப்போர்க்கு மலையுருவமாயிருப்போம், அவ்விடத்தில்வந்தால் கச்சணிந்த தனத்தையுடையபெண்ணே! இடப்பாகத்தைத் தருவோம் வாவென்றார் பரமசிவன். எ-று. (உ௪)

என்னலுமிறைவிசொல்வாளினிமைசேர்கயிலைகாசி
தன்னிலுமினிதுகாஞ்சித்தலமெனவுரைத்தீரிந்த
நன்னிலந்தனக்குச்சோணைநகரமேயதிகமென்றீர்
பின்னையுமுளதோவந்தத்தலத்திணுக்கிணையாம்பேரூர்

இ-ள் பரமசிவன் இப்படி திருவுளம்பற்றிய அளவில், பார்வதிசொல்லுவாள், இனிமைசேர்ந்த கைலாயம், காசி இவ்விரண்டுதலஙகளிலும் இக்காஞ்சிபுரம் அதிகமென்று அருள்செய்தீர்; இதைப்பார்க்கிலும் அருணாசலத்தலம் அதிகமென்கிறீர்; அத்தலத்துக்குசசமானமான பெருமைபொருந்திய தலம் வேறொன்றுண்டோ? என்றாள் பார்வதி. எ று. (உ௯)

அவ்வுரைமறுத்தெங்கோமானருளுவானமக்கொப்பான
தெய்வமைந்தெழுத்துமானத்திருந்துமந்திரமுமில்லை
சைவமேயனையதானசமயமுமருணைபோல
வெவ்வினைதவிக்குமூருமிலையெனவிளம்பிப்போனான்.

இ-ள். அப்படி பார்வதி சொன்ன வார்த்தையைச சுவாமி மறுத்து நமக்குச் சமானமாகிய தெய்வமும், பஞ்சாக்கரத்திற்கொப்பான மந்திரமும், சைவத்திற்குச சரியான சமயமும். பொல்லாத பாவஙகளைத் தீர்க்கும் அருணாசலத்திறகுச் சரியான தலமும் உலகத்திலில்லையென்று திருவாய்மலர்ந்து கைலாயத்திற் கெழுந்தருளினார். எ-று. (௩௰)

கொம்பனாள் பொறுப்பா யீதென்
றிறைவனைக் குவித்துப் போற்றி
கம்பையா றகன்று காஞ்சித்
தலத்தையுங் கடந்து வேலன்

றும்பிமா முகத்தோன் கன்னி
வயிரவர் கணங்கள் சூழச்
செம்பொனாற் கவரி வீசச்
சிவிகைமேற் சிறந்து சென்றாள்.

இ-ள். புஷ்பக் கொம்பையொத்த பார்வதியானவள் சுவாமீ! நான் தெரியாமற் சொன்னவார்த்தையைப் பொறுத்துக்கொள்ளு மென்று இரண்டு கைகளையுங்குவித்து வணங்கிக் கம்பையாற்றை விட்டுக் காஞ்சிபுரத்தையுங்கடந்து சுப்பிரமணியர், கணபதி, சப்த கன்னிகள் வயிரவர், சிவகணங்கள் சூழவும் இலக்குமி கவரிவீசவும் பல்லக்கில் எழுந்தருளினாள். எ-று. (உஎ)

மண்மகள் மகிழப் பட்ட
மரங்களுந் தழைத்து வீறிக்
கண்மலர் சொரியக் கல்லு
மலைகளுங் கரைந்து சோர
வெண்மலர் மடவாள் போற்றக்
காவத மிரண்டு நீங்கி
விண்மதி முகத்தாள் மற்றோர்
வெள்ளிடை மருங்கிற் சேர்ந்தாள்.

இ-ள். பூமிதேவிக்குச் சந்தோஷமுண்டாகப் பட்டுப்போனமரங்களும் தளிருண்டாகித் தழைத்துத் தேனோடும்புஷ்பங்களைச் சொரியப் பாறைக்கல்லுகளும் பெரியமலைகளுங் கரைந்துருக, வெள்ளைத் தாமரைப்பூவில் வாசஞ்செய்யும் சரஸ்வதி தோத்திரஞ்செய்ய இரண்டுகாததூரம்போய்ச் சந்திரனையொத்த முகத்தையுடைய பார்வதி ஒரு வெளியிடத்திலிறங்கினாள். எ-று. (உஅ)

வெய்யவ னமையா றென்று
வினவுகா ரணத்தா னீலக்
கையவண் மரக தத்திற்
கரியவள் கரமுங் காலுஞ்
செய்யவள் வருந்தி னளென்
றறிந்துயி ரிதைப்பான் போலப்
பையமேற் கடலிற் பாய்ந்தான்
குமரவேள் பந்தர் செய்தான்.

இ-ள். சூரியன் தன்னையாரென்று பரமசிவனைக்கேட்டதனால் நீலம்போன்ற கையும் மரகதம்போன்ற வடிவமும், தாமரைப்பூப் போன்ற உள்ளங்கையும், உள்ளங்காலும் பொருந்திய அம்மை சாப த்தினால் வருந்தினளென்றறிந்து தன்னுயிரை விட்டுவிடுகிறவன் போல மெள்ள மெள்ள மேற்குச சமுத்திரத்தில் விழுந்து அத்தமித் தான்; சுப்பிரமணியர் அம்மையிருக்கிறதற்காக ஒருபந்தல் போட்டு வைத்தார். எ-று. (உக)

அன்னையுங் குகனை நோக்கி
யரம்பையாற் பந்தர் செய்து
பன்னிரு கரமுஞ் சால
வருந்தினை யெனப்பா ராட்டி
யின்னுமோர் கருமஞ் சந்தி
முடிப்பதற் கினிய நன்னீர்
கைநிறை வேலை யேவி
யழைத்திடு கணத்தி லென்றாள்.

இ-ள். அதன்பின்பு, பார்வதி சுப்பிரமணியரைப்பார்த்து வா ழைமரத்தினால் பந்தற்போட்டுப் பன்னிரண்டுகைகளுக்கு இளைக்கவரு

த்தத்தையடைந்தாயென்று பிரியவசனஞ்சொல்லி, இன்னும் ஒரு வேலையிருக்கின்றது, அஃதென்னவென்றால் சந்தியாவந்தனஞ்செய்கிறதற்கு நல்லபரிசுத்தமானசலம்வேண்டும், உன்கையிற்பிடித்திருக்கிற வேலாயுதத்தையேவி அழைப்பியென்று சொன்னான். எ-று.

காதலா லிறைஞ்சிக்கந்த னேவினன் கைவே லவ்வேல்
போதவான் புத்தி ராண்டன் புகழ்புரு கூதன் போதன்
வந்தில்பாண் டரங்கன் சோமன் வாமனென் பவரைவாட்டி
மீதிலேழ் கிரியை வீட்டிக் கொணர்ந்தது வேலை நீத்தம்.

இ-ள். அப்படிச் சொன்னவளவில், அதிகபக்தியோடு சுப்பிரமணியர் வேலாயுதத்தையேவினார்; அது போதவான், புத்திராண்டன், புருகூதன், போதன், பாண்டரங்கன், சோமன், வாமன் என்று சொல்லப்பட்ட எழுபேரையும் அவர்களிருந்த எழுமலையையும் உருவி நல்லதண்ணீர்க் கடலுக்குப்போய்ச சலங்கொண்டு வந்தது; அந்தநதிக்குச் * சேயாறென்று பெயர். எ-று. (௩௧)

கந்தவே லழைத்த வாற்றிற் கடனெலாங் கழித்துவாழைப்
பந்தரி லிருந்தா ளப்போ துமைபதம் பணிந்தவ் வாற்றிற்
சிந்துநீர் சிவப்ப தேதென் றுரைத்தலுஞ் சிறப்பதாக
வந்தவா றதனை யாறு திருமுகற் குரைப்பாள் வஞ்சி.

இ-ள். சுப்பிரமணியர் வரவழைத்த ஆற்றிலே நீர்க்கடனெல்லாமுடித்துக்கொண்டு வாழைப்பந்தரிலிருந்தாள்; அப்போது; அம்மையைவணங்கி இந்த ஆற்றுநீர் சிவப்பாயிருக்கவேண்டியதென்னவென்றுகேட்க, அந்த விவரத்தைச சுப்பிரமணியருக்குச்சொல்லுகின்றாள் பார்வதி. எ-று. (௩௨)

அனந்தா புரத்திலேழு மறையவ ரறியாக் காலத்
தனந்தமக் கினைகள் செய்தா ரதன்பினல் லறிவுதோன்றி

* உலகோர் செய்யாறு என்று அழைப்பதுமுண்டு.

பனந்தமா வெனவே பேறு மயன்பதங் கருதிப் பின்னு
ளனந்தமா லமதா யுட்கொண் டருந்தவம் புரிந்தா ரந்நாள்.

இ-ள். அனந்தமாபுரமென்கிற பட்டணத்தில் எழுபிராமணர்கள், அறியாதகாலத்தில் அனந்தம் தீவினைகளைச்செய்து, அதன் பின்பு நல்லவிவேகந்தோன்றி அதமமென்ற அன்னத்தைத் தனக்குவாகனமாகக்கொண்ட பிரமனைக்குறித்து, இலைகளையே உணவாக உண்டு பலநாள் தவஞ்செய்தார்கள் அக்காலத்தில். எ-று. (௩௩)

பதுமனு மவர்முன் சென்று
  பாவிகாள் வரைகளேழில்
விதிமுறை தவஞ்செய் வீரேற்
  குமரவேள் விடுக்கும் வேலாற்
பொதிசடை முடியு முங்கள்
  வினைகளும் பொடியா மென்று
சதுர்முக னுரைத்துப் போனு
  னவருமத் தவமே செய்தார்.

இ-ள். பிரமன் அவ்வெழுபேர் முன்னேபோய் பாவிகளே! நீங்களேழுபேரும் எழுமலைகளில் விதிமுறையாகத் தவஞ்செய்வீர்களானல், அப்போது அம்மைக்குசசலம்வேண்டியநிமித்தியத்தால் சுப்பிரமணியர் வேல்விடுவார், அதனல் உங்கள் சடையோடுங் கூடியசிரங்களும் பாவங்களும் பொடியாகப்போமென்று சொல்லிவிட்டுப் போனர், அவர்களும் அப்பிரகாரம்தவஞ்செய்தார்கள். எ-று. (௩௪)

வேறு.

எழுவரையு மதிலிருக்கு மெழுவரையும்
  பிளந்ததுநீ யெறிந்த கூர்வே
லழியுமவ ருதிரமுடன் புனல்கலந்து
  சிவந்ததுகா ணுகை யாலே

வழுவிலையுங் குணக்கென்ன வடிபணிந்து
மகிழ்ந்திருந்தான் மலைமேற் பட்ட
செழுமுனிவர் குருதியினாற் சிவந்ததுபோற்
சிவந்ததுவே செக்கர் வானம்

இ-ள். அவ்வேழுபேரையும், அவர்களிருக்கு மலையேழையும் பிளந்தது உன்னுடைய கூர்மைபொருந்திய வேலாயுதம்; அதனால் வழிந்தொழுகுகின்ற அவர்களுடைய இரத்தத்தோடு சலங்கலந்து சிவந்துபோயவிட்டது, உனக்கொரு குற்றமுமில்லையென்று சொல்ல அம்மனபாகத்தில் சப்பிரமணியர் வணங்கிச் சந்தோஷமாயிருந்த அளவில், மலையில் தவம்செய்துகொண்டிறந்த முனிவர்களுடைய இரத்தத்தினாற் சிவப்பு நிறத்தையடைந்ததுபோலச் சிவந்தது செவ்வானம் எ-று. (௩௩)

வித்தகர்கண் புதைத்தலுமே பரந்தவிருண்
மறுமையிற்சூழ் வினையைப் போல
வைத்தகைத் திருமையவளைப் பின்பிடித்தா
லெனப் பரந்த தந்தகார
முத்தமியோ சிறுகதலிப் பந்தரின்கீ
ழிருப்பவளென் றமரரிட்ட
சித்திலப்பந் தரைநிகராய் விளங்கியது
தாரகையா னெருங்கும் வானம்.

இ-ள். சுவாமியினுடைய கண்களை முன்னே மூடினதினால், உலகமெல்லாம் பரவியவிருள் ஒருவனுக்கு மறுமையில்வந்துபிடித்துக்கொள்ளுகிற பாவத்தைப்போல் அந்தத்தலத்தில் பிறகுவந்து அம்மையைப் பிடித்ததுபோலிருண்டது; பார்வதியோ ஒருவாழைப்பந்தரின் கீழிருப்பாளென்று தேவர்கள் போட்டுவைத்த முத்துப்பந்தரை யொத்திருந்தது நக்ஷத்திரங்களால் நெருக்கப்பட்ட ஆகாயம். எ-று. (௩௪)

மாலையெனுங் குமரியிருண் மகிடமுக
மகற்றியந்தி வானிற் சோரிக்
கோலமுடன் படிகலிங்கங் கொண்டதுபோன்
மதியெழுந்து குடபாற் சென்ற
தாலமணி மிடற்றிறைவன் விழிபுதைக்க
வளர்ந்தவிரு ளனைத்து நீங்கப்
பாலமிசை வெடித்தெழுந்த விழியெனவே
யெழுந்தது செம்பரிதி தானே.

இ-ள். மாலைக்காலமென்னும் துர்க்கை இருட்டாகிய மகிடாசுரன் தலையையறுத்தது. அதனால செவ்வானமென்று சொல்லப்பட்ட இரத்தக்கோலத்தோடு படிகலிங்கத்தைக் கைக் கொண்டதுபோலச் சந்திரனுதயமாகி மேற்குத்திக்கில் அத்தமித்தது; நீலகண்டராகிய பரமசிவன். இரண்டுநேத்திரங்களையும் அம்மைபுதைத்த அளவில், நான்குதிக்கும் பரவிய யெல்லாவிருளும் போகும்படியாய் விழித்த அச்சுவாமியின் நெற்றிக்கண்போலச் செம்மைநிறம் பொருந்திய சூரியன் கிழக்குத்திக்கில் உதயமானான். எ-று. (௩௭)

வேறு.

கங்கை நிகராஞ் சேயாற்றிற்
காலைசந்திக் கடன் கழித்து
மங்கை கனகச் சிவிகையின்மேன்
மறையோ லமிட வழிகொண்டாள்
பங்க மலர்த்தீர் வழியடியார்
கொடிய வினையாம் பஞ்சமலைக்
தங்கி மலையாய் விளங்கிய சீ
ரண்ணா மலைநண் ணடிதொழுதாள்.

இ-ள். பார்வதி கங்கைக்குச் சமானமாகிய சேயாறு என்கிற நதியில் காலக்கடனை முடித்துக்கொண்டு, பொன்மயமாகிய பல்லக்கிலேறி; வேதகோஷ்டமுழங்க நடந்து பங்கப்படுத்து மும்மலங்களைத் தீர்க்கிற அடியார்களுடைய பாவமாகிய பஞ்சமலைக்கு நெருப்புமலையாய் விளங்கிய திருவண்ணாமலையைப் பார்த்துச சாஷ்டாங்கமாகச சேவித்துக்கொண்டாள். எ-று. (௩௮)

வென்றியினாற் கவர்ந்தபொருள் பகிர்ந்திறைவி
 பலியோடும் வேனிற் பாலைக்
குன்றமெலாம் வெறியாடன் முல்லையெலாம
 பொதுவர் மின்னர் குரவையாடன்
மன்றல்கமழ் மிந்திரற்கு விழாவெடுத்துக்
 கொண்டாடன் மருத வேலி
முன்றிலெலாஞ் சினைச்சுறவு முன்னுணக்கி
 யணங்காடு முந்நீர்க் கானல்.

இ-ள். வல்லமையினாலே பாலைநிலத்தார் வழிச் செல்வோரை அடித்துப்பறித்த பொருளைப் பங்கிட்டு அந்த நிலத்திலிருக்கிற துர்க்கைக்குப் பலிபோடுவார்கள்; மலைகளையுடைய குறிஞ்சி நிலத்தில் இருப்பவர்கள் ஆடு பலிகொடுக்கிற பூசைபோடுவார்கள்; முல்லை நிலத்தில் இடைச்சிகள் குரவைக் கூத்தாடுவார்கள்; கற்பகமாலையைத்தரித்த தேவேந்திரனுக்கு மருதநிலத்தார் உற்சவஞ் செய்வார்கள் முற்றங்களில் சுறுமீன்களைக் காயப்போடுகின்ற கடலருகாகிய நெய்தநிலத்தி லிருக்கின்றவர்கள் வருணனுக்குத் திருவிழாச் செய்வார்கள். எ-று. (௩௯)

சோதிபெறு கானக மறையவம்பு
 சொரிகையினாற் றூய்மை யாய
மாதவரைய லாங்கலைத்த மகிழ்ச்சியினாற்
 பொன்கலந்து மருவு நீராற்

போதவரி சனங் கடையப்
பெருகுதலால் மதுவுடையப் பொருதலாலே
சீதரனை நிகராகத் திருநதிநாற்
றிசைகளெலாஞ் சிறந்த தன்றே.

இ-ள். திருநதி ஒளிபொருந்திய துதிக்கையையுடைய யானைகள் மறையச சலத்தைப் பெருக்கி வருதலாலும், பரிசுத்தமாகிய பெரிய பூமியெல்லாம் பரவிய சந்தோஷத்தினாலும், பொற்பொடிகளையுந் திரட்டிக்கொண்டு வருதலாலும், மஞ்சள் பொடிகளையும் பெருகினபடியாலும், தேன் கூடுடைந்து மோதலினாலும் என்று நதிக்குப் பொருள்கொண்டு (சிலேடை வாகையால்) கரனுடைய தேகமறையப் பாணங்களைச் சொரிதலாலும், தூய்மைபொருந்திய கோபிகா ஸ்திரீகளைச் சேர்ந்திருந்த விருப்பத்தினாலும் இலக்குமியைச சேர்ந்திருக்கிறதினாலும், வைணவர் உருக்கத்தயை செய்தலாலும், மதுவென்கிற அசுரன் சாகயுத்தஞ்செய்தலாலும், விட்டுணுவுக்குச் சமானமாக நான்குதிக்கிலுஞ் சிறந்தது. எ-று. (௪0)

இது நதிக்கும் திருமாலுக்கும் செம்மொழிச் சிலேடை யணி என்க.

[இதுமுத லாறுபாடல் வயற்சிறப்பு.]

மேவுபுனல் பரந்தொழுகக் குளிர்ந்துமயிர்
பொடித்தனபோல் விதத்திற் றோன்றிக்
காவிதுறை பசுங்கிளியின் சிறகெனவே
பசந்துதொண்டைக் கதிராய் முற்றிக்
கூவுகுல வாரணத்தின் களம்போல
நிமிர்ந்தெழுந்து குறையில் சாலி
பாவையுமம் தவம்புரியுந் தலையிதெனப்
பணிந்தனபோற் படிந்த மாதோ.

இ-ள். அந்நதியில் வந்த நீர்பரந்து ஒழுகுகிறபடியினால் குளிர்ந்த பூமிதேவியினுடைய தேகத்தின் மயிர்க்குச செறிந்ததுபோல் குறைவில்லாத நெற்பயிர்களுண்டாகத் தோப்புகளில் வாசஞ்செய கிற பச்சைக்கிளிகளின் சிறகுபோல பச்சை நிறத்தை யடைந்து தொண்டைக்கிராய் முற்றிக் கூவுகின்ற கோழிக்கழுத்துப்போல நிமிர்ந்து பார்வதி தவஞ்செய்கிற தலம் இதுவென்று வணங்கினது போல விளைந்து கிடக்கின்றன. எ-று. (௬௧)

சந்ததமு மேருழவா பதமபார்த்தங்
கரிந்தவரி தடுதது வாரி
யிநதிரனு ருலகினொடு போர்செய்வா
னெழுமலையா மென்னப போரசெய்
தநதரமே சுற்றிரவி புரவிகள்போற்
கடாவிடுதே யாறறி ந தூறறி
மந்தரமா மெனக்குவித்து வழங் குகினுந்
தொலையாநென் மருத வேலி.

இ-ள். எப்பொழுதும் உழுவோர்கள் பதம்பார்த்து அறுத்து அரிகளைச சுமையாகவாரிக் தேவேந்திர னுலகததோடு சண்டை செய்ய எழுந்த மலையென்று சொல்லும்படியாகப் போர்போட்டு ஆகாயவழியாக வருகிற சூரியனுடைய குதிரைகள்போலும் கடாக்களைவிட்டு அடித்து வைக்கோலைததூறறி மந்திரகிரிபோலக் குவியல்செய்து எல்லா மனிதாகளுககும கொடுத்தாலும் நெல்குறையாத மருதநிலத்தில். எ-று. (௬௨)

கயலினமென் றூழ்தநியர் தங் கண்ணிழலைக்
கண்டுகருங் கயல்வா தேறு
மயிலியலார் கொடும்புருவ நிழலினைக்கண்
டேகிலையென் றஞ்சுமீனு

மயலுதவு மாவதனந் தாமரைப்போ
  தெனமருவி வண்டு சேரு
மியலுமவர் நாசிநிழல் சண்பகப்போ
  தெனவெருவி யிரியல் போகும்.

இ-ள். வயலிற் களையெடுக்கிற பள்ளத்திகளுடைய கண்ணிழலைக்கண்டு சேற்கெண்டைகள் நம்மினமென்று வந்துசேரும், பின்பு அருகில் அவர்களுடைய புருவநிழலைபார்த்து, வில்லென்று பயப்பட்டோடும், ஆசையைக் கொடுக்கிற அவர்களுடைய முகத்தைத் தாமரைப்பூவென்று நினைத்து வண்டுகள் வந்துசேரும். அதன்பின்பு அவர்களுடைய நாசியினிழலைப் பார்த்துச் சண்பகப்பூவென்று ஓடிப்போகும். எ-று. (௬௩)

பெரும்பழனத் துழத்தியர்தங் கணைக்காலை
  வராலெனப்போய்ப் பிடித்து மள்ளர்
திரும்பவுமங் கவர்புறங்கால் கமடமெனப்
  பிடிமருதத் திணைக டோறும்
குரும்பையெனு முலைச்சியர்கண் முகத்திநுக்கும்
  விழியினுக்குந் குலைந்தோ மென்று
கரும்பினுடன் கலுழ்வனபோற் றாமரையுங்
  குவளையுந்தேன் சொரியுந் தானே.

இ-ள். பெரிய வயல்களிற் களைபிடுங்குகிற உழத்திகளுடைய கணைக்காலை வரால்மீனென்று மள்ளர்பிடித்து வெட்கத்தையடைந்து மறுபடியும் அப்பெண்களுடைய புறங்காலை ஆமையென்று பிடிக்கு மருதநிலத்தோறுந் தென்னங்குரும்பைப்போன்ற முலைகளையுடைய பெண்கள் முகத்திற்கும் கண்ணுக்குந் தோற்றுப்போனோமென்று வண்டுடனேசொல்லி யழுகிறதுபோல் தாமரைப்பூவும் நீலோற்பலமும் தேனைச்சொரியும். எ-று. (௬௪)

வேறு.

கிழலையுஞ்சுழிக்குமேதி நெடுமைபுனல்குடையவன்ன
மிழலைவண்டானத்தோடு மருதவண்டானத்தோடு
மழலவிர்மணிப்பூண்மள்ள ரரிகிணைக்கிசையவூதுங்
குழலிசையறுகான்மாதர் குழலிசையறுகாறகூட்டம்.

இ-ள். எருமை நீரிலே போய்விழுந்து கலக்க அன்னம் இளமையாகிய நாரையுடனே மருதநிலத்தில் வளம்பொருந்திய கானத்தையுடைய சோலையில் ஓடும்; பிரகாசம் பொருந்திய இரத்தினாபரணங்களையுடைய மள்ளர்கள் அடிக்கிற அரிகிணையென்னும் வாத்தியத்திற்கு இசையும்படியாக ஊதுகின்ற புள்ளாங்குழலிசை இல்லாதபோது பெண்களுடைய கூந்தலிற் பொருந்திய வண்டுகள் இசையும்படியாக ஊதும். எ-று. (சஙி)

மூசுவண்டினங்களெல்லா முடிந்தசங்கிலிகளாகக்
காசுநெறகதிர்களெல்லாங் கன்னசாமரைகள்காட்டத்
தேசுவாய்க்கவளம்பெற்றுத் தேறகட்பாகைச்சிந்தி
வாசவன்களிறுபோல மறுதம்வீற்றிருந்தமாதோ.

இ-ள். ஒழுங்காய் மொய்த்துக் கொண்டிருக்கிற வண்டுக்கூட்டங்கள் சங்கிலியாகவும், இரத்தினம்போலும் நெற்கதிர்கள் சாமரைபோன்ற காதாகவும் பிரகாசம்பொருந்த வளப்பம்பெற்று பருவங்கொண்ட தேனாகிய அமிர்த்தத்தைச சிந்தி, தேவேந்திரனேறுகிற அயிராவதமென்னும் யானைபோல மருதநிலம் வீற்றிருந்தது. யானையானது தன் அழகிய வாயினாலே கவளம்பெற்றுத் தேறித்தன்கண்ணிருக்கின்ற பாகனைத்தள்ளிக் கொல்லுதலால், தேசுவாய்க் கவளம்பெற்றுத் தேறகட்பாகைச் சிந்தி வாசவன் களிறுபோல மருதம், என்றும் சிலேடையாகக் கூறினார். எ-று.

நாலடித்தரவு கொச்சகக்கலிப்பா.

பண்ணார் கமலப் பழனப் பதிநீங்கி
மண்ணாடர் போற்றும் வடவீ தியிற்குறுகி
அண்ணா மலையா னடிக்கமலஞ் சென்றுதொழ
விண்ணார் கொடி நெடுந்தேர் வீதிகளின் மேவினாள்.

இ-ள். வண்டுகளிசைபாடுகின்ற தாமரை புட்பங்களுடைய மருதநிலத் தூரைவிட்டு நீங்கி பூலோகத்தார் வணங்கும் வடக்கு வீதியிலெழுந்தருளி அருணாசலேசருடைய பாதார விந்தத்தைப்போய்வணங்க ஆகாயத்தையளாவிய கொடிகளையுடைய தேர்களிருக்குங் கிழக்குவீதியில் வந்தாள் பார்வதி. எ-று. (சஎ)

கலிவிருத்தம்.

நச்சு கோபுரத் தூச்சிமே விலோர்
வச்சி ரத்தினை மதியின் மாசுபோம்
வச்ச மாமணிச் செம்மை யாலினன்
பச்சை மாவெலாம் பவள மாகுமே.

இ-ள். யாவரும் விரும்பப்பட்ட கோபுரத்தின் சிகரத்தினருகில் சந்திரன் வரும்போது, அக்கோபுரத்தி லிழைக்கப்பட்டிருக்கிற ஒப்பற்ற வச்சிரங்களி னொளியினாலே தனது களங்கத்தை நீக்குவான் இன்னும் அக்கோபுரத்தி லிழைத்திராநின்ற மாணிக்கங்களுடைய சிவந்த வொளியினாலே அதனருகில் வரும்போது சூரியன் இரதத்திற்கட்டிய பச்சைக் குதிரைகளேழும் பவளக்குதிரைகளாகத் தோன்றும். எ-று. (சஅ)

வேற்று மேருநேர் மேடை மீதினும்
போற்று கீர்த்தியிற் புரிசை மீதினும்
தோற்று நீலமா மணியின் சோதியா
லேற்ற வானதி யமுனை யானதே.

இ-ள் வேறு வேறாகி மேருவையொத்த மேடைகள்மேலும், மேகங்கள் சஞ்சரிக்கிற மதில்கள் மேலும், இழைத்திருக்கும் நீலரத்தினத்தின் பிரகாசத்தினால் ஆகாயத்திலிருக்கும் கங்கையமுனைபோல் கறுப்புநிற மடைந்தது. எ-று.

பரவை யாமெனப் பணி முழங்கவே
யரிவை மாதரா ராட ரங்கினமேல்
விரவு பச்சையின கதிரை வெய்யவன்
புரவி கௌவிடும் புல்லென் றுன்னியே.

இ-ள். சமுத்திரம்போல வாத்தியங்கள் முழங்கப் பெண்களநாட்டியஞ் செய்கின்ற மேலுப்பரிகையில் இழைத்திருக்கும் பச்சைரத்தினங்களுடைய கிரணங்களைப்புல்லென்று நினைத்துசூரியன இரதத்திற்கட்டிய பச்சைக்குதிரைகளேழுங் கௌவும். எ-று. (௫0)

நாலடித்தரவு கொச்சகக்கலிப்பா.

அத்தகையவீதிகடந்தமணியாலயஞ்சேர்ந்
துத்தமனை யென்னையாளுடையானைச்சோணகிரி
வித்தகனைக்கண்டுபணிந்துருகிமீண்டுபல
சத்திகள்தம்மோடுதலேசசுரத்தைமேவினாள்.

இ-ள். அப்படிப்பட்ட தன்மையையுடைய வீதியைத்தாண்டி அழகுள்ள கோயிலுக்குட்போய் உத்தமரை என்னை யாட்கொண்டவரை அருணாசலத்தி லிருக்கின்ற ஞானசொரூபரைத்தரிசித்து நமஸ்கரித்து உருக்கத்தையடைந்து திரும்பிப் பலசத்திகளுடனே தலேசசுரமென்கிற மலைசசாரலை யடைந்தாள் அம்மை. எ-று. (௫௧)

ஊசியிலோர்கால்விரலையூன் றியொருகான்மடித்து
நாசியிசைவிழியைநாட்டியமூன்றூட்டித்
தேசினமுதுருக்கித்தெள்ளமுதையுண்டுதவக்
கோசிகனைப்போன்முயல்வார் * கோடாணைகோடியே

* கோடணை கோடியென்றது [illegible]

இ-ள். ஊசியிலே ஒருகாலின் விரலையூன்றிக்கொண்டு, ஒரு காலைமடித்து மூக்குநுனியிலே கண்களைச்சேர்த்துப் பஞ்சாக்கினி வளாரதிப் பிரகாசமான அமிர்தத்தைச் சாப்பிட்டு விசுவாமித்திரன் போலத் தவஞ்செய்வார் அனேககோடிபேர். எ-று. (௩௨)

நாடுமலமூன்றகற்றிநல்வினையுந்தீவினையுஞ்
சாடிமனமிறந்துதானிழந்துதன்மயமாய
வீடுபெறவிரும்பிவேட்கையிறிதில்லாமற்
கூடுசிவஞானியர்கள்கோடானகோடியே.

இ-ள். ஆணவம், காமியம், மாயையென்கிற மும்மலங்களையும் நீக்கி, நல்வினை தீவினை யொப்புவந்து மனமென்பது இறந்து தற்போதங்கெட்டு. உலகம் சிவசொரூபமாய மோட்சம்பெறும்படியாக ஆசைகொண்டு மற்றோராசையுமின்றிச் சிவஞானம்பெற்ற ஞானிகள் வெகுகோடிபேர்கள் அம்மலைச்சாரலில் இருப்பார்கள் எ-று ( )

தொண்டருடனாகமங்கள்சொன்னவிதிமுறையைத்
தண்டிமுடிவுசவுராதியாய்ப்பூசித்
தண்டர்பிரானஞ்செழுத்தையோதியகமகிழ்ந்து
கொண்டகிரியையினார்கோடானகோடியே

இ-ள். அடியார்களோடு ஆகமங்கள்சொன்ன விதிமுறைப்படி சூரியனைமுதல் சண்டேசுரர் அனந்தமாகப் பூசைசெய்து தேவர்களுக்கெல்லாம் முதல்வனான சிவபிரானுடைய பஞ்சாக்கர மந்திரத்தையோதி மனமகிழ்ந்து கிரியைகளை நடத்துகிறவர்கள் கோடானகோடி. எ-று. (௩௪)

நேருமியமநியமாதன்வகையும்
[illegible]பேர்பிராணாயாமம்பிரத்தியாகாரமொடு

தாரணை தியான சமாதிவகை தன்னிலுமெய்
கூறுமுயல் யோகியர்கள் கோடான கோடியே.

இ-ள். இயமம், நியமம், ஆதனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி என்று சொல்லப்பட்ட அஷ்டாங்க யோகங்களின் வகைகளையறிந்து அவைகளைத் தேகசிரமப்பட்டு முயல்கின்றயோகியர்கள் அனேககோடிபேர்கள். எ-று. (௩௩)

மாதவர்க ளின்னசெயல் செய்யும் வகைபார்த்துச்
சூதவனஞ் சூழ்ந்த சுனையுஞ் சுனைசூழ்ந்த
சீத வருவிகளும் பார்த்துச் சிறப்புற்றுக்
கோதமனா ராசிரமந் தன்னிற் குறுகினாள்.

இ-ள். மகத்தாகிய தவத்தினையுடையோர்கள் செய்யும் செய்கையைப்பார்த்து மாந்தோப்புச் சூழ்ந்த சுனையுஞ் சுனைசூழ்ந்த சீதளமான அருவிகளையும் பார்த்துச் சிறப்பையடைந்து அவ்விடத்தில் இருக்கிற கௌதமருடைய ஆசிரமத்தில் அம்மன்சேர்ந்தாள். எ-று.

அந்த விடத்துமையாள் செல்ல வகலிகையு
மைந்தனும் வந்தேத்தினார் வாழ்த்திமறைக் கோதமனார்
முந்து முனி யெவ்விடத்தே யென்றாள் முனிபுதல்வன்
தந்தைமலர் தருப்பைக் கெய்தியதுஞ் சாற்றினான்.

இ-ள். அக்கௌதமருடைய இடத்திற்கு அம்மை போனவுடனே, அவரது பெண்சாதி அகலிகையும் புத்திரராகிய சதானந்தரும் வந்துபணிந்தார்கள்; அம்மை ஆசீர்வதித்து வேதங்களையுணர்ந்த முதன்மையான கௌதமரிஷி எங்கேயிருக்கிறாரென்றுகேட்க, சதானந்தர் புட்பம் தருப்பை கொண்டு வருகிறதற்குப் போனாரென்று சொன்னார். எ-று. (௩௪)

பின்னுமவ னுரைப்பான் பேதைமையேன் புன்குடியில்
கன்ன லமுதே கணப்போ திருந்தருளி
லன்னவனைக் கொணர்வே னென்றே யடிதொழுது
தன்னை யளித்தவன்பாற் சென்றான் சதானந்தன்.

இ-ள். மறுபடியும் பார்வதியைப்பார்த்து கருப்பஞ்சாறு போன்ற பார்வதியம்மையே! அறியாமையுடைய என்குடிசை வீட்டில் கணப்போது இருந்தால். என் தகப்பனாரைக் கொண்டுவந்துசேருகிறேனென்று பாதங்களைத் தொழுது தன்னைப்பெற்ற கௌதமரிடத் திற்குப்போனார் சதானந்தர். எ-று. (௫௮)

இங்கிவனை செல்போதி லிளந்தருப்பை கொய்துமுனி
புங்கவர்கள் சூழ்ந்து வருமுனிவன பூத்தலர்ந்து
துங்கவனங் கற்பகம்போற் றோன்றுதலா லிந்தவனந்
தங்கள்வன மல்லவென்று சங்கையுற்று நோக்கினான்.

இ-ள். சதானந்தர் போகிறபோது, இளமையாகிய தருப்பை கொய்து அநேக முனிவர்கள்சூழக் கௌதமர் வருகிறதற்கு முன்னே இவ்விடத்தில் எல்லா விருக்ஷங்களும் புட்பித்துக் கற்பகவிருக்ஷம்போலக் காணுகிறபடியால் நம்முடைய வனமல்லவே! இதுயாருடையதென்று சந்தேகப்பட்டுப் பார்த்தார். எ-று. (௫௯)

இத்தலத்தில் வந்தவரா ரென்றுரைத்து மாதவற்குப்
பத்தருவந் தந்த முனியும்பராசரனு
மத்திரியு மப்புதுமை யாராயு மெல்லையிற்றன்
புத்திரனைக் கண்டுவர வென்ன புகலென்றான்.

இ-ள். இவ்விடத்தில் வந்தபெரியோர்கள் யாரென்று விட்டுணுவுக்குப் பத்தவதாரம்பிரக்கச் சாபங்கொடுத்த பிருகுரிஷியும், பராசர

ரும், அத்திரியும் அப்புதுமைமவிசாரிக்குமிடத்தில் தம்முடையபிள்ளை சதானந்தரைக்கண்டு இவ்விடத்திலுண்டாகிய விசேஷம் என்னவென்றுகேட்டார் கௌதமர். எ-று.

தாதையிவை கேளின்றவர் தங்களை யளிக்குஞ்
சோதியிவ ணெய்தின னெனத்தொழுது சொன்னு
னுதமறை தேடுமவ ணங்குடிலின் மேவற்
கேதுதவ மேதுதவ மேதுதவ மென்றான்.

இ-ள். சதானந்தர். தன்தகப்பனாகிய கௌதமரைப்பார்த்து ஐயா! பிரமன் முதலாகிய ஐவரையுந் தன்னிடத்திலுண்டாகிய தேசோமயமாகிய பராசத்தி இவ்விடத்தில் வந்திருக்கிறளென்று வணங்கிசசொல்ல, நாத சொரூபமாகிய வேதங்கள்தேடுதற்கரிய அம்மை நமமுடைய குடிசையில்வர என்னதவம்! என்னதவம்! என்னதவஞ் செய்தோமென்றா கௌதமர். எ-று. (௩௧)

ஓடினனணைத்துமக னுச்சியை முகந்தா
னூடினன் மகிழ்ச்சியெனு மாழ்கடல் புகுந்தான்
பாடினனெடுத்தகுசை பார்மிசை யெறிந்தான்
வீடினது நந்தம்வினை வேரினுட னென்றான்.

இ-ள். கௌதமர் இவ்வார்த்தையைச்சொன்ன சதானந்தரைக் கட்டியணைத்து உச்சிமுகந்து ஓடினார்; திருக்கூத்தாடினார்; சந்தோஷமென்கிற சமுத்திரத்திலாழ்ந்தார்; பாடினார்; தருப்பையை பூமியிலேயெறிந்துவிட்டார்; என்னுடையபாவம் வேருடனேகெட்டுப் போயிற்றென்று சொன்னார். எ-று. (௩௨)

அத்திரி முதற்றலைமை யந்தணர்களெல்லாங்
கைத்தல மெடுத்தனர் கடித்தனர் களிப்பால்

வித்தகி யிருக்குமிட மேவியெதிர் கண்டார்
பத்திவலை யிற்படு பதங்களில் விழுந்தார்.

இ-ள். அத்திரிரிஷி முதலாகத் தலைமைபெற்ற ரிஷிகளெல்லா ல் இரண்டுகைகளையுந் தலைமேல்வைத்துக் கூத்தாடினார்கள்; சந் தோஷத்துடனே பார்வதியிருக்கிற இடத்தையடைந்து எதிரே கண் டு பத்தியாகிய வலையில் அகப்பட்டுக்கொள்ளுகிற பார்வதியினுடை ய பாதத்தில் விழுந்து நமஸ்கரித்தார்கள். எ-று. (௧௩)

நின்னிலைமை கன்னியிறை நீள்பிரம சாரி
யென்னுமறை யன்றுமுத லின்றுவரை யெல்லா
முன்னிடை யுதித்துல குயிர்த்தொகைக ளெல்லா
மன்னையெனு முன்பெருமை யாரறிய வல்லார்.

இ-ள். தாயே! நீயோ கன்னிகை, சுவாமியோ நித்திய பிரம சாரியென்று சிருஷ்டி தொடங்கி இதுவரைக்கும் வேதங்களெல்லா ஞ் சொல்லிக்கொண்டிருக்கிறன; அப்படியிருக்க உன்னிடத்தில் உ லகங்களிலிருக்கிறன எல்லாவுயிர்களுந் தோன்றித் தாயென்றுசொ ல்லும், அப்படிப்பட்ட உன் பெருமையை யாரறியப் போகிறார்கள்.

நித்தனை முதற்றருவை நித்தின திடத்தே
சத்தியென நீவருவை சத்திசிவ மென்றே
யித்தகைமை கொண்டுயிர்கள் யாவையு மளிப்பா
யத்துவித மாகுமுனை யாரறிய வல்லார்.

இ-ள். நித்தியமாகவிருக்கிற சிவபிரானை முதலிலுண்டாக்கு வாய்; அச்சிவனிடத்திலே சத்தியாகவருவாய்! சத்தி சிவமென்கிற தன்மையைக்கொண்டு உயிர்களையெல்லாம் பெறுவாய்! அத்துவித சொரூபமாகிய உன்னையாரறியப் போகிறார்கள். எ-று. (௧௪)

மெய்ப்பொருண் மகேசனரன் வேதனரி யானல்
மைப்பரும கேசியுமை வாணிதிரு வாவை
யிப்படியு மன்றியவ னெப்படி யெடுத்தா
னப்படியு மாவையுனை யாரறிய வல்லார்.

இ-ள். பரமசிவன், மகேசுரர், உருத்திரர், பிரமன் விட்டுணு ஆனல், நீ மகேசுவரி, உருத்திரி. சரஸ்வதி. இலக்குமியாகிய சத்திகளாய் இப்படியுமல்லாமல் அசிவபிரான் எப்படிப்பட்ட உருவங்கொண்டனரோ அதற்குத்தகுந்த உருவங்கொள்வாய்! உன்பெருமையை யாரறிய வல்லவாகள். எ-று. (௧௬)

நெஞ்சுருகி மாதவர்க ணின்றிவை புகழ்ந்தார்
வஞ்சியிடை கோதமனும் வந்தனன் வரும்போ
தஞ்சலிபு ரிந்தன னதற்குமுன மேமின்
கஞ்சமல ரென்னவிரு கால்களில் விழுந்தான்.

இ-ள். மாதவத்தையுடைய ரிஷிகளெல்லாம் நெஞ்சமுருகி நின்று இப்படி தோத்திரஞ் செய்தார்கள். அசசமயத்தில் பார்வதி சமீபத்தில் கௌதமர் வரும்போதே இரணடுகைகளையும் சிரத்தில் வைத்து கூப்பித் தாமரை மலரையொதத அம்மையின் இரண்டு பாதத்திலும் நமஸ்கரிததார். எ-று. (௧௭)

அன்பினுயர் கோதமனு மன்னையை வணங்கி
பின்புற வு[illegible]ரப்பனைய னெண்டிசை புரப்போர்
தன்சிரமிதிக்கரிய தாளிணைக ளின்றென்
புன்குடின் மிதிக்கவென புண்ணிய முடித்தேன்.

இ-ள். புத்தியினலே உயர்ந்த கௌதமரிஷியும் பார்வதியம்மையை வணங்கிச்சொல்வான் ; பிரமன் அஷ்டதிக்குப்பாலகர் சிர

த்திலே கூடவைத்ததற்கு அருமையான பாதமிரண்டும் அடியேனு டைய புன்மைபொருந்திய சிறவீட்டில் மிதிக்க என்ன புண்ணியஞ் செய்தேன். எ-று. (கூஅ)

இந்தமொழி சொற்றனு மிளங்கொடியும் வேலன்
றந்தியிடை சென்றிடுவ னங்கது தவிர்ந்தால்
சிந்தைதமகி ழுன்னிடையில் வந்துகுறை தீர்வேன்
மைந்தவென வோதினன் மறுத்துமிவை சொல்வாள்.

இ-ள். இவ்வார்த்தையைச சொன்ன அளவில், இளமையாகிய கொடிபோன்ற அம்மையும் பிள்ளையாகிய கௌதமனே? எனக் கோர் குறைவந்தால் சுப்பிரமணிய னிடததிலும் கணபதியினிடத் திலுஞ்சென்று தீர்த்துக்கொளவேன்; அவ்விடம் விட்டால் என் மேல் அன்புவைத்த உன்னிடததில் வந்து தீர்த்துக்கொள்வேனெ ன்று சொல்லி மறுபடியுஞ் சொல்வாள. எ-று. (கூகூ)

நாயகன் மொழிந்திட நடந்தபடி யெல்லாம்
பாயிர மெனும்படி பகர்ந்தன ளெவாக்குந்
தாயிவை மொழிந்தன ளினிற்சுத மகற்கன்
றாயிரம் விழித்திர ளளித்தமுனி சொல்வான்.

இ-ள். பரமசிவன் சொன்னபடி பூமியில் வந்து தான் நடந்த சமாச்சாரமெல்லாம் பாயிரத்தோடுங்கூடிய நூல்போல் முறையாக விரித்து எவருக்குந் தாயாகிய பார்வதி சொன்னபோது, முற்காலத் தில் தேவேந்திரனுக்கு ஆயிரங்கண்ணுண்டாகச்செய்த கௌதமர் சொல்வார். எ-று. (எ௦)

இத்தல முதற்றல மிதன்பெயர் தலேச்ச
முத்தம மிதிற்றரும மொன்றுபல வாகும்
மெய்த்தவ மியற்றுதனில் வென்கிடையின் மேல்வைத்
தத்தனை யிடப்புற மளித்தருளு மென்றான்.

இ-ள். இத்தலம் முதன்மையான தலம்; இதனுடைய பெயர் தலேசசுரம்; இதுமிகவு முத்தமமானது, இஃதில் ஒரு புண்ணியத்தைச் செய்தால் ஒன்று பலவாய் விருத்தியாகும்; இதிலிருந்துகொண்டு நீ மெய்ம்மையாகிய தவஞ்செய்தால், வெண்மையுள்ள ரிஷபவாகனத்தின்மே லெழுந்தருளிய பரமசிவன் உனக்கு இடப்பாகங் கொடுப்பாரென்றார் கௌதமர். எ-று. (௭௧)

மாலயன் வசுக்கண்மக வான்முனிக ணாதமோர்
சாலைகள் சமைத்ததில் தனித்தவ முடித்தார்
காலமிட நன்றுசெயல் கைப்பலமி தென்றான்
மூலமுதல் வல்லியு முடிப்பனிது வென்றாள்

இ-ள். அம்மையே? விட்டுணு, பிரமன், அஷ்டவசுக்கள் தேவேந்திரன் அநேகமுனிவர்கள் அவரவர்கள் இடஞ்செய்துகொண்டு ஒப்பற்ற தவஞ்செய்து நினைத்தகாரிய முடித்துக்கொண்டார்கள்; நீவந்தகாலமு மிடமு நன்மையாகும், இவ்விடத்தில் நீ தவஞ்செய்தால் கைப்பலமாகி முடியுமென்று கௌதமர் சொல்ல, எல்லாப் பொருள்களுக்கு மூலமாகிய அம்மையும் தவஞ்செய்து என்கருத்தை முடித்துக்கொள்ளுகிறே னென்றாள். எ-று. (௭௨)

எண்சீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

கோதமனை முதலாய முனிவர்க் கெல்லாங்
குளிர்ந்தமொழி பகர்ந்துவிடை கொடுத்துச் சோணை
பூதரமா மதன்குணபாற் பன்ன சாலை
புதிதமைப்பித் தகமகிழ்ந்து புறம்பு காக்க
மாதரெழு வரையமைத்து நாலு பாலின்
வாயிலையெண் வயிரவாகண் மகிழ்ந்து காக்க
வாதரவி னிறுத்தி மைந்தர் மருங்கு காக்க
வந்தரியுட் புறங்காக்க வமைத்தாண் மன்னே.

இ-ள். கௌதமர் முதலான முனிவர்களுக்கெல்லாம் பிரியவசனஞ்சொல்லி உத்தரவுகொடுத்து, அருணாசலத்துக்குக் கிழக்குப் பக்கத்தில் பர்ணசாலை புதிதாகச்செய்வித்து, சத்தமாதர்களைப்

புறக்காவலாக வைத்து, நான்கு வாயில்களையும் எட்டு வயிரவர்கள் காக்கவும், விநாயகர் சுப்பிரமணியர் தன் இரண்டுபக்கமுங் காக்கவும், துர்க்கை உட்பக்கங் காக்கவுஞ்செய்தாள் பார்வதி. எ-று

கொந்தளசஞ் சடைபிடித்து விரித்துப பொற்றோட்
 குழைகழுத்திற் கண்டிகையின் குபபைபூட்டி
யுந்துமர வுரிகிடிடப் டாடை நீக்கி
 யுரித்தகர வுரிசாத்தி யுத்தா ளத்தால்
விந்தைதிருநீ றணிந்து கனற்குட் காயந்து
 விளங்குமூசியி னொருகால விரலை யூன்றி
யந்திபக லிறை பதத்தினு மனத்தை யூன்றி
 யரியபெருந் தவம்புரிந்தா ளகில மீன்றாள்.

இ-ள். புட்பங்களைத் தரிக்கின்ற கூந்தலைச் சடைசெய்து விரித்துத் தோள் கழுத்து காதுகளில உருத்திராக்ஷமாலைகளைத் தரித்து, ஆடுகின்ற பாம்புரிபோலிருக்கிற பட்டாடை யுடுப்பதுவிட்டு மரவுரி தரித்து, செயத்தைக்கொடுக்கின்ற விபூதியைச் சர்வாங்கமுந் தரித்து நெருப்பில்காய்ந்து பளபளவென்று பிரகாசிக்கும் ஊசியில் ஒருகாற் பெருவிரலையூன்றி, இராப்பகலாக மனத்திலே பரமசிவத்தைத் தியானஞ்செய்து, அரிதாகிய பெரியதவத்தைச் செய்தாள் உலகத்தைப்பெற்ற பார்வதியம்மன். எ-று. (எ௪)

இளைத்தகொடி மருங்குவளைந் தெரியி னுப்ப
 ணினியதவ மியற்றுதல் கண்டிளைத்து வாடிக்
களைத்துமனக் துடித்துவிழி புதைத்து வாணி
 கண்ணீரின் மூழ்கின்றாள் கமலத் தாரு
முளைத்துமனந் தளர்ந்தழுது விழுந்தரன் மற்றை
 யுயிர்களெலாங் கரைந்துகரைந் துருகா நின்ற
வினைத்துவளைத் துறைப்ப தென்றாய் வருந்து மாலால்
 வழிந்தினுள்ள கருப்பமெல்லாம் வருந்தி டாதோ.

இ-ள். மிகவுஞ்சிறிதாகிய கொடிபோன்ற இடைவளைந்து அக்கினிமத்தியில் இனிமையான தவத்தைச் செய்வதைப் பார்த்து, இளைத்து வாட்டமடைந்து களைத்து, மனந்துடித்து, இரண்டு கண்களையு மூடிக்கொண்டு, சரசுவதி கண்ணீரால் முழுகினாள்; இலக்குமியும் மனம்வருந்திச் சஞ்சலப்பட்டு அழுதுவிழுந்தாள்; மற்றசீவராசிகளெல்லாம் மனங் கரைந்துருகின; நானிதைப் பிரித்துப் பிரித்துச் சொல்வதனால் என்னபயன்! தாயானவள் வருந்துவளாயின் வயிற்றிலுள்ள கருவாகிய சீவனெல்லாம் வருத்தத்தை யடையாதோ! எ-று. (எ௫)

முன்பனியிற் கருகுபடாக் கமலம்போல
முகந்தோன்றப பணிக்கயத்துண் மூழ்கிநிற்கும்
பின்பனியி லதிசீத விடத்திற்சேரும்
பெருமழைநக்குண் மீனென்னப் பேணிநிற்கும்
அன்பனிடம் பெறுமளவு மதுபோல்வேண்டு
மரியதவம் புரிந்தனளவ் விடத்துவேதன்
வன்பணியிற் றுயிலெனடுமான் முதலாந்தேவர்
மறைபுகுந்த தவச்சாலை மருங்கிற் சார்ந்தார்.

இ-ள். முன் பனிக்காலத்தில் கருகிப்போகாத தாமரைப்பூப்போல முகமாத்திரந்தெரியக் குளிர்ச்சிபொருந்திய தடாகங்களில் நின்றும், பின்பனிக்காலத்தில் அதிக சீதளம்பொருந்திய இடத்திலிருந்து மழைபெய்கிறபோது அதில் ஒரு மீன்போலச் சஞ்சலப்படாது நின்றும், பரமசிவன் இடப்பாகத்தைப் பெறுகிறவரைக்கு மதுபோல வேண்டிய தவத்தைச்செய்தாள்; அவ்விடத்தில் பிரமனும் வலியசர்ப்பத்தில் நித்திரைசெய்கின்ற விட்டுணு முதலாகிய தேவர்களும் வேதகோஷ்டம்பொருந்திய தவச்சாலையைவந்து அடைந்தார்கள். எ-று. (எ௬)

அந்தரியு மாயவனுர் முதலாந் தேவ
ரனைவருக்கு முபசார மளித்து நீங்கள்
வந்தவா றெவ்வருட்புமொன் மகிட்டுலே
வருந்தியதுந் தீர்ந்ததுவும் வகுத்துச் சொன்

சுந்தரியுங் குமரியுடன் சுடரும் வாளாற்
றுடுகளத்தின் மகிடனுரந் தொலைப்பா யென்றாள்
விந்தையது புரிவனெனப் பணிந்தா ளன்னை
விளம்புதல்கண் டகமகிழ்ந்து விடைகொண் டாரே.

இ-ள். பார்வதி, விட்டுணு முதலான தேவர்களெல்லாருக்கு முபசாரஞ் சொல்லி நீங்களிவ்விடத்திற்கு வந்தவகை சொல்லுக வென்றுகேட்க, அவர்கள் மகிடாசுரனால் தாங்கள் துன்பப்பட்டுத் தளாசியடைந்தவகை விவரமாகச் சொன்னார்கள்; அதற்குப் பார்வதி துர்க்கையைக் கூப்பிட்டு நீ சத்தியினால் யுத்தகளத்தில் மகிடாசுரன் வல்லமைகெடக் கொன்றுவிடென்று சொன்னாள். அதற்குத் துர்க்கை அப்படியே செய்வேனென்று பணிந்தாள், தாயாகிய பார்வதி இந்த வார்த்தையைச் சொன்ன அளவில், விட்டுணு முதலானவர்கள் சந்தோஷத்தை யடைந்து வணங்கி விடைபெற்றுக் கொண்டார்கள் எ-று. (எ௭)

கலி விருத்தம்.

கோதமாச்சிர மந்தனிற் கோல்வளை
தீதிலாத் தவஞ் செய்ததுஞ் செப்பினேன்
மேதி மாமுகற் காய்ந்ததும் வெள்விடைச்
சோதி பாக மடைந்ததுஞ் சொல்லுவேன்.

இ-ள். சத்திதேவி கௌதமருடைய ஆசிரமத்திற் குறைவில்லாத தவஞ்செய்ததுஞ் சொன்னேன்; பிறகு மகிடாசுரனைக் கொன்றதும், ரிஷபவாகனத்தை யுடைய சிவபிரானது இடப்பாகத்தைப் பார்வதி அடைந்ததுஞ் சொல்வேன். எ-று. (எ௮)

நான்காவது,
திருக்கண்புதைத்தசருக்கம்
முற்றிற்று.
திருவிருத்தம்-௩௩௪.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# இடப்பாகம்பெற்ற சருக்க வசனம்.

மார்க்கண்டேய முனிவரே! தேவியார் இடப்பாகம் பெற்ற சரித்திரத்தைக் கூறுவேம் கேட்பீராக. நீலகிரியில் ஓரசுரன் இருந் தான். அவன் மிக்க வல்லமையுடையவன். ஆலாலத்தை யொத்த வன். பெருந்தீமைகளை யுடையவன், குபேரனது திரவியங்களை யெல்லாம் கொள்ளை கொண்டவன். ஆதிசேடனை கலக்கியும் அதிர படுத்துறங்கும் விட்டுணுவைக் கலங்கல்லாக்கியும் எறிந்து விளையாடுவோன். ஐராவதத்திற் பவனி போவான் சூரியரதக் குதி ரைகளினும் உலாச்செல்வான் ரிஷிகளைக் கொல்வான். அவன் எருமைக்கடாமுகத்தை யுடையவனானபடியால் இயமன் எருமைக் கடாவாகனத்து லேறவனை யொழித்தான். தான் உண்பதற்கு வேண்டிச சமுத்திரங்களையுந் தூர்த்தான். அவ்வாறாய் மகிடா சுரன் மகிடபுரத்திலே பிரமன் அழுகும் அதைதையும் கொடுக்க வா ழ்ந்திருக்கும் நாளிலே. அவனுணவுக்காக ஆயிரம் அசுரர்கள் மிருக பறவைகளைத்தேடி ஆயுதபாணிகளாகப் புறப்பட்டனர். அவர் பார் வதிதேவியார் தவஞ்செய்திருந்த வனத்திலவர, அங்குக் காவலா ன்ற அஷ்டவைரவர்களும் அவர்களாயிரவரையும் கொன்றனர் அதனைத் தூதர்கள் மகிடாசுரனுக்குத் தெரிவித்தனர். அவன்கோப மது, ஆர்ப்பரிக்க, சேனாபதியான நிகும்பன் என்பான் தான்சென் பவைரவரைக் கொல்வதாக வீரமொழி புகன்று, சேனைகளோடு சென்றான், அசுரசேனைகள் மூண்டன. அதுபோது பார்வதிதே வியார் பக்கத்துள்ள தாக்கணரு நோக்கணைக்கு என்பார் தடுத்து போர்புரிந்தார்.

சண்டன், உருத்திரன்முதலாய எட்டுவைரவர்களும் மிக்க சினங்கொண்டு, நிகும்பனும்தேரும்சாரதியும் இருக்க மற்றவர்களையெல்லாங்கொன்றனர். அதனைக்கண்ட நிகும்பன் தாக்கணங்கையெதிர்க்க அவள் அம்புதொடுத்து அவன் றலையையறுத்தாள். அதனைத் தூதர்களாலறிந்த மகிடாசுரன், தன்னருகிலுள்ள கயிடவனுடன் ஆயிரம்யானைகள் கட்டப்பட்ட இரதத்திலேறி, காந்தன், நீலன், முதுகரன் முதலிய பன்னிருவரும் உடன்வர, பலவகை வடிவங்களையுடைய அசுரசேனைகள் ஆயிரவெள்ளம அடர, பலவித ஆடம்பரங்களுடன் அம்மையார் எழுந்தருளிய வனத்திற்கு வந்தனன். தேவர் முனிவர் அஞ்சினர். தேவியார் துர்க்கைக்கு ஓர்சக்தி கொடுத்து அவனைக்கொன்று வருவாயாக என்றார். துர்க்கை சேனைகளோடெதிர்க்க அசுரசேனைகள் பாதியழிந்தன. மகிடாசுரனும் சேனைத்தலைவரும் துர்க்காதேவி சேனைகளைத் துரத்தியடிக்க. துந்துமி. காளி. மதங்கி. சண்டியென்னும் நான்குசத்திகள் தோல்வியுற்றனர். வைரவருந்தோற்றனர். துர்க்காதேவி மனந்தளர்ந்து உமாதேவியைத் தியானித்துநின்றாள். தேவியார் அருளினாலே நெருப்புமழை இடிமழை சொரிந்தமையினால் அசுரன் சேனைகள் இறந்தன. பின்னர் அபிராமி அருசிகனையும், வாரணிகாந்தன் என்பவனையும். சண்முகி கடனென்பானையும், சூலக்கையாள் மிண்டனையும் வராடசண்டனையும். நீலகண்டி மதுஎன்னும் அசுரனையும், இந்திரைநீலனையும், துந்துமிக் கொடியாள் இரத்த வூணனையும், அருணாசலை அக்கினிக் கண்ணனையும். சுந்தரி கயிடவனையும் புகைக்கண்ணனையும் கொன்றனர். துர்க்காதேவி மகிடாசுரனை யெதிர்த்தாள். சங்கத்தை முழங்கினாள். அசுரர் அதனால் மயங்கினர். மகிடனும் மாரிபோற பாணங்களைச் சொரிந்து துர்க்கையின் புயங்களையெல்லாம் அறுத்துத்தள்ளினான். துர்க்கை அர்த்தசந்திர பாணங்களிரண்டினைவிடுத்து மகிடன் றலையி லழுத்தச்செய்தாள். மகி

டனும் துர்க்காதேவி கையினிலிருந்த வில்லை முரித்தான் நெற்றியில் அடித்தாள். கோபித்துச் சக்கிராயுதத்தை விடுத்து மகிடன தலையை யறுத்தாள். அதனுல் இறவாதவனுய் யானை யுருவங்கொண்டு எதிர்த்தான். துர்க்கையின் வாகனமாகிய ஆளிசென்று யானையின் மூளையைத் தோண்டித் தின்றது அதினும் இறக்காதவனுய்க் குதிரை முகனுய் வந்தான்; அவ்வுருவத்தையும் அறுத்துத் தள்ளினுள் துர்க்கை. பின்னரும் அசுரன் சலப்பிரளயம். அந்தகாரம், பிரமன் விட்டுணுமுதலிய பற்பல வுருவங்களை மாயையினுலேகொண்டெதிர்த்தான். துர்க்கையினைகளைத்தண்டு மனநொந்து அம்பிகையாரைத் தியானிக்க, அன்பினையுடையவளே இயல்பான எருமை முகங் கொண்டபோது அறுத்துக் கீழ்த்தள்ளிக் காலினுலே மிதிக்கின் இறப்பான், என்று அசரீரி கூறிற்று. அவ்வாறுசெய்து கொன்று தேவியை வணங்கினுள் துர்க்கை.

அவன் கழுத்திலிருந்த படிகலிங்கத்தைத் துர்க்கை யெடுத்துச் சென்று தேவியார்க்குக்கொடுக்க அவரும் வாங்கினுர். தேவியார் கையைவிடாமல் சிவலிங்கப்பெருமான் இருந்தனர். இவ்விலிங்கமூர்த்தி எமது கையை விடாதிருத்தற்குக் காரணமென்னெனக் கௌதமர் கூறுவார். உலககாரணீ? முற்காலத்தில் அகத்தியர் முதலாய ஐம்பது இருடிகள்சேர்ந்து. வரமுனி என்பவரின் ஆசிரமத்திற்குச் சென்றுர்கள். அவர் மரியாதை செய்யாமையால் அகத்தியர் முதலாயினேர் கோபித்து எருமைக்கடா ஆகக்கடவாயென்று சபித்தார் வரமுனி பயந்துவணங்கி யெனது பிழை பொறுத்தருள்வீரென்ன, அசுரனுகி யாளுங்காலத்தில் அம்மையார் உன்சாபத்தைத் தீர்ப்பார் என்றுர். அவன்தான் மகிடாசுரன். ஒருநாள் வேட்டையாடி வருங்காலத்தில் கும்பகிதோன்ற இரைகிடையாமல், எதிர்ப்பட்ட மன்னதரிஷியை விழுங்கினுன். அந்தரிஷிகையி லிங்கம் இவன்கழுத்தில் தங்கியிருந்தபடியால் அவன் சிவசொரூபமன்றே?

ஆவினைக் கொல்வித்தமையாற் பாவம் சேர்ந்தது. இங்குள்ள நவதீர்த்தங்களாடினால் அப்பாவம் அகலுமென்ன, அங்ஙனம் ஆடினர். இலிங்கம் நீங்கிற்று. அத்தீர்த்தத்திற்குக் கட்கதீர்த்தமென்று பெயரிட்டுப் பரமசிவனை வணங்குமாறு கோயிலிற்சென்று தரிசித்துத் தம்குறையை மொழிந்தார் கார்த்திகை மாதத்துக் கார்த்திகையில் ஒருசோதி மலையிற்றோன்றிற்று இம்மலையை வலம் வருதியென்று சுவாமி சொல்லி மறைந்தனர். அங்ஙனம் உமாதேவியார் வலம் வந்து முடியவும் பெருமானார் தேவியார்மீது கடைக்கண் நோக்கஞ் செய்தருளி இடப்பாகம் அளித்தார். ஒருபாதி சிவனுருவமும், ஒரு பாதி தேவியாருருவமும் ஆகவிளங்கிய கண்டு யாவரும் ஆனந்தக் கடலில் முழுகினர். இக்கதையைப் படித்தவர்! கேட்டவர் யாவரும் தத்தம் பாவங்களெல்லாம நீங்கப்பெற்றுச சிவசாயுச்சிய முத்தியையடைவார் என்பது திணணம் திணணமென்று திருநந்திதேவர் கூறினர்; இனி மாரக்கணடேயரே! வசசிராங்கதபாண்டியன் மோக்ஷம் அடைந்த சரித்தத்தையுரைப்பேம். கேட்பீராக என்று சொல்வார்.

இடப்பாகம்பெற்ற சருக்க வசனம்

முற்றிற்று.



பார்வதி தேவியார் துர்க்கையைக்கொண்டு மகிடாசுரனைச் சம்மரிக்கச் செய்வித்த பின் பரமசிவன் பார்வதியார் தவத்துக்கிரங்கி இடப்பாகந்தந்து, அர்த்தநாரீசுரனென்னு மியற்பெயருஞ் சூட்டப்பெற்றனர்—12.




உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஐந்தாவது,

## பார்வதிதேவியார்

# இடப்பாகம்பெற்ற சருக்கம்.



அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

அஞ்சனக் கிரியில் வாழு
மசுரன்றன் றனக்குநந் தீர
னஞ்சமே யானையா னந்த
நமனுக்கு நமனாய் வந்தோ
னஞ்சிகை யெரியைத் தீய்க்குந்
தீமையா னளகை நாட்டின்
விஞ்சையான் வருந்த வுள்ள
வளமெலாங் கவர்ந்த வீரன்.

இ-ள். நீலகிரியில் வாசஞ்செய்துக்கொண்டிருக்கிற அசுரன் எல்லாரிலும் அதிக பராக்கிரமத்தையுடையவன், விஷத்தினுக்குச்சமானமானவன், அந்த எமனுக்கும் எமனானவன், சிவப்பாகி மேலே யெழுகின்ற கொழுந்தையுடைய நெருப்பைச் சுடத்தகுந்த தீமையையுடையவன், அளகாபுரியில் குபேரன் தரித்திரத்தையடைய அங்கேயிருக்கிற வளங்களெல்லாங் கொள்ளையிட்டவன். எ-று. (௧)

தாமரைக் கண்ணன் றாங்கு
மரவினைத் தலைவால் கூட்டி
மாமணிக் கவண்போற் கொள்வன்
வன்னிவா கனத்தை வாங்கி
வேமழற் குஞ்சி மைந்தர்க்
குதவுவன் விமானத் தோடே
சோமனைப் பிடித்துக் கையாற்
பிழிந்தமு தருந்துஞ் சூரன்.

இ-ள். விட்டுணு நித்திரைசெய்கின்ற ஆதிசேடனைத்தலையையும் வாலையும், ஒருகையினால் சேர்த்துப் பிடித்துக் கவணாக அந்த விட்டுணுவைக் கல்லாகித் தூரத்தில் எறிந்துவிளையாடுவான்; அக்கினியைத்தள்ளிவிட்டு அவனேறுகிற ஆட்டை நெருப்பைப்போல சிவப்புமயிரையுடைய தன்பிள்ளைகளுக்கு ஏறக்கொடுப்பான்; சந்திரனை அவனுடம்பிலிருந்துவருகிற தேவாமிர்தத்தைப் பானம்பண்ணுகிறசூரன். எ-று. (௨)

கருதிய முகவான் வெள்ளைக்
களிற்றின்மேற் றிரிவன் பின்னைப்
ரிதிமே ரதனிற் பச்சைப்
பரிசெல்ப பவ்வி போவா

னிருதியைச் சுமக்கு மாளி
யேறுவ னிணத்தின் மூழ்கிக்
குருதிகொப் பளிக்கும வாளோன்
றெடுத்துயி ரனைத்துங் கொல்வான்.

இ-ள். உயர்வாக நினைக்கப்பட்ட தேவேந்திரனுடைய வெள்ளையானையின்மேல் திருவோலக்கம் வருவான்; சூரியனுடைய தேரிலேறிக்கொண்டு பசைசைக்கு நிரைகளேழும் நடக்கப் பவனியாகப் போவான்; நிருதியைசசுமக்கின்ற ஆளியின்மேலேறிக்கொள்ளுவான்; நிணங்களால் முழுகப்பட்டு இரத்தங்களைக் கொப்பளிக்கும் ஒரு வாளாயுதமெடுத்துச சருவசீவன்களையும் கொல்வான். எ-று. (ந)

அன்னவன்மகிடமான வாற்றினாலஞ்சிக்காலத்
தென்னவன்மகிடமேறன் கால்வினாற்றிரிந்தானென்று
லென்னவன்கொடுமைநமமா லியம்பலாமிலங்குஞ்சோதி
மன்னவன்கிரியைச்சாய்த்தான் மீனுக்காவாரிதூர்த்தான்.

இ-ள். அப்படிப்பட்ட அசுரன் எருமைமாட்டு முகத்தையுடையவனானபடியால் தெற்குதிக்கிலிருக்கின்ற தன் எருமைக்கடாவிலேறாமற் காலினால் நடந்து திரிந்தானென்றால் அந்தமகிடாசுரனுடையகொடுமை நம்மாலெப்படிச சொல்லக்கூடும்! சோதிசொரூபமாகிய சிவபிரானிருக்கிற கயிலாயத்தையுஞ் சாயசசெய்தான்! மீன் வேண்டியதற்காகச சமூத்திரத்தையுந் தூர்த்தான். எ-று. (ச)

மயனெனுந்தச்சன்செய்த மகிடமாபுரத்திலன்னா
னயனறுகரிசிநல்க விருக்குநாளவனுக்காய
பயனுறநுகர்ச்சிவேண்டி யாயிரம்படைக்கையாளர்
கயமுதல்விலங்கைநாடி வேட்டை MAHAMAHOPADHYAYA

இ-ள். மயனென்கிற தேவதச்சனால் இரத்தினகசிதமாகச் செய்யப்பட்ட மகிடபுரத்தில் அந்த அசுரன், பிரமதேவர் நித்தியம் அறுகும் அக்ஷதையுங்கொடுக்க வாழ்ந்துகொண்டிருக்கிறநாளில், அந்த அசுரன் தின்னுகிற மாமிசத்துக்காக ஆயுதபாணிகளாகிய ஆயிரம் பேர்கள யானைமுதலான மிருகங்களைத்தேடி வேட்டைமார்க்கமாகக் காட்டுக்குப்போனார்கள். எ-று. (௫)

தானவர்சென் றுவஞ்சி தவஞ்செய்தானகத்தைச்சூழ
வானவர்பணியுமட்ட வயிரவர்தொலைத்தாராவி
போனவரழிந்தவாறும் புரிகுழறவமுந்தூத
ரானவரவுணர்கோவுக் கடிபணிந்தறிவித்தார்கள்.

இ-ள். அப்படி வேட்டைவெளிப்பட்ட ஆயிரமசுரர்களும் வந்து பார்வதி தவஞ்செய்துகொண்டிருக்கிற வனத்தைச சுற்றிக்கொள்ள, அதைக்கண்டு தேவர்கள் பணிகின்ற காவலாகவிருந்த அஷ்டவைரவர்களும் அந்த ஆயிரம்பேரையுங்கொன்றார்கள்; அவர்கள் இறந்துபோனதும். அம்மை தவம்பண்ணுகிறதும் தூதர்கள் மகிடாசுரன் பாதத்தை வணங்கித் தெரிவித்தார்கள். எ-று. (௬)

போற்றியங்கவர்கள்சொல்லப் புகைநகைபிறந்ததங்கி
தூற்றியவிருகணண்ட கோளமுஞ்சுழன்றதங்கே
நாற்றியதிசையின்வேழ நடுங்கியதிமையோர்கூட்டங்
கூற்றமுங்கரந்ததால காலமுங்குளிர்ந்ததன்றே.

இ-ள். தூதர்கள வணங்கித் தெரிவித்தவளவில் புகையுண்டாகும்படி கோபச் சிரிப்புமுண்டாயின; இரண்டு கண்களும் நெருப்புகள் பறக்கவீசின; அண்டகோளமும் கிறுகிறென்று சுழன்றது; அஷ்டதிக்கிலிருக்கிற யானைகளும் தலையைத் தூங்கப்போட்டனதேவர் கூட்டமும் நடுக்கத்தையடைந்தது; எமனும் ஒளித்துக்கொண்டான்; காலகாலவிஷமுங்குளிர்ந்தது. எ-று. (எ)

அப்படி மகிடன் சீற
மளவினி னிகும்ப னென்போன்
செப்பிடு முனது கோபம்
பொறுப்பரோ சிறிய ரென்றே
முப்புடை யிளநீ ரென்று
முலைச்சிவாழ் வனத்து ளாரைக்
கைப்படை யதனாற் கொல்வே
னெனச்சொலிக் கடிது போனான்.

இ-ள். அப்படி மகிடாசுரன் கோபிக்குமளவில் நிகும்பாசுரனெ ன்கிற படைத்தலைவன் அரசனே! உம்முடைய கோபத்தை அற்ப மானவர்களா பொறுப்பார்கள் என்று சொல்லி, இளநீர் ஒத்ததன முடைய பார்வதி தவஞ்செய்கிறவனத்தி லிருப்போரைக் கையிலிரு க்கின்ற வாளால் கொன்றுவருகிறேனென்று சீக்கிரத்திற் புறப்பட் டுபோனான். எ-று. (அ)

குடதிசைக் கடலைச் சீறிக்
குணதிசைக் கடல்சென் றென்ன
நெடியதேர் கரிமா சேனை
யெழுந்தன நிகும்ப னென்போன்
வடகிரி தனக்குங் கும்ப
மாமுனி மலைக்கு நேரே
யிடையொரு கரிய மேரு
வெழுந்ததா மென்னச் சென்றான்.

இ-ள். மேற்குச் சமுத்திரத்தின்மேற் கோபித்துக் கிழக்குக்கட ல் சண்டைசெய்யப் புறப்பட்டதுபோல் பெரியதேர்களும், யானைக

ளும். குதிரைகளும், காலாள்களும் புறப்பட்டன; நிசும்பாசுரன் மகாமேருவுக்கும் அகத்தியரிருக்கின்ற பொதியமாமலைக்கு மத்தியில் நிறைந்த ஒரு கரியமேரு எழுந்ததென்று சொல்லும்படியாகப்போனான். எ-று. (௯)

வேறு.

எழுந்தவனு மரகதத்தேர் துரகத
மாயிரம் பூண்ட விரதமேறி
வழிந்தகரி மதக்கடலை யெழுந்ததுக
ளடக்கவுமை வனத்திற் சென்றான்
கொழுந்துவிடுங் கனலனையார் வரவுகண்டு
பலகோடி குன்றம் வீசித்
தழைந்தபடைத் தாக்கணங்கு நோக்கணங்கும்
பொருதெதிரே தடுத்தா ரன்றே

இ-ள். இப்படி நிசும்பாசுரன் பச்சைக்குதிரை ஆயிரங் கட்டிய தேரிலேறிக்கொண்டு அப்பொழுதும் எழும்பிய சிறு அணுக்கள் முன போகின்ற யானைகளின் மதஜலம் சமுத்திரமாகத் தேங்கியிருப்பதை வற்றச்செய்ய, பார்வதி தவஞ்செய்யும் வனத்திற்குப்போனான்; கொழுந்துவிட்டெரியு நெருப்பையொத்த அசுரப்படைகள் அநேகமலைகளை விட்டெறிய இவர்கள் வருவதுகண்டு அம்மையாரிடத்திலிருக்கிற தாககணங்கு நோக்கணங்கு என்னுமிருவரும் ஆயுதபாணிகளாகப்போய் எதிரே தடுத்தார்கள். எ-று. (௧0)

சண்டனுருத் திரன்சோமன் கபாலிநிகர்
சங்கரன்கோ தண்டன் வீத
னெண்டரிய சித்திராங் கதனென்னும்
வயிரவர்க ளிருநால் வோரு

மண்டமுக டுடையநகைத் தானைகளைத்
தொலைத்திட்ட வரிகள் போலக்
கண்டகனுஞ் சாரதியுந் தேருமன்றிச்
சேனையெல்லாங் கணத்திற் சாய்ந்தார்

இ-ள். சண்டன், உருத்திரன், சோமன், கபாலி, தனக்குத்தானே ஒத்தசங்காரன், கோதண்டன், வீரன், சித்திராங்கதன், இவ்வெட்டு வயிரவர்களும அண்டகோளமுடைய யானைகளைக் கொல்லுகிற சிங்கங்களைப்போலக் காய்ந்தது, நிரும்பாசுரனும், அவன் சாரதியும தேருந்தவிர மற்றச் சேனைகளையெல்லாம நொடிப்பொழுதில் கொன்றார்கள். எ-று. (கக)

அட்டவயி ரவர்படையா லணங்குகளாற்
றனதுபடை யழிந்தேகக்
வட்டநெடுந் தேரூடுநீங்கித் தாக்கணங்கின்
முகத்திலெண் ணில வாளி கோத்தான்
விட்டகணை களைவிலக்கித் தேருருட்டுஞ்
சாரதியை வீழ்த்தி வாளி
தொட்டகரங் களைப்பிடுங்கி யவனுயிரைக்
குடித்தனளச் சூர மாது.

இ-ள். எட்டுவயிரவர்களுடைய ஆயுதங்களினாலும், இரண்டு பெண்களாலும், தன்னுடைய படைமுழுவதும் இறந்துபோவதைப் பார்த்து நிரும்பாசுரன் வட்டமாகிய நெடியதேரை விட்டுக்கொண்டு தாக்கணங்கென்பவளுடைய முகத்தில் கணக்கில்லாதபாணங்களை விட்டான்; அப்பாணங்களைவிலக்கித் தேர்நடத்துகிறசாரதியைக்கொன்று அம்புதொடுத்த கைகளையறுத்து அவனுடைய தலையையும் அறுத்துக்கொன்றாள் அந்தத்தாக்கணங்கு. எ-று. (கஉ)

ஓடினசெங் குருதிநதி யுடலிழந்து
விழுமவுண ருயிர்கள் போல
வாடினவெங் குறைத்தலைக ளனுதினமு
மருந்துகின்ற வலகை போலச்
சூடினர்கள் வைரவருந் தாக்கணங்கு
நோக்கணங்குந் தும்பை வாகை
வீடினர்க ளவுணரென மகிடமுகற்
குரைத்தனர்போய் விரைந்து தூதர்.

இ-ள். வயிரவர்களாலும் இந்த இரண்டுபெண்களாலும் தேக மறுபட்டுச் சீக்கிரத்தில்போகு மசுரருயிர்போல் இரத்தநதி ஓடியது; நித்தியம் மாமிசத்தைத் தின்று கூத்தாடுகிற பேய்போல் கவந்தங்கள் கூத்தாடின; வயிரவர் தாக்கணங்கும் நோக்கணங்கும் தும்பை வாகைமாலை சூட்டிக்கொண்டார்கள்; அசுரர்களிறந்து போனார்களென்று மகிடாசுரனுக்குத் தூதர்கள் சீக்கிரத்திற்போய்ச் சொன்னார்கள். எ-று. (கூ)

கேட்டளவின் மகிடமுகன் கயிடவன்றன்
முகநோக்கிக் கிளத்து வானோர்
காட்டிலுறை சிறுபேயுங் கணங்களுநம்
பெரும்படையைக் கடிந்த வென்று
ஞட்டநுத லயனரியு மெனக்கினிமேற்
றிறை கொடுக்க நாணுவாரென்
றீட்டிநகை புரிந்தெழுந்தா னேறினனு
யிரங்கரிகூழ் பிரத மீதில்.

இ-ள் மகிடாசுரன் இவ்வார்த்தையைக் கேட்ட அளவில் தன்னருகிலிருக்குங் கயிடவன் முகத்தைப்பார்த்துச் சொல்லுவான்

ஒருகாட்டிற் சஞ்சரிக்கிற சிறியபேய்களும் கணங்களும் நம்முடைய பெரியசேனைகளைக் கொன்றனவென்றால், சிவன், பிரமன், விஷ்ணு முதலானவர்கள் சொன்னபடி கேட்பார்களோவென்று அதிக மாகிய நகைக்கொண் டெழுந்திருந்து ஆயிரம் யானைகள் கட்டியதே ரிலேறிக்கொண்டான். எ-று. (௧௪)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

பதினொரு கோடி யானைப்
  பலத்தராங் காந்த னீலன்
முதுகரன் குருதி யண்ட
  னீசகன் சண்டன் முண்டன்
மதுகயிட வன்றீக் கண்ணன்
  புகைக்கணன் மாலி யென்னுந்
துதிகொளா றிரண்டு பேருந
  தேர்களைத் தூண்டிச் சென்றார்.

இ-ள். மகிடாசுரன் தேரிலேறினவுடனே, பதினொருகோடி யானைப் பலத்தை யுடையவராகிய காந்தன், நீலன், முதுகரன், குருதி. அண்டன், நீசகன், சண்டன், முண்டன், மதுகயிடவன் தீக் கண்ணன், புகைக்கண்ணன், மாலி யென்றுந் துதிக்கப்பட்டபன்னி ருவரும் தங்கள் தங்கள் இரதங்களை நடத்திக்கொண்டு போனார் கள். எ-று. (௧௫)

கரிமுகத்தவர்நிவாத கவசர்கள்காலகேயர்
பரிமுகத்தவுணர்மேதிப் பணைமுகத்தவர்கள்பற்றி
யெரிமுகத்தவுணர்சீறி யெழும்புலிமுகத்துக்கள்வ
ரரிமுகத்தவுணர்வெள்ள மாயிரஞ்சென்றவன்றே.

இ-ள். யானைமுகத்தை யுடையவர்கள், நிவாதகவசர்கள், காலகேயர்கள், குதிரை முகத்தை யுடையவர்கள், எருமை முகத்தையு

டையவர்கள், நெருப்பெரிந்து கொண்டிருக்கிற முகத்தையுடைய வர்கள், புலிமுகத்தையுடையவர்கள், சிங்கமுகத்தை யுடையவர்க ளாகிய அசுரர்கூடிய ஆயிரம்வெள்ளம் நடந்தன. எ-று. (௧௬)

பாய்பரியதனிற்பாதி பரிகளிற்கரிகள்பாதி
காய்கரியதனிற்பாதி கடும்பரிக்கொடுந்தேர்செல்லப்
பேய்கருங்கொடிகளாடப் பிணங்கிவெண்கொடிகளாட
வேய்களப்பறைகளார்ப்பக் குறுகினன்விந்தைகானில்.

இ-ள். இப்படி ஆயிரம் வெள்ளங் காலாட்கள் புறப்பட்டவுட னே, ஐந்நூறுவெள்ளங் குதிரையும், இருநூற்றைம்பது வெள்ளம் யானையும. நூற்றிருபத்தைந்து வெள்ளந்தேரும் நடக்கப்பேய்களும் காக்கைக் கூட்டமும விருந்தகப்படுமென்று களித்துக் கூத்தாடவெ ள்ளைக் கொடிகளாடப் புள்ளாங்குழல் பேரிகை இவை முதலானவா த்தியமுழுங்க மகிடாசுரன் அம்மை இருக்கிற காட்டில் வந்துசோ்ந தான். எ-று. (௧௭)

அடலவன் வரக்கண் டஞ்சி
  யடைந்துமைக் கபய மென்று
படருறு முனிவர் கூற
  வுமையவள் பயங்க டாத்து
விடலுடை னருகு நின்ற
  விந்தையை விரும்பி நோக்கிக்
கடகங்கொண் டடுவா யென்றாள்
  விடைகொடு பெயர்ந்தாள் கன்னி.

இ-ள். வல்லமைபொருந்திய மகிடாசுரன் வருவதைப் பார்த்து ப்பயப்பட்டு ஓடிவந்து பார்வதிக்கு அபயமென்று முனிவாகள் மு றையிட்டுச்சொல்ல, அம்மை அவர்களுடைய பயங்களைத் தீர்த்துத்



உருஷிகளால் சாபம்நேரிட்ட வாமுனி மகிடாசுரனாய்ப் பிறந்து துஷ்டகிருத்தியஞ் செய்கையில், அருணையம்பதியின் கீழ்பாரிசத்தில் பிராணசாலையில் பார்வதி தபசுசெய்யுங்கால் துர்க்கையால மகிடாசுரன வதையுண்டனன்—12.

தன்சமீபத்தில் நின்றபெருமைபொருந்திய துர்க்கையைப்பார்த்து உன்னுடைய சத்தியினாலே அவ்வசுரனைக் கொன்றுவிடென்று சொல்ல உத்தரவு பெற்றுப் புறப்பட்டாள் துர்க்கை. எ-று. (௧௮)

ஆளிமேற் கன்னி செல்ல
　வருணநா யகிமுன் செல்லக்
காளிதுந் துபிபின் செல்லச்
　சுந்தரி கணங்கள் செல்ல
ஞாளிமேல் வடுகர் செல்ல
　நான்முகி முதலா மாதர்
தூளிமேற் செல்லத் தங்கள்
　விடையின்மேற் றாசிச் சென்றார்.

இ-ள். துர்க்கை சிங்கவாகனத்தி லேறிக்கொண்டுபோக, அருணநாயகி யென்பவள் முன்னேபோகவும், காளி. துந்துபி என்கிற இருவரும் பின்னேபோகவும், பார்வதியின் கணங்களும் சுவர்னவாகனத்தில் வயிரவர்போகவும், அபிராமி முதலாகிய மாதரெழுவரும் தங்கள் தங்கள் வாகனங்களி லேறிக்கொண்டு தூசிப்படையாகத் துகளெழும்பப் போனார்கள். எ-று. (௧௯)

சென்றதோ மரத்திற் குன்றிற்
　சிலைகளிற் படையிற் கையிற்
கன்றிய மகிடன் சேனைப்
　பாதியைக் கணத்திற் சாய்த்தார்
வன்றிறன் மகிடன் சேனைத்
　தலைவரும் மகிடன் றானுங்
குன்றென வெதிர்ந்து கன்னி
　படையெலாந் துரத்திச் சென்றார்.

இ-ள். இப்படித் துர்க்கைசேனைகள் போனவுடனே உலக்கை யினாலும், மலைகளாலும், வில்முதலாகிய ஆயுதங்களாலும், கைகளி னாலும் கோபத்துடனே போர்செய்கிற மகிடாசுரனுடைய பாதிச்சே னையை ஒருநொடிப்பொழுதிலே கொன்றுவிட்டார்கள்; மகிடாசுர னும்அவனுடைய சேனைத்தலைவர்களும் மலைபோல் எதிர்த்துத்துர்க் கையின் சேனைகளையெல்லாந் துரத்திச சென்றார்கள். எ-று. (௨௦)

துந்துமிமுதலாநால்வ ரிடைந்தனர்சூலியால
கந்தரிவராகியாறு முகத்தவடிகிரிக்கையா
ளிந்திரைமறையாளென்னு மெழுவருமறைந்தார்ஞானி
யுந்தினரிடைந்தார்கன்னி மனந்தளர்ந்துமையேயென்றாள்

இ-ள். அசுரன்து படைகள் எதிர்த்து யுத்தஞ்செய்த அளவில் துந்துமி, காளி, மதங்கி, சண்டி என்கிற நான்கு சத்திகளுந் தோற் றார்கள்; சூலி நீலகண்டி, வராகி, கௌமாரி, நாராயணி, இந்திரை பிராமியென்கிற எழுமாதருஞ் யுத்தஞ்செய்ய மாட்டாமற் காட்டி லொளித்தார்கள்; சுவர்ன வாகனத்தையுடைய வயிரவர்களும் தோ ற்றார்கள்; துர்க்கை மனந்தளர்ந்து உமாதேவியே என்று தியானித் துநின்றார்கள். எ-று. (௨௧)

உறுதுணை யுமையே யென்னும்
பொழுதில்யோர் கிளிகள் வாணி
லறுபது நாலு கோடி
யதிர்த்தெழுந் தழலின் மாரி
யிறுதியா யுருளச் சேனை
யிடிமழை சொரிகை யாலே
குறுகிய மகிடன் சேனைத்
தலைவருங் கொளுத்துச் சென்றார்.

இ-ள். துர்க்கையானவள் அம்மையே! துணையென்றபோது அறுபத்து நான்குகோடி யோகினிகள் ஆகாசத்தி லார்ப்பரித் தெழுந்து நெருப்புமழையையும், இடிமழையையும், சொரிந்தபடியினால் மகிடாசுரனுடைய சேனைகளெரிந்துபோயின; அப்பொழுது சேனைத்தலைவர் கோபித்துச் சண்டைசெய்தார்கள். எ-று. (௨௨)

## கலிவிருத்தம்.

அருசி கன்றனைச் செற்றன ளாரணி
மருவு காந்தனை மாய்த்தன ளாரணி
கரனை வென்றனள் வேலுடைக் காரணி
நரக னுருயி ருண்டன ளாரணி.

இ-ள். அப்படி மகிடாசுரனுடைய சேனைத்தலைவர்கள் எதிர்த்தவுடனே, அபிராமி யென்பவள் அருசிகனென்பவனைக் கொன்றாள் வாரணியென்பவள் காந்தனென்பவனைக்கொன்றாள்; சண்முகியென்பவள் கரனென்னும் அசுரனைக்கொன்றாள். நரகன் என்னும அசுரனை நாரணியென்பாள் கொன்றாள். எ-று. (௨௩)

சூல பாணி தொலைத்தன ளிண்டனைக்
கோல மாமுகி சண்டனைக் கொன்றன
ளால லுணி மதுவை யரிந்தன
ணீல னுருயி ரிந்திரை நீக்கினாள்.

இ-ள். காளியென்பவள் இண்டனென்பவனையும், வராகிசண்டனெனபவனையும், நீலகண்டிமதுவென்னுமசுரனையும் இந்திராணி நீலனென்பவனையுங் கொன்றார்கள். எ-று. (௨௪)

துந்து மிக்கொடி சோணித லூனனைக்
கந்து மிக்கும் படிக்கதை காட்டின
ணந்து மிக்க நிகர்த்தரு ளைசீல
வந்து　　　ஆட்டினாள்.

இ-ள். துர்க்கையாகிய தேவிசேவித்த ... இ-ள். துந்துமிக் கொடியையுடையவள் சோணிதவூணனென்
பவனோத தலையறும்படி தண்டாயுதத்தா லடித்தாள்; சகத்தைக்
கை 'லே தரித்த அருணாசலை யென்றவள் அக்கினிக் கணணனைக்
கொன்றாள். எ-று. (உ௫)

கபிட வன்புகைக் கண்ண னிருவருஞ்
செயிரின் மாளுறச் சிந்தினள் சுந்தரி
நெயிடு மிக்க நிணமிடு வேலினண்
மயிட வன்முகன் கண்டெதிர் வந்தனன்

இ-ள். சுந்தரியென்கிற சத்தி கபிடவனையும், புகைக்கண்ணனை
யும் யுத்தத்திற்கொன்றாள; நெய்யைப்பொழிகின்ற நிணம்பொரு
ந்திய வேலாயுதத்தையேந்திய துர்க்கை மகிடாசுரனைக்கண்டு எதி
ர்த்துவந்தாள். எ-று. (உ௬)

வெங்க டாமுகன் மேவலு மாதர்க
டங்க ளாயுதங் கொண்டு தடுத்தனர்
சிங்க வூர்தி யவனெதிர் சென்றுகைச்
சங்கை யூதினண் மேரு சலிக்கவே.

இ-ள். வெப்பம்பொருந்திய எருமைக்கடா முகத்தையுடைய
அசுரன யுத்தத்துக்கு நேரிட்ட அளவில் சப்தமாதர்களும் தங்களா
யுதங்களினால் அவன்விட்ட ஆயுதங்களை விலக்கினார்கள்; அவ்வே
ளையில் சிங்கவாகனத்தி லேறிவந்த துர்க்கை யவனுக் கெதிரேபோ
ய்த் தன்கையிலிருக்கிற சங்கத்தை மகாமேரு அசையும்படி வாயில்
வைத்து ஊதினாள். எ-று. (உ௭)

செருவி லங்கவள் சங்கொலி செய்திட
வொருவ ரின்றி யவுண ருறங்கினார்
பொருவ ரங்களிற் பெற்ற சரங்களை
யிருவருஞ் சொரிந் தார்மழை யென்னவே.

இ-ள். வல்லமைபொருந்திய சிங்கவாகனத்தையுடைய தூர்க்கை சங்கநாதசெய்ய அசுரர்களொருவரும் இல்லாமல் மயக்கத்தையடைந்தார்கள்; அருமையாகிய வரத்தினால் பெற்றுக்கொண்ட பாணங்களை இருவரும் மழைபோலச் சொரிந்தார்கள். எ-று. (உஅ)

எந்த வெந்தக் கணையிவ ளேவினு
மந்த வந்தக் கணையா லறுத்தனன்
விந்தை மீண்டிரு வெம்பிறை வாய்க்கணை
சிந்தின ளவன் சென்னி யழுந்தவே.

இ-ள். எந்தெந்தப் பாணங்களைத் தூர்க்கைவிட்டாலும் அவைகளை அந்தப்பாணங்களினாலே மகிடாசுரன் அறுத்துத தள்ளினன்; அதன்பிறகு இரண்டு அர்த்தசந்திர பாணங்களை அவனுடைய சிரத்தில் அழுந்துமபடியாக விட்டாள் எ-று. (உகூ)

வெமபு செம்புனல் வெள்ள முருக்கிய
செம்பு போலச சிதற [illegible]ங்கணை
யம்பு போல விருக்கினு மாஙகவன்
கொம்பு போல விளங்கின கோடியே.

இ-ள். இரத்தவெள்ளம் உருக்கினசெம்புபோல் சிதறிவிழ விட்ட அர்த்தசந்திர பாணங்கள் அம்பாகவிருந்தாலும் அசுரன்தலையில் முளைத்திருந்த கொம்பிரண்டுபோல் தலையில்தைதது அழுந்தி விளைந்து தோன்றின எ-று. (௩0)

வெற்றிகொண்டவள் வில்லைமுறித்தன
னுற்றவமபிற் சிலைநுதலூன்றினான்
கொற்றவம்பின் குலங்கள்விடுத்தவ
னெற்றியிற்கண் ணமுலினிமிர்ந்ததே.

இ-ள். ஜெயங்கொண்டவளாகிய தூர்க்கையின் கையிலிருந்த வில்லையிரண்டாக்முறித்தான்; அந்தவில்லினால் அசுரனுடைய நெ

ற்றியில் அடித்தான்; மிகப்பலம்பொருந்திய அம்புகளை விட்டவனு கிய அந்த மகிடாசுரன் நெற்றியில் சுவாமியினுடைய கண் நெருப்புப்போலச் சுறுக்கென்று தாக்கியது. எ-று. (௩௧)

சாபவெஞ்சிலை போகத்தரிப்பளோ
கோபம்விஞ்சிக் கொதித்தெழுகூற்றத்திற்
றீபமென்னத் திகிரியொன்றேவியே
பாபகாரி தலைவிழப்பண்ணினள்.

இ-ள். தூர்க்கைவில்லொடிந்ததும் பொறுக்காமல் அதிக கோபங்கொண்டு கொதித்தெழும்பும் எமன்போல் பிரகாசிக்கின்ற ஒரு சக்கிராயுதம்விட்டுப் பாவியாகிய மகிடாசுரன் தலையறும்படி செய்தாள். எ-று. (௩௨)

கன்னியாழி யெறியக்கடாமுகன்
சின்னபின்னங்க ளாயுஞ்சிதைந்திலன்
முன்னைமாதவத் துண்மையின்மும்மதந்
துன்னுமால்கரி யாயெதிர்தோன்றினன்.

இ-ள். தூர்க்கை சக்கிராயுதத்தை விட்டெறிய, மகிடாசுரன் தேகஞ் சின்னபின்னமாயும் சாகாதவனுகிப் பூருவகாலத்திற்செய்த தபோபலத்தினுல் மும்மதங்களைப்பொழிகிற பெரிய யானையுருவங் கொண்டு எதிராக வந்தெதிர்த்தான். எ-று. (௩௩)

ஆளியேறுசென் றங்கவனுச்சியின்
மூளைவாரி நுகர்ந்ததுமொய்ம்பினன்
மீளவுங்கதை கொண்டெதிர்வீசினன்
கூளி நாயகி கூரவே லேவினள்.

இ-ள். அப்படி யானையுருவங்கொண்டெதிர்த்த அளவில் தூர்க்கையேறுகின்ற ஆளியோல் அந்தயானை யுச்சியிலிருக்கின்ற மூளை

யைக் கையிலேயெடுத்து நோண்டியெடுத்துத் நின்றது; அதனாலே யுஞ் சாகாமற் கையிலுள்ள திரும்பியுந் தண்டாயுதங்கொண் டெறிந் தான், பேய்களுக் கதிகாரியாயிருக்கிற துர்க்கை கூர்மைபொருந் திய வேலாயுதத்தை விட்டாள். எ-று. (௩௪)

விடந்த தும்மிய வேல்பட வெஞ்சமர்க்
கிடைந்த தும்பி முகனு மிறந்தன
னடைந்த தும்பிக ளாயிர மாயிரங்
குடைந்த தும்பி மரமெனக் குன்றியே.

இ-ள். விஷத்தைக் கக்கிக்கொண்டிருக்கிற வேலாயுதம்பாய்ந் தவுடனே யுத்தத்தில்நின்ற யானைமுகன் அதைச்சகிக்கமாட்டாமல் இறந்துவிட்டான்; அநேகமாயிரம் வண்டுகள் குடைய உள்ளேவொ ன்றுமில்லாமற் றொளையோகூடிய அத்திமரம்போல் குன்றினான். எ-று. (௩௫)

வீழ்ந்த பின்பரி வேடம தாயெதிர்ப்
போந்து வெங்கதை கொண்டு புடைத்தனள்
சேர்ந்த வன்கதை யும்மவன் சென்னியு
நாந்த கங்கொண் டறுத்தன ளாரணி.

இ-ள். அப்படிவிழுந்து இறந்துபோனவுடனே, குதிரைமுக முள்ள அசுரனாகி யெதிரேவந்து தண்டாயுதத்தினால் அடித்தான், அடித்த தண்டாயுதத்தையும் கத்தியினால் அறுத்துத் தள்ளினாள் துர்க்கையும். எ-று. (௩௬)

அங்க தன்பி னழலுரு வாயினன்
கங்கை யாயினன் காரிரு ளாயினன்
பங்க யாசன னாயினன் பங்கய
மங்கை நாயக னாயினன் மாயையால்.

இ-ள். அதன்பின்பு அசுரன் நெருப்புருவங்கொண்டு வந்தான் அதன்பின்பு சலப்பிரளய ரூபங்கொண்டும் அந்தகாரமாகியும், தாம

ரைப் புட்பத்திலிருக்கின்ற பிரமனுகியும், இலக்குமி நாயகராகிய விட்டுணுமூர்த்தியாகியும், எதிர்த்தான் மாயையினாலே. எ-று. ()

ஈது கண்டவ ளென்செய்வன் மாயையால்
வாதை செய்தன னென்றுத ளர்ந்துமை
பாத நெஞ்சினிற் பற்றினள் பற்றிய
போதி லோர்மொழி விண்ணிற் புகன்றதே.

இ-ள். அப்படி அசுரன் பலபலவடிவங் கொண்டவுடனே பார்த்து மாயையினாலே துன்பப்படுத்துகிறான், என்ன உபாயஞ் செய்தாலும் சாகிறதில்லை, இதற்கென்ன செயவேனென்று துர்க்கை பார்வதிதேவியினுடைய இரணபொதங்களையும் மனத்திலே தியானித்தாள், அப்படி தியானித்தவுடனே ஆகாயத்திலின்றும் அசரீரி ஒரு வாக்கியஞ்சொல்லிற்று. எ-று. (௩அ)

மாய வேடங்க ளன்றி மகிடமே
யாய போதி லவன்றலை தள்ளியே
தூய தாளின் மிதிக்கத் தொலைந்திடுந்
தீய மாயை யெனச் சொலத் தேறினாள்.

இ-ள். அநேகவிதமான மாயவேஷங்களல்லாமல் சுபாவமான எருமைமுகரூபங் கொண்டபோது அவன் தலையையறுத்துக் கீழே தள்ளி உனது பரிசுத்தமாகிய காலினாலே மிதித்தால் தீமைபொருந்திய மாயை தொலைந்துபோமென்று சொல்லத் துர்க்கை தேறினாள். எ-று. (௩௧)

மட்டின் மாயை வடிவின் மலைந்தபின்
னெட்டி லைத்தலைச் சூலத்தி னீக்கினாள்
துட்டன் மேதிய தாய்ப்படை தொட்டனன்
வெட்டி வீழ்த்தி யடியின் மிதித்தனள்.

இ-ள். அளவில்லாத மாயரூபங்கொண்டுவர நெடுமையானவருடைய சூலத்திற் குத்திக்கொன்றான், பின்பு அத்துஷ்டன் பழைய

எருமைக்கடா முகத்தையுடையவனுகி ஆயுதங்களைப் பிரயோகஞ் செய்தளவில், அவைகளைவிலக்கி வாளாயுதத்தால் தலையைவெட்டித்தள்ளிக் காலினல் மிதித்துக்கொன்ருள் துர்க்கை. எ-று. (௬0)

ஒப்பிலாப்பத மூன்றிமிதித்திடில்
தப்பின்மாயை தவாபபதுபாரமோ
வடபதத்தை நினைக்கினுமாணவரு
செபபுகாமிய மாயையுநீங்குமே.

இ-ள். தூர்க்கை பாதத்தை நினைத்தாலும், அதை நினைத்தவருடைய ஆணவம், மாயை, காமியம் எனகிற மும்மலங்களையும நீங்கிவிடும். அப்படிப்பட்ட ஒப்பிலாத பதம் பரிசாகும்படி ஊன்றி மிதிசதால் பொயயாகிய மாயை மாத்திரம் தவிரப்பது பெரிதோ! எ-று. (௬க)

போதவானவர் பூமழைபெய்தனர்
மேதிமாமுகன் மெய்க்கதியுற்றனன்
தீதிலாவவன செங்களந்தனனிலோர்
சோதிலிங்க மிருந்ததுதோன்றவே.

இ-ள். தேவர்கள்மிகவும் புட்பவருஷம் பொழிந்தார்கள். மகிடாசுரனும அம்மைகையினுலிறந்ததனுலே மெய்மையான மோட்சத்தைச்சேர்ந்தான்; யாதொரு குற்றமுமில்லாத அவன் சிவப்பாகிய கண்டத்தில் ஒருபடிகலிங்கமிருந்தது. எ-று. (௬உ)

கண்டமட்டிலக் கைக்கொளக்கார்நவ
கண்டமட்டிற் புரந்தகடாமுகன்
கண்டமட்டி லிருந்தகடவுளைக்
கண்டமட்டி லெடுத்தனள்கன்னியே.

இ-ள். நவகண்டமட்டும் ஆண்ட மகிடாசுரனுடைய கழுத்தை இலக்காகவைத்துத் துர்க்கையறுக்க, அக்கழுத்திலிருந்த படிகலிங்கத்தைக் கண்டபோதே கையினுலெடுத்தாள். எ-று (௬௩)

கொண்டுசென் றுமை கோகநகப்பதங்
கண்டுபோற் றிக் கடவுளையீய்ந்தனள்
வண்டுவார்குழல் வாங்கினள்செங்கையை
யண்டர்நாயகன் விட்டிலனாசையால்.

இ-ள். அப்படிப்பட்ட படிகலிங்கத்தை எடுத்துக்கொண்டுபோய் உமாதேவி பாதங்களைத்தொழுது நடக்தகாரியமெல்லாஞ் சொல்லிச் சுவாமியைக்கொடுத்தாள்; வண்டுகள் சூழ்ந்திருக்கின்ற கூந்தலையுடைய பார்வதி கையினால்வாங்கினாள்; தேவர்கட்கெல்லாம் நாதராகவிருக்கின்ற சுவாமியும் அம்மை கைமேல் வைத்திருக்கிற ஆசையினால் கையைவிடாமற் கெட்டியாகவிருந்தார். எ-று. (சச)

தாயுமங்கது கண்டுமகிழ்ந்திறை
யேயவெண்கரம் பற்றியதேதெனை
வாயையங்கை புதைத்துமகபதிக்
காயிரங்கண் ணளித்தவன்கூறுவான்

இ-ள். பார்வதி அந்த ஆச்சரியத்தைப்பார்த்து மகிழ்ச்சியடைந்து; என்கையைவிடாமலிருந்தது எதனால் என்றுகேட்க. தேவேந்திரனுக்கு ஆயிரங் கண்கொடுத்த கௌதமர் வாயைக் கையினால் பொத்திக்கொண்டு அம்மைக்குச் சொல்லத் தொடங்கினார். எ-று.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

முன்னமகத் தியன்முதலா முனிவர்களெம்
பதின்மர்வர முனிபாற் செல்ல
வன்னவன்றன் றவமதிப்பா லவமதிப்ட
யிருந்திடவு மவனை நோக்கிப்
பொன்னனையை தவமுனிவர் வெகுண்டு ரைப்பா
ரெமை யிகழ்ந்த புன்மையாலே
புன்னரிய கருங்கடவா யினிப்பிறக்கக்
கடவாயென் றுனையச் சொன்னார்.

இ-ள். முற்காலத்தில் அகத்தியர்முதலான ஐம்பது ரிஷிகள் கூடி, வரமுனியென்பவருடைய ஆசிரமத்திற்குப் போனார்கள். அந்தவரமுனி தம்முடைய தபோபலத்தினால் மரியாதையாக உபசாரம் செய்யாமலிருந்தார்; அப்போது அவரைப்பார்த்து பொன்போலும் அரியதவத்தையுடைய எல்லா முனிவர்களுங் கோபித்து எங்களை அவமரியாதை செய்தபடியினால் யாவராலும் குறைவு சொல்லப்பட்ட கரிய எருமைக்கடாவாகப் பிறப்பாயென்று அவர்கள் மனம்வருந்திச் சபித்தார்கள். எ-று. (சக)

அருந்தவரைம் பதின்மருமன் றுரைத்தமொழிக்
கொடுமை யைக்கண் டச்சமாகி
யிருந்தவனு மெழுந்துபணிந் தெனதுபிழை
பொருத்தருள்வீ ரென்று னந்தப்
பெருந்தவரன் புடனுடைப்பார் மகிடமுகத்
தவுணனெனப் பிறந்து பின்னர்த்
திருந்தவரை னிடம்வேண்டித் தவம்புரியு
முமைகணத்திற் றீர்ப்பா ளென்றார்.

இ-ள். அரியதவத்தினையுடைய ஐம்பது முனிவர்களும் அன்று சொல்லிய சாபத்தின் குரூரத்தைக்கேட்டு பயப்பட்டு, பெருமை பொருந்திய தவஞ்செய்தவரமுனியும் எழுந்து வந்தனஞ்செய்து முனிவர்களே! தெரியாமல்நான் செய்தபிழையைப் பொறுத்துக்கொள்ளுங்களென்றார், அதற்குமுனிவர்கள் நீர் எருமைமுகம் பொருந்திய அசுரனாகி அரசாளுங்காலத்தில் சுவாமி யிடப்பாகத்தைப் பெறும்படி தவஞ்செய்துகொண்டிருக்கிற அம்மை உம்முடைய சாபத்தை கொடிப்பொழுதில் தீர்ப்பாளென்று சொன்னார்கள், எ-று. ()

ஆங்கவர்சொற் படியிலவ னசுரர்பெரும்
குலத்தி னுதித் தரசனாகி
யோங்கியபேர் மகிடனெனக் கொடுங்கோன்மை
புரிகுதலு மொருநாள் வேட்டைத்

தீங்குசெய வனத்திலடைந் தழற்பசியா
லிளைத்தோடித் திரிந்தா னங்கே
நீங்கரிய வருச்சனைசெய் மன்னதனென்
றொருமுனிவ னேர்ப்பட் டானே.

இ-ள். அந்த முனிவர்கள் சொன்னபிரகாரம் வரமுனி அசுர குலத்திற்பிறந்து அரசனாகி மகிடாசுரனென்கிற பெயரையடைந்து கொடுங்கோலரசு செய்துகொண்டு வருகையில், ஒருநாள் வேட்டையாடும்படி வனத்தில்வந்து மிகுந்த பசியினால் இரையொன்றும் அகப்படாமல் ஓடித் திரிந்துகொண்டிருந்தான்; அவ்விடத்தில் நீங்குதற்கரிய தவஞ்செய்கின்ற மன்னதரிஷி என்பவன் எதிர்ப்பட்டான். எ-று. (௪௮)

மன்னதனு மவனையிவன் காத்திலிங்கத்
துடன்விழுங்கி மகிழ்ந்து போனான்
பின்னதனு லவன்மிடற்றிற் சிவனுருவ
மிருந்ததந்தப் பெருமை யாலே
யுன்னதமா யினன்சிவனு முருத்தரித்த
வுடலுமின்ற யுருவ மன்றே
வன்னதனால் வினையடைந்த ததுதவிரு
* நவதீர்த்த மாடி லென்றான்.

---

* நவ தீர்த்தங்களாவன—கஙகை, யமுனை, சரசுவதி, நருமதை, கோதாவிரி, காவிரி, சிந்து, சீதேவி, சோணநதி என்பனவாம்.

"கங்கையமுனை, சரசுவதி, கமழ்கோதாவிரி, காவேரி, கங்லைக, சிந்து, நன்மதைசீதேவி சோணநதியெனவே, யிங்கேயெனுமொன்பதுநதியு மிந்தத்தலத்தினிதுதிக்கு மஙகைவிந்தை கைவாளால் வெட்டவாய்க்குஞ் சிலைமடுவில்" என்பது அருணகிரிபுராணம்.

இ-ள். எதிர்ப்பட்ட அம்மன்னதனென்கிற ரிஷியைக் கையி லிருக்கும் இலிங்கத்தோடே இம்மகிடாசுரன் எடுத்து விழுங்கிவிட் டுப்போனான்; பின்பு அவன் கண்டத்திற சிக்கிக்கொண்டு படிகலிங் கமிருந்ததனால் மிகுந்தபெருமையை யடைந்தான்; அந்த இலிங்க மிருந்த கண்டத்தையுடையவனும் சிவசொரூபமன்றோ! அவனைக் கொன்றபடியினால் பாவம்சம்பவித்தது, நீ நவதீர்த்தங்களாடினால், அப்பாவம் போமென்றார் கௌதமர். எ-று. (௯௯)

அன்புமுனி யுரைத்தளவி லொருமொழியந்
　தரத்திலெழுந் தரிய தீர்த்த
மொன்பதுமிவ் விடததிலவரு மவைவருமா
　றியற்றுமென வுமையும விந்தை
தன்பதும முகநோக்கி யுனதுகைவா
　ளெறிந்துகங்கை தருவா யென்றாள்
வன்பணில மெடுததாளுந தொழுதுங்கைவா
　ணிலத்தெறிநது வாஙதும் போதில்.

இ-ள். மிகவும் பக்தியையுடைய கௌதமர் இபபடிச சொன ன அளவில், பாவந்தீர ஆடுதற்கு ஒன்பது தீர்த்தமும், இவ்விடத தில் வரும்படிச செய்யென்று ஆகாயத்திலிருந்து ஒருவார்த்தை பிற ந்தது: அதைக்கேட்டுப் பார்வதியும், துர்க்கையின் மலர்போனற முகத்தைப்பார்த்து, உன்னுடையகையிலிருககினற வாளினால் பூமி யைப் பிளந்து கங்கையைவரும்படி செய்யென்று சொல்ல, ஐயசங கைக் கையிறறரிதத துர்க்கையும வணஙகி வாளாயுததால் பூமி யில வீசியெடுததபோது. எ-று. (௱)

தீங்குசெய வனத்திலடைந் தழற்பசியா
 லிளைத்தோடித் திரிந்தா னங்கே
நீங்கரிய வருச்சனைசெய் மன்னதனென்
 றொருமுனிவ னேர்ப்பட் டானே.

இ-ள். அந்த முனிவர்கள் சொன்னபிரகாரம் வரமுனி அசுர குலத்திற்பிறந்து அரசனாகி மகிடாசுரனென்கிற பெயரையடைந்து கொடுங்கோலரசு செய்துகொண்டு வருகையில், ஒருநாள் வேட்டையாடும்படி வனத்தில்வந்து மிகுந்த பசியினால் இரையொன்றும் அகப்படாமல் ஓடித் திரிந்துகொண்டிருந்தான்; அவ்விடத்தில் நீங்குதற்கரிய தவஞ்செய்கின்ற மன்னதரிஷி என்பவன் எதிர்ப்பட்டான். எ-று. (௪அ)

மன்னதனை மவனையிவன் கரத்திலிங்கத்
 துடன்விழுங்கி மகிழ்ந்து போனான்
பின்னதனா லவன்மிடற்றிற் சிவனுருவ
 மிருந்ததந்தப் பெருமை யாலே
யுன்னதமா யினன்சிவனு முருத்தரித்த
 வுடலுமின்றி யுருவ மன்றே
வன்னதனால் வினையடைந்த ததுதவிரு
 * நவதீர்த்த மாடி லென்றான்.

---

* நவதீர்த்தங்களாவன—கங்கை, யமுனை, சரசுவதி, நருமதை, கோதாவிரி, காவிரி, சிந்து, சீதேவி, சோணநதி என்பனவாம்.

"கங்கையமுனை, சரசுவதி, கமழ்கோதாவிரி, காவேரி, கங்கை, சிந்து, நன்மதைசீதேவி சோணநதியெனவே, யிங்கேயெனுமொன் பதுநதியு மிந்தத்தலத்தினினிதுதிக்கு மங்கைவிந்தை வைவாளால் வெட்டவாய்க்குஞ் சிலைமடுவில்" என்பது அருணகிரிபுராணம்.

இ-ள். எதிர்ப்பட்ட அம்மன்னதனென்கிற நிஷதியைக் கையி லிருக்கும் இலிங்கத்தோடே இம்மகிடாசுரன் எடுத்து விழுங்கிவிட் டுப்போனான்; பின்பு அவன் கண்டத்திற் சிக்கிக்கொண்டு படிகலிங் கமிருந்ததனால் மிகுந்தபெருமையை யடைந்தான்; அந்த இலிங்க மிருந்த கண்டத்தையுடையவனும் சிவசொரூபமன்றோ! அவனைக் கொன்றபடியினால் பாவம்சம்பவித்தது, நீ நவதீர்த்தங்களாடினால், அப்பாவம் போமென்றார் கௌதமர். எ-று. (௪௯)

அன்புமுனி யுரைத்தளவி லொருமொழியந்
தரத்திலெழுந் தரிய தீர்த்த
மொன்பதுமிவ் விடத்தில்வரு மவைவருமா
றியற்றுமென வுமையும் விந்தை
தன்பதும முகநோக்கி யுனதுகைவா
ளெறிந்துகங்கை தருவா யென்றாள்
வன்பணில மெடுத்தாளுந் தொழுதுகைவா
ணிலத்தெறிந்து வாங்கும் போதில்.

இ-ள். மிகவும் பக்தியையுடைய கௌதமர் இப்படிச் சொன் ன அளவில், பாவந்தீர ஆடுதற்கு ஒன்பது தீர்த்தமும், இவ்விடத் தில் வரும்படிச் செய்யென்று ஆகாயத்திலிருந்து ஒருவார்த்தை பிற ந்தது; அதைக்கேட்டுப் பார்வதியும், துர்க்கையின் மலர்போன்ற முகத்தைப்பார்த்து, உன்னுடையகையிலிருக்கின்ற வாளினால் பூமி யைப் பிளந்து கங்கையைவரும்படி செய்யென்று சொல்ல, ஜயசங் கைக் கையிலேந்திய துர்க்கையும் வணங்கி வாளாயுதத்தால் பூமி யில் வீசியெடுத்தபோது. எ-று. (௫௦)

வந்தியும் பிறவுளநன் னதிகளுமச்
சோகந்தீர் நலல தான
சுவையதிக முதவுபல தடங்களுமங்
கெழுந்தவந்தச் சுனையி னூடே
பவமகல வொருமாத முழுகியிருந்
தாள்கரத்தைப் பற்றி நீங்காச்
சிவவடிவு மகன்றதுதன னுளமகிழ்ந்து
கரையிலவநதா டேவா போற்ற

இ-ள். ஒன்பது தீர்த்தங்களும், மற்றுமுள்ள நதிகளும் விடா யாறும்படி உதவிசெய்யும் நல்ல ருசியைக கொடுக்கின்ற அநேகத டாகங்களும் உண்டாயின; அந்நதிகளில் ஒருமாதவரைக்கும அம் மை குறறம நீஙகும்படி ஸ்நானஞ் செயதுகொணடிருந்தாள்; லை யைப பறறிக்கொண்டு விடாமலிருந்த இலிஙகமும நீஙகிற்று, அட போது தேவாகள் போற்றும்படி மனம சந்தோஷித்து அம்மை க ரையில் வநது சேர்நதாள். எ-று. (௬௧)

அருவுருவா மொருசிவனை யதன்கரைமேற்
புறத்திருத்தி யருச்சித்தாணம்
பிருவினையுந் தவிர்ப்பானுக் கென்பாவந்
தீர்த்தாமெனன் றியற்பே ரிட்டாள்
திருமருவும் பெருஞ்சுனைக்கு மினியநட்க
தீர்த்தமெனத் திருப்பே ரிட்டாள்
[illegible]ம்னிமை யருணகிரிப் பெருமானைத்
தொழக்கனகக் கோயில் சார்ந்தாள்.

இ-ள். அருவமாயும். உருவமாயும் விளங்கும் ஒப்பற்ற சிவனை அந்தநதிக்கரையில் எழுந்தருளச்செய்து அருச்சனை செய்தாள்; நம்முடைய நல்வினை, தீவினை. இரண்டையும் நீக்குகின்ற சுவாமிக்கு என்பாவநதீர்த்தாரென்றபேரைத் தரித்து அழகியசுனைக்குக் கட்கதீர்த்தமென்று பெயரிட்டாள்; நிறம்பொருந்திய மணியையொத்தவரை அருணாசலத்தில் எழுந்தருளியிருக்கிற பரமசிவனை வணங்குமபடியாகப பொன்மயமாகிய கோவிலுக்குப்போனாள். எ-று. ()

முருகுகும்ல ரயன்றடத்திற் படிந்துவெண்ணீ
றணிந்துசெஙகை முடியிற் கூபபி
யருகுவெருங கோதமனசொற் படிதொழுதுட்
புகுந்துதண்ணா ரமுதைக் கண்ணுற
பருகிநில முறவிழுந்து பணிந்தெழுந்து
பரவசமாயப் பாடி யாடி
யு ருகியுவந் தழுதுயிர்த்து வலம்புரிந்து
தனதுகுறை யுரைததுப் போற்றி.

இ-ள். வாசனையுள்ள தாமரைமலரிலிருக்கிற பிரமதீர்த்தத்தில் முழுகி விபூதிதரிததுச சிவந்தகைகளைச சிரமேல்வைத்துத் தெணடனிட்டுத தன்னருகேவருகிற கௌதமர் சொன்னபடி போய்க் குளிர்பொருந்திய அமிர்தமபோன்ற சுவாமியைக் கண்ணுற்றரிசித்துப் பூமியிறதேகம்பொருந்த நமஸ்காரஞ்செய்து எழுந்திருந்துப் பரவசமாகிப் பாடியாடி உருக்கமடைந்து களிதது ஆனந்தக்கண்ணீர்பெருகிப் பெருமூசசெறிந்து வலமாகவந்து தன்னுடைய குறையைசசொல்லி வணஙகினாள். எ-று. (௫௩)

கார்த்திகைத்திங் களிற்றி நநா ளாகமத்தின்
படிநடத்திக் கடற்கணாணுணாத்
தோததிரமபண் ணுதலுமொரு சுடர்மலைமே
லெழுந்தந்தச் சுடரி னூடே

ஏத்தரிய பலகோடி யிரவியென
வொருசோதி யெழுந்து மின்னே
வாய்த்தமலை வலமாக நடத்தியென
வுரைத்துடனே மறைந்த தன்றே.

இ-ள். கார்த்திகைமாதததில் ஆகமத்தின்படி திருநாள்செய்து நெருப்புக்கண்களையுடைய சிவபிரானைப்பணிந்த அளவில், மலைமேல் ஒருபிரகாசமுண்டாகி. அதிற் சொல்லுதற்கரிய பலகோடி பாலசூரியப்பிரகாசமாய் சுவாமியெழுந்து பெண்ணே! இம்மலையை வலமாக நடந்துவாவென்றுசொல்லி மறைந்துவிட்டார். எ-று. ()

நாரிதனைச் சிலையாக்கு முனிவனுமப்
படிவலமா நடத்தி யென்றான
வாரியென மறைபுகழக் காரிகையு
நடந்தனடன் மலர்க்கை கூப்பிப்
பேரிகையுங் காகளமுஞ் சல்லரியு
மல்லரியும் பெரிய வானிற்
றாரியமுந் துந்துமியு மத்தளமுங்
குடமுழவுந் துவைத்த வன்றே.

இ-ள். * அகலிகையாகிய பெண்ணைக் கல்லாக்கிய கௌதமரிஷியும். அம்மா! அப்படியே வலமாகப்போவென்று சொல்லச சமுத்திரம்போல் வேதகோஷ்டமுழங்கவும் பேரிகை, காகளம், சல்லரி, மல்லரி, முரசு, துந்துமி, மத்தளம், குடமுழா இவை முதலான வாத்தியங்கள் ஆகாயத்தில் முழங்கவும் பார்வதி இரண்டு கைகளையுங் கூப்பிக்கொண்டு நடந்தாள். எ-று. (௫௫)

* அகலிகையைக் கல்லாக்கிய சரித்தைக் கூர்மபுராணம் பாரக்கவபுராணம் என்பவற்றிற் காண்க.

அரம்பையுருப் பசிமுகலா மகபதிநாட்
டரிவையர்க ளாடல் காட்டக்
குரும்பையென நெருங்குமுலை வரையரமங்
கையர்மலரின் குப்பை கொட்டக்
கரும்புகனிந் தனையமொழிப் புனலமங்
கையரிரட் டுங்கவரி யிரட்ட
விரும்புருக நகைபுரியு மரவமினார்
மணிவிளக்க மெடுத்து நீட்ட.

இ-ள். இப்படி பார்வதி வலம்வரும்போது, அரம்பை ஊர்வசி முதலான தெய்வலோகத்துப் பெண்கள் நாட்டியமாடத் தென்னங் குரும்பையொத்த தனத்தையுடைய மலைபரமகளிர் அம்மைநடக்குங் வரும்போது. பாதம் பூமியிற்பட்டு உறுத்தாமலிருக்கப் புட்பங்களைக் குப்பையாகக்கொட்டக் கருப்பஞ்சாறுபோலும் வார்த்தையையுடைய நீரரமங்கையர் சாமரமெடுத்துவீச. இரும்புமுருகும்படிநகைசெய்கின்ற நாகலோகப் பெண்கள் இரத்தின தீபங் கையிலெடுத்துக்கொண்டுவர. எ-று. (௬௧)

[இதுமுதல் இரண்டுபாடல் குளகம்.]

முண்டகமண் டபமயிலும் புலோமசையு
நறுந்தவளை முளரி மானுங்
கண்டகமும் வழிப்பாலு மொழித்துவா
நிலமகடன் கைக ணீட்ட
அண்டர்குல மடந்தையரு முனிவர்குல
வனிதையரு மருவிப் பூந்தேன்
வண்டலிடுஞ் சேறகற்ற மலரின்றுந்
துகள்சொரிந்து வழிக ளாக்க.

இ-ள். தாமரைப்புட்பமாகிய மண்டபத்திலிருக்கிற இலக்குமியும் இந்திராணியும், வெண்டாமரைப்பூவிலிருக்கிற சரஸ்வதியும் போகிறவழியிலிருக்கும் முள்ளுகளையும் கற்களையுந்தள்ளிக்கொண்டுவரப், பூமிதேவிகைகளைநீட்டி சாக்கிரதையாகத்தாங்க தேவஸ்திரீகளும் முனிவர்களுடைய ஸ்திரீகளும் புட்பத்திலிருக்கிறதேனருவியினால்வழி சேறுக்கிக்கிடந்ததை நீக்க புட்பத்துக்குள்ளிருக்கிறபராகப்பொடிகளைக்கொட்டி நல்லவழியாகச்செய்ய. எ-று. (௩௭)

கன்றினதுன் னிருசரணம் பொறுத்தருள்வா
யெனவங்கை கங்கை கூப்ப
மன்றனலத் திசையணிகி யழற்கிரியை
யெதிர்முகமா வணங்கிப் போற்றித்
தென்றிசையு நிருதிபெருந் திசை யினையுங்
கடந்துகுட திசையிற் சென்றாள்
குன்றரிய புகழரனு மழைவிடைமீ
தினிற்காட்சி கொடுத்துப் போனான்.

இ-ள். கங்கையானவள் அம்மா பார்வதி உன் பாதமிரண்டும் பூமியிலேபட்டுக் கன்றிப்போய்விட்டன; பொறுக்கவேண்டுமென்று இரண்டுகைகளையுங்கூப்ப, அழகிய அக்கினிதிசையில்வந்து அக்கினிமலையை எதிர்முகமாகத்தொழுது, தெற்குத்திசையும் நிருதிமூலையுந்தாண்டி மேற்குத்திசையிற்போனாள்; குறைவில்லாதகீர்த்தியையுடைய சுவாமியும் இளமைதங்கிய ரிஷபவாகனத்தில் எழுந்தருளிவந்து தரிசனங்கொடுத்து நடந்தார். எ-று. (௩௮)

நாற்றிசையும் போற்றிசெயும் புகழணியண்
ணுமலையா னடத்தாள்போற்றி
மேற்றிசையுங் காற்றிசையுங் கடந்துவட
திசையணுகி விரும்பி யேத்தி

மேற்றிசையு மிறைதிசையு மகிழ்ந்தாகுண
திசையடைந்தா ளிமய வெற்பிற்
சேற்றிசையு மணவழலை வலம்புரிந்த
செயல்போலச் செறிந்த தன்றே.

இ-ள். நாலுதிக்கும்வணங்குகின்ற கீர்த்தியையுடைய அருணை சலேசுரரது நடனபாதத்தை வணங்கி மேற்குத்திசையும் வாயுதிசையுந்தாண்டி, வடதிசையில் மறுபடியுந்தொழுது எருதிலேறுகின்ற ஈசானனுடையதிசையைக்கடந்து கிழக்குத்திசைக்குவந்தாள் அப்படிவந்தது இமாசலத்தில் சுவாமி கலியாணஞ் செய்தபோது ஓமாக்கினியை வலம்வந்ததுபோலிருந்தது. எ-று. (௬௯)

கலிவிருத்துறை.

* பானுகம்பன்கைச்சங்கொலி நெடியமால்பணிலத்
தானகம்பலைநாரதர்வீணையினரவம்
வானதுந்துபிகம்பலைதிசையெலாமறைத்த
தேனிறைந்திடுமலர்மழையிமையவர்சிதற.

இ-ள். பானுகம்பனென்பவன் தன்னுடைய ஆயிரங்கைகளிலுஞ் சங்கத்தைவைத்து ஊதுகிற ஒலியும், விட்டுணு தமது சங்கத்தை வாயில்வைத்து ஊதுகிறசத்தமும், நாரதர் வீணையை வாசிக்கிறசத்தமும், ஆகாச துந்துபியினுடைய சத்தமும் திசைகளெல்லாஞ் செவிடுபடச்செய்தன; தேனிறைந்த புட்பவருக்ஷங்களைத் தேவர்கள் சொரிய. எ-று. (௭௦)

[இதுமுதல் மூன்றுபாடல்களுங் குளகம்.]

சுற்றுறவார்சடையிளம்பிறைநெடுநிலாக்கமழப்
புற்றராமணியிளவெயில்விரித்திடப்புலியைப்
பெற்றமாதினுக்கொருபுதுமளித்திடப்பிடித்த
வெற்றுநாலெனப்புரிமுநூன்மார்பகத்திலங்க.

* பானுகம்பன் சங்கு சஞ்சலம். திருமால் சங்கு பாஞ்சசன்னியம், நாரதர் வீணை மகதியெனப்படும்.

இ-ள். கற்றையாகிய நீண்டசடையில் தரிக்கப்பட்ட இளமையாகிய பிறையின் செம்மையான சந்திரிகை பிரகாசிக்கவும்; ஆபரணமாகிய புற்றிலிருக்கின்ற சர்ப்பத்தின் தலையிலிருக்கிற மணிகாந்தியை விரிக்கவும், உலக மாதாவாகிய பார்வதிக்குப் பாதிசரீரத்தைக் கொடுப்பதற்கு மத்தியாகப் பிடித்த ஏற்றநூல்போல் புரியாகிய பூணூல் பிரகாசிக்கவும். எ-று. (௩௧)

பிறப்பிலாமூர்த்தன்மறையெலாமளவிடாப்பெரியோ
னிறப்பிலாவிறைவிடையின்மேலினிதெழுந்தருள
வறத்திறையகியடிபணிந்திறைஞ்சினளவளைத்துந்
துறக்குமண்ணலுமவளொடினிவையிவைசொல்லும்.

இ-ள். பிறப்பில்லாதமூர்த்தி அநேகவேதங்களாலும் அறியப்படாதவர் இறப்பில்லாதபரமசிவன், ரிஷபவாகனத்தி லெழுந்தருளத் தரும் வளருகின்ற பார்வதி, அச்சுவாமிபாதத்தைத்தொழுது வணங்கினள்; எல்லாவற்றையும் நீக்கிய கடவுள் அவ்வம்மையோடு சொல்லுவார். எ-று. (௩௨)

பெண்ணுமாணுமாயுலகுயிரிப்பொருளெலாம்பிரித்தோ
மண்ணும்தாகியபீடமு * மிலிங்கமுமானோ
மெண்ணுநீயெனநானெனவிரண்டிலைமரமு
முண்ணிலாவியவயிரமுங்கர்த்துடனுறைவோம்.

இ-ள். உமையே! நீயும், நானும். பெண்ணு மாணுமாகி, உலகத்தில் அநேகம் சீவராசிகளை வேறு வேறுண்டாக்கினோம், சமீபமாய் ஆவிடையாரும் இலிங்கமுமானோம், நீயென்றும் நானென்றும் வேறுபேதமில்லை; மரமும் அதற்குள்ளே யிருக்கிற வயிரமும்போல் ஒன்றாய்ச் சேர்ந்திருப்போம். எ-று. (௩௩)

---

* லிங்-லயம். கம்-தோற்றம். எனவே உலகமெல்லாம் தோன்றியொடுக்குதற்கிடமாயதெதுவோ அதுவே இலிங்கமெனப்படும்.

அங்கம்யாவுநம்பொருட்டுவிட்டிமயவெற்படைந்தா
யிங்குநாமுனக்கொருபுறமளிப்பதேயியற்கை
மங்கையேநமதிடப்புறத்துறையெனமகிழ்வுற்
றங்கையாலணைத்தருளினனிருவியொன்றானார்.

இ-ள். தேகத்தை விட்டு நம்பொருட்டாக இமயபர்வதத்தில் வந்து பிறந்தாய், இவ்விடத்தில் நாம் ஒருபாகங் கொடுப்பது சுபாவமே, பெண்ணே நம்முடைய இடப்பாகத்திற் சேர்ந்திருவென்று சந்தோஷமடைந்து கையினால் அணைத்துக் கொண்டார்; இரண்டு தேகமும் உருகி ஒருதேகமானார்கள், அம்மையும் அப்பனும் எ-று. ()

அடுத்தசெஞ்சடையொருபுறமொருபுறமளகந்
தொடுத்தகொன்றையோர்புறமொருபுறநறுந்தொடையல்
வடித்தசூலமோர்புறமொருபுறமலர்க்குவளை
திடத்திலார்கழலொருபுறமொருபுறஞ்சிலம்பு.

இ-ள். அப்படி யிருவரும் உருகிச சுவாமியினுடைய பாதியும் அம்மனுடையபாதியும், ஒருதேகமானபோது ஒருபக்கத்திற் சிவந்த சடையும், ஒருபக்கம் கூந்தலும், ஒருபக்கம் கொன்றை மாலையும், ஒருபக்கம் புட்பமாலையும், ஒருபக்கம சூலமும், ஒருபக்கம் நீலோற்பலபுட்பமும், ஒருபக்கம் வீரகண்டாமணியும், ஒருபக்கம் சிலம்புந் தோன்றின. எ-று. (௬௫)

பசசைவன்னமற்றொருபுறமொருபுறம்பவளங்
கச்சுலாமுலையொருபுறமொருபுறங்கவின்வா
ரச்சநீக்கியவரதமொன்றபயமொன்றங்கை
யிச்சையாமிவருறுதல்கண்டிறைஞ்சினரிமையோர்.

இ-ள். ஒருபுறம் பசசைநிறமும், ஒருபுறம் பவளநிறமும், ஒருபுறம் கச்சணிந்த தனமும், ஒருபுறம் அழகானமார்பும், ஒருபுறம் அபயமும், ஒருபுறம் வரதமுமாகியகைகளாக ஆசையோடு இருவரும் பொருந்துதலைப்பார்த்துத் தேவரும் வணங்கினார்கள். எ-று. (௬௬)

இவ்வாறு இருவர்நின்ற கோலத்தைச் சேரமான்பெருமானும்
'வலந்தான் கழலிடம் பாடகம் பாம்பு வலமிடமே
கலந்தான் வலநீ றிடஞ்சாந் தெரிவலம் பந்திடமென்

பலந்தார் வலமிட மாடகம் வேல்வல மாழியிடஞ்
சலந்தாழ் சடைவலர் தண்ணங்குழலிடஞ் சங்கரற்கே."

எனப்பொன் வண்ணத் தந்தாதியில் அருளிச்செய்தலானுமறிக.

இந்தமாக்கதைபடித்தவர்செவிகளிற்கேட்டோர்
சந்தனசலமுனியினிற்றமிழ்க்கடல்கடப்பார்
மைந்தரோமுதற்கிளையுடனுலகினில்வாழ்வார்
பந்தபாசமற்றழிவிலாப்பரகதிபெறுவார்.

இ-ள். இக்கதையைப் படித்தவர்களும், செவியிற்கேட்டவர்களுஞ் சந்தனவிருக்கங்களசூழ்ந்த பொதிய மலையிலிருக்கின்ற அகத்தியர் போற்றமிழ்க்கடல்கடப்பார்கள், சந்தான பாக்கியத்தோடுஞ் சுற்றத்தாரோடும் உலகத்தில் வாழ்வார்கள்: தங்களைப்பந்தமாகச் சூழ்ந்துகொண்டிருக்கிற தீவினையைத்தள்ளி மோட்சம்பெறுவார்கள். எ-று. (௬௭)

முனிவனேயெனைப்பயந்தவனுரைத்ததிம்முறையென்
றனையமாமுனிக்குரைத்தலுமவனெழுந்திறைஞ்சிக்
கனகவச்சிராங்கதனுயர்கதிபெறுங்கதையை
வினவினான்முனியினவனுமகிழ்ந்திவைவிளம்பும்.

இ-ள். நந்திதேவர் மார்க்கண்டேயரைப் பார்த்து என்னைப்பெற்ற பரமசிவன்சொன்ன சரித்திரத்தின் முறையிதுவென்று அவருக்குச்சொல்ல, அம்மார்க்கண்டேயரிஷி! எழுந்துதெண்டஞ்செய்து, பின்பு, சுவாமி? வசிராங்கத பாண்டியன் உயர்வாகிய மோட்சம் அடைந்த கதையைச்சொல்லுங்களென்று கேட்க, நந்திதேவர் சந்தோஷமடைந்து சொல்லத் தொடங்கினார். எ-று. (௬௮)

ஐந்தாவது,

இடப்பாகம்பெற்றசருக்கம்

முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-௪௦௧.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# வச்சிராங்கதபாண்டியச் சருக்க

## வசனம்

சந்தனடவியிற் றோய்ந்து செந்தமிழ்ச் சுவையையளைந்து மந்தமாமாருதம் வந்து வீசும் வையைவளநாடாகிய பாண்டிநாட்டிலே பெரும்புகழுடையவனும், மன்மதனைவென்ற அழகினனும், ஆகமங்களை நன்காராய்ந்து அறிந்தவனும் இவ்வாறாய பலசிறப்புகளை யுடையவனுமான வச்சிராங்கதபாண்டிய னொருவன் அரசு செய்திருந்தான். அவன் வேட்டையாட விரும்பி நால்வகைச் சேனைகளோடும் புறப்பட்டு வடக்குத் திசையே குதிரையை யோட்டிக்கொண்டு சென்றான். அங்கே வனத்தினுழைந்து பற்பல மிருகங்களையெல்லாம் கொன்றான். தன் சேனைகளெல்லாம் பின்னிட்டிருக்கத் தானொருவன் தனியே வரும்போது புழுகுபூனை யொன்றைக் கண்டு துரத்தினான். அது அருணாசலத்தை வலமாகச்சுற்றி யோடவே குதிரையை முடுக்கிச் செலுத்தினான். உடனே புழுகுபூனை விழுந்திறந்து வித்தியாதரனாய் நின்றது. குதிரையும் அவ்வாறே வீழ்ந்து இறந்து கந்தருவனாய் விளங்கியது. பூனையும் குதிரையும் பழைய வடிவம் ஆகிய காந்திசாலி, கலாதரன் என்னும் வடிவம்பெற்று ஒருவர்க்கொருவர் கட்டித்தழுவி உபசாரமொழிகள் கூறிநிற்ப, பாண்டியன் கண்டு இது என்ன என்னவென்று அதிசயமடைந்தான். வித்தியாதரர் இருவரும்பார்த்து, அரசனே யஞ்சற்கவென்று கையமர்த்தினர். பாண்டியன் கூறுவான். ஐயன்மீர்! நீவிர் யாவர்! உங்கட்குவந்த இப்பிறவிக் காரணம் யாது கூறுதிரென்ன, கலாதரன் கூறுவான். மதுரையரசே! நாங்களியாவரும் வித்தியாதரர் எம்பெயர் காந்திசாலி. கலாதரன் நாங்களிருவரும் மிக்கநண்புடையராய் மேருமலைச்சாரல் சென்றேம் ஆங்குத் துருவாசமுனிவரது நந்தவனத்துட்புகுந்து மலர் முதலியன பறித்து விளையாடல்களைச் செய்தேம்.

துருவாசமுனிவர் கண்டு மிக்க கோபமுடையவராய்ச் சொல்வார், சூரியனொளியும் தென்றற்காற்றும் நுழையாத இச்சோலையின்கட்புகுந்து சிவபெருமானுக்குச்சாத்தி யருச்சித்தற்குரிய மலர்க

ளையும் இலைகளையும் பறித்தீர் ஆதலால் நீவிர் இருவரும் குதிரை யாகவும் பூனையாகவும் பிறக்கக்கடவீர் என்று சாபமிட்டார். அது கேட்ட யாங்கள் அவர்திருவடிகளின் வீழ்ந்துவணங்கி மதிமுடிப் பெருமாற்கு அடியவராம் அண்ணலே! தேவரீர் இட்டசாபங்கழியு நாள் எப்போது, அதனை யருளல்வேண்டுமெனக் கமலவடியின் வீழ்ந்து வணங்கிக் கேட்டனர். இம்மலையை வலம்வந்தால் அப்பா வந்தீரும். அது அக்காலத்து அரசுசெலுத்தும் வச்சிராங்கத பாண்டியனாகிய உன்னாற் கிடைக்குமென்றனர். அதுகூறிச் சுப்பிரமணி யப் பெருமான் மாங்கனிக்காக விநாயகருடன் உறழ்ந்து பூமியெல் லாஞ் சுற்றிவந்ததும் அதனை வாங்கிக்கொண்டதும் ஆன சரிதங்க ளையும் கூறினார். அரசனே யாங்கள் பழையவுருவம் பெற்றேமெ ன்றுரைத்து நீகுதிரையேறி வலம்வந்தமையால் உனக்கு இவ்வருத் தம் நேர்ந்தது அதற்காகச சிவபூசை மலைவலங்கள் செய்கவெனச் சென்றனர்

வச்சிராங்கதன் இறைவன் திருவருளை வியந்து வணங்கித் து தித்துத் தனது குமாரனாகிய இரத்தினாங்கதனை யழைப்பித்து அவ னுக்குத் தன்னதிகாரத்தைக் கொடுத்துத் தான் சிவபெருமானுக்குத் திருப்பணிகள்செய்து, கௌதமரது ஆச்சிரமத்தி னருகுப்பக்கலிற் பன்னகசாலை யமைத்துக் கிரிப்பிரதக்கிணஞ் செய்யுநாளிற் பரம சிவன் றோன்றி யருளினார். பாண்டியன் மிகவும் வணங்கித் துதி த்து, ஐயனே! முழுமுதலே! தேவரீரை யடியேன் இயல்பாக வுள்ள அஞ்ஞானத்தன்மையால் அசுவத்திலேறிக் கிரிப்பிரதக்கி ணஞ் செய்தேன். அக்குற்றத்தைப் பொறுத்தருளவேணுமென்று குறையிரந்து கேட்டான் சுவாமி யருளிசசெயவார். வழுதியே மூற்பிறப்பில் நீ தேவேந்திரனாக இருந்தனை, அக்நாளில் நம்மை யலட்சியஞ்செய்து குலிசாயுதத்தைப் பிரயோகித்தனை. அதனால் மனிதனாகப்பிறந்தாய். இப்போது நம்மைப் பூசித்தமையால் முன் போல இந்திரனாகித் தேவலோகஞ் சார்வாயாகவென்றருளி மறைந் தனர். பாண்டியன் இந்திரனாகிச சுவர்க்க மடைந்தான் என்று கிரிவலம் வரும் பேற்றையெடுத்து மார்க்கண்டேயர் முதலாயினோர் கேட்பத் திருநந்திதேவர் உரைத்தருளினார்.

வச்சிராங்கதபாண்டியச் சருக்க வசனம்
முற்றிற்று.



துருவாச ரிஷி சாபத்தால் கார்திசாலி கலாதரன் புழுகு பூனையாகவும் குதிரையாகவும் ஜனித்துய்யுங்கால், வச்சிராங்கதன் புழுகு பூனையைத் தூரத்தி அண்ணாமலையை வலம்வர மேற்படி புழுகுபூனையும் குதிரையும் சாபம் நீங்கின—13.





உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஆறாவது,

# வச்சிராங்கதபாண்டியச் சருக்கம்.

கலி விருத்தம்.

தோடுகமழ்சந்தன வனத்திடைதுளைந்தே
நீடுதமிழின்சுவை யளைந்துகொடுகொளா
யாடுமயிலன்னவர்க ளன்னநடைபோலே
வாடையிசைதென்றல்புகும் வையைவளநாடு.

இ-ள். பூவிதழ் மணக்கும் சந்தனவனத்தின் மத்தியிற் சஞ்சரித்தது. நீண்ட தமிழின் மதுரம் அளைந்து கொண்டு ஆடுகின்ற மயில்போன்ற பெண்கள் நடைபோல வாடைக்காற்றோடு சம்பந்தமாகத் தென்றற் காற்று வருகின்ற வையையாறு பொருந்திய பாண்டிநாடு. எ-று. (௧)

வெவ்விருகணாரிடையை மின்னெனமருண்டே
செவ்விபெறுங்கதகை செறிந்தலருநாடு
நவ்வியனையாரளக நள்ளிருளதென்றே
[illegible]மவ்வலருகேயலரும் வையைவளநாடு.

இ-ள். வெப்பமதைசசெய்யும் கண்களிரண்டையுமுடையபெண்களினிடையைப்பார்த்து மின்னலென்று மயங்கி அழகுபொருந்திய தாழைகள் புஷ்பிக்கும் நாடு, மான்போன்ற மாதர்கள் கூந்தலைப்பார்த்து இருளென்றுநினைத்து முல்லைசசெடிகள் கரையில்புஷ்பிக்கும் வையை ஆற்றினல் வளம்பொருந்திய பாண்டிநாடு. எ-று. ()

அந்தவளர்நாடர்பெரு மானரசர்கோமா
னிந்திரன்முடிக்கிடை யெறிந்தவளைவீர
னிந்தையகறென்கயிலை நெற்றிவிழிபோலே
* முந்தியதிசைக்கரி முகத்தெழுதிவைத்தோன்.

இ-ள். அத்தன்மையாகிய பாண்டிவள நாட்டாருக்கு அரசர்க்கரசனுனவன் தேவேந்திரன்முடி சிதரும்படியாக வளையென்னும் ஆயுதம பிரயோகித்தவன்; குற்றமற்ற தென் கைலாயத்துக்கு நெற்றிக்கண்போல் அட்டதிக்கிலு மிருக்கிறயானைகள் முகத்திற் றன்னுடைய மீனக்கொடியை எழுதிவைத்தவன். எ-று. (௩)

[illegible] வேறு.

ஆகமாதி மதனினமுகினு
னுகமாதி தெளிந்தவறிவினன்

---

* முந்தியதிசைக் கரிமுகதது எழுதிவைததோன என்பதறகு எல்லாத் திசைகளினுஞ்சிறந்த கீழ்த்திசை யானையாகிய ஐராவதத்தின் முகத்தில் [illegible] [illegible]. இத்தினைத் [illegible] [illegible] [illegible] தவ னென்னலுமாம்.

பாக காரியர் பத்தியி ஞன்மொழிப்
பாக காரியர் பற்றிய தோளிஞன்.

இ-ள். தேகமுதலானவைகளால் மன்மதன்போல் அழகுள்ள வன், ஆகமமுழுவதும் தெளிந்தவிவேகத்தையுடையவன், பாகத்திற பார்வதியையுடைய சிவன்மேல் பக்தியுடையவன், பாகுபோல் மதுரமாகிய சொற்களையுடைய ஸ்திரீகள் விரும்புகின்ற தோளை யடையவன். எ-று.

வான கத்தி லு மண்ணி லு மெண்ணிய
வான கத்தி லும் வைத்த புகழிஞன்
தான கத்தொளி யாசடைக கண்ணிதன்
கான கத்தொளி யாமனைக் காப்பவன்.

இ-ள். தெய்வலோகத்திலும். பூமியிலும் எண்ணத்தக்க இமய பருவதத்தினிடத்திலும், தன் கீர்த்தியை நாட்டினவன்; சுவர்கதி தரிக்கின்ற சடைக்காட்டினிடத்தில் பிரகாசிக்கும் ஆத்திமாலையி னது வாசனையைத் தன்மனதில் நினைந்துக்கொண்டு பூமியைக் காக்கின்றவன். எ-று. (௫)

தங்க ளுயக னைத்தலை சூடிய
வெங்க ளுத ரடித்தலை யேத்திஞன்
பொங்கு நன்றி யறிந்தது போற்றுவா
ரிங்கி வற்கினை யாவரு மில்லையே.

இ-ள். தங்குலத்துத் தலைவனுகிய சந்திரனை முடியில் தரித்த எங்கள் நாதரது பாதங்களைத் தலையினுல் வணங்குகிறவன் மிகுந்த நன்றியையறிந்து அதைப் பாதுகாக்கின்றவர்களில் இவனுக் கொப் பானவ ரொருவருமில்லை எ-று. MAHAMAHOPADHYAYA (௬)

பத்து வார்திசை மீதும் படர்புகழ்
வித்து வாரி யிறைக்கின்ற மேன்மைபோ
னத்து வாரியில் வாரினர் நல்கிய
முத்து வாரி யிறைத்திடு முன்றிலான்

இ-ள். நீண்ட பத்துதிக்கிலும்பரவக் கீர்த்தியாகிய விரையை வாரி யிறைக்கின்றதன்மைபோல, சங்கங்கள் தவழ்கின்ற கடலிற் குளித்து வாரிவந்தவர்கள்கொடுத்த முத்துகளை இறைத்துக் கிடக்கின்ற முற்றத்தையுடையவன். எ-று. (எ)

ஆட லேர்ந்த வரசன் புகழ்க் கடற்
கோடு கின்ற கலங்கதி ரோட்டுதேர்
கூடு செக்கர் பவளக் கொடிகளே
நீடு திக்கினர் நீரின் மனிதரே.

இ-ள். வெற்றியமைந்த அரசனகீர்த்தியாகியகடலில் ஓடுகின்ற மரக்கலமானது சூரியனோடுகிற தேர்; கூடிய செக்கர்வானமே அக்கடலிற்படர்ந்த பவளக்கொடிகள்; நீண்ட எட்டுத்திக்கிலுமுள்ள மனிதர்களே அக்கடலிற்சஞ்சரிக்கும் நீர் மனிதர். எ-று. (அ)

எச்ச ராசர மூங்களிப் பெய்தவே
நச்ச ராவுல காளு நலத்தினன்
கச்ச ராவு கழற்பொலி காலினன்
வச்சி ராங்கத னென்றொரு மன்னவன்.

இ-ள். அசையும்பொருள் அசையாப்பொருள்களாகிய எவையும் சந்தோஷத்தையடைய விஷத்தையுடைய ஆதிசேடனைத் தாங்கும் உலகத்தை ஆளும் நன்மையுடையவன்; கச்சு அராவிய வீரகண்டாமணியைத்தரித்த காலையுடையவன் வச்சிராங்கதபாண்டியனென்றொருவனிருந்தான். எ-று. (கூ)

படையிற் றோற்ற வரசரைப் புல்சிறை
யிடையிற் போட்டன னென்கை வியப்பதோ
கொடையிற் றோற்றிடுங் கொண்டலை யுஞ்சிறை
யிடையிற் போட்டன னென்ற திருக்கவே.

இ-ள். அவன் யுத்தத்திற்றோற்ற அரசர்களைச் சிறையிலிட்டா னென்பதென்ன ஆச்சரியம்! தன்கொடைக்குத்தோற்ற மேகத்தை யுஞ் சிறையிற்போட்டானென்றது இருக்கும்போது. எ-று. (௪௦)

நாட்டு மவ்வர சன்றொரு நாளிலே
வேட்டை யாட விரும்பின னாகியே
மூட்டு சேனை கரிபரி மொய்த்திட
வோட்டி னன்பரி யுத்தர திக்கிலே.

இ-ள் இப்படிச் செயத்தைநாட்டிய வச்சிராங்கதபாண்டியன் ஒருநாள் வேட்டையாடும்படி மனத்திலெண்ணி யானை, குதிரை, சேனைகள்சூழக் குதிரையை நடத்திக்கொண்டு வடதிசையில் நடந் தான். எ-று. (௪௧)

துங்க வாம்பரி மீதிவன் றோன்றலு
மங்கை வேழ மகன்றகன் றோடின
திங்க ளின்குலச் செல்வனென் றஞ்சியே
யெங்கு மோடு மிருட்கண மென்னவே.

இ-ள். சந்திர வமிசத்திற்பிறந்த அரசன் தாவும் சிறந்த குதிரைமே லேறினமாத்திரத்தில் சந்திரனைக்கண்ட இருட்கூட்டம் போல் துதிக்கையுடைய யானைக்கூட்டங்க ளஞ்சியோடின. எ-று

வீறு மம்புலி யின்குல மேன்மையான்
வீறு மம்புலி யின்குலம் வீட்டின

ஞறி லொன்று கடமைகொண் டாள்பவ
ஞறி லொன்று கடமைகொண் டானரோ.

இ-ள். சிறப்புள்ள அம்புலியென்னும் பேரினையுடைய சந்திர குலத்திற்பிறந்த மேன்மையினால் இறுமாப்படைந்த அழகிய புலிகளைக்கொன்றான்; ஆறிலொருகடமைவாங்கிக்கொண்டு ஆளுகிறவன் வழியில்நேரிட்ட கடம்பைமிருகங்களைக் கொன்றான். எ-று. (கங)

சேர மானினந் தனனைச் சிதைத்தவன்
சேர மானினந் தன்னைச் சிதைத்தனன்
வார மாயகலைச் சங்கம் வளர்த்தவன்
வார மாய்கலைச் சங்கம் வளர்த்திட்டான்.

இ-ள் சேரமானெனனும் பெயரையுடைய சேரனது சேனையைசெயித்தவன் ஒருமிக்க மானினங்களைக்கொன்றான்; அன்போடு ஆராய்கின்ற வித்தியாசங்கத்தை வளர்த்தவன்; அநேக கலைமான் கூட்டங்களை வளைத்துக்கொண்டான். எ-று. (கச)

சோனை போன்மத மாரி சொரிந்திடும்
யானை தேர்பரி யாண்முத லாகிய
தானை பின்னிடத் தான்றனி வாசிமேற்
கான நாவியைக் கண்டுதொ டர்ந்தனன்.

இ-ள். சோனை மழைபோல் மதத்தைச் சொரிகின்ற யானை தேர், குதிரை, காலாள் இவர் பின்னிட்டுப்போகத் தானொருவனாகவே குதிரைமேற்கொண்டவனாய் ஒரு புழுகுபூனையைத் தொடர்ந் தான. எ-று. (கரு)

அந்த நாவி யகன்றரு ணைசலத்
துந்தி யேவல மாய்விரைந் தோடலு
மூந்து வாசி யதன்பின் முடுக்கினன்
கந்த நாவி விழுந்தது கண்டனே.

இ-ள். அப்படி அரசனாலே துரத்தப்பட்ட புழுகுபூனை சீக்கிரத்தில் அருணாசலத்தை வலமாகச்சுற்றி யோடினவளவில், வேகத்தோடும் குதிரையை நடத்தினான்; அந்தப் புழுகுபூனை (அவன்) கண்முன்னேவந்து விழுந்தது. எ-று. (௧௬)

பச்சை நாவி பருகினர் போல்விழுந்
தச்ச நாவிதன் னாகம் விடுத்தெழில்
விச்சை வேந்தர் துதிக்க விமானமே
லிச்சை மேனிகொண் டேகி யெழுந்ததே.

இ-ள். நாவியாகியவிஷம் சாப்பிட்டவர்கள்போல் விழுந்து பயத்தையுடைய புழுகுபூனை தன் தேகத்தைவிட்டு வித்தியாதரர் முதலானவர்கள் துதிகக விமானத்தின்மேல் திவ்வியதேகம் பெற்றுக்கொண்டெழுந்தது. எ-று. (௧௭)

மேவு மந்த வரசன் விழுந்திட
மாவும் வீழ்ந்து வடிவு தனைத்துறந்
தோவி யர்க்கெழு தாவுருக் கொண்டொரு
பூவி மானம தேறிப் பொலிந்ததே.

இ-ள். தற்செயலாய் ஏறின அரசன்விழவே குதிரை இடறி விழுந்து தன் தேகம்விட்டுச் சித்திரக்காரரும் எழுதக்கூடாத திவ்வியரூபம்பெற்று ஒருபுட்பவிமானம் ஏறிப்பிரகாசித்தது. எ-று. ()

கைவி லங்கலை யான்பரிக் காலின்வீழ்ந்
தவ்வி லங்கை யரசனைப் போலவே
செவ்வி லங்கை லடியினிற் றேம்பினான்
லெவ்வி லங்குட னேடின் விழார்களோ.

இ-ள். யானைபோல்பவனான வச்சிராங்கத பாண்டியன் குதிரைக்காலினருகில் விழுந்து, அந்த இலங்காபுரியையாண்ட இராவ

னைன்போல் அருணசலத்தினடியில் வருந்தினன்; மிருகத்தின்பின் ஓடினல் யார்தான் விழார்கள். எ-று. (௧௯)

பாய்ந்த நாவி பரிப்பெயர் போய்ப்பழங்
காந்தி சாலி கலாதரப் பேர்படைத்
தாய்ந்த நண்பொ டருவியங் கண்ணராய்
மோந்த ணைந்து மகிழ்ச்சியின் மூழ்கினர்.

இ-ள். பாய்ந்து செல்கின்ற குதிரை நாவி யென்னும் பெயர் போய் பழைய காந்திசாலி கலாதரனென்கிற பேர் படைத்தவராய் மிக்க நண்பராய் அருவிபோல் கண்ணிலிருந்து நீர்பெருக ஒருவர்க் கொருவர் கட்டியணைத்து உச்சிமோந்து சந்தோஷத்தினல் முழுகி னர்கள். எ-று. (௨0)

அன்ன வீரர்க ளவ்விடை நின்றுழி
யொன்ன லர்க்கு முருத்துய ருய்த்திடு
மன்னர் மன்னவன மற்றிது வந்தவா
றென்ன வென்னவென் றேங்கி யிரங்கினன்.

இ-ள். அவ்வீரர்கள் அவ்விடத்தில்நின்றபோது தன் சத்துருக் களுக்குவந்த துக்கத்திலும் அதிகமாய் வருந்துகின்ற பாண்டியன் இது வந்தவகையென்னவென்று இரங்கி வருத்தமுற்றான். எ-று.

விஞ்சை மன்னர் விமானத்த ராகியே
தஞ்ச மில்லவன் றனபுடை சூழ்ந்துநீ
யஞ்ச லஞ்சலென் றங்கை யமைத்தனர்
பஞ்ச வன்மகிழ் வோடிம் பகருவான்.

இ-ள். வித்தியாதரர்களாகிய இருவரும் விமானத்தி லேறிக் கொண்டு தஞ்சமில்லாத பாண்டியனிடத்தில்வந்து நீ பயப்படவே ண்டாம் பயப்படவேண்டாமென்று கையமர்த்தினர்கள்; அப்போது பாண்டியன் மிகவுஞ் சந்தோஷத்தோடு சொல்வான். எ-று. (௨௨)

நீதி யாய்வரு நீரெவ ரித்துயர்க்
காதி காரணம் யாதிவ் வருந்துயர்
போது மாறெது போதியு மென்றவ
ேைத வோதக் கலாதர ேைதுவான்.

இ-ள். நீதிபொருந்திய நீங்களிருவரும்யாா? உங்களுக்கு இப படிவந்த துககததிற்குக் காரணமென்னவென்ருன்? அது சென்ற து எவ்விதத்திேல் சொல்லுங்களென்று கேட்க, கலாதரனென்ப வன் சொல்லுவான். எ-று. (௨௩)

வாயநத சாலி மதுரையின் மன்னனே
யேய்ந்த விஞைசையா யாஙக ளிவன்பெயர்
காநதிசாலி கலாதர னெனபெய
ராய்நத நண்பின ராய்விளை யாடினேம்.

இ-ள். செல்விளைகின்ற மதுரைக்கு அரசனே? நாஙகள் ஒப பற்றவிததியாதராகள, இவனபோகாந்திசாலி, என்பெயாகலாதரன நாஙகளிருவரும் மிகுநதநேசராய விளையாடிககொண்டிருந்தோம.

மார வேளும வசநதனும் போலவே
யார வேபிரி யாதுறை நாளிலே
சேர வூழ்வினை சென்று தொடர்ந்திட
மேரு மால்வரைச சாரலின மேவினேம்.

இ-ள். மன்மதனும் அவன்சினேகனுகிய வசந்தனும்போல ஒருவாக்கொருவர்பிரியாமல் வாசஞ்செய்யுநாளையில் முன்செய்த ஊழ்வினை வந்தடைய மகாமேருவின்சாரலில் போய்சசேர்ந்தோம். ()

வேறு.

மாற்சரிய மிக்கதுரு வாசமுனி வாழு
மாச்சிரம மேலருகி லந்தமுனி தானே

நீர்ச்சொரிய நெஞ்சுருகி நின்றமர மெல்லாம்
பூச்சொரியு நந்தவன மீதினிடை புக்கேம்.

இ-ள். சோபமிருந்த துருவாசரிஷி வாழ்கின்ற ஆசிரமத்தி னருகில் அந்தரிஷி மனமுருகித தணணீர்சொரிய, வளர்ந்த விருட்சங்களெல்லாம் புட்பங்களைச சொரியும நந்தவனத்திற் புகுந்தோம். எ-று. (உ௬)

புக்கவ னத்திற்சிறு புதற்களை மிதித்தான்
மிக்கவினை யேனுமதின் மென்மலர் பறித்தே
னக்கண்மு னர்ந்தமுனி யங்கிவிழி யாலே
கக்கவொளி மிக்கசடை கட்டவிழ வந்தான்.

இ-ள். அப்படிப் புகுந்தவனத்தில் இக்காந்திசாலி அங்குள்ள சிறுபுதர்களை மிதித்தான், மிகுந்தவினையையுடைய நானும் அவைகளிலிருக்கும் மேன்மையாகிய புட்பங்களைப்பறித்தேன், அக்கணமே துருவாசரிஷி அறிந்துவிழிகளால் நெருப்பைக் கொட்டிக்கொண்டு சடையவிழ்ந்துவிழக் கோபித்துவந்தார். எ-று. (உ௭)

முத்துமணி யாமென முகத்தினில் வியர்ப்ப
வித்துருமம் வைத்தனைய மெல்லிதழ் துடிப்ப
வுததரியம் வீழ்வதை யடிக்கடி யுயர்த்திச்
சித்திர வழற்பொறி தெறிக்கவிவை சொன்னான்.

இ-ள். முத்துக்கள்போல் முகத்தில் வேர்வையுண்டாகவும், பவளம்போன்ற மிருதுவாகிய இதழ்துடிக்கவும், நழுவிப்போன்ற வஸ்திரத்தை யடிக்கடி உயர்த்திக்கொண்டு சித்திரமாகிய அக்கினிப்பொறி தெறிக்க இவைகளைச்சொன்னார். எ-று. (உ௮)

செந்தப்பனர் தங்கதி ருருவுசிறு காலு
நந்துமறு காலுமொரு காலுமிதை கண்ணு

முந்திலையுதிர்ந்துபுல ராதும்மடிவெய்தா
திந்தவனமீதொருவ ரெய்தவெளிதாமோ.

இ-ள். சிவப்பாகிய சூரியகிரணமும் என்னுடைய பயத்தினு லே வரக்கூடாது; தென்றற்காற்றும், வண்டுகளும், ஒருபோதும் இ வ்வனத்தை யடையமாட்டாது; இலையுதிராது, வாடாது! நாசம டையாது; இவ்வனத்தில் ஒருவர் வருவதற்கு எளிதோ. எ-று. ()

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

சேவினார்க் கினிய பூசைக்
கணிமலர் செலுத்துங் காவிற்
பாவிகாள் புகுந்தென் கோபக்
கனலிடைப் பஞ்ச தானீர்
மேவிய துரங்க மாகென்
றிவற்குரை விடத்தை யீந்தா
னுவியாப் பிறப்பா யென்று
னுண்மலர் பறித்த வென்னை.

இ-ள். இடப வாகனராகிய சிவபிரானுக்கு இனிமையாகிய பூ சைக்காகச் சாத்தும் புட்பங்கள் இருக்கும் சோலையில் பாவிகளே! நீங்கள் புகுந்து என்னுடைய கோபமாகிய நெருப்பினிடத்தில் அக ப்பட்டுப் பஞ்சானீர்கள், குதிரையாயப்போவென்று விஷம்போல் இக்காந்திசாலிக்குச சாபங்கொடுத்தார்; புட்பம் பறித்த என்னைப் புழுகுபூனையாய்ப் போவென்று சபித்தார் துருவாசரிஷி. எ-று. ()

கோபமே தவமதாகப்
பலித்திடுங் கொடியோ னிட்ட
சாபமேல் வரவே நாங்க
ளிருவருந் தளர்ந்து ஞானத்

தீபமே யருளே யன்பர்
செல்வமே யெனச்சென் றேத்திப்
பாவமே விடுமிச சாப
மொழியுநாள் பகர்தி யன்றேம்.

இ-ள். கோபமே தவமாகப் பலித்த பொல்லாத இருடியிட்ட சாபம் எஙகள்மேல்வர, நாஙகளிருவருந் தளர்வடைந்து ஞானவிள க்கே! கிருபையே! பத்தருடைய செல்வமே! என்று வணஙகிப் பாவம் உணடானதினல் எஙகள்மேல் வந்தசாபம் ஒழியும்நாள் என் றைக்குச சொல்லுமென்று கேட்டோம். எ-று. (௩௧)

முனிவது தவிர்ந்து சாப
முனிவனு மொழிவா னிந்தத்
தனிவருஞ் சாபஞ் சோண
சலத்தினை வலஞ்செய் தாற்போம்
மனிதருஞ் சுரரும் போற்று
மலைவலம் புரிகை தானு
மினிமையாம் பாண்டி நாட்டி
னிறைவனு லெய்து மென்றூர்.

இ-ள். தூருவாசரிஷிக்குக் கோபம் நீங்கி நானிட்ட இவ்வொப் பற்றசாபம் திருவண்ணமலையை வலமாக வந்தாற் போகும், மனித ரும் தேவரும் வணஙகும் அந்த மலையைப் பிரதக்கிணஞ் செயதல் சிறந்தபாண்டிய தேசத்தரசனுற்கிடைக்குமென்றூர். எ-று. (௩௨)

என்றொரு கதையுஞ் சொல்வா
னெரியழற் கிரியதாக
நின்றவெம் மிறைவன் முன்னு
ணெடுவனிக் கடவு ளீந்த

மன்றல்சேர் கனியைத் தனயே
யிருவரும் வருந்திக் கேட்க
வின்றுல கனைத்துஞ் சூழ்ந்தோர்க்
களிப்பமென் றிறையுஞ் சொன்னான்.

இ-ள். இப்படிசசொல்லி ஒருகதையுஞ் சொல்வார்; அக்கினி மலையாய்நின்றசுவாமி, முன்னே வருணன்கொடுத்த வாசனைபொருந்திய மாம்பழத்தைத் தமது பிள்ளைகளாகிய விநாயகர், சுப்பிரமணியர் இருவரும் வருந்திக்கேட்க, இன்றைக்குள் உலகமுழுதுஞ் சுற்றிவந்தவர்க்கு இப்பழங் கொடுப்போமென்றுசொன்னார். எ-று. ()

கந்தனு மயிலி லேறிக்
கடலுல கனைத்துஞ் சூழ
முந்தினன் கரிய வானை
முகத்தவ னெழுந்தெல் லோர்க்குந்
தந்தையாந் தனது தாதை
தனைவலம் புரிந்தான் றந்தை
மைந்தனைத் தழுவி வேண்டும்
வரத்துடன் கனியு மீந்தான்.

இ-ள். சுப்பிரமணியரும் மயில்வாகன மேறிக்கொண்டு சப்தசமுத்திரஞ்சூழ்ந்த பூமிமுழுதுஞ் சுற்றிவந்தார்; யானைமுகமுடைய விநாயகர் எழுந்திருந்து சுவாமிதானே உலகமாயிருக்கிறார், அவரைச் சுற்றிவந்தால் உலகத்தைச் சுற்றிவந்த லொக்குமென்றுயார்க்குந் தகப்பனாகிய தம்முடைய தகப்பனைப் பிரதக்ஷிணஞ்செய்தார்; சுவாமி மகனைத் தழுவிக்கொண்டு வேண்டியவரங்களும் பழமுங்கொடுத்தார். எ-று. (௩௪)

வேலினன் கடிதுமேவிக்
கனிதர வினவத் தம்மைக்
காலினால் வலமா யிந்தக்
கரிமுகன் வந்தா னேமு

தாலமே வலஞ்செய் தாலும்
பலபல தவஞ்செய் தாலும்
பாலகா நமைச்சூழ் தெய்வப்
பலத்தினுக் கிணையோ பார்க்கின்.

இ-ள். சுப்பிரமணியர் சீக்கிரத்தில் பூமியைச்சுற்றிவந்து பழங் கேட்கச் சுவாமி நம்மை விக்கினேசுரன் காலால் நடந்து சுற்றிவர் தான், ஏழுலகத்தைத் வலஞ்செய்தாலும் பலபலவாகிய தவத்தைச் செய்தாலும் மகனே ! நம்மைச் சுற்றிவரும்பலனுக்கு ஒப்பாகுமோ பார்க்குமிடத்தில். எ-று. (ந௩)

செம்மலை யுருவா நம்மைத்
தினம்வலம் புரிந்தோர் வேதன்
றம்மினு மதிக மாயோன்
றனக்குமே லதிகம் பார்க்கி
லும்மினு மதிக ரிந்த
வுமையினு மதிகா மைந்தா
வெம்மினு மதிக மென்று
னெவர்க்குமே லதிக மானோன்.

இ-ள். சிவப்பான மலையுருவமாகிய நம்மை தினம் வலம் வந்த வர்கள் பிரமனிலும் அதிகராவார்; விட்டுணுவிலும் அதிகராவார் பார்க்கில் உம்மிலும் அதிகராவார்; பார்வதியிலு மதிகராவார் மகனே ? எம்மைப்பார்க்கிலும் அதிகராவர் என்றார். எல்லார்க்குமே லாகிய சிவபிரான். எ-று. (ந௪)

மாசிலா நமது மேனி
வரைதனக் கமரர் தாமும்
பூசனை புரிய மாட்டா
ரதைவலம் புரிந்த பேருக்

காசையா யளிக்கும பூசை
நமக்கினி தளிக்கும் பூசை
கூசுமா றிழைத்த தீங்கு
நமைச்செயுங் கொடுமை யாகும்.

இ-ள். குற்றமில்லாத நம்முருவமாகிய இம்மலைக்குத் தேவர்களும் பூசைபண்ண மாட்டார்கள்; அதை வலமாகச்சுற்றி வந்தவருக்கு ஆசையுடனே செய்கிற பூசை நமக்கு இனிதாகச் செய்கிற பூசையேயாம்; அவர்களுக்குக் கூசும்படி செய்த தீமை நமக்குச்செய்த தீமையேயாமென்று சுவாமி சுப்பிரமணியருக்கு அருளினார். எ-று. ()

என்பது மொழிந்தா னந்த
னெனச்சொலி முனிவன் போனான்
பின்பதன் படியே நாவி
புரவியாய்ப் பிறந்தோ மின்று
தென்புவி யுடையாய் நின்னாற்
றிருமலை வலமும் பெற்றோ
மின்பொலி பழைய கோலம்
படைத்தெழில் விமானத் தானோம்.

இ-ள். இப்படிச்சுவாமி சொன்னாரென்று தூருவாசரிஷிசொல்லிப்போனார், பின்பு அப்படியே குதிரையாகவும் நாவியாகவும் பிறந்தோம்; பாண்டியதேசத்தையுடைய அரசனே? இன்றைக்கு உன்னால் திருமலையைப் பிரதட்சணஞ்செய்தோம்; மின்னல்போல் பிரகாசிக்கின்ற பழைய உருவம்பெற்று விமானத்தில் ஏறினவர்களானோம். எ-று. (௩௮)

எங்கடம் வரிவி துன்பா
லெடுக்கண்வந் தடைந்த திந்த
வெங்கனல் வரையை மாவின்
மிசைவலம் வருகை யாலே

பொங்கிய ததுவும் பூசை
  புரிந்திடிற் போமென் றோதித்
தங்களூர் புகுந்தார் காந்தி
  சாலியுந் தானு மாக.

இ-ள். எங்களுடைய சரித்திரமிது; அக்கினி சொரூபமாகிய இம்மலையைக் காலினால் வலஞ்செய்யாமல் குதிரையிலேறி வலஞ் செய்த படியினாலுனக்குத் துன்பமவந்துநேர்ந்தது; அதுவுஞ் சுவாமியைப் பூசைசெய்தாற் போமென்று சொல்லிக காந்திசாலியுங் கலாதரனுந் தங்களூருக்குப் போனார்கள். எ-று. (௩௯)

வேழமும் பரியுந் தேரும்
  வீரருஞ் சுவடு நாடிச
சூழமந் திரிக ளோடுஞ்
  சூழ்ந்தனா துயரந் தீர்ந்தான்
ழையின் கமுகின் நாடுந
  தவளவான் கதிரைத் தீண்டும்
வாழையுங் கரும்பின் சார்பின்
  வளர்ந்திடும் வையை நாடன்.

இ-ள். அதன்பின்பு யானையும் குதிரையும், தேரும், காலாள்களும், அடிபற்றிக்கொண்டு மந்திரிகளுடனே அரசனை சுற்றிக்கொண்டார்கள்; அப்பொழுது வியசனம் நீங்கினான்; தென்னமரங்களும் கமுகவனமும் சந்திரனைத் தழுவும் வாழைமரங்களும் கரும்பினை சாற்றினால் வளர்ந்திடும் பாண்டிய தேசத்துக்கரசனாகிய வச்சிராங்கதபாண்டியன்: எ-று. (௪௦)

அரதனுங் கதனு மைந்தன்
  றனைக்கடி தழைப்பித் தாதி
பரதனு மெனைப் பாரைப்
  புரவெனப் பகர்ந்தான் சில

யிரதனுங் கதனைக் கேளா
வதன்முனம் விடைபெற் று
பிரதநான் மருங்குஞ் சூழப்
பதிபுகுந் திறைமை செய்தான்.

இ-ள். வச்சிராஙகத பாண்டியன் தன்பிள்ளையாகிய இரத்தினாஙகத பாண்டியனைச சீக்கிரத்தில் வரவழைத்து. முன்னால் நமது வமிசத்திற் பிரபலனாயிருந்த பரதன்போல் இராசசியததைக் காப்பாத்தென்று சொன்னான்; அவ்வார்த்தையைக் கேட்பதற்கு முன்னமே விடைபெற்றுக்கொண்டு யானைதேர் முதலாகிய சேனைகள்சூழ மதுரைக்குப்போய் இராசசியபரிபாலனஞ்செய்தான் இரத்தினாஙகதன். எ-று. (௪௧)

முறையினா லிறையின் வந்த
கனகமு முத்துந் தெவ்வர்
திறையினா லளந்த பொன்னுந்
தினந்தொறுங் களிற்றின் மேலே
யிறைவனைத் தனது தாதைக்
களித்திட விறைவன் வேணிப்
பிறையினாற் கினிய பூசை
திருப்பணி பெரிதுஞ் செய்தான்.

இ-ள். நியாயமாக ஆறிலொரு கடமைகொண்ட திரவியமும், கடலிற் குளித்து வாரிவந்த முத்துக்களும், சத்துருக்களால் திறையிட்டபொன்னும், தினந்தோறும் யானையின் மேலேற்றி அரசனாகிய தன் தகப்பனுக்கு அனுபவிக்க, வசிராங்கதபாண்டியன் சடையில் சந்திரனைத் தரித்த சுவாமிக்கு இனிமையாகிய பூசை திருப்பணி பெரிதாகச செய்தான். எ-று. (௪௨)

செய்தபின் றவமை தாகிக்
கவுதமாச் சிரமத் தோர்பா
லெய்திய பன்னா சாலை
யியற்றிநம் பாவந் தீர்க்கு
மைதவழ் மிடற்றாற் கன்பாய்
மலைவலஞ் செயுநா ளந்தக்
கைதவற் கெதிரே வந்தான்
கைதவர்க் கெதிரே வாரான்.

இ-ள். அருணைசலேசருக்குத் திருப்பணியும் பூசை முதலான வைகளும் சிறப்பாக நடந்தபின்பு, தவஞ்செய்வதற்குநினைந்துகௌ தமருடைய ஆச்சிரமத்தி லொருபக்கத்திற் சேர்ந்து பர்ன சாலைகட் டி நம்முடைய பாவத்தைத் தீர்க்கின்ற நீலகண்டமுடைய சுவாமிக்கு அன்பாய்க் கிரிப்பிரதட்சணஞ் செய்கின்றநாளில், கைதவனாகிய பாண்டியனுக் கெதிரே தோன்றினார், வஞ்சம் பொருந்தியமனத்தை யுடையவர்க ளெதிரே வராத பரமசிவன். எ-று. (௩௩)

அணிச்சிறு மிறையும் போத
வருள்பொழி விழியு நீல
மணிக்கறை மிடறு நாலு
புயங்களு மலர்க்கை மானுங்
கணிச்சியும் விடையின் மீதி
லிருப்பதுங் கண்டென் பாவப்
பிணிச்சிறை விடுப்ப தென்றே
யெனச்சொலிப் பெரிதுந் தாழ்ந்தான்.

இ-ள். அழகு அமைந்த சிறிய சந்திரனையும், மிகவும் கருணை பொழிகின்ற கண்களையும். நீலமணிபோல் பிரகாசிக்கின்றகண்டத் தையும், நான்குகைகளையுமலாமென்று மாங்கையிக் மானுமமழுவுமுடை

ளவராய் ரிஷபவாகனத்தின்மே லிருப்பது பார்த்து என்னுடைய பாவப்பிணிப்பு என்னைவிடுவது என்றைக்கோவென்று சொலலி மிகவும் பாணடியன் வணங்கினன். எ-று. (௪௪)

வே று.

அண்ணாமலை யுடையாய் மழ
விடையா யணி சடைசேர்
தண்ணாமலை யுடையா யெமை
யுடையாய் நுதல் தழுவுங்
கண்ணாமலை வுடையா வினை
கடவா ரறி வறிதற
கொண்ணாமலை யுடையா யுமை
யுண்ணா முலை தலைவா

இ-ள். அணணாமலையென்னும் பெயரையுடையவரே! இளமையாகிய ரிஷபவாகனத்தையுடையவரே! அழகுள்ளசடையில் குளிர்ந்த கஙகையையுடையவரே! எஙகளையாட்கொள்ள உடையவரே! நெற்றியிற கண்ணுடையவரே! மயககமுடையவரும் பாவஙகளைக் கடக்காத பாவிகளறியப்படாத கைலாயத்திலிருககின்றவரே! உணணாமுலையாகிய பார்வதியினது தலைவரே. எ-று. (௪௫)

மையாகிய வினையே னுனை
யொருமா வினில் வலமாய்ச்
செய்யாதது செய்தே னிது
தீரென் றுரை செய்தான்
பொய்யா தவன் மொழிகின்றது
கண்டே யருள் பொழிவுற
றையானன முடையான் மழ
விடையானிவை யருள்வான்.

இ-ள். தீவினையையுடையவனுகிய நான் உம்மை ஒரு குதிரை யிலேறி வலமாகவந்து நான் செய்யத்தகாத காரியம் செய்ததனுல் பொருத்தருளவேண்டுமென்று பொய்யில்லாத பாண்டியன் சொல்ல. அதைக்கேட்டு கிருபையுண்டாகி இளமைபொருந்திய ரிஷப வாகனராகிய ஐந்து திருமுகத்தையுடைய பரமசிவன அருளிச்செய்தார். எ-று. (சுசு)

மன்னைமக பதிநீ யெமை
 மதியா தொரு [illegible]
மந்நாள்விட னுற்று யத
 னுமேல நரர் வடிவா
யினனுதன பெற்று யினி
 யிமையோ ரதி பதியாய்ப்
பொன்னுடனே யென்றே வரம்
 பொழிந்தே யிறை மறைநதா

இ-ள். வசசிராஙகதபாண்டியனே! நீ பூர்வஜன்மத்தில் தேவேந்திரனுயிருந்தாய். அந்நாளில் நம்மை யலட்சியஞ்செய்து வசசிராயுதகதை நம்மேல் பிரயோகஞ்செயதாய், அதனுல் பூமியில் மனிதனுகப் பிறந்து துன்பமடைந்தாய், அதன்பின்பு (இப்போதுநீ) நம்மைப்பூசித்து வலம்வந்தபடியினுல் இனித் தேவர்களுக்கு அதிபதியாகிய தேவலோகத்துக்குப் போவென்று வரங்கொடுத்து சுவாமி மறைந்தார். எ-று. (சஎ)

அருணைப்பதி வள மிப்படி
 யருணபுரி நினைவோர்
மரணத்துக ளடையார் சிவன்
 வடிவா ருவ ரென்றான்

கருணைக் கொரு கடலேபர
கதி பெற்றன னென்றே
சரணத்திடை பணிந்தா னமன்
றனை வாட்டிய தவத்தோன்.

இ-ள். அருணாசலத்தின்வளமிப்படி, இத்தலத்தை நினைப்பவர்கள் மரணத்துன்பம் பொருந்தாமல் சிவனுடைய ரூபம்பெறுவார்களென்று நந்திதேவர்சொல்ல, எமன் வாடும்படிச்செய்த தவமுடைய மார்க்கண்டேயர்கேட்டு கிருபாசமுத்திரமானவரே! உம்மால் பரகதியடைந்தேனென்று அவர் பாதத்திலே வணங்கினார். எ-று. ([illegible])

இக்கதையின் பொருளானதோ
ரெழுத்தாகிலுந் தெளிந்தோர்
தக்காருடன் படித்தோர் சிவ
சாயுச்சியம் பெறுவார்
முக்காலமுமி தைக் கற்றவர்
வினவிப் பொருண் முடிப்பார்
புக்கார்சிவ கதி பெற்றது
புதுமைப் பொரு ளன்றே.

இ-ள் இக்கதையில் ஒரு எழுத்தினது பொருளாயினும் அறிந்தோர்களும், பெரியோர்களோடே படித்தவர்களும், சிவசாயுச்சியமடைவார்கள்; திரிகாலத்திலும் இதைக் கற்பவர்கள் இதின் அருத்தத்தைக்கேட்டு முடிப்பவர்கள் சிவகதியிற் சேர்வார்களென்பது ஆச்சரியமாமோ எ-று. (௪௬)

ஆறுவது,
வச்சிராங்கதபாண்டியச் சருக்கம்
முற்றிற்று.
ஆ. திருவிருத்தம்-௪௫௧.

---

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# வல்லாளமகாராசச் சருக்க வசனம்.

அன்பு சிறந்து விளங்கும் மார்க்கண்டேய முனிவரே! வச்சிராங்கத பாண்டியனாது சிறப்பை யெடுத்துக் கூறினேம். இனி வல்லாளமகாராசனுக்குச் சிவபெருமான் பெறற்கரிய பிள்ளையாகவந்த சரிதத்தைச் சொல்கின்றேமென்று திருநந்திதேவர் திருவாய் மலர்ந்தருளுகின்றார்.

திருவருணைப்பதியின்கண் சத்தியம், நற்குணம், தன்னுயிரை மன்னுயிர்போலக் காதல், சிவபத்தி முதலியவற்றிற் சிறந்த சோகுலத்தரசனாகிய வல்லாளமகாராச னிருந்தான், அவன் தன் மனைவியையன்றி மற்றைப் பெண்களையெல்லாம் தாய்மார்போல நினைத்தொழுகுவோன். அவன் புலியும் பசுவும் ஓர் துறையிலே நீர்குடித்திருக்கவும், அந்தணர் மறவாது வேதாத்தியயனஞ் செய்யவும், மாதமும்மாரி மாறாதுபொழியவும் அரசாட்சி புரிந்து வருங்காலத்திலே தனக்குப்பின் தன்பெயர் கூறுதற்குப் பிள்ளையில்லையே யென்று மிகவும் வருத்தமுற்றான். மந்திரிகளை நோக்கி அமைச்சர்காள்! சிவபூசையிற் குறைவுநேர்ந்ததோ? உலகநீதியிற் பிழையிற்றதோ? தேவெறவற்றிற் குற்றங்கள் போந்தனவோ? இவ்வாறு எனக்குச் சந்ததியில்லாமற் போனதற்குக் காரணம் என்னை? கூறுவீராக என்றான். மந்திரிமார் மன்னர் மன்னரே! அவையொன்றினுமல்ல. பூர்வவினைப்பயனே.

ஆயினும் இங்குவரும் அடியார்க்கு வேண்டுவனவற்றை மன மகிழ்ச்சியுடன் கொடுப்பேமாயின் அருணசலப்பெருமான் றிருவருளினலே சற்புத்திரப்பேருண்டாகுமென்றனர். அது கேட்ட அரசன், மந்திரிமார்களே! சிவபெருமான் எழுந் தருளியிருக்கின்ற இத்திருவருணசலத்தில் வந்த சிவனடி யார் எதுகேட்டாலுங் கொடுப்போமென்று கொடிநாட்டிச செய்து வருவீரென்று கட்டளையிட்டனன். அமைச்சர் அவ்வாறே துவசநாட்டி முரசறைவித்தகாலை, இப்பூமியின் கணிருக்கும் விருத்தர், பிராமணர், தவத்தர், சங்கமர்கள், யாசகர் முதலிய பலரும்வந்து வேண்டியனபெற்று வாழ்ந்த னர். விவாவகஞ் செய்யவேண்டுமென்று வந்தவர்க்கு ஆயி ரம்பொன்னும், மனை முதலியவற்றைக் கொதுவையினின் றும் மீட்கவேண்டுமென்று வந்தாக்கு இரண்டாயிரம்பொ ன்னும, உபநயன முடிககவென்றல் முந்நூறுபொன்னும், ஆலயப்பணிகள் செய்யவேண்டுமென வநதார்க்கு இருபதி ணயிரமபொன்னும் மடதருமமென வந்தார்க்கு ஐம்பதாயி ரம்பொன்னும இவ்வாறே அவரவர்க்குத் தக்கவாறீந்து வ ருவதனை கேள்வியுற்று நாரதமகாமுனிவர் வல்லாளனிட ஞ் சென்றார.

அதுகண்ட அரசன் இருக்கைவிட்டெழுந்து எதிர் கொண்டழைத்து ஆசனத்திருத்தி முகமனுரைத்து, அடி யேனிடத்துத் தேவரீர் எழுந்தருளியதென்னென முனிவ ருரைப்பார். மூவகையரசருட் சேரகுலத்தரசனே! நீ செய் யுந் தருமத்தைக்கேட்டு அதன்கருத்தை யறியவந்தோம்.

அதனைச் சொல்வாயாகவென்ன, அரசன் றன்கருத்தைக் கூறினன். முனிவர் அருணைப்பெருமான் றிருவருளாற் கு ழுவியுண்டாகும். யாம் போகின்றோம் என்று புறப்பட்டுத் திருக்கயிலையடைந்து சிவபெருமானது திருக்கோலத்தைக் கண்டு துதித்துத்துதித்து வல்லாளனது செய்கைகளையெல் லாம் எடுத்துக் கூறினர். சிவபெருமான் திருப்புன்முறுவல் செய்து, யாமும் அதனைக்கண்டு அறிவோம் என்று யாவர்க் கும் விடைகொடுத்து, குபேரனையழைத்து வல்லாளனுடை ய தருமத்தைச் சோதிக்கவேண்டும், ஆகலால் நீசிடனைகந்நி யுடன் வருதி என்று, சங்கம் வடிவுகொண்டு திருவருணைப் பதிசென்று பசிகொண்டார்போல, உணவு கொடுப்பாரில்லை யோவென்று ஓலமிட்டார். கனிகைவீதிசென்று இராமுழு திற்கும்,பரியமாகக் கொடுக்கும்பொன் எவ்வளவு என்று கேட்ப; அவரர்கள் ஐயரே! பொய்கூறோம் ஓரிரவிற்கு ஆயி ரம்பொன் கொடுக்கவேண்டுமென்றனர்.

பரத்தையர்கள் கூறியதைக்கொடுத்து ஒவ்வொருத்தி க்கு ஒவ்வோர் சங்கமரைவிடுத்து ஒருதாசிதானும் மீந்திரு க்கவொட்டாமற் செய்து சிவபெருமானுகிய சங்கமர் அரச னிடஞ்செல்லுதலும்; அவன் அவரையும் சீடனையும் அழை த்துச்சென்று பூசைபுரிந்து வணங்கிநிற்க, சங்கமர், அரச னே! எனக்குற்ற மன்மதவாதையைத் தீர்த்தற்காக வந்தேம் என்றார். அரசன்கேட்டு அவ்வாறாயின் அடிகட்கு விலாசம் சிக்கிரத்திற், புரிவிப்பேனென்றான். சங்கமர் செப்புவார், அரசே! காமநோயை விலைமாதரே மாற்றுவாரென்றார். தங்

கள் இஷ்டப்படியே செய்வேனென்று கூறி, ஏவலாளரை நோக்கி ஒரு தாசியையழைமின் என்ன, அவர் கணிகையர் வீதிதோறுஞ் சென்றுசென்று விசாரித்து ஒருவரும் கிடைத்திலர் என்று அரசனுக்குக் கூறினர். அரசன் மிக்க மனவருத்தமடைய, மந்திரிமார் அரசனே நாம் கொண்டுவருவேமென்று சொல்லிச் சென்று எவ்வளவு தந்திரங்களைக் கூறினும் கணிகையர் சம்மதியாததன்மையை அவர்களுமதுன்புடன் தெரிவித்தனர்.

அரசன்கேட்டுச் சோர்வுற்றுப்பின்னர் விரைந்துவந்து இச்சங்கமாக்கு இசைவார்க்கு எம் நகரமுழுதும் கொடுப்போமென்று கொடியிட்டான். அதுவன்றி யானை குதிரை முதலாய பொருள்களெல்லாவற்றையுங் கொடுப்பேம். அந்த மங்கையர்க்கரசியே பெற்றதாய் போன்றவளாவள் என்றான். கணிகமங்கையர்கேட்டு, வேந்தே! பொன்வாங்கி யுள்ளேம் வருதலியலாது என்ன அரசன் வெட்கமுற்று, மனவருத்தத்துடன் தனது அரண்மனையிலிருக்க, அரசன்மனைவியரான அல்லமாதேவியாரும் சல்லமாதேவியாரும் நேர்ந்ததென்னவென்று பணிந்துகேட்ப, நிகழ்ந்தவற்றைச் சொன்னான். அப்போது சல்லமாதேவிகேட்டு, அரசே! என்னையவர்க்குக் கொடுக்குங்கருத்துத் தேவரீர்க்கு இருக்குமாறல் இசைகின்றேன் என்ன அரசன் அளவிடற்கரிய மகிழ்ச்சியுற்று அவ்வீட்டினறையுட் சென்று அவர் துன்பத்தை யொழிப்பாயென்று, சங்கமரிடம்வந்து தங்கள் மனப்படிப் போல் அனுபவித்துக்கொள்க என்றான்.

சல்லமாதேவி நீராடித் தன்னை யலங்கரித்துச் சங்கமரிருந்த அறையுட்சென்று கீதம்பாடிப் பக்கத்தினெருங்கும்போது, பரமநாதராகிய சங்கமர் சிவயோகத்திலிருந்தார். சல்லமாதேவியார் எவ்விதமான சல்லாபங்களைச் செய்யினும் பரமசிவமாகிய சங்கமர் யோகமிருப்பார் போல் இருக்கக் கண்டு வருந்தி சங்கமர்மீது சாய்ந்து தழுவப்போகையில், பெருமான் ஓர் குழந்தைவடிவாகித் திருவாய்திறந்து அழத்தொடங்கினர். அதுகேட்டு இது சிவபெருமானது திருவிளையாடலென்று அரசன் விரைந்துசென்று, ஆவலோடும் குழந்தையை யெடுத்தணைத்து உச்சிமோந்து ஆனந்தமுற்றிருக்கும்போது, சிவபெருமா னுடனேமறைந்தனர். அப்போது அரசனுந்தேவியும் அழுது அலமந்து இரங்கினர். அவரது அழுகையொலிகேட்டுத் திருவுளமிரங்கிப் பெருமானார் பார்வதிசமேதராய் இடபாரூடராய்த் தோனறியருள, அரசனும் மனைவியும் வணங்கித்துதித்து ஓர் குழந்தை யருளுதல் வேண்டுமென்று இரப்ப, சிவபெருமான், மன்னனே; யாமே உனக்குக் குழந்தையானோம். ஆயுள் முடிவில் உத்தரகிரியை முதலானவற்றையும் செய்துமுடிப்போம் வருந்தாதேயென்று அந்தர்த்தானமானார்.

வல்லாளமகாராசச் சருக்க வசனம்

முற்றிற்று.

---



திருவண்ணமலையை அரசாண்ட வல்லாள மகாராசனுக்குச சிவபெருமான் புத்திரனுகத் தோன்றி மறைந்து, ரிஷபவாகன ரூடராய் வந்து அவ்வரசனுக்குக் காட்சிதந்த மாகாத்மியம்—14.




உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஏழாவது,

# வல்லாள மகாராஜன் சருக்கம்.



கலி நிலைத்துறை.

பாசமுற்றவச் சிராங்கத பாண்டியனைசிறை
வாசமாய் நவின்றோமினி * வல்லாளனுக்
கீசனேமக வாகவந் தெய்திப்பின்னுறுகி
ஓசையாயருட் செய்ததை யுமக்குரைசெய்வாம்.

இ-ள். சந்திர ஜடாதர மூர்த்தியாகிய பரமசிவனுடைய பாத பத்மங்களில் மிகவும் அவாவினையுடைய வச்சிராங்கத பாண்டியன் சரிதையைச் சொன்னோம்; இனி வல்லாள மகாராஜனுக்கு (அரி

* ஆதியில் விஜயநகரத்தை யரசாண்ட கிருஷ்ணதேவ ராயர் விஜயத்தாலும் பிரதாப உருவத்தாலும் மேற்படி வல்லாள மகா ராசனும் வமிசர் தெரிந்துகொள்ளலாம்.

பிரமாதிதேவர்களுக் கரியவனாகியும், பார்வதி தேவியா ரோடெங் தேவகணங்கள் பணிந்து போற்றும்படியாயும், ஸ்ரீகைலாயகிரியி லெழுந்தருளி யிருக்கும்) பரமசிவமே புத்திரனாகத் தோன்றி மறைந்து பின்னர், அக்கடவுள் விசும்பின்கண் வெள்விடையின்மீ தெழுந்து அவ்வரசனுக்கு அருள் சரந்தையும் மார்க்கண்டேய முனிவரே? உமக்குச் சொல்லுகிறோமென்று நந்திதேவர் திருவாய்மலர்ந்தருளுகின்றார், எ-று. (க)

மணிகொழித்திடு மாடமா ளிகைதவழ்சோலை
திணிகொளம்பரத் திணையுறு சிறப்பினையார்ந்த
கணிகையாமவா கற்பினை யருந்ததிதனக்கே
யிணையெனச்சொல விசைகருமா வருணையம்பதியாம்

இ-ள். மாணிக்கம், மரகதம், வயிரம், வயிடூரியம், கோமேதகம், புட்பராகம். இந்திரநீலம். முத்து பவளமென்னும் நவமணிகளால் அலங்கரிக்கப்பட்ட மாடமாளிகைகளும், ஆகாயத்தையளாவியுயர்ந்து தீஞ்சுவைக் கனிகளை உதிர்க்குஞ்சோலைகளும், மலாசசோலைசனொருகும நிறைந்து பரிமளிக்கவும், அருந்ததிக கொப்பானவடிவமும் கற்பும வாய்ந்த கணிகையர்கள் வசிக்கும் அருணாசல மென்னுந் தலமாம். எ-று. (உ)

எழுசீர்க்கழி நெடி லாசிரியவிருத்தம்.

இத்தகை சிறப்பை வகித்திடு நகருக்
  கிறைவனும்வல் லாளபூபன்
சத்திய மொழியா னற்குண முடையான்
  றன்னுயிர் மன்னுயி ராகப்
பத்தியாய் நாளும் பாதுகாத் திடுவோன்
  பகாருஞ் சேரனற் குலத்தோன்
அத்தனு ரடியை நித்தமுந் துதித்தே
  யவர்திருப் பணிசெய வந்தோன்.

இ-ள். இத்தன்மை பொருந்திய புகழினையுடைய அவ்வருணை நகரம் என்னும் தலத்திற்கு அரசனாகிய வல்லாள மகாராச னென்பவன் மிகவும் சத்திய வாக்கிய முடையவன், சகல வுயிர்களையுந் தன்னுயிர்போற் பாதுகாப்பவன; அக்கினி வமிசத்தில் உதித்தவன்; சகதீசனாகிய பரமசிவனுடைய உபய சரணம் புயங்களைத் தினந் தினந் திரிகாலமுந் துதிசெய்பவன்; அக்கடவுளினது திருப்பணிசெய்ய வுதித்தவன். எ-று. (ங)

பிறர்பொரு ளாசை யற்றவன் றனது
 பெண்டிரை யன்றிமற் றோரை
முறையுடன் றமக்கை தங்கைய ரெனவு
 மொழிந்திடு நன்னடை யுடையோன்
நெறியுட னாறி லொருபங்கு குடிக
 ணிலையுடன் றரப்பெறும புனிதன்
கறைமிடற் றண்ண லாயப் பணியைக்
 கருத்துகந் தியற்றுநல் லன்பன்.

இ-ள். ஒருவன் பொருளின்மீது இச்சை யென்பதை மறந்தவன் தன் மனைவியாரையன்றி மற்றஸ்திரீகளைத் தமக்கை மார்களைப்போலவும், தங்கைமார்களைப்போலவும், மனத்திற் பரிவுகொண்டு பேசுவன்; குடிகளிடத்தில் ஆறிலொருபங்கு பகுதி பெறப்பட்டவன் ஆலாலமுண்ட ஸ்ரீகண்டராகிய அருணாசலேசரது ஆலயத் திருப்பணியை மனக்களிப்போடும் நடத்தும் மேன்மை பொருந்திய பத்தியையுடையவன. எ-று. (ச)

நீதியாய்ப் புலியும் பசுவுமோர் துறையி
 னொருங்கியே புனலுண்டு வசிக்கும்
போதனை யருளும் வேதியர் மறையைப்
 புகன்றிட யாவருங் கேட்பார்.

இ-ள். ஜகதீசனாகியும் உமாமகேசனாகியும் என்னையாட்கொள்ளும்பொருட்டு எழுந்தருளியிருக்கும் ஐயனாகிய ஸ்ரீ அருணாசலேசருக்கும் பேதையேனாற் செய்யப்பட்ட பூசையில் ஏதேனுங்குறையுளதோ! அல்லது இவ்வுலகநீதி நடத்துவதில் மாறுபாடாகிய குற்றங்களுணடோ! அதுவல்லாமலும் நங்கடவுளை அருச்சித்துப் பணியும் பொருட்டு கொய்தமலர்களி தேதேனுங் குறையுணடோ! என் செயகேன்! அறியேன்! இனியான்செய்யும் விதியாது கூறுவீர்கள் மந்திரிகளே என்றான் வல்லாள மகாராசன். எ-று. (அ)

அண்ணலேநமை யாதரித் தாண்டிடுங்
கண்கள் மூன்றுடை யானற் கருணையால்
நண்ணு மாதுலர் யாக்குநல் லன்புடன்
றிண்ணமா யறஞ் செய்யிற் சுதனுண்டாம்

இ-ள். எங்களிறைவனே! நம்மை ஆட்கொள்ளும் பொருட்டெழுந்தருளிய சகலபுவன கர்த்தாவாகியுஞ் சர்வாந்தரியாமியாயும் திரிநேத்திர முடையவராயும் அடியார்க ளிருதயத்தில் விளங்கும ஸ்ரீ அருணாசலேசுரரது மேன்மை பொருந்திய கருணையினால் நம் பதியைநாடிவரும் ஆதுலர் முதலிய அந்தணர்களும் இன்னும்மற்ற எவர்களும் எதைக்கேட்டபோதிலும் அவைகளை இல்லை என்னாது அவர் மனங் களிப்புறும்படி உள்ளன்போடும் நல்குவோமாயின் (பரமசிவனருளால்) புத்திரனுண்டாமென்று சொன்னார்கள் மந்திரிகள். எ-று. (க)

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.

சுந்தர வருணை நீர்தந் துலங்கு மிந் நகரி னுள்ளே
வந்தவ ரெது கேட்டாலும் வழங்குது மெனவிப்பே
அந்தர மளாவ நீங்க ளழகிய துவச காட்டி
எந்தனும் பெயர் விளங்க வெழின்முர சறையச் செய்மின்.

இ-ள். சோமசுந்தரக்கடவுளாகிய ஸ்ரீ அருணாசலேசுரர் வாழும் இப்பதியின்கண் வந்தவர்கள் எந்தப்பொருளை விரும்பிக்கேட்டாலும் குறைவின்றித்தருகிறோம் வாருங்கள் கற்றவர்களே எனக் கரங்களை நீட்டியழைப்பதுபோலும் இவ்வெல்லையுட்புக்கிய மாந்தர்களைக் கலியென்னும் பிணியணுகாமற றுரந்த ஆகாயபரியந்தமளாவியுயர்ந்து படபடாகாரஞ் செயயும்படியாய அழகிய ஓர் துவசமாட்டி என்பெயர் எங்கணுஞ் சிறக்கும்பொருட்டு எழுகடலொலிகளையும் கவளீகரித்து இடிமுழக்கம்போற பேரொலிகாட்டும் முரசமார்ப்பச செயயுங்களென்றான் வல்லாளமகாராசன். எ-று. (௧௦)

தாதகிரி முற்று நறசீர்
 தழைக்குமெங மன்னனே கேண்மோ
சாத்திரம புகழு மீசா
 தாடொழுந தொடர மூப்பர்
தோத்திர வரவ லோர்கள்
 தோன்றிய வண்ண மீய
பாத்திர.ரோநா மென்று
 பகர்நதன ரமைச்ச ராேனார்.

இ-ள். நெடிய கடல்சூழ்ந்த உலகமெங்கும் மிகுந்த கீர்த்தியை விரியசசெய்த எங்களரசே! (கேளீர்) இருக்கு. யசுர் சாமம். அதர்வணம் என்னும் நான்குவேதங்களும் ஆறுசாததிரங்களும் புகழுக தக்க உமாமகேசனாகிய ஸ்ரீ அருணாசலேசுரருடைய உபய சரணமபுயங்களைப்பணியும் மெய்யன்பாகள, தபோமகிமையைப்பெற்ற விருத்தர் தோத்திரஞ் செய்யும் பாவலர் முதலியவர்களின் 'மனததிரன்றியவண்ணம் அளித்து களிப்படையச் செய்விக்கும்படியான ய பாத்திரரோ ! நாம், இறைவனே யென்று மொழிந்தார் மந்திரிமார்கள். எ-று. (௧௧)

பூவிலைப் பொருளைக் கேட்கப் போகுமோ கேட்கிலவ்வா
றியாவரா யினுந்தா னல்கா ராதலாற் புகன்றவண்ணந்
தீவிர மாகச் செய்வீ ரெனத்துவ சத்தை நாட்டித்
தேவநா டளவு மோங்கச் செயமுர சறைவித்தாரால்.

இ-ள். இவ்வுலகிலில்லாத பொருளைக் கேட்கப்போமோ! அவ்வாறு கேட்டபோதினும் யாவரேனும் எத்தன்மை வாய்ந்தவராயினும் கொடார்கள் ஆகையால்யான் உங்களுக்குரைத்த விதியின்படி கொப்பெனச் செய்வீர்களென்றறைந்த மொழியைக்கேட்டு மந்திரிகள் துவசத்தைநாட்டி வானுலகளவும் பேரொலிமுழக்கம் எட்டும்படி செயமுரசறைவித்தார்கள் எ-று. (௧௨)

எழுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.

நாதன்வா ழருணை நகரினில் வேந்த
னட்டிய துவசத்தை யோர்ந்து
பூதலத்துள்ள விருத்தர்கா வடிகொள்
பூரிய ருடன்மிகச் சிறந்த
மாதவர் மறையோர் ஜோகி ஜங்கமர்கள்
வாணர்க ளியாசக ரியாரும்
நீதமாய்த் திரளாய் வெய்தினரன்னோர்க
ளிலைபெறப் பரிசினை யடைவார்.

இ-ள். நாதனாகிய சகதீசன் ஸ்ரீ அருணாசலேசுரர் வாழும் அருணையம்பதியின்கண் வல்லாளமகாராஜனால் தருமக்கொடி நாட்டியிருப்பதாய் கேள்வியுற்ற நெடிய கடல்சூழ்ந்த வையகத்திலிருக்கும் விருத்தர், பிராமணர்; தபோதனர், ஜோகிஜங்கமர்கள் பாவாணர் யாசகர்முதலிய யாவரும் பத்தியோடு கூட்டங் கூட்டமாய்க் கூடி

வந்து தத்தம்வருமை நீங்கும்படியாய் அரசனிடம் வேண்டியவைக ளைப்பெற்று குறைவின்றி வாழ்வார்கள். எ-று. (கரு)

வதுவை செயப் பொன்வேண்டி வந்தோருக்
காயிரம்பொன் வழங்கிப் பின்னுங்
கொதுவை மனை நிலமபணிதி கொற்றவனே
யதைமீட்டுக் கொடுமென் றோர்க்கத்
ததியிலீ ராயிரம் பொன் றந்தவரை
மகிழச்செய் ததன்பின ளுங்கு
முதுமறையோ ருபநயன முடிக்க வென்று
லவர்க்குநிதி முநநூ றீயாமா.

இ-ள். விவாகஞ் செய்து கொள்ளவேண்டுமென்று ஆவலோடு ம் அரசனை நாடிவந்துகேட்டவாகளை மனமகிழ்ந்து யடையும்படி ஆ யிரமாயிரமாகப் பொன்கொடுத்தும, பின்னர் ஆபரணதி முதலிய மண்மனையாவும கொதுவைவைத்து மீட்டுகொள்ளுவதற்கு ஹே துவில்லாமல மூழ்கிப்போகின்றன அரசர்க்கரசனுகிய எங்கள் கோ வே! தேவரீர அவற்றைமீட்கும்பொருட்டுத திருவருள் சுரப்பீராயி ன் மிக்கபுண்ணியமாமென்று பலர் கூறு விணவியவர்களுக்கிரங்கி, அ க்கணமே இரணடாயிரம்பொன்கொடுத்து அன்னவர் மனமகிழச செய்வித்தும அதன்பின்பு வேதாகமங்களையுணர்ந்த பெரியோர்க ளாகிய அந்தணர்வந்து அரசனையாசீர்வதித்து மகாராஜனே ! உப நயனம் நடத்தவேண்டியிருக்கிறதென்று அறிவிப்பார்களாயின் அ வர்களுக்கு மூன்னூறுபொன்னைக்கொடுத்து மகிழச்செய்விப்பான். எ-று.

ஆலைய த்தி லூற்றமண்டி மண்டபமுஞ்
சூழ்மதிலு மவைமாந் தன்னைக்
கோலமுற வமைப் பதனுக் கிறையவனே
திரவியங்கள் கொடுப்பா யென்னச

சீலமுட னிருபதினுயிரம் பொன்னுந்
 தந்துசீர் செய்யென் முன்பின்
ஞாலமகின் மடகதருமஞ் செய்ய வைம்ப
 தாயிரம்பொன் நல்கி னுனல்.

இ-ள். ஸ்ரீ அருணாசலேசுரர் எழுந்தருளியிருக்கும் கோயிலினு ள் நவமணிகளினுலுஞ் சந்திரகாந்தக் கற்களினுலும் அமைத்துப்பிர காசம்பொருந்தியிருக்கும் மண்டபங்களும் செஞ்சுடராகிய சூரிய னுஞ்சாய்ந்து ஒதுங்கிப்போகும்படி ஆகாயத்தையளாவி மேகங்கள் தவழுஞ் சுற்றுமதில்களுமாகிய இலப்பட்டிருக்கின்றமையா லவைகளை த் திருத்தஞ்செய்யும்பொருட்டுப் பொருளுதவி செய்யவேணுமென்மகா ராசனை யென்றுகேட்குங்கால். அரசன் மிக்கபக்தியோடும் ஜகதீச ன் திருப்பணி நிறைவேறும்பொருட்டு இருபதினுயிரம் பொன்கொ டுத்துச சீர்திருத்தஞ்செய்தும் பின்பு. உலகின் மடம் புதுக்க வேண் டுமென்று லவைகளுக்கு ஐம்பதினுயிரம் பொன்னுங் கொடுப் பான். எ-று. (கரு)

அந்தகர்க்குஞ் சங்கமர்க்கு முடவருக்கும்
 சோகிகட்கி மாபத் தென்று
வந்தவர்க்கு மாதுலர்க்கு மாறுத
 சஞ்சலமும் வறுமை நோயால்
நொந்தவர்க்குஞ் சொலுமின்ன மற்ற வர்க்குந்
 தினந்தினமும் துவன்ற வாறு
சந்தமொடு பரி சளித்தல் நாரதரு
 மோர்ந்தங்கண் சாந்திட் டாரால்.

இ-ள். கண்ணில்லாதவர்களுக்கும், ஜங்கமர்களுக்கும்; கரசர ணுதிகளற்றவர்களுக்கும், ஜோகிகட்கும் விஜனவழியால் வெவ்விய ஆபத்துநேர்ந்துவந்தவர்களுக்கும், ஆதுலர்களுக்கும் கெடாததன்

பத்தையடைந்து தரித்திரமென்னும் பிணியால் மெலிந்து மனநொந்தவர்களுக்கும், பின்னுஞ்சொல்லும் சகலயாசகர்களுக்கும், சதாகாலமும் அவரவர்கள் விரும்பியவண்ணம் மனக்களிப்போடும் உதவிசெய்வதை நாரதமுனிவர் கேள்விப்பட்டு வல்லாளமகாராசனிடத்திற்கு மிகுந்த கருணையோடும் எழுந்தருளிவந்தார். எ-று. (கக)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மாதவ முனிவ் ராங்கு வந்தமை மன்ன னோர்ந்து
காதல் கொண் டமைச்சர் சூழக் கடிதினி லரசைவிட்டுப்
பூதல னெதிர்சென் றேத்திப் புனிதனை யழைத்து வந்து
ஏதமில் பீட நல்கி யெழுந்தபின் னியம்பு வானால்.

இ-ள். மகாதபோதனராகிய நாரதமுனிவர் வரவைக் காவலாளிகளால் கேள்விப்பட்ட வல்லாளமகாராசன் மிகவும் அன்போடும சிங்காசனத்தைவிட் டெழுந்து மந்திரிமுதலிய சேர்வைக்காரர்கள் புடைசூழ்ந்து வரும்படி அரசனெதிர்சென்று பணிந்து தமியேங்களை யாட்கொள்ளும்பொருட்டு திருவருள்கூரந் தெழுந்தருளிவந்த மாதவமே! புண்ணியப்பொருளே! என்று துதித்துப் பேரானந்தத்தோடும் அழைத்துவந்து குற்றமற்ற மணிகளிழைத்த பொற்பீடமளித்து அதிலெழுந்தருளியபின் சொல்லுகின்றான். ()

அயன்றவத் தினிலு தித்தே
அழகிய கரத்தின் வீணை
வியமுறக் கொண்டு பாடும்
மென்முனி வரனே தாங்க
ணயமுட னுயன் மீது
காட்டமுற் றெழுந்த செய்தி
தயையுட னருள்க வென்னத்
தாபத ரிசைப்ப தானார்.

இ-ள். சிருட்டிகர்த்தாவாகிய பிரமன் தபோமகிமையால் உதித்த, சரோருகம்போன்ற அழகியகரத்தில் வீணை இலங்கக்கொண்டு கானஞ்செய்யும் மேன்மைபொருந்திய முனியே! தாங்கள் நாயினுங் கடையேனாகிய பேதை யென்மேல் கருணைவைத் தெழுந்தருளிவந்த சங்கதியை அருள்செய்ய வேண்டுமென்று பணிந்துநின்ற வல்லாளமகாராசனைப் பார்த்து நாரதமுனிவர் கூறுவார். எ-று. (கஅ)

தலத்தின்மேன் மகிமை யுற்ற தாபதர் புகழு மாவைம்
புலத்தினை வென்ற மோனர் புகலுமூ வகையுள் வன்னி
குலத்தினில் வருமன் னாநின் கோதிலாத் தருமங்கேட்டு
நலத்தினை யறியவந்தோம் நவின்றிடா யெனவுரைப்பான்.

இ-ள். புவனத்தின்கண் மகிமை பொருந்திய முனிவர்களும் புகழத்தக்க ஐம்புல னுகர்ச்சிகளையும் வென்று மெய்யுணர்ச்சிபெற்ற புண்ணியர்களால் சொல்லப்பட்ட சோமசூரியாக்கினியென்னு மூக்குலத்தரசன் அக்கினிக்குலத்திலுதித்த அரசே! நின் குற்றமற்ற மகாதானத்தின் பெருமையைக் கேள்வியுற்று அதையறியும் பொருட்டு வந்தோம், ஆதலால் உன்கருத்தை வெளியிடுவாயென்று நாரதமுனிவர்கேட்க அரசன் சொல்லுவான். எ-று. (கக)

எழுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்.

மனுமுறை யறிந்த தாபதர் புகழு
மாதவ முநிவரே கேண்மோ
தனியிலென் னரசைத் தாங்கவு மென்பேர்
சாற்றவு மகவில னதனாற்
பனிமலர்க் குழலாள் பாகனார் தொழும்பர்
பரிவுடன் கேட்டவை மண்மேற்
கனிவுட னளிக்கத் துவசம தியற்றேன்
கடவுளின் செயலறி யேனே.

இ-ள். வேதசாஸ்திரங்களை யுணர்ந்த முனிவர்கள் புகழத்தக்க மகா தபோபலமுடைய நாரதமுனியே! எளியேன் ஆளுகையைத் தாங்கிக்கொள்ளவும், பின்னர் எளியேன் பெயரைச் சொல்லவும், மைந்தனில்லாமையால், மணமெலிந்து பூங்குழலையுடைய உமாதேவிபாகனாகிய ஸ்ரீ அருணாசலேசுர ரடியார்கள் இச்சித்துக் கேட்டவைகளை இல்லையென்னாது கொடுக்கும் நியமங்கொண்டு தவசமுகாட்டி நடத்தி வருகிறேன். நம்மையாட்கொள்ளுங் கடவுளின் திருவுளம் யாதோ! அறியேனென்றான் வல்லாளமகாராசன். எ-று. ()

திருவுயர் தருமநடத்துவர் மண்மேற்
　சேயரைப் பெறுவ ரென்றேநற்
றருமநூல் களினுஞ் செப்புவ தன்றித்
　தக்கவ ரும்புகல் வதனாற்
பெருகுமாந் தியு மதியமுஞ் சடையிற்
　பெட்புட னுற்றெலாங் காக்குங்
குருபர னருளாற் குழவியு முண்டாங்
　கொற்றவர் செலவிடை தருவாய்.

இ-ள். அழகிலுயர்ந்த முப்பத்திரண்டறங்களையும் இரப்பவர்களுக் கில்லையென்னமல் நடத்துபவர்கள் மண்மேல் புத்திரபாக்கியங்களைப் பெறுவார்களென்று மேன்மைபொருந்திய ஆகமசாத்திரங்களிற் சொல்லியிருப்ப தல்லாமலும்; மறைவிதியுணர்ந்த பெரியோர்களுஞ் சொல்லுவார்கள்; ஆதலால் எங்கும் பரவி மகிமையுள்ள கங்கையையும் சந்திரனையுஞ் சடையிற்றரித்து எண்பத்துநான்கு நூறாயிரம் ஜீவபேதங்களைப் படைத்தளிக்கும் பரமசிவத்தினருளால் மகப்பேறு பெறுவாய். எனக்கு விடைதருவாய் அரசனேயென்று நாரதமுனிவர் விடைபெற்றுச் சென்றார். எ-று.　　(உக)

மன்னவன்றன் னீதிதனைக் கயிலைவளர்
பரமனுக்கு வழங்க வேண்டித்
தானவ்முனி காதலுற்றுச் செல்லுகையிற்
சிவகணங்கள் துதித்து நிற்க
முன்னிலங்குஞ் சங்கரனை நாரதனும்
பணிந்து பின்னர் முனிவர்சூழச்
சென்னிமதி யணிந்தபிரான் றிருக்கோலங்
கண்டிறைஞ்சிச் செப்பு வானால்.

இ-ள். வல்லாளமகாராசனுடைய நன்மார்க்கத்தையும், தருமபரிபாலனத்தையும், கயிலாயகிரியில் எழுந்தருளியிருக்கும்பார்வதிசமேதனாகிய பரமசிவனுக்குத் தெரிவிக்கும்படி யெண்ணங்கொண்டு, தவத்திற்சிறந்த (நாரத) முனிவர் ஆசையோடுஞ் செல்லுகையில் அவ்வனம் அநேக சிவகணங்கள் அடிபணிந்து துதித்துநிற்க முன்னம் பிரகாசித்துக் கட்டளைகள் விதித்துக்கொண்டிருக்கும் இரண்டாஞ் சங்கரனாகிய நந்திதேவனைப் பணிந்து, பின்பு மகா தபோதனர்களும் தேவர்களும் முனிவர்களும் புடைசூழும்படி உமையவள் இடப்பாகத்தில் இலங்கக் கொலுவீற்றிருக்குஞ் சிவபெருமானுடைய திருக்கோலத்தைக்கண்டு சாஷ்டாங்கமாய்ப் பணிந்தெழுந்து போற்றிக் கூறுவார் நாரதமுனிவர். எ-று. (உஉ)

தேசின்மிகு கயிலையில்வாழ் தேவாதி
தேவனின் றிருத்தாள் போற்றி
மாசின்றி விளங்கருணை யம்பதியின்
வல்லாள மன்ன னென்போன்

ஓசைபெறச் சுதன்வேண்டிக் கொடிநாட்டி
யுலகிலுள்ளோ ருவந்து கேட்கும்
பாசமுட னெதையேனுந் தருவனென்று
பறைசாற்றும் பண்பைக் கேண்மோ.

இ-ள். பிரகாசம் பொருந்திய கயிலாய கிரியில் வீற்றிருக்குந் தேவதேவனே! உன் உபய சரணங்கள் போற்றி! பூலோகத்தில் குற்றமற்று விளங்கும் அருணையம்பதி யென்னுந் தலத்துக்கிறைவனாகிய வல்லாள மகாராசனென்பவன் தன் பெயரை விளக்கஞ் செய்ய ஓர் புதல்வனை வேண்டி யாவர் எப்பொருளை விரும்பிக் கேட்டபோதினும் அவர்திருப்தி யடையும்படி தருகிறேனென்று கொடிபோட்டு, பறைசாற்றி நடத்திவரும் பெருமையைக் கேளும் எந்தையே! என்று பின்னும் கூறுவார் நாரதமுனிவர். எ-று. (உ௪)

வேறு.

நீதியை வளர்ப்போ னுண்மையைக் காப்போ
னெறி முறை தனிற்பிற ழாதோன்
கோதினைக் களைந்த வறமெனு முருவாய்க்
குவலயத் துதித்தநற் பூபன்
பூதலத் துயிர்க ளியாவுந்தன் னுயிர்போற்
புந்தியுட் கருதியே காப்போன்
ஆதியே நினது பதமலர் துணையென்
றனுதினந் தொழுதுவா ழன்பன்.

இ-ள். நன்மார்க்க நீதிம்படிவளர்ப்பவன், சத்தியத்தைக் காப்பாற்றத்தக்கவன், செங்கோல்வழி பிசகாதவன், பாவங்களென்னும் இருளைத் தூரத்திலெழுந்த மதிபோன்ற தருமமாகிய ஒளியே ஓருருவங்கொண்டு உலகில்பிறந்த மேன்மை பொருந்திய அரசன்

அல்லாமலும் பூமியில்வாழு மன்னுயிர்யாவுந் தன்னுயிர்போல மன த்திலெண்ணிக் காப்பவன், அடியவர்க் கெளியவன், ஆதிகடவுளா கிய தங்கள் சரணகமலங்களில் மனம் பொருந்திச் சதாகாலமும் பணிந்து துதிசெய்து வாழ்ந்து வரும் மெய்த்தொழும்பன் என்று நாரதமுனிவர் கூறினார். எ-று. (உச)

அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

வந்தமா முனிவன் கூறும் வாய்மையை யீச னோர்ந்து
அந்தவல் லாளன் றன்மை யாமுங்கண் டறிவோ மென்றே
சிந்தைசெய் முநிக்கு மற்றத் தேவர்க்கு மிருடி கட்குந்
தந்தமாச்சிரம மெய்தச் சாற்றினான் றன்னே ரில்லான்.

இ-ள். அங்ஙனம்வந்து வல்லாள மகாராசன் பெருமையைச் சொல்லும் நாரதமுனிவன் மொழியைப் பரமசிவன்கேட்டு, அவ்வரா சன் தன்மையை நாமுங் கண்டறிய வேண்டுமென்று மனத்தில் நினைத்து, துதிசெய்துக்கொண்டு நிற்கும் முனிவரையும் மற்றத்தே வர்கள் இருடிகள் யாவர்களையுந் தத்தம் இருப்பிடம்போய்ச் சேரும் படி திருவாய்மலர்ந்தருளினார் ஒப்பொருவரு மில்லாத உமாமகே சர். எ-று. (உரு)

அக்கணங் கயிலைநாத னளகைகோன் றனைய ழைக்கத்
திக்கெலா மதிக்க வன்னோன் றிரண்டபொற் குவியல்தாங்கி
அக்கர வணிந்த யீச னருட்பதம் வந்து போற்றச்
செக்கர்மே னியனு மாங்கு சிலமொழி யருள லுற்றான்.

இ-ள். அக்கணமே கயிலாயபதியாகிய பரமசிவன் அளகாபுரி க்கிறைவனாகிய குபேரனைவரும்படி கட்டளையிட்ட மாத்திரத்தில் எண்டிசையு மதிக்கும்படி அவ்வரசன் அளவிறந்த பொற்குவியல்க ளோடும் பிரயாணப்பட்டு அக்குமணிகளாகிய உருத்திராட்சமாலை களையும் சர்ப்பங்களையும் ஆபரணமாகவணிந்த சிவபெருமானிடம்

வந்து அடிபணிந்து போற்றி நிற்கச் செவ்வானம்போன்ற தேககாந்தியுடையபரமசிவன் அவனைச் சிலவசனங்களையருளுவார். எ-று.

அளகையா ளரசேகேளு மருணையம் பதிவாழ் வேந்தன்
உளமுறு தியைச்சோ திக்க வுன்னிய படியா னீயும்
வளமுறுஞ் சீடனுகி மாநிதி யுடனெம் மோடு
புளகமாய் வருக வென்று புகன்றனன் கயிலை நாதன்.

இ-ள். அளகாபுரிக் கிறைவனே ; பூமியில் நாம் அருணையம்பதியில்வாழும் வல்லாளமகாராசன் மனவலியைச் சோதிக்கும்படி எண்ணங்கொண்டிருக்கின்றமையால், நீயும சிறந்த சீடனுகிய அளவிறந்த பொருளோடும் நம்முடன் மனமகிழ்ந்து வரக் கடவையென்று கூறினுா கயிலாயபதியாகியும் திரிநேத்திர முடையராகியும் விளங்கும் ஜெகதீசன். எ-று. (உஎ)

மாலய னிருவர் கண்டு மனத்தினி லென்று மில்லா
மால்கொள வும்ப ராரு மலர்மழை சொரிய வேத
நூல்களுந் துதிக்க யாரு நவலுதற் கரிய மாதோர்
பாலொளிர் பரமன் யாரும் பரவுஞ்சங் கமராய் நின்றார்.

இ-ள். விட்டுணுவும் பிரமனுங்கண்டு மனத்தில் ஒருநாளுமில்லாத மகிழ்ச்சிகொண்டு போற்றவும் தேவர்கள் மலர்மாரி பெய்யவும், வேதாகமங்கள் துதிக்கவும், யாவராலுஞ் சொல்லுதற்கரிய உமாமகேஸ்வரியை ஒரு கூறுகக்கொண்ட பரமசிவன் சகலரும் பணியும்படி சங்கமராய் வேடங்கொண்டு நின்றார். எ-று. (உஅ)

தேவுறை கயிலை வாழுந் திருவுயர் சிவக ணங்கள்
யாவுமெம் மைய னற்சீ ரருளினு லாண்டி யானார்
பூவுல கினில்வல் லாளன் பொருந்துநற் பதியை நாடிக்
கோமுறை யோர்கொண் டாடக் கூட்டமாய் வருவதானார்.

இ-ள். தேவ தேவனாகிய பரமசிவன் வாழும் கயிலாயகிரியில் வாசஞ்செய்து கொண்டிருக்கும் அழகிய சிவகணங்களெல்லாம் எமதையன் கருணாரசத்தினால் ஆண்டிக ளுருவங்கொண்டு உலகில் இணையில்லாக் கீர்த்தியை யெய்திப் பிரகாசித்துக் கொண்டிருக்கும் வல்லாள மகாராசன்வாழும் பதியை நோக்கி அரசநீதியோர் கொண்டாடிப் பணியத்தக்கதாகக் குருமூர்த்தமா யெழுந்தருளியிருக்குஞ் சிவபெருமானைச் சூழ்ந்துவந்தார்கள். எ-று. (உக)

எழுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

கற்பினி லுயர்ந்துங் கணவனை யிறைபோற்
கருதுதா யொருவரு மிலையோ
பொற்புறு மைந்த ரிலலையோ பசிக்குப்
போனக மளிப்பவ ரிலையோ
விற்பன முடைய வரசர்க ளிலையோ
வியப்புட னெங்களைக் கூப்பிக்
கற்பனை யோடு வமுதினைப் படைக்குங்
கண்ணிய ரில்லையோ வென்பார்.

இ-ள். கற்பினில் அருந்ததியைப்போல் மிகுந்தும் தந்தம் கணவனையே தெய்வமாகப் பாவித்து நடக்குந் தாய்மார்க ளொருவருமில்லையோ! அழகிய பெருமைதங்கிய வாய்மைகள் வாய்ந்த மைந்தர்களில்லையோ! அடியார்கள் பசிவேளையறிந்து அன்னங்கொடுப்பாரில்லையோ! மநுநீதியோடுங்கூடிய அரசர்களில்லையோ! மனப்பூர்த்தியாய் எங்களைத்தொழுது அழைத்துக்கொண்டுபோய் பத்திரசத்தோடும் அன்னம்பாலிக்கும் கண்ணியர்களு மில்லையோவென்று கூறுவார்கள். எ-று. (கூ0)

பொன்னளித் தாலும் வேண்டுவ திலேநற்
பூடணந் தரினும்யாம் வேண்டோம்
துன்னுமா மணிக ளளிக்கினும் விரும்போந்
தொங்குமுத் தாரமுங் கருதோம்
மன்னர்கள் செங்கோ லரசினை யெமக்கு
வழங்கினு மனமதி லில்லை
அன்னமீ தெம்மை யாதரிப் பாரே
லன்புட னுண்குவோ மென்பார்

இ-ள். செம்பொன் அளித்தாலும் விரும்போம் இரத்தினங்களை யழுத்தியிலங்கும் அழகிய பணிகளையும் விரும்போம். பிரகாசம்பொருந்திய ரத்தினங்களை அளித்தாலும் விரும்போம். முத்துமாலைகளினும் மனம்வையோம். அரசர்கள் செங்கோலின் விதியைத் தந்தபோதினும் வேண்டோம். அறுசுவை பதார்த்தங்களைகளோடும் அமுதளிப்பார்களானால் மிகவும் அன்பாய் உண்ணுவோமென்று அடியார்கள் கூறுவார்கள். எ-று. (நக)

நவ்வியங் கரத்தி ருந்ததை நீத்த
நாதர்சங் கமருமே நற்சீ
ரொவ்விய வருணை மாநகர்த்தெருவி
லொலியெழக் குமுதவாய் மலர்ந்து
வெவ்விய பசியான் மெலிந்தவ ரேற்க
மேவுவ போலவுங் கூவிச்
செவ்விய கொவ்வை வாயராங் கணிகைத்
தெருவினைச் சார்ந்தவ ராஞர்.

இ-ள். அழகியகரத்தில் மானைத்துறந்தவராகிய சங்கமர் சிறப்போங்கி இலங்கும் அருணையம்பதிவீதியில் ஓசைபெறத் தக்கதாகச்

செங்குமுதம்போன்ற திருவாய்மலர்ந்து கொடிதாகிய பசிப்பிணியால் துன்புற்று இரப்போரைப்போல வரற்றிச்சிவந்த கொவ்வைக்கனிபோன்ற கணிகைமாதர்கள் வசிக்கும் வீதியில் பத்தர் பரமசிவனை சங்கமர். எ-று. (கூ௨)

கெண்டைபோல் விழியுங் கிளிநிகர் மொழியுங்
கிளர்மதி வதனமு மென்பூச்
செண்டையார் குழலுங் கந்தம தலவுந்
தெங்கதின் குரும்பை நேர் முலையா
ரண்டையி லிருந்து வல்லிடி யளவு
மைங்கணை மாரனுற் புரியுஞ்
சண்டையை யகற்றத் தருபொனை மின்காள்
சாற்றுது மெனவவர் மொழிவார்.

இ-ள். சேறகெண்டைப்போன்ற அழகிய விழியையும், அஞ்சுகத்தையொத்த இனியவார்த்தைகளையும் ஆகாயத்திலிலங்கும் பூரணைச சந்திரோதயம்போன்ற திருமுகவொளியும், சீதள நிறைந்த களப மலர்களாற் கட்டப்பட்ட பாதைநிகர்த்த ஊசலாடுங் குழலும் சுகந்தங்களைத் திமிர்ந்து தென்னைக் குரும்பைகளைப்போற் பிரகாசிக்கும் இரண்டுகுயங்களையுடைய வனிதையர்கள்பக்கலில் இன்றிரவு விடியுமளவுமிருந்து முல்லை, அசோகு, நீலோற்பலம், மாம்பூ, தாமரை இவ்வைந்துமலர்களை ஐந்துகணைகளாகவும் கரும்பை வில்லாகவும் வளைத்து போர்புரிய எழுந்து நிற்கும் மன்மதன் கணைவலியைத்தடுத் தோட்டும்பொருட்டுப் பரியமாகக் கொடுக்கும் பொன்னைப் பகருவீர்கள் பெண்களேயென்று சங்கமர் வினவியபோது அக்கணிகைமாதர்கள் கூறுவார்கள். எ-று. (கூகூ)

மையார வணிந்த பரமனைப் போன்ற
பகரும் ஐயகேள் யாங்கள்

பொய்யது முரையோம் வஞ்சக முணரோம்
புணர்தலுக் கோரிருண் முற்றும்
தையல ரொருத்திக் காயிரங் கனகந்
தருவதவ் வாறளித் திடின்யாம்
மெய்யுடன் மெய்யும பொருந்திடக் கலவி
விளைத்துமன் மதன்வினை தவிர்ப்போம்.

இ-ள். வெவ்விய விடங்களையுடைய சர்ப்பங்களை ஆபரணமாக வணிந்த ஸ்ரீ கைலாயபதியாகிய பரமசிவனைப்போல் சொல்லுதற் கரிய சங்கமரே! யாங்கள் பொய்வார்த்தைகளைப் பேசோம், வஞ்சகமாகிய துரோகசிந்தனைகளையுங் கருதோம்; ஓரிரவு முழுமையுஞ் சுகலீலைகளை யநுபவிப்பதற்கு ஒவ்வொரு பெண்ணுக்கு ஆயிரம் பொன்கொடுக்கும் நியமமாதலால் அதுபோற் றருவீராயின் யாங்கள் எங்கள மனமும் மெய்யும ஒன்றுபடத்தக்கதாக அஷ்டவித ஆலிங்கனமுஞ் செய்து அனங்கன்கலையுங் கருதும் நாணும்படி புணருவோமென்றார்கள் கணிகைமாதர்கள். எ-று. (௯௪)

வேறு

பரத்தையர்க ளுரைத்தவணந் தந்துடனெவ்
வொருத்திக்கோர் பண்டா ரத்தைக்
கரத்தமைத்துப் பிரியாதீ ரெனைவுங்கண்
காட்டி மிகக் கட்டுபாடா
யுரைத்துவில மாதர்களின் வீதியெலாஞ்
சங்கமரா யொளிரச் செய்து
வரத்தைமிகத் தருமருணை நகரினிலெண்
காதமட்டு மருவச் செய்தார்.

இ-ள். அக்கணிகை மாதர்கள் சொல்லியவைபோல் அவர் மகிழும்படி கனகஞ்செலுத்தி ஒவ்வொருத்திக்கோர் ஆண்டியை நியமி

த்து கற்குல்விடியளவும்விட்டு நீங்காதீர்களென்று கண்சாடையி னூற் றெரிவித்து மிகவும் கட்டுப்பாடாக அக்கணிகைமாதர்கள் வா ழும் வீதியெல்லாம் சிவனடியார்களாகவே பிரகாசிக்கும்படி செய்து எண்ணிய எண்ணங்களையெல்லா முற்றசெய்யும் அழகிய அருணை யம்பதி எனகாதம் வரையிலுஞ் சுரதலீலை புரியசசெய்தார் சங்கம ராகிய பரமசிவன். எ-று. (௩௰)

வேறு.

விலைமாதர் தனித்தொருவ ரில்லாம
லரிதாக்கி வெய்ய காமன்
கலைமார்க்கப் படிமருவச் செய்தசங்க
மரும்நீங்கிக் கமழு மாநன்
னிலைமார்க்க மாய்ந்திட்ட சீடனுடன்
மேவவந்த நிலத்தை யாளுந
சிலைமார்க்க மறிந்தமன்னன் கண்டெதிர்சென்
றிறைஞ்சிபழைத் திருத்திச சொல்வான்.

இ-ள். விலைமாதர்கள் தனித்து எங்கும் கிடைக்காது அரிதா கச்செய்து கொடிய மன்மதன் சாஸ்திர விதியின்படி அஷ்டவித ஆலிங்கனமும் நகக்குறி தந்தக்குறி தாடனங்கள் அறுபத்துநான் குவித லீலைகள் இவைகளையுஞ் செய்யச்செய்த சங்கமராகிய சகதீ சன் அருணின்றெழுந்து பிரகாசமும் பெருமையும் பொருந்திய நன்மார்க்க நிலையைப் பரிசோதித்த சீடனாகிய அளகேசனோடும் அரசன் அரணமனையைநோக்கிச செல்லுகையில், அப்பதிக்கிறை வனாகியும் தநுர்வேதமார்க்கம் யாவும் பூரணமாயுணர்ந்த மன்னனு மாகிய வல்லாளமகாராசன் சங்கமர் வருதலைக்கண்டு எதிர்சென்று பணிந்து போற்றி யழைத்துக்கொண்டுபோய் நவமணிகளா லலங் கரிக்கப்பட்டு பிரகாசமபொருந்திய அழகிய ஒரு சிங்காதனத்தில் எழுந்தருளச்செய்து அஞ்சலியத்தனாய் நின்று கூறுவான் எ-று.

அறுசீர்க்கழி நெடிலாசிரியவிருத்தம்.

பண்ணியதவமோவன்றிப் பாரினிலியானியற்றும்
நண்ணியகருமம்யாதோ நயக்கினவ்வாறுநல்க
புண்ணியவசமோதேவர் பொன்னடிவருநகவிந்த
கண்ணியிழுறுவேனறங்கள்கடாக்ஷமும்பெறுவேனென்றான்

இ-ள். தமியேன்செய்த தவப்பயனோ! அல்லது ஸ்ரீ அருணை சலேசுராவாழும் இவ்வருணையம்பதியில் எளியேனாற் செய்யப்பட்ட கிரியைகளின் புண்ணியமாமோ! பரம சிவதரைப்போலெழுந்தசுவ கமதேவரின் பிரகாசமபொருந்திய தவசமயமாகிய உபயசரணகமல ங்கள் வருத்தமுறும்படி இவ்விடம் அருள்சுரந்த விதிபாதோ! அவ ற்றைத் திருவாய்மலர்ந்தருளினால் அக்கன்மையா யடியேன் நடத் திக்கணவிறுலவதல்லாமலும் தேவரீர் கருணாகடாட்சத்திலும் தோ ய்வேனென்றான் வல்லாளமகாராசன். எ-று. (கஎ)

மன்னனேகேளாரசநீதி மாராக்கமும்நீடுவாழி
உன்னையாமகருதிவந்த நோக்குவமுருவில்மாரன்
பன்னுமைங்கணைபாலின்று படுத்திடுந்துயமாற்றக்
கன்னியைநல்கிறகீர்த்தி கடலேழும்வயங்குமென்றார்

இ-ள். இப்பூமண்டலத்திற் கீர்த்திபொருந்திய வல்லாளமகா ராசனே! உன் அரசும், செங்கோன்முறைமையும், நீடூழிகாலம் வா ழி; இப்போது உன்னை யாம் வேண்டிவந்தகாரணம் யாதெனில். உ ருவிலியாகிய மன்மதனுலெய்யும் முல்லை, அசோகு, நீலோற்பலம், மாம்பூ, தாமரைமலரென்று சொல்லப்பட்ட ஐந்து கணைகளினாலும் இன்றுயாம் படுந்துன்பத்தை நீக்கும்பொருட்டு ஒருமாதை எனக்கு க்கிட்டும்படி செய்வையேயானால் உன்கீர்த்தி எழுகடல்சூழ்ந்த இவ் வையகத்தில் விளங்குமென்றார் சங்கமராகிய பரமசிவம். எ-று.

இதைவிட தேவ ரீருக்
  கெழின்மண முடிப்பிப் பேனென்
றதையுணர்ந் தைய ராமே
  ரரசேகே ளதுமா தொல்லை
வதைசெயுங் காம நோயை
  மாற்றுதல் விலைமா தர்க்கே
புதையல்போற் றெரியு மென்று
  புகன்றனர் பெரியோ ராங்கு.

இ-ள். இவ்வாறு பரமாதரை இச்சித்துத் திரிவதைப் பார்க்கிலும் எக்காலமும் தேவரீரைவிட் டகலாம லிருக்கும்படி சிறப்போங்கிய மணஞ்செய்து வைக்கிறேனென்று மிகு பத்தியும் பரிவுங்கொண்டுரைத்த வல்லாள மகாராசனது அன்பு நிலையையறிந்த சங்கமராகிய சிவபெருமான் சொல்லுகின்றார், அரசனே? இப்போது நீ சொல்லிய வார்த்தை கொடிய துன்பத்திற் கிடமாயும், சுடர்முன் மெழுகுபோல் மனம் ஒருங்கு படுக்காமல் பலவிதகோலங்களை உண்டுபண்ணி அலையச்செய்யும்; அதுவல்லாமல் பஞ்சேந்திரியங்களுந் தடுமாறி காம வெகுளி மயக்கத்தால் காவறட்சிசெய்யும் சுகப்பிணியைப்போக்கும் ஔடதம் விலைமின்னார்களுக்குக் கைவல்லியப்பட்டதேயன்றி இதரமான மாதரறியார்கள்; ஆதலான் அவரால் என்பிணிமாற்றுவிப்பாயென்று பெரியோராகிய சங்கமர் கூறினார். எ-று. (௩௧)

நிட்டைசெய்வோர்க்கும்போத நிகழ்த்துசங்கமரேதங்க
ளிட்டத்தின்படியான்செய்வே னென்றிறைகாவலோரை
விட்டதின்விரைவிற்சீரார் வேசையாமொருமின்னனை
இட்டமாயழைமினென்ன வேகினர்வாய்மின்மிக்கோர்.

இ-ள் இல்வாழ்க்கையைக் கடந்து சதாநிட்டை செய்யும் தபோதனர்களுக்கும் ஞானோபதேசஞ் செய்விக்கும் மகிமை பொரு

ந்திய சங்கமரே ! உமது கருத்தின்படியே நடத்துகிறேனென்று அங்குள்ள காவற்காரனை அழைத்துநீங்கள் அதிசீக்கிரமாய் சிறப் போங்கிய கணிகைமாதர்கள்வாழும் வீதியிற்சென்று அதிரூபலாவ ண்யமுள்ள ஓர்மாதை அழைத்துவாருமெனென்று விடைதரக் கூற றினும் அதிவேகமாய் நடக்குமகாவலாளர்கள் சென்றார். எ-று.(சo)

சென்றுவேசையர்கள்வாழுந் தெருமனைதோறும்புக்கு
நின்றங்குநோக்குங்காலே நிருபமாய்நடனகீதம்
கொன்றைசூடியவெம்மா றனை தமு முனைராடல்கண்டு
இன்றுதவாதென்றெண்ணி யிறைகதெரிந்துரைப்பதானார்.

இ-ள். அரசன் ஆக்கினையைப் பெற்றுச் சென்ற தூதர்கள் அழகிய விலைமாதர்கள்வாழும் வீதிகளில மனைகள் தோறும் புகு ந்து புகுந்து பார்த்து வருகையில், ஒரு வீடாகிலும் நீங்காமல் சுர லய காளததோடுகூடிய பரத நாட்டியங்கள் வீணைகான சங்கீத முழ க்கத்தோடும் பொன்னிறம்போன்ற கொன்றைமாலையைச் சூடிய சிவனடியார்கள் வீடுகள்தோறும் தனித்தனியாயிருந்து ஆனந்தித் துக்கொண்டிருக்குஞ் சம்பிரமங்களைக்கண்டு இன்று முடியாதென் று கருதினவராய் தமது அரசனிடமவந்து கூறினார்கள். எ று. ()

எழுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்.

அம்மொழி யோர்ந்த மன்னவன் வெகுண்டே
　யமைச்சரை நோக்கியே புகல்வா
னம்மொழி பிறழ்வ தான்றிருச் செயலோ
　நாட்செய்த பூசையின் குறையோ
செம்மொழி யார்ந்த சங்கமர் கேட்ட
　தெரிவையர் கிடைப்பது மரிதென்
றிம்மொழி யவர்மு னிசைப்பது முறையோ
　வென்னவு மமைச்சர்க ளிசைப்பார்.

இ-ள். இவ்விதமாய்த் தூதர்கள் உரைத்தமொழியைக் கேட்ட அரசன் கோபித்துத் தன் மந்திரிமார்களைப் பார்த்துச் சொல்லுவான் நாம் பரமசிவத்தின் அடியவராகிய சங்கமருக் குரைத்தமொழி பிரண்டுபோவது சகதீசனாகிய ஸ்ரீ அருணாசலேசுரன் திருவுளச் செயலோ அல்லது நாம் ஆண்டவனுக்குச்செய்த பூசையின் குறைவோ! என்செய்வேன்! செவ்விய சொற்கள் பிரகாசிக்கின்ற சங்கமர் நம்மை நாடிக்கேட்டமாதர் கிடைப்பது அரிதென்று அவர்முன் னாய்புகலுவது தருமமோவென்று துன்பப்படும் வல்லாள மகாராசனைப்பார்த்து மந்திரிமார்கள் சொல்லுகின்றார்கள். எ-று. (சஈ)

சிந்தையிற் கவலை யுற்றிட வேண்டாஞ்
செல்வனே பேதையாம் சென்று
விந்தைகொள் வேசை மாதினைக் கொணர்வோம்
வியாகுலம் விடுமென வவர்வாழ்
சந்தைகொள் வீதி யடர்ந்தவர் மனையிற்
றங்கிய கோலமுநோக்கிப்
பந்தனேர் முலைமேற் சந்தமுமணிந்த
பரத்தையர்க் கெடுத்துரைப் பாரால்.

இ-ள். மனத்திற் கவலைகொள்ள வேண்டாம் அரசே! கடையர்களாகிய யாங்கள்சென்று அடியவர் எண்ணியவண்ணம் அதிரூபலாவண்யமுள்ள கணிகைமாதைக் கொண்டுவருவோம், தாங்கள் துன்பமொழியுமென்று சொல்லி அவர்வாழும் பேட்டையாகிய வீதிகளிற்சென்று மனைகளிற் புகுந்துபார்க்கையில்; எங்குஞ்சிவனடியார்களாய் விளங்கியிருப்பதைப் பார்த்தும் பந்துபோன்ற அழகிய தனங்களின்மீது சுகந்த பரிமளங்களையணிந்திருக்கும் விலைமாதர்களுக்குச் சிலவார்த்தைகளை எடுத்துச் சொல்லுவார்கள். எ-று. ()

மையுலாம் விழிசேர் மாதர்க ணெருங்கி
வாழுமிவ் வீதியி லொருத்தி
மெய்யுலா மரசை நாடிய பெரியோர்
விரகத்தைத் தணித்திடு வாரேல்
கையுலாங் கடகப் பணிமணி வடமுங்
கலித்திடு சதங்கையு மணிந்து
நெய்யுலாந் தயிர்பா லறுசுவை யன்ன
நிரந்தர முண்டுவாழ் குவரே.

இ-ள். நீலோற்பலம்போன்ற பிரகாசம்பொருந்திய கண்களை யுடைய பெண்கள் கூட்டமாய்வாழ்ந்து கொண்டிருக்கும் வீதியில் யாராகிலும் ஒருமாது உண்மைவிளங்கும் எங்களிறைவனை நாடி நயந்த சங்கமர் வெவ்விய காமநோயைத் தணிப்பாரேயாகில் அவர்கள் இருகரங்களுக்கும் கடகமும், நவமணிகளாலமைந்த ஆபரணங்களும். முத்துமாலைகளும், ஓசையைக்கொடுக்கும் பாதச்சதங்கை முதலிய நூபுரங்களை அணிவதல்லாமலும்; நெய் பால் தயிர் அறுசுவை பதார்த்தங்களோடும் அமுதுண்டு சதாகாலமும் யாதுகுறைவின்றி வாழ்வார்கள். எ-று. (சச)

இன்னவா றறைந்தச் சருறைக்கவும் பின்று
மிறைஞ்சியே யாங்க ளெல்லோரும்
முன்னுப வடியா ரிடம்பொரு ளிரவு
முழுமையு மிருந்திடப் பெற்றோம்
துன்னுமிவ் விரவு கழிந்தபின் நீவிர்
சொற்றது போலவா மமைச்சர்
தன்னகஞ் சலித்து மன்னனுக் கதனைச்
சாற்றவு மாங்கவன் மொழிவான்.

இ-ள். இவ்வண்ணமாய் மந்திரிகளுரைத்த மொழியைக்கேட்ட மின்னலைப்போற்றவளும் இடையினையுடைய அக்கணிகை மாதர்கள், எதிர்வந்து நின்று பணிந்து பலவாறாகத்துதித்து நாங்கள் யாவரும் இன்றுபகற்போதே நம்மையாட்கொள்ளும் ஸ்ரீ அருணாசலேசருடைய மெய்த்தொழும்பராகிய இவ்வடியார்களிடமின்றிரவு விடியுமளவும் சகலீலைகளுக்கிணங்கி நடப்பதாய்ப் பொன்னைப்பெற்றுக்கொணடோமாதலால் இந்நாள் செல்லுமானால் தேவரீர்சொல்லியபடி நடக்கலாமென்று மொழிந்தவைகேட்ட அமைச்சர்கள் தத்தம்மனஞ்சலித்து அவணின்றுநீங்கி அரசனிடம் வந்துரைக்க, அப்போது கூறுவான் வல்லாளமகாராஜன். எ-று. (சு௬)

அற்பமிது நமக்கரிதா யிருப்ப தென்கொ
லந்தோவென் றயர்வுற் றுங்கு
பற்பலவாய் சிந்தைதனி லேக்கமுற்றி
திறையருளும் பான்மை தானோ
தற்பரனைப் போலெழுந்த சங்கமருக்
குரைத்த வண்ணந் தருவே னென்று
வீறுபொருதும் வேந்தன திவிரைவாகக்
கணிகையர்பால் மேவி னானல்.

இ-ள். அர்பமாகிய இச்செய்கை நமக்குக் கிடைப்பதுதுற்பலமாகவிருக்கும் காரணம்யாது! ஐயோ ! என்று அரசன் துன்பமடைந்து, பின்பு பலவிதமாய் மனத்தில் எக்கங்கொண்டு இதுவும் பரமசிவனுடைய திருவிளையாடல் தானோ ! சகதீசனைப்போல் வடிவுகொண்டு எழுந்தருளிவந்த சங்கமர் எண்ணிய எண்ணந்தருவேனென்றெழுந்து வில்வேந்தியொளிரும் வல்லாளமகாராசன், மிகவும் தீவிரமாய் விலைமாதர்கள்வசிக்கும் வீதிக்குச்சென்றான். எ-று.

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

வந்தவரெதுகேட்டாலும் வழங்குதுமெனப்பிரதிக்கை
அந்தரமளாவநாட்டி யளித்திடுநாளிலின்று
சுந்தரசங்கமற்குச் சொன்மொழிப்பிறழாதென்னைப்
பந்தமாய்க்காப்பவட்கிப் பதியினைத்தருவேனென்றான்.

இ-ள். நம்பதியை நாடிவந்தவாகள் எந்தப்பொருளை எண்ணிக் கேட்டபோதினும் கொடுக்கின்றோமென்று ஆகாயபரியந்தம் உயர்ந்து பறக்கும்படியாய்த் துவசமுயர்த்தி நடாத்திவரும் நாட்களில். இன்று விரகவேதனையால் மெலிந்து நம்மை நாடிவந்த அழகிய சங்கமருக்கும் உமது நோயை யகற்றுவோமென்று கூறிய வண்ணம மாறாது ஆசையோடுங் காப்பாற்றிய கணிகைக்கு என் அரசுக்குரிய இப்பதியை அளிப்பேனென்று உரைததான் வல்லாள மகாராசன். எ-று. (சஎ)

கரிபரி யுடனும் வேண்டுங்
கனகமுந் தருவேன் முத்துச்
சொருகிய சிவிகை யீவேன்
றொல்லுல காள்வ தற்கிங்
கரியசெங் கோலு நல்கி
யவர்க் கியான் பணியுஞ் செய்வேன்
பெரியவர் விரகந் தீர்த்தாற்
பெற்றதா யெனக்கா மென்றான்.

இ-ள். யானை, குதிரை, முதலியவைகளோடுந் தாங்கள் வேண்டிய பொன்னுந்தருவேன்; இதல்லாமலும். முத்துகளினால் அலங்காரஞ்செய்த பல்லக்குங்கொடுப்பேன்; இப்பூமண்டல முழுமையும ஆளுகினைத்தபோதிலும் என்செங்கோலைக் கொடுத்தாளும்படி செய்து அவர்கட்கு யான்பணிவிடையுஞ்செய்வேன்; இன்று நாடிவந்த

சங்கமரது காமநோயைத் தணித்தால் என்னைப்பெற்ற அன்னையு மாவார்களென்று அரசர்க்கரசனாகிய வல்லாளமகாராசன் றான். எ-று.

உலகினில்வருஞ்சுகத்து ளுயர்சுகமிதுவேயென்று
கலையுணர்முனிவரா றுங் கழறுவராதலானந்
தலமதிலுற்றசெய்ய சங்கமர்விரகந்தீர்த்தால்
இலகுமென்னுயிர்கேட்டாலு மீகுவேன்வருவீர்மின்காள்.

இ-ள். கடல்சூழ்ந்த இவ்வுலகில்வழங்கும் இன்பங்களுக்கெல்லாமேலாகியது மானார் விழியினையுடைய பெண்களின் கலவித்தொழிலில்வரும் இன்பமே யதிகமென்று வேதநூலுணர்ந்த முனிவர்களும் கூறியிருக்கின்றார்கள்; ஆதலால் நமதுபதியை நாடிவந்தமேன்மைபொருந்திய சங்கமரைவருத்தும் விரகவேதனையை இன்றுமாற்றினவர்களுக்கு பிரகாசம்பொருந்திய என்பிராணனைத் தானமாகக் கேட்டபோதிலும் அளிப்பேன் வருவீர் கணிகைமாதர்களேயென்று கூறினன் வல்லாளமகாராசன். எ-று. (சுசு)

ஆதரவாகத்தங்க ளாணையின்படியேநாங்கள்
ஏதமிலடியர்தம்மோ டின்புறப்பொருளும்பெற்றோம்
காதவென்செய்வோமென்று நங்கையர்பணிந்துரைக்கப்
பூதலமன்னன்வெட்கிப் புகழ்மனைவந்துசேர்ந்தான்.

இ-ள். அரசன் சொன்னமொழியைக்கேட்ட விலைமாதர்கள், தேவரீர் ஆக்கினையின்படி நடந்துவரும் நாங்கள் இன்று குற்றமற்ற பரமசிவத்தின் அடியார்களிடத்திற் கலவித்தொழில் புரியும்பொருட்டு பொருள் பெற்றுக்கொண்டோமாதலால் எங்களை ஆட்கொள்ளும் இறைவனே! யாங்க ளென்செய்வோமென்று அடிபணிந்துரைத்தமொழியைக் கேட்ட வல்லாளமகாராசன் நாணமுற்றவனாய் கீர்த்திபொருந்திய தன் அரண்மனையைச் சேர்ந்தான். எ-று.

எண்சீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்.

இல்லமுற்ற மன்னன்மதி வதன மாறி
இருப்பதனை மங்கையர்க ளிசைந்து நோக்கி
மல்லமா தேவியரு மிளையா ளாகும்
வண்மைமிகு சல்லமா தேவி யாரும்
தொல்லுலகைப் புரக்கவல்ல எங்கள் கோவே
துன்பமுற்ற காரணமென் னவற்றை நீவிர்
சொல்லுமென வடிபணிந்து வினவ வாங்கு
தூயநெறி யோனவருக் கிதுசொல் வானால்.

இ-ள். அரண்மனைவந்து சேர்ந்த வேந்தனுடைய பூரணசசந்தி ரோதயம்போன்ற முகாரவிந்தம் சலனத்தால் வேறுபட்டிருப்பதைக்கண்ட அவன் தேவிமார்களில் மல்லமாதேவியும் மிகு வண்மைபொருந்திய இளையாளாகிய சல்லமாதேவியும் நெருங்கிவந்து நெடியகடல்சூழ்ந்த உலகங்களை யெல்லாம் ஒரு குடை நிழலினின்று பரிபாலனஞ்செய்யும் எமகன் காதலனே! எந்நாளு மில்லாது இன்றுமனத்திற றுன்பம் சேர்ந்தவாறென்னை? அதனை தேவரீர அருளிச் செய்யவேண்டுமென்று பாதகமலங்களிற் பணிந்துகேட்க, அங்ஙனம் பரிசுத்தமாகிய நிலைமையுடைய வல்லாளமகாராசன் மங்கையர்களுக்கு நடந்தசெய்தியைக் கூறுவான். எ-று. (௬௧)

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.

இன்றொரு முதியோர் மாறு
ரின்பத்தி லிச்சை கொண்டு
வென்றிசேர் நம்மை நாடி
வினவிய படிக்கி சைந்தேம்

மன்றதில் விலையின் ளார்கள்
வாய்ப்பது மரிதா ளைந்தே
னென்றவர் வாய்மை கேட்ட
வெழின்மனை யாருஞ் சொல்வார்.

இ-ள். இன்று ஓர் பெரியவர் சேல்போன்ற விழியினையுடைய மடந்தையர்கள் மயக்கத்தின்மேல் மனம் வைத்து, வெற்றிபொருந்திய கம்பதியைசேர்ந்து, நம்மை வினவிய வணைமிசைந்து இவ்வருணைமாநகர் முழுமையும் விலைமாதர்கள் வாழும்வீதி யெவகளுந் தேடியும் கிடைப்பது அரிதாயிருப்பதால் துன்பமுற்றேன்! நான் கொண்டிருந்த வைராக்கியத்தையும் துறந்துவிட்டேன்? என்செய்வேன்! அடியவருக்குரைதத மொழி தப்பிப் போகின்றதேயென்று கூறித் துன்பமுற்றிருக்கும் வேந்தன் வாய்மையைக்கேட்ட மங்கையர்கள் சொல்லுவார்கள். எ-று. (கூஉ)

எண்சீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்.

விரகமுற்ற வடியவர்க்கு வாக்களித்த வேந்தே நின்
மனம்பாதோ வறிகி லோம்யாம்
இருவர்களிற் சிறியவளா மென்னை யன்னோற்
கிசைத்திடவுங் கருத்துளதே விசைவே னென்றாட்
திருவளரு மன்னனக மகிழ்ந்து நோக்கிச்
சேயிழையே யடியவரோ டுறையிற் சேர்ந்து
உருவிலியாற் படுந்துயர மொழிப்பா யென்று
உத்தமனும் பெரியவருக் குரைத்திட் டானே.

இ-ள். விரக வேதனையால் மெலிந்துவந்த சங்கமருக் கந்நோயைத்தீர்தணியச்செய்கிறேனென்று வாக்குத்தத்தஞ்செய்த எங்களரசே! தங்களுடைய கருத்து எத்தன்மையதோ சிறியேங்களறியோம்,

ஆதலால எங்களிருவர்களிற் சிறியவனாகிய என்னை அவ்வடியவர்க் கிசையச் செய்யும்படியாய் கருத்திருக்குமானால் தேவரீர் எண்ணை குறைவுபடாம லவ்விதமே கேட்கின்றேனென்று கூறியபோது, இ லட்சுமி கடாக்ஷம்பொருந்திய வல்லாளமகாராசன் மனமகிழ்ந்து தன் மனைவியைப்பார்த்து பெண்கள் நாயகமே! என் எண்ணத்தை நிறை வேற்றிவைத்த என்னிரு கண்மணிகளே? நம்மை நாடிவந்த சங்கம ரோடு பள்ளியறையிற் சேர்ந்து மன்மதனாற் படுந்துனபத்தைப் போ க்குவாயென்று சொல்லி விடைகொடுத்துப் பின்னர் உத்தமகுணத் தை யுடையவனாகிய மன்னவன் பெரியவரிடஞ்சென்று, தேவரீர் கருத்தின்படி யமைத்தேன், அங்கீகரித்துக் கொள்ளுமென்று மிகு பத்தியோடு கூறினான். எ-று. (௬௩)

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

அககணநன்னீராடி யழகுறவறையுட்சேர்ந்து
மிக்கநல்வீணையைமீட்டி விநோதமாய்க்கீதம்பாடிப்
பக்கலினெருங்கியந்தப் பரமனைப்பார்க்குங்காலி
லக்கணிமெய்யனங்கே யரியயோகத்திலுற்றான்.

இ-ள். இராசபத்தினியாகிய சல்லமாதேவியுடனே மஞ்சன மாடி ஆடையாபரணமணிந்து சுகந்த பரிமளங்களையணிந்து பஞ்ச கச்சாய லங்கங்களேந்தி வீணையெடுத்துப் பள்ளியறையுட் பிரவே சித்து இந்திரநீல மரகதங்களா லமைத்தொளிரு மஞ்சத்தில் அம்ச தூளிகா சயனத்தின்மீ தாரோகணித்துக்கொண்டிருக்கும் அடியவர் பக்கலினின்று நனி இன்னோசையைத்தரும் வீணையை மீட்டிக் கீதம்பாடிக்கொண்டு சிலநேரஞ் சென்றபின்பு பெரியவர் சித்திரப் பிரதிமைபோ லசைவற்றிருப்பதை நோக்கையில் உருத்திராட்சமா லிகாபரணமணிந்து விளங்கும் மெய்யினையுடைய பெரியவர் யோக நித்திரையிலிருப்பதைக் கண்டாள் சல்லமாதேவி. எ-று. (௬௪)

பின்னுமம்மங்கையுந்தப் பெரியவர்மகிழவெண்ணித்
துன்னுமங்கவர்மீதுற்ற சுகந்தநீரெடுத்துத்தூவி
நன்னயத்துடனேநிற்க நயனமுந்திறவாதன்னோர்
தன்னையும்நோக்காதாலுந் தயங்கியங்குரைப்பதானாள்.

இ-ள் பின்னையும் அருந்ததிக் கொப்பாகிய அவ்வரசி அங்ஙனம் யோகநித்திரையிலிருக்கும் சங்கமர் மனமகிழத்தக்கதாக நினைந்து பிரகாசம்பொருந்திய அவர்மீது சுகந்தமுறவும் பனிநீரையெடுத்துத் தெளித்தும் நன்னயத்தோடு நின்றும் கண் விழியாமலும் தன்னையும் நோக்காமலு மிருப்பதை யுணர்ந்த தேவி சிந்தைமெலிந்து கூறுவாள். எ-று. (கரு)

வேந்தனு னுரைத்த வாய்மை
வீண்பட முறையோ வந்தோ
ஏந்தலே யென் றிறைஞ்சி
யெழிலுறு மடநதை யாங்கு
சாநதமாய் மேல் விழுந்து
தழுவவப் பரம ராமேனார்
ஏந்தவுங் குழந்தை யாகி
யின்புற வழுவ தானார்.

இ-ள். அரசர்க்கரசனாகிய எங் கோமானுரைத்த வாய்மை வியர்த்தமாவது தருமமோ! ஐயோ! கடவுளேயென்று தொழுது அழகுலாவும் மாது அங்கு நித்திரையிலிருக்கும் பெரியவர்மேல் மெதுவாய்ச்சார்ந்து ஆலிங்கனஞ் செய்கையில், ஸ்ரீ கயிலாயபதியாகிய சிவபிரான் எந்துங் குழந்தை வடிவமாகி யவ்வணங்கு களிப்பும் ஆச்சரியமுங் கொள்ளத்தக்கதாக செங்குமுதம்போன்ற அழகிய வாயைத்திறந்து அழ வாரம்பித்தார். எ-று. (கசு)

அரனொரு குழவி யாகி
யலறியே யழுமபோ தங்கே
பரமனார் செயலென் றெண்ணிப்
பார்த்திபன் விரைவில் வந்து
கரமதி லெடுத் தணைத்துக்
களிப்புட னுச்சி மோந்து
விரகுட னிருக்கும் போழ்து
விமலனு மறைந் திட்டானல்.

இ-ள். திருக் கயிலாயபதியாகிய பரமசிவம் குழந்தை வடிவாய் அலறியழுகின்ற செயலறிந்த அரசன், இது ஆண்டவன் திருவிளையாடலென்று உணராது மிகத் தீவிரமாயங்குச சேர்ந்து, தாமரை மலர்போன்ற விருகரங்களா லெடுத்தணைத்து முத்தமிட்டு உச்சி மோந்து மிக்க காதலோடும் பேரானந்தங் கொண்டிருக்கையில், சகதீசனாகிய எம்பெருமான் மாயமாய் மறைந்தார். எ-று. (சுஎ)

எழுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்.

ஐயனே நினது திருவுளச் செயலை
யறிவனோ வறிவிலோம் யாங்கள்
மெய்யனே கண்கள் மூன்றுடை யானே
வேதனே வேதநா யகனே
துய்யனே யெம்மைச் சோதனைச் செயவோ
சுதனெனத் தோன்றியே மறைந்தீர்
செய்யனே யெங்கட் கென்விதி யென்று
தேவியோ டரசனு மெலிந்தான்.

இ-ள். சந்திர சடாதர மூர்த்தியாகிய ஐயனே! தேவரீரது திருவுளச்செயலை மடமையோ மாகிய யாங்கள் தெரிந்து கொள்ள

வோமோ! நீக்கமற்றவனே! நிர்மல குணனே! உலக நாயகனே! பரஞ்சுடரே! சிவப்பிரகாசா! அரகரா! அணணாமலைநாதா! உண்ணாமுலைபாகா! சடாமகுடத்தில் இளம்பிறையும். கங்கையும். ஞான உலாவும் தரித்த சோதி சொரூபா! காளகண்ட திரிநேத்திரா! கருதுமடியவர் தோத்திரா! மான் மழு சூல கபாலா! மறைபுகழ் சீலா! பாவ நாசா! காமதகனா! முயலகமர்த்தனா! திரிநேத்திரங்களை யுடையவனே! மறையுருவானவனே! சுருதி நாயகனே! பரிசுத்தனே! காலாந்தகனே! புலித்தோலுடையோனே! திரிபுரமெரித்தோனே! நாகாபரணனே! சிரமாலை தரித்தோனே! மார்க்கசகாயனே! மாதவர்களுக் கநுகூலனே! கஙகாதரனே! கிருபாகரனே! பராசத்தியை வாமபாகம்பெற்ற மகானுபாவனே! சர்வத்துக்கும் தாயாய் நின்றவனே! ஆபத்பாந்தவனே! அடியவர்களுக்கு அபயந்தந் தாதரிப்பவனே! மெய்ஞ்ஞானசசுடரே! உமது பரிசுத்தம் பொருந்திய உபய சரணாரவிந்தங்களுக்கு தொண்டனாகிய எளியேனைச் சோதனை செய்யும்பொருட்டோ புதல்வனாவுந் தோன்றி மறைந்தீர் ஈனமையுற்றவனே! எங்களுக் கென்னவிதி யென்று மங்கையருந் தானும் ஆறரப்படாத துன்பத்தி லழுந்தினார்கள். எ-று. (௬௮)

கொற்றவ னிவ்வா றுளமெலிந் தாங்கு
கோவெனக் கதறுமக் காலை
நற்றவத் தோர்க டுதிசெயு மீச
னுமைகி யுடன்விடை யேறிச்
சுற்றிலுங் கணங்கள் சூழ்ந்திட விதிமால்
றொடரவு மருணையம் பதிவாழ்
வெற்றிகொ ளிறைக்குத் தரிசன முதவ
வீரகுடன் பணிந்தவன் றுதிப்பான்.

இ-ள். அரசன் இவ்வகையாய் மனம் வெதும்பிக் கோவென்று வாய்விட்டலறி நிற்கையில், மகிமைபொருந்திய தவத்தினையுடைய ராசுகள் போற்றிப் பணியத்தக்க பரமசிவம் பார்வதி தேவியோடுமே வெள்விடையேறி அநேக சிவகணங்கள் சூழத்தக்கதாகவும், பிரமனும், விட்டுணுவும் வாகனங்களி லேறிவரவும் அருணையம்பதியை ஆளும் வல்லாளமகாராசனுக்குத தரிசனந்தந்த மாத்திரத்தில் ஆவலோடுமே பூமியிற் பணிந்தெழுந்து சிரத்தில் இருகரங்களையுங் கூப்பித் துதித்தான். எ-று. (௫௯)

அறுசீர்க்கழிநெடி லாசிரிய விருத்தம்.

ஆதியேசரணமண்மே லடியரைக்காக்கவல்ல
சோதியேசரணங்கங்கைத் தூயசெஞ்சடையிற்றுண்டப்
பாதிமாமதியணிந்த பரமனேதமியேற்குற்ற
நீதியைத்தாங்கவோர்சேய் நின்மலாவருளுவாயே.

இ-ள் ஆதி நாயகனாகிய தேவே சரணம்; உலகில் அடியார்களை சோதித் தாட்கொள்ளும் பூரணனே சரணம்; அருட்பெருஞ் சுடரே சரணம்; கங்கையையும் சந்திரனையும் பரிசுத்தமாய் பொன் போற் பிரகாசிக்குஞ் சடையிற்றரித்த பரம்பரனே! அடியேன் செங்கோல் விதியை ஏற்றுக்கொள்ளும்படி ஓர் புதல்வனைக் கடாக்ஷித்தருளல் வேண்டுமென்று தொழுதான். எ-று. (௬௦)

அந்தரமன்றுகேண்மோ சுதனுமக்கியாதுமேயானே
மந்தகதிறுமுனைக்கே மறைவிதிமுடிப்பாமென்று
சந்த்ரசேகரனார்வாழ்த்திச் சார்ந்தனர்கயிலைபின்னர்ப்
பந்தமாயுலகைவேந்தன் பண்புடனாண்டுவாழ்ந்தான்.

இ-ள். அழகுலாவுங் கீர்த்திபொருந்திய அரசே? யாமே உனக்குப் பிள்ளையாய்த் தோன்றினபடியால், உன் அந்தியகாலத்தில் வேதவிதியிற் கூறுஞ் சடங்குகளைச்செய்து வருவோமென்று சந்திரசடாதர மூர்த்தியாகிய சிவபெருமான் வாழக்கடவை என்று கூறித் தேவகணங்களுடன் கயிலாயகிரியைச் சேர்ந்தபின்பு, மிகுந்த ஆவலோடும் வல்லாளமகாராசன் அருணையம்பதியை ஆண்டு வாழ்ந்து வந்தான். ஏ-று. (கக)

ஏழாவது,

வல்லாளமகாராசன் சருக்கம்

முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-ஙிகஉ

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# தீர்த்தச் சருக்க வசனம்.

சைவபுராணத்திலே உருத்திர சங்கிதையிற் சொல்லப்பட்டன வற்றைக் கூறினேம். இனி இலிங்கபுராணத்திலே உரைத்தவற்றைச் சொல்கின்றேம். நாம் சொல்ல நினைத்த சரிதம் பிரமதேவர் சனகாதிக்கு உரைக்க அவர் வியாசர்க்குக் கூற வியாசர் சூதர்க்கும், சூதர் நைமிசாரணிய இருடிகளுக்கும் உரைத்ததாகும். தீர்த்தங்களின் மகிமையும் பிறவும் முறையாக ஒருநேரம் கௌதமமுனிவர் சுவாமிசந்நிதியில் யாகமொன்று செய்ய, சிவப்பிராமணர் ! தோன்றினர். அவரை நோக்கிச் சிவபூசைசெய்வீராக என்றார். பின்னர் எழுத்திருபத்தையைக் குண்டத்தில் இட, தேவதாசிகள் எழுவர் தோன்றினர். அவர்களைச் சுவாமிசந்நிதியில் நடனஞ்செய்வீராக என்றார். அவர்கள் தடாகங்கள் பலவற்றையுண்டாக்கிப் பூசை சிறப்பித்தனர். அத்தீர்த்தங்களின் பெயரும் அவற்றின் மகிமையும் கூறுவாம்.

1 அருணாசலத்திற்குக் கிழக்கே இந்திரதீர்த்தம் என்று ஒரு தீர்த்தமுளது. அது இந்திரனாலே உண்டாக்கப்பட்டது. தேவலோகத்தினையுள்ளவர் நாடோறும் அதனைக் கொழுகலால், சந்தனக் குழம்பின் வாசனையும் கற்பகப்பூவின் மணமுந் தோன்றும். அதனைக் கண்டு தைப்பூசத்தில் முழுகி ஆசமனஞ்செய்யிற் கோடி பிரமஹத்தி தோடம் நீங்கும்.

2 [illegible] அக்கினி தீர்த்தமுளது. அதன்கண் பங்குனி [illegible] திலே மாதர்களாலவரும் பாவங்கட்ள குடம். [illegible] சிரும். அதன்கண் முன்னோர்களில

சத்தமுனிவர் பத்தினிதனைவிரும்ப அதனையவன் மனைவியான சுவாகாதேவியுணர்ந்து அவ்வெழுபத்தினிமார் வடிவத்தையெடுக்கப் புணர்ந்ததனாலுண்டான பாவத்தை இத்தீர்த்தத்தின் மூழ்கியதனாற் போக்கிக்கொண்டான்.

3. தெற்குத்திசையில் யமதீர்த்தமுளது. இதன்கண் மூழ்கினோற் பொன்மயமானவடிவமும், தேகத்திலுள்ள நோய்நீக்கமும் உண்டாம். பிரமாவின் ஆயுதம்பட்டுத் தேகங்குறைந்ததை யமன் இதில் மூழ்கித் தீர்த்துக்கொண்டான்.

4. தென்மேற்குத் திசையில் நிருதி தீர்த்தமுளது. இதில் தோய்ந்தவர் பகையைவெல்வர். அவ்வாறே நிருதியெனனும் திக்குப்பாலகனும் இதில் மூழ்கினமையால் அகங்காரமான கொடும்பேயைத் தன்வயமாக்கிக்கொண்டான்.

5. குற்றமற்ற அருணகிரிக்கு மேலைத்திசையில் வருணதீர்த்தமிருக்கின்றது. இதில் மூழ்கினோர்க்கு நவக்கிரகங்களும் நற்பலனைக்கொடுக்கும். முன்னர் இதன்கண் சூரியன்முதற் கேது ஈறாகவுள்ள ஒன்பது கிரகங்களும் தம் இட்டத்தை யடையும்படி மூழ்கினார்.

6. வடமேற்றிக்கின்கண் வாயு தீர்த்தமுள்ளது. அதன்கண் மூழ்கினோர் எல்லாத் துன்பங்களும் நீங்கினவராவர்.

7 வடக்குத்திசையிற் குபேரதீர்த்த மொன்றுளது. அதன்கண் மூழ்கினோர் நவநிதிகளும் எல்கேட்பச் சகல போகங்களையும் அநுபவிப்பார். இதன்கண் மூழ்கிய இலக்குமி திருமாலின் மார்வைச்சேர்ந்தாள்.

8. அருணகிரிக்குத் தென்பக்கத்திற் சோணநதியுளது. அதன்கண் கங்கை [illegible] யமுனை, காவேரி, சிந்து, துங்கபத்திரை முதலியநதிகளெல்லாந்தோய்ந்து தங்களுக்குற்ற துயரினின்று நீங்கினர்.

பட்ட முத்துவிமானத்திலமர்ந்து பரமன்பதத்தில் வீற்றிருப்பர். கன்னிகாதானம் அன்னதானஞ்செய்தோர் பலன் அளவிட்டுச் சொல்லுதல் கூடாது. நந்தவனம் வைத்தோர், தடாகம், கிணறு, தண்ணீர்ப்பந்தர் முதலாயினவைத்தோர் நற்கதியாகிய சிவசாலோக்கியபதத்தையடைவர் மடங்கட்டினோர்பலம் வாயினாலுன்னவும்போமோ.

14. அசுவினிதீர்த்தம் வடகிழக்குத் திசையின்கணுள்ளது. இதன்கண் மூழ்கினோர் நற்பயன்களையுமடைவர்.

15. அகத்தியதீர்த்தம் இது யமதீர்த்தத்திற்குத் தெற்கேயுள்ளது. இதிற் புரட்டாதிமாதத்தில் மூழ்கி ஒருகை நீருண்டால் தமிழில் மகாவித்வான்களாயிருப்பர் சரஸ்வதி இலக்குமி யிருவரும் நீங்காது அவரிடம் வசிப்பர்.

16. சிட்டதீர்த்தம் இது குபேரதீர்த்தத்தி னருகேயுள்ளது இதின் மூழ்கினோர் ஞானம் அடைவர். இன்னும் அளவில்லாத தீர்த்தங்களுள.

ஒருகாகம் முன்னர்க்காலத்திற் கோயிற் பலிபீடத்தில் வைத்த அன்னத்தைக் கவரும்போது சிறகால் கீழேயடித்தது. அதற்காகச் சுவாமி இந்திரபதத்தைக் கொடுத்தருளினார். ஒரு பெருச்சாளி விளக்கையொன்று தோண்டும்போது மாணிக்கமணியைத்தோன்றி வெளிச்சஞ்செய்ய. சுவாமி அப்பெருச்சாளி தீபமிட்டதென்று அதற்குச் சாலோக்கிய பதமளித்தார். ஓர் சிலந்திகளும் அவ்வாறு வரங்கொடுத்தருளினர் மணலைச் சிவலிங்கமாக நினைத்தோனுஞ் சிவசாயுச்சியத்தை யடைந்தான்.

தீர்த்தச் சருக்க வசனம்

முற்றிற்று.







சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

எட்டாவது,

# தீர்த்தச் சருக்கம்.



செருமலையுங் களிற்றுமுகப் பிள்ளையிரு
பதம்போற்றித் திரையான் முத்தந்
தருமலையு மொருமலையுந் தொலைத்தமலைக்
கிழவனிரு சரணம் போற்றிப்
பொருமலையும் பிரமகலையு மடியாருக்
கொழிக்கவழற் பொருப்பாய் நின்றென்
கருமலையுஞ் செம்மலையும் பச்சைமலை
மடந்தையையுங் கருத்துட் சேர்ப்போம்.

[illegible]ர் யுத்தஞ்செய்யத்தக்க யானை முகத்தையுடைய பிள்ளை
யாரிரண்டு பாதங்களையும் வணங்கி அலைகளாலே முத்துக்களை செரு

ரமே சொன்னபடியினால் அநைதீக்கிப் பின்னுண்டாகிய கிலசரி திரைகளையுஞ் சொல்லுவோம். எ-று. (ச)

தீர்த்த மும்மதிற் செய்தரு மங்களும்
வாய்த்த வெற்பின் வலமுமி லிங்கமு
மேத்தி டாதவ ரெய்து மிகழ்ச்சியும்
பார்த்த ரன்பொருள் கொண்டவர் பாவமும்

இ-ள். தீர்த்தங்கள் மகிமையும், அதிற் செய்யப்பட்ட தருமங் நும் கிரிப்பிர தக்ஷிணததின் மகிமையும், இலிஙகமகத்துவமும், மாமியை வணங்காதவ ரடையு மிகழ்சசியும், அவரடைந்த இகழ் ச்சையைப்பார்த்துச் சுவாமியின்பொருளை அபகரித்தவாகளுககு வ ின்ற பாவமும். எ-று. (ரு)

பந்த மாயறி யாதுசெய் பாவமுஞ்
சிந்தை யார வறிநதுசெய் தீமையு
முநதை யோர்க ளொரிந்த முறைமையு
மெந்தை நாண மகிழ்வுமி யம்புவேன்.

இ-ள். பந்தவசமா யறியாமற்செய்த பாவமும், மனதார அறி துசெய்த பாவமும், முறகாலத்திலுள்ளவர்கள் அப்படிவந்த பா ரைததை நீததுககொண்ட முறைமையும், சுவாமியினால் மகிழ்ச் அடைந்த புழுகுபூனையின் செய்கையுஞ் சொல்லுகினறேன். ()

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

விருப்பில் கோகமறை ரீசன்
றிருமுனை வெள்ளி நாட்டக்
திருப்பொலி சடையோன் றன்னுற்
சென்னித்திடு மறையோ னங்கு

வருட்பொலி கனலோ னென்ன
வுதித்தன னவனை நோக்கிப்
பொருப்பிறை யுவனைப் பூசை
புரியெனப் புகழ்ந்து சொன்னான்.

இ-ள். உலகத்து ஆசையில்லாத கௌதமரிஷி, சுவாமி சந்நிதிமுன் வேள்வியொன்று செய்வதற்கு எத்தனித்து அக்கினி வளர்க்க. அழகுபொருந்திய சடையையுடைய அந்தச சுவாமி கிருபையால் முன்னமே தோனறியிருக்கிற சிவப்பிராமணன் அந்தயாகத்தில் * அக்கினி சொரூபம்போலப் பிறந்தான்; அவனைப் பார்த்துக் கிரிரூபமாகி விளங்கிய அருணாசலேசுரரைப் பூசை செய்யென்று புகழ்ச்சியாக உபசாரஞ்சொனனார் எ-று. (௪)

மற்றுமேழ் தருப்பை தீயி
லிடுதலு மலாமா தென்னக்
கற்றையங் குழலேழ் மினா
ருதித்தனர் கணிகை மாராய்
நிற்றலு மிறைவர் முன்னே
நிருத்தமே புரியு மென்று
னற்றடம் பலவுங் கண்டு
நகரமுஞ் சிறப்புஞ் செய்தார்.

இ-ள். அதன்பின் கௌதமர் எழு தருப்பையை யெடுத்துக் குண்டத்தின் அக்கினியிலே போட்டவளவில், இலட்சுமிபோல [illegible] கற்றையாயிருக்கின்ற கூந்தலையுடைய எழுபெண்கள் தேவதா[illegible] ளாகப்பிறந்தார்கள்; அவர்களைப்பார்த்து நீங்கள் சுவாமி சந்நி[illegible]

* அக்கினி சொரூபம்போல் பிறந்தான் என்கிற மொழி[illegible] ஸ்கந்தம் புராணத்தில் தெரிந்து கொள்க.

காட்டியருஞ்செய்து வாருங்களென்றார், அவர்கள் நன்மையாகிய தடாகங்கள் பலவுண்டாக்கி ஊரைச்சிறப்புச் செய்தார்கள். எ-று. ()

மந்திரம் பரவும் வன்னி மலைதனக் கடுத்த கீழ்பா
லிந்திர தடமுண் டந்த விந்திரன் முதலே கண்ட
தந்தீர்த் தமரர் தாமு மதிற்றின மூழ்க லாலே
சந்தனக் குழம்பு நாறு மணக்குமைந் தருவின் மாலை.

இ-ள். தேவர்கள் மந்திரங்களாலே தோத்திரஞ் செய்யப்பட்ட அக்கினிமலைக்கு அடுத்த கிழக்குத் திக்கில் இந்திர தடாகமென்றொன்றுண்டு; அது இந்திரன் முன் னுண்டாக்கினது; தேவலோகத்திலுள்ளவர்கள் அதில் நித்தியமும் முழுகுதலால் சந்தனக்குழம்பின வாசனையுங் கற்பகப்புட்பத்தின் மாலையினுடைய வாசனையும் மணக்கும். எ-று (௯)

பிரமமா மிதிற்றைப் பூசம் படிந்திடிற் பருகிற்கோடி
பிரமபா தகம்போ மென்று லதினலம் பேச லாமோ
சுரர்பதி மூழ்கி முன்னை தொடர்ந்த தீவினைக டந்த
னிரவியுள் ளளவும் வாழ விமையவ ருலகம் பெற்றான்.

இ-ள். மேன்மைபொருந்திய அந்த இந்திரதீர்த்தத்தில் தைப்பூசத்தில் ஸ்நானஞ்செய்து ஒருகைசலம் ஆசமனஞ்செய்தால், கோடிபிரமஹத்தி தோஷம் போமென்று அதன்பெருமையைப் பேசக்கூடுமோ! இந்திரன் முன் அதில் மூழ்கித் தன்னைப்பற்றிய தீவினைகளை நீக்கிக்கொண்டு சூரியனுள்ளளவும் வாழத் தெய்வலோகத்தையும் பெற்றான். எ-று. (௧௦)

அங்கதனை யடுத்த தீர்த்த மருணைமால் வரைக்குதென்
கீழ்ப்பாற், பொங்கிய தகனின் மீனத் திங்கட்பூ ரணையின்

மூழ்கித், செங்கயற் கருங்கட் செவ்வாய்த் திருந்திழையவ ரால்வந்து, தங்கியவினையுந்தீருந் தருமமுந் தவமுஞ்சாரும்.

இ-ள். அருணாசலத்துக்குத் தென் கிழக்கில் அக்கினி தீர்த்தமென்றொன்றுண்டு; அதில் பங்குனிமாதம் பௌர்ணமியில் முழுகினால் செம்மையான மீன்போன்ற கரிய கண்களையும் சிவப்பாகிய வாயையுமுடைய மாதர்களால் வந்து பொருந்திய பாவமுந் தீரும்; தருமமும் தவமுஞ்சேரும். எ-று. (கக)

வன்னிமுன் னொருநா ளேழு
மறைக்குல முனிவர்காதற்
றுன்னிய மடந்தை மாரை
விரும்பத் தன் சுவாகை யந்தப்
பன்னியர் வடிவ மாகப்
புணர்ந்துமேற் படர்ந்த பாவந்
தன்னைத்தான் கண்ட வந்தத்
தடத்தினிற் படிந்து சாய்த்தான்.

இ-ள். அக்கினி தேவன் ஒருநாள் வேத முணர்ந்த எழுமுனிவர்களுடைய பத்தினிமார்களை விரும்ப, அதைத் தன் பெண்சாதியாகிய சுவாகாதேவியறிந்து அந்த மாதர் வடிவத்தைத் தானெடுத்துப்புணர்ந்து மேலே நினைத்த பாவத்தைத் தீர்க்கத் தன்னாலே உண்டாக்கப்பட்ட அத்தடாகத்தில் ஸ்நானஞ்செய்து பாவத்தைப் போக்கிக் கொண்டான். எ-று. (கஉ)

தென்றிசைத் தரும தீர்த்த முளததிற்
செறிந்து மூழ்கிற்
பொன்றிகழ் வடிவ மாகுங் குட்டப்பிணி
பொடிபட் டோடும்

இ-ள் ஒருநதியையும் ஒப்பச்சொல்லக்கூடாத திருநதி என்ற ஒருநதி, அருணாசலத்துக்கு வடக்குப்பக்கத்தில் உண்டு; அதில் இலக்குமிமுழுகி விட்டுணுவினுடைய மார்பைச்சேர்ந்தாள், நர்மதாநதி வணங்குஞ் சோணமென்று ஒருநதி, அருணாசலத்துக்குத் தென்பாரிசத்திலிருக்கும்; அதில் கங்கை, யமுனை, காவேரி முதலிய நதிகள்முழுகித் தங்கள் துன்பத்தைப் போக்கிக் கொண்டார்கள். எ-று. (உ௦)

புண்ணிய வாறு தெய்வ மலைக்குமேற்
றிசையிற் பொங்கும்
நண்ணிய புண்ணி யாற்றா ரென்றுபேர்
நகரந் தானும
எண்ணிய நதியின் மூழ்கி யீழனென்
றரசன் றங்காம
பெண்ணியல் வடிவ நீந்தான் வடிவமும
பேறும் பெற்றான்.

இ-ள். தெய்வீகம்பொருந்திய அம்மலையின் மேற்பக்கத்தில் புண்ணியநதியென்ற ஒன்றுண்டு; அதனருகில் புண்ணியாற்றார் என்று ஒருநகரமுண்டு அதிலிருந்த ஈழனென்கிற அரசன் தனக்குத் தீங்காகவந்தடைந்த பெண்ணுருவை அந்நதியில் முழுகித்தீர்ந்து நல்ல உருவமும் வேண்டியபேறும் பெற்றான். எ-று. (உக)

திருந்துசே யாறு முன்சொற் றிருநதி வடபாற் றோன்றும்
பொருந்தவே லெறிந்து செவ்வே ளழைத்தவப் புனித நீரி
லருந்திக ழீழலோன் மூழ்கி யசுரரைத் தொலைக்குஞ் சீரு
மருந்தமி லமர்சேனை பதியெனும் வரமும் பெற்றான்.

இ-ள். அழகிய சேயாறு என்னு நதிமுன்சொன்ன திருநதிக்கு வடபக்கத்திலிருக்கும்; அதுமுன் சுப்பிரமணியர் வேலெறிந்தழைத்த தீர்த்தம்; அதில்மிகவும் பிரகாசிக்கின்ற வேலையுடைய அசுரப்டா

இ-ள் அருணாசலேசுரர் எழுந்தருளியிருக்கின்ற கோயிலுக்குப்பக்கத்தில் அக்கினிதிசையில் பிரமதீர்த்தமென்று ஒரு தீர்த்தம் உண்டு அதில் முழுகினவர்கள் பிறவிக்கடலில் முழுகார்கள்; ஆயிரம் பிறப்புக்கள்தோறுஞ் சேர்ந்த தீவினையுந் தீர்ப்பார்கள். எ-று. ()

அத்தட முழுகிச் செம்பொன் னணுவள வளிப்பா ராகிற்
சத்தசா கரஞ்சூழ் கின்றப் புவியெலாந் தனந்தி னோடு
முத்தமணி மணியி னோடு நிறைத்தது முழுது மீசனா
பத்தர்பா லளிக்கு மந்தப் பலத்தினு மதிக மாகும்.

இ-ள் அத்தீர்த்தத்தில் முழுகித் தனகம் ஒரு அணுவளவு கொடுப்பாராகில் சத்தசமுத்திரஞ்சூழ்ந்த இப்பூமியெல்லாம் சொர்ணத்தினாலும் நவரத்தினங்களினாலும் நிறைத்து அவைகளையெல்லாம் சுவாமியுடைய பத்தரிடத்திற் கொடுக்கும் பலனிலும் மிகுதியாகும். ()

தேனசு தடத்தின் மூழ்கிச் செய்யவா னந்தர்வெள்ளை ந
தான வாரணஞ்சூழ் செம்பொற் சயிலமேர் விமானத்தேறி
மேனகை யரம்பை தூய கவரிக ளிரட்ட மேவி
யானிலா மயிர்க்கோர் கற்ப மரன்பதத் திருப்ப ரன்றே.

இ-ள். தேன்பொருந்திய புட்பங்களையுடைய அத்தீர்த்தத்தில் முழுகிச் சிவப்புப்பசுவைத் தானஞ் செய்தவர்கள் மதகஜங்கொண்ட வெள்ளையானைகள் சூழ்ந்து தாங்கப்பட்ட மகாமேருபோலுஞ் சொர்ண விமானத்திலேறிக்கொண்டு மேனகை, அரம்பை இருவரும் பரிசுத்தமாகிய கவரிவீசப்போய் அப்பசுவின்மயிர் ஒன்றுக்கு ஒரு கற்ப காலம் சிவபதத்தில் இருப்பார்கள் எ-று. (உஎ)

காலமே யிதனின் மூழ்கிக் கரியயா னளித்தோர் கோல
நீலமால் வரைபோ னின்ற நெருங்கிய விமானத் தேறிச்
சூலமே பிடித்துப் பூதகணத்தவர் தொடர்ந்து போற்றப்
பாலலோ சனர்வாழ் கின்ற பரபதத் திருப்பரன்றே.

இ-ள். அத்தீர்த்தத்தில் காலமே முழுகிக் கறுப்புப் பசுவைத் தானஞ்செய்தவர்கள், அழகுபொருந்திய நீலமலைபோல், நீலரத்தின மிழைத்த விமானத்திலேறிச் சூலாயுதம்பிடித்துக்கொண்டு பூதகணங்கள் தொடர்ந்துவந்து வணங்க நெற்றிக்கண்ணையுடைய சிவனது பரமபதத்திலிருப்பார்கள் எ-று. (உஅ)

வெள்ளையா னளித்தோர் வெள்ளை
விடைகளா யிரஞ்சூழ் முத்தின்
கொள்ளையாம் விமானத் தேறி
யிமையவர் குழாங்கொண் டேத்த
வள்ளலார் பதத்திற் சேர்வார்
மழைக்குடை செருப்புத் தந்தோ
ரெள்ளரும் பரிமா வீந்தோ
ரிந்திர பதத்திற் சேர்வார்.

இ-ள். அத்தீர்த்தத்தில் முழுகி வெள்ளைப் பசுவைத் தானங் கொடுத்தவர்கள், ஆயிரம் வெள்ளைவிடைகள் சூழ்ந்த முத்தினாலலங்கரிக்கப்பட்ட விமானத்திலேறிக்கொண்டு தேவர்கள் கூட்டமாகச் சேர்ந்து வணங்கச் சுவாமிபதத்திற் சேர்வார்கள்; மழைக்குக் குடையும், (வெயிலுக்கு) பாதரட்சையுங் கொடுத்தவர்கள் இகழ்தலில்லாத குதிரை கொடுத்தவர்களும் இந்திரபதவியிற் சேர்வார்கள் எ-று. ()

கன்னியைத் தான மாய்க் கொடுத்தளித்தோர் தேவர்
பொன்னிய லுலகிற் போக பூமியி லளகை நாட்டின்
மின்றிகழ் மலரோ னாட்டி லருமையி னுகர்ந்து தேவர்
சென்னியால் வணங்கப் போற்றுஞ் சிவபதத் திருப்பாரன்றே.

இ-ள். அத்தீர்த்தக் கரையிலே கன்னிகாதானஞ் செய்தவர்கள் தேவலோகத்திலும் இந்திரலோகத்திலும், குபேரனுடைய அளகாபுரிபட்டினத்திலும், பிரகாசம்பொருந்திய பிரமலோகத்திலும், சில சிலநாட்களிருந்து விரும்பியவைகளையெல்லாம் அனுபவித்துத் தேவர்கள் தலையாலே வணங்க அதன்பின் சிவபதவியிற் சேர்வார்கள்.

உத்தம தலத்திற் கோடி யருந்தவர்க் குதவு மன்ன
நித்தமாங் காசி மீதோ ரவிழ்ப்பலன் றனக்கு நேரா
தத்தலத் தனந்த கோடி யருந்தவர்க் குதவு மன்னஞ்
சத்திய வருணை நாட்டி லவிழ்ப் பலன் றனக்கொவ்வாதே.

இ-ள். உத்தமமாகிய தலங்களிற் கோடி அருமையாகிய தவசிகளுக்குப் படைத்த அன்னத்தின்பலன் நித்தியமாயிருக்கிற காசியில் பெரியோர்களுக்குப் படைத்த அன்னத்தில் ஒரு அன்னப்பலனுக்கும் ஒவ்வாது; அப்படிப்பட்டகாசியி லநேககோடி தவசிகளுக்குப் படைத்த அன்னத்தின பலன் உண்மையாகிய அருணாசலத்தலத்திற படைத்த அன்னத்தில் ஒரு அன்னப்பலனுக்கு ஒப்பாகாது. எ-று.

ஆவடி யளவு பூமி மந்தணர்க் களித்தோ ரீசன்
சேவடி நிழலிற் றங்கள் கிளையுடன் செருக்கி வாழ்வார்
மாவிடை யரற்கு விட்டோர மற்றொரு விடைமே லேறி
மேவிடுஞ் சிவலோ கத்திற பவனிபோய் வியப்ப ரன்றே.

இ-ள். பசுவின் குளப்படியளவுபூமி பிராமணர்கட்குத் தானஞ்செய்தவர்கள். பரமசிவன் பாதநிழலிலே தங்களுடைய சுற்றத்தோடு களித்துவாழ்வார்கள்; சுவாமிக்குப் பெருமைபொருந்திய ரிஷபங்களைத் தானஞ்செய்தவர்கள் வேறரிஷபவாகனத்தி லேறிக்கொண்டு சிவலோகத்தில் பவனியாகப்போய் சந்தோஷித்திருப்பார்கள். எ-று.

சாலைகளு சமைத்தோர் நந்த வனஞ்சமைப் பித்தோர்கேணி கூலமார் தடங்கள் [illegible] [illegible]த்திற்சேர்வா ராயை மெழுகித் [illegible] விளக்கிட்டோ ரலங்க ரித்தோர்
வேலையி னடுவிற் பாந்தண் மெத்தையிற் றுயில்வ ரன்றே.

இ-ள். அருணாசலத்திற் சாலைவைத்தவர்களும், நந்தவனம் வைத்தவர்களும், கிணறுகள் மணற்குன்று பொருந்திய குளங்கள் வெட்டினவர்களும் இந்திரபதவி யடைவார்கள்; ஆலயத்திலுள்ள பள்ளம்சீரவி மெழுகி விளக்கேற்றி வைத்தவர்களும், அலங்காரஞ்செ

ய்தவர்களும் விட்டுணுவாய்த் திருப்பாற்கடல்மத்தியில் சற்பசயன த்தில் யோகநித்திரைசெய்வார்கள். எ-று. (௩௩)

மகிழ்ப்புனலரிதாநாளின் மருவுநீர்ப்பந்தர்வைத்தோர்
செழிக்குமேற்பதவிதன்னிற் றேவருந்துதிக்கவாழ்வார்
புழைநகைமாவுரியரன்பர்க் கணிகலைபுனைவித்தோரோ
ரிழைக்களவிறந்தகால மிறைபதத்திருப்பரன்றே.

இ-ள். நீரறிதாகிய கோடைக்காலத்தில் தண்ணீர்ப்பந்தல்வை த்தவர்கள்; செழிப்பனமேலாகிய பதவியில் தேவர்களும் புகழும்படி வாழ்வார்கள்; யானையுரிபோர்த்த சிவனுடைய அன்பருக்கு வஸ்திர ங்கொடுத்தவர்கள் ஓர் இழைக்கு அளவிறந்தகாலம் சிவபதத்தி லி ருப்பார்கள். எ-று. (௩௪)

மடஞ்சமைத்தவர்களந்த மடத்திலோர்துகட்கோர்கற்ப
மிடம்பிடித்தழியாவீட்டி லிருப்பர்வேறிறந்தபேர்க்கும்
விடங்குடித்திறந்தபோத நம்விதியினையுறதிவேள்விக்
கடனகழித்தனரேலந்தக் குலமெலாங்கதியிற்சேரும்.

இ-ள். இச்தலத்தில் ஒருமடங்கட்டினவர்கள், அம்மடத்திலிரு க்கிற ஒருதுகளுக்கு ஒருகற்பகாலம் கெடுதலில்லாத மோக்ஷத்தில் நிலைபெற்றிருப்பார்கள், பின்னும் வேறுவிதமா யிறந்தவர்கட்கும் விஷங்குடித்திறந்தவர்கட்கும் விதியாக உறுதிபொருந்திய பிதிர்யா கம் அத்தலத்திற்செய்தால் அவர்கள் குலத்தாரெல்லாருங கதியிற் சேருவார்கள். எ-று. (௩௫)

காகமுண்பலிபீடத்திற் பலிதனைக்கவரும்போதி
லாகமார்சிறையைக்கீழே புடைத்ததாலயத்தினூடே
யேகையானமதுகோயில் விளக்கியதெனவுட்கொண்டு
பாகசாதனனூர்வாழும் பதியினைப்பரமனீந்தான்.

இ-ள். ஒருகாக்கை அத்தலத்துக்கோயிற் பலிபீடத்தில் வை த்திருக்கிற பலியன்னத்தை வாயினுற்கிரகிக்கும்போது தன்னுடை

ய சிரகால் கீழேபடித்தது அதைச் சுவாமிபார்த்து ஆலயத்திற் பிரியத்தினுல் நம்முடைய கோயிலை விளக்கினனென்று நினைத்து இந்திரன் வாழ்கிற தேவலோகத்தை அக்காக்கைக்குக் கொடுத்தருளினா எ-று. (ருசு)

நீடிக்கொமான் றுகோயின்
முறைமையினைக்கினை றும்போது
தேடருமணியொன் றங்கே
சிதறியோர்விளக்ககாட்ட
வாடியபெருமானதீப
மளித்ததென் றதற்குநல்ல
வீடுயாநெறியுங்காட்டி
விரைந்துசாலோகமீந்தான

இ-ள். ஒருபெருச்சாளி கோயிலில் வளையுண்டாக்கும்போது தேடுதற்கரிய மாணிக்கமணியொன்று அங்கே சிதறிச் சந்நிதியில் விளக்குபோலக் காணப்பிக்க, கடவுள்செய்த சுவாமி நமக்குத் தீபங்கொடுத்ததென்று அதற்கு ஞானமார்க்கத்தைத் தெரிவித்துச் சாலோகபதவியைக் கொடுத்தார். எ-று. (ருஎ)

சிலந்தியொன் றொருநாளத்த்
திருமலையிடத்துநாலைக
கலந்துடனிழைக்கவீது
கலைநமக்களித்ததெனறு
நலந்திகழரசனுக்கி
யதற்குநல்லறிவுநல்கி
யுலந்தபின்னெடியமாய
னுலகினையுதவினுனே.

இ-ள். அம்மலையில் ஒருநாள் ஒருசிலந்தி வாயினூலால் பின்னவிட, இது வஸதிரஞ் செய்துகொடுத்ததென்று அச்சிலந்தியை அரசனாகப்பிறப்பித்து கலைஞானத்தைக் கொடுத்து தேகவியோகமானபிறகு விஷ்ணுலோகத்தைக் கொடுத்தார் எ-று. (௩௰)

வேறு.

ஒருமணலைச் சிவனுருவ மெனநினைந்தகவ
விடத்தில வைத்தோ னொருவன் பின்னைப
பரகதிபுக கண்டைந்துசிவ னென்னவேற
றுமையகனற பதவி சேர்ந்தான
பொருவரிய வருணகிரிப பதிவளமீ
தென வுரைத்துப புண்டரீகத
திருமுகமண் டலமலாந்தே யிருந்தனனுன
மறைபுகனற செயவன் றனே

இ-ள் பின்னும் அகத்தலத்தில் ஒருவன் மணலைச் சிவரூப மென்று நினைத்துவைத்ததனால அவன்மேலாகிய கதியைச்சேர்ந்து சிவனென்றும் இவனென்றும் பேதமில்லாமல் இருக்கின்ற சாரூபபிய பதவியைப பெற்றான்; ஒப்பில்லாத அருணைசலத்தின் வளமை இதுவென்று தாமரைமலர்போன்ற முகமலர்ந்து சொல்லியிருந்தார் வேதங்களையுஞ்சொன்ன பிரமதேவர் எ-று. (௩௧)

எட்டாவது,

தீர்த்தசசருக்கம்

முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-௫௫௦.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருமலை வலம்புரிச்சருக்க வசனம்,



உலகம் படைத்த நான்முகக்கடவுளே! தீர்த்த முதலியவற்றின் பெருமைகளையெல்லாங்கேட்டு என்மனம் ஆனந்தத் தழுத்தியது. திருமலையை வலம்புரியுந் திறத்தையுஞ் சொல்லியருள்வீராக வென்று சனகமகாமுனிவர் கேட்குதலும் பிரமதேவர் கூறுவார்.

திருமலையை வலம்புரியுந்திறம் யாவராலறிதல்கூடும் கற்பகாலந்தவஞ்செய்தார் தாமும் அறியமாட்டார். சோணகிரியாகிய அம்மலையைவலம்புரிதல் பிறவிக்கடலுக்கு ஓர் தோணியாகும். நரகக்குழிசெல்லாது முத்தியெனனும் மேல்வீட்டிற்கு ஏறவைத்த ஏணிபோலவுமாகும். தவத்திற்கும் அருமபொருட்கும் காணியாகும். சிவபெருமானையுருக்கத்தக்க மகிழ்ச்சியாகும். காசித்தலத்திலும் ஏனையமுத்தித்தலங்களினும் வசித்துக் கற்பகாலம் சிவபெருமானைப் பூசிப்பதும், அரியதவஞ்செய்வதும், யோகசமாதிகூட்டி அளவிறந்த சித்திபெறுவதும் இம்மலையை வலஞ்செய்வதற்கு நிகராகமாட்டா. அருணகிரியை வலம்வருவேம் என்றுசொன்ன மாத்திரையே சகல பாவங்களுந்தொலையும். வலஞ்செய்வேம் என்று அடியெடுத்துவைத்தவர்க்கு ஒவ்வோர் யாக பலன்கிடைக்கும். இரண்டடிக்கு இராசசூய யாகபலன்கிடைக்கும். மூன்றடிக்கு அசுவமேதயாகபலனும் நான் கடிக்கு எல்லாயாகபலனுங்கிடைக்கும். பிரதக்கிணஞ் செய்கையில் தூக்கிவைத்த ஓரடியின்பலன் பூமிப்பிரதக்ஷிணஞ் செய்த பலன்தரும். இரணடடியின் பலன் சருவ தீர்த்தமாடிய பலனைக்கொடுக்கும். மூன்றடியின்பலன் பதினாறு தானங்களையுஞ் செய்த பலனையளிக்கும். நாலடியின்பலன் அட்டாங்கயோகஞ்செய்த பலனையளிக்கும்.

இவையன்றி வலமாகவைத்த ஓரடிக்குப் பூசாபலன்கள் எல்லாம்பலிக்கும் இரண்டு அடிக்கு இலிங்கப் பிரதிட்டைக்குரியபலன் சித்திக்கும். மூன்றடிக்குக் கோடிவிமானம் தூபி என்னு மிவையுடைய கோயில்களைக் கட்டிய பலன்கள் கிடைக்கும். அருணாசலத்தை வலஞ்செய்ய வேண்டுமென்று ஓரடிவைத்தோர் உருத்திரபதத்தை யடைவர். இரண்டடி வைத்தோர் மகேசுரபதத்தை யடைவார். மூன்றடிவைத்தவர் கோடி தலைமுறைப் பிதிரர்களையும் நற்பதவியிற் சேர்ப்பாராவர்.

அருணகிரியை வலஞ்செய்தவர் திருக்கயிலையை யடையுங் காலத்தில சந்திரன் வெண்குடைகவிப்பான். சூரியன் தீபமெடுப்பான் தருமதேவதை கைதாங்கிவரும் இந்திரனவரும் வழிகடோறும் புட்பங்களைப் பரப்புவான், குபேரன தண்டஞ்செய்து அருகில் வருவான. எட்டுவசுக்களும் புட்பமாரியைப் பொழிவார்கள். மேனகை, அரம்பை, திலோர்த்தமை முதலினோர் சங்கீதம்பாடி நடனம்புரிவா. கங்கை, யமுனை சாமரம இரட்டுவர். மேகங்கள் அமிர்ததத்தையும் ஆடைகளையும எடுத்துககொணடுவரும். நான்கு வேதங்களும் புகழாநிறரும்.

ஞாயிற்றுக்கிழமையில் வலம் வந்தோர் சூரிய மண்டலத்தைப் பிளந்து சிவபதத்தைசசேர்வர். கடன்வறுமை என்னுமிவை நீங்கப் பெற்று எழுபிறப்பையுந்தாணடுவர். திங்கட்கிழமையில் வலஞ்செய்தோர் இந்திரன்போல எழுலகத்தையுமாணடு சிவசாரூப்பியத்தைப் பெறுவர். செவ்வாய்க்கிழமையில் வலஞ்செய்தோர் எல்லாத் துன்பங்களினும் நீங்குவர். புதன்கிழமையிற் பிரதக்ஷிணஞ் செய்தோர் நான்குவேதம், ஆறுசாத்திரங்கள், பதினெண் புராணங்கள் முதலியவற்றைத் தெரிந்து முத்திசேர்வார். வியாழக்கிழமையிற் செய்தோர் திரிமூர்த்திகளும் புகழும்படி தேவர்முனிவர்களுக்கு எசமானாயிருப்பர். சுக்கிரவாரத்திலே வலம்வருவோர் இலக்குமிகுடியிருக்க விட்

டுணு பதத்தையடைவார். சனிவாரத்திலே பிரதக்ஷிணஞ்செய்தோர் நவக்கிரகங்களும் பதினோராமிடத்தி லிருக்கும் பலனையடைவர் சிவ ராத்திரி, வருடப்பிறப்பு மாதச்சங்கிராந்தி, அயனம், அர்த்தோதயம், மகோதயம், கிரகணம், விதிபாதம், விடுவகாலம், அமாவாசி, பௌர்ணிமை என்னுமிவைகளிற் பிரதக்கிணஞ்செய்வார் பலத்தை யாவரே யளந்தறிய வல்லார்.

வலம்வருங்காலத்திற் பெண்களை நினைத்தல், சட்டையிடுதல், போர்வை கொள்ளல் கால்களிற் செருப்பு முதலியன இடுதல், பயம், சோகம், கோபமுதலியன கொள்ளல், குதிரை, யானை, பல்லக்கு, சிவிகை, வண்டி முதலியவற்றில் ஏறிசசென்று வலம் வருதல். தாம்பூல முதலியன தரித்தல், சோறுபுசித்தல், சுகந்த திரவியமளித்தல், கைவீசிப்போதல், ஈனரைப்பார்த்தல், ஓடிப்போதல், பராமுகஞ் செய்தல், வீண்கதைகள் பேசுதல், மலையில் ஏறுதல். முதலியன செய்தலாகா. எட்டுத்திக்குப் பாலகரும் இம்மலையின எட்டுததிககுக ளினுமிருந்து பூசித்துளார்.

அருணைசலத்திலே குதிரையி லேறிக்கொண்டுவந்த வச்சிராங்கதபாண்டியன் தன்பாவத்தைத் தீர்க்க நினைததுத தென்றிசையில பழுகணி யிறைவரென்று ஒரு இலிங்கத்தைத் தாபித்துப் பூசித்தான் நானும் அம்மலையின் மேற்குத்திசையில் அணியண்ணாமலையார் என்னும் ஓர் இலிங்கத்தைத் தாபித்துளேன் என்று பிரமன கூறினன்.

திருமலை வலம்புரிச் சருக்க வசனம்

முற்றிற்று.



இத் திருவண்ணாமலையைத் திரிகரண சுத்தியுடன் இத்தலபுராணத்தை மனமுருகப் பாடி வலம் வருவோர்கள் தீவினை நீங்கி நான்காமபதவி யடையவேண்டி வலம்புரியும் மகாதமியம்—16.





உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஒன்பதாவது,

# திருமலை வலம்புரிச் சருக்கம்.

—○○—

அறுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்.

கனகமலை கனகமலர்த் தடங்களது
பெருமையினைக் களித்தனைநீ
வனகமலை வலம்புரியுஞ் செயலினையுந்
தெரியவுரைத் தருள்வாயென்று
சனகமுனி யெழுந்துபணிந் துரைக்குதலு
மனமகிழ்ந்து கிரணக் கோவிற்
றினகரனார் திறந்தடைக்குந் திருக்கோயிற்
கடவுளிவை செப்ப லானான்.

இ-ள். மேலான பிரமனே ? பொன்போன்ற நிறத்தையுடைய தாமரைப்புட்பங்கள் சூழ்ந்த தீர்த்தங்களின் பெருமையையாமசொல்

லகேட்டுச சந்தோஷித்தேன், பாபரகிதமாகிய கிரியை வலஞ் செய்யும் பெருமையுத் தெரிய அருளிச செய்யென்று சனக ரிஷி எழுந்து வணங்கிசசொன்ன அளவில், மனம் சந்தோஷித்ததுச சூரி யன்தன் கிரணமாகிய திறவுகோலால் திறந்து மூடுக் தாமரை மல ராகிய கோயிலில் வாசஞ்செய்கின்ற பிரமன சொல்லத தொடஙகி னா. எ-று. (க)

கற்பெலா மரியதவம் புரிந்தவரு
மதன்பெருமை காண மாட்டா
ரற்பதவம புரிந்தவருங் கருணைகிரி
வலத்தினல மறிய லாமோ ,
சிறபரன்றன் புகழ்கேட்கும விருப்புடையா
யெனவுனக்குச் செப்பா நின்றே
னற்புதமிக் கதையமுதைச செவிவழியே
புகட்டவின்ப மருந்து கென்றான

இ-ள். கற்பகாலம் அரிதாகிய தவஞ்செய்தவாகளும், அதன் பெருமையை யறியமாட்டாாகள; அற்பமான தவததைச செயத வர்களுக்கு அருணாசலம் வலஞ்செய்யும் பெருமையை அறியககூடு மோ பரமசிவனுடைய புகழைககேட்கும் ஆசையுள்ளவ னென று உனக்குச சொல்லத் தொடஙகினேம்; அற்புதமான இக்கதையாகிய அமிர்தத்தை உன்காதாகிய வாய்வழியிற் புகட்ட இனபமாக அருந் தென்று சொன்னர் பிரமதேவர். எ-று. (உ)

சோணகிரி வலம்புரிதல் பிறவியெனும்
பெருங்கடற்குத் தோணி யாகு
மேனரகக் குழிபுகுதா தரியமுத்தி
வழிக்கேற வேணியாகு

காணரிய தவத்தினுக்கு மறத்தினுக்கு
மரும்பொருட்குங் காணி யாகும்
வானுதன்மின னிடத்திருக்குங் கண்ணுதலை
மனமுருக்கு மகிழ்ச்சி யாகும்.

இ-ள் அருணாசலத்தை வலஞ்செய்வது பிறவி என்னும் பெரிய கடலைத் தாண்டுவதற்கு ஒருதோணியாகும்; ஏழு நரகக்குழியிலும் புகுதாமல் அருமையாகிய முத்தியில் ஏறுவதற்கு ஏணியாகும்; காணுதற்கு அரியதவத்திற்கும், தருமத்துக்கும்; சம்பத்துக்கும், ஒருகாணியாயுமிருக்கும்; ஒளியுள்ள நெற்றியையுடைய பார்வதியை இடப்பாகத்தில் வைத்திருக்கின்ற சுவாமியை மனமுருக்குஞ் சந்தோஷமாகும். எ-று. (௯)

காசிமுதற் சிறப்புடைய தலங்களிலே
யிருந்திறைவனை கற்ப காலம்
பூசைசெயு மொருபலமு நெடுங்கால
மரிதவமுப் புரிகை தானும்
தேசிகனுருரைத்தபடி சமாதியிலே
யிருந்துபெறுஞ் சித்தி தானு
நேசமுட னருணகிரி வலம்வருகென்
றுரைப்பதற்கு நிகர தாமோ.

இ-ள். காசி முதலாகச் சொல்லப்பட்ட சிறப்பையுடைய தலங்களிலிருந்து சுவாமியைக் கற்பகாலம் பூசைசெய்த பலமும், அநேககாலந் தவஞ்செய்தாலும், குருசொல்லிய முறைப்படி சமாதியில் இருந்து அடைகின்ற சித்திகளும், அருணாசலத்தை வலம் வரவேண்டுமென்று சொல்லிய பலனுக்கு நிகராகுமோ வென்று சொன்னார். எ-று. (ச)

அருணகிரி வலம்வருகென் றுரைப்பளவி
லதிகபிர மத்தி நீங்கு
நருமதைநீ யினளவுமது வருந்துபவம்
வருந்தகடு நடுங்கி யோடு
மருவுபெரும் பொருள்கவர்ந்த பழவினையுங்
கரங்குவிந்து வழிக்கொண் டேகுங்
குருபாற்குத் தவறிழைத்த கொடுவினையும்
பயந்தகருக் குலையுந் தானே.

இ-ள். அருணாசலத்தை வலஞ்செய்யென்று சொல்லுமளவிற் பிரமஹத்திபாதகம் போய்விடும்; நருமதையாறு நீளவு மதுவைப் பானம்பண்ணிய பாவமும் வருந்தமுற்று நடுநடுங்கி யோடிப்போகும்; பிறருடைய பொருளைக் களவுசெய்த பழமையாகிய பாவமுங் கைகுவித்துக் கொண்டு ஓடிப்போகும்; குருவாகிய சுவாமிக்குத் தவறுசெய்தபாவமும் பயந்துகருப்பங்குலைந்து ஓடிப்போகும் எ-று.

அந்தவினை யுடன்படலும் பெருங்காற்றி
னெரிசுடர்போ லவியா நிற்குந்
தந்தையரைக் கடிந்தவினை கருடனுற்ற
வரவெனவே தளர்ந்து மாயு
மைந்தரையு மகளிரையுந் தொலைத்தவினைக்
கடல்சுவறி வறிய வாகு
மெந்தைபொருள் கவர்ந்தவினை
தனக்கிருக்கு மிடமேதென் றினைக்குந் தானே.

இ-ள். இறுதியைக் கொடுக்கும் பாவமும், அருணாசலத்தை வலஞ்செய்ய வேணுமென்று நினைத்த அளவில் பெருங்காற்றின் றிரியிலிருக்கும் தீபம்போ லவிந்துபோம்; தந்தையைக்கொன்றபாவ

மும் கருடனைக்கண்ட பாம்புபோல் நலெக்கமடைந்து ஓடிப்போம்; குழந்தைகளையும் மாதரையுங்கொன்ற பாவமாகிய கடலும் வற்றிப போம்; எம்முடைய சுவாமி திரவியம் திருடின பாவமும் தானி ருக்குமிடமெங்கே யென்று ஓடிப்போம். எ-று. (சு)

வேறு.

ஓரடிக்கியாகஞ்செய்த பலத்தினையுதவாநிற்கு
மீரடியிராசசூய பலந்தருமினியமூன்றா
நேரடிபரிமேதத்தின் பலந்தினைநிறைக்குநானா
பாரடியிடுவார்க்கியாகப் பலனெலாம்பலிக்குந்தானே.

இ-ள். அருணாசலத்தை வலஞ்செய்ய வேண்டுமென்று நினை த்து ஓரடி எடுத்து வைத்தவர்க்கு யாகஞ் செய்தபலன் சித்தியாம்; இரண்டடிக்கு இராசசூய யாகபலன் சித்தியாம; மூன்றடிககு அஸ்வமேத பலனுண்டாம்; நாலடிக்கு எல்லாயாகத்தின் பலனுஞ் சித்தியாம். எ-று. (எ)

வலங்கொளோரடியேபூமி வலஞ்செயும்பலத்தைநல்கு
மலங்குமீரடியேதீர்த்த மாடியபலன்களீயுந்
தலங்கொண்மூன்றடிகளீரெண் டானத்தின்பலத்தைநல்கு
மிலங்குநாலடிக்கியோகத் தெண்வகைப்பலத்தைநல்கும்.

இ-ள். பிரதக்ஷிணஞ் செய்கையில் தூக்கிவைத்த ஓரடியின் பலன் பூமிப் பிரதக்ஷிணஞ் செய்தபலன் தரும்; இரண்டடியின் பலன் சருவ தீர்த்த மாடிய பலன் தரும்; மூன்றடியின்பலன் சோடசதானப் பலன் தரும்; நாலடியின் பலன் அஷ்டாங்க யோகஞ் செய்தபலன் தரும். எ-று. (அ)

வைத்தவோரடியேபூசைப் பலனெலாம்வழங்குமங்கே
உய்த்தவீரடியேலிங்கந் தாபித்தவுறுதிநல்கு

மெத்தவேயடிஞான் றிட்ட பலன்சொலின்விமானங்கோடி
யெத்தனை தூபிக்கோயில் சமைத்தபேறெல்லாநல்கும்.

இ-ள். அதுவல்லாமலும் வலமாகவைத்த ஓரடிக்குப் பூசாப லன்களெல்லாம் பலிக்கும்; இரண்டடிக்கு இலிங்கப் பிரதிட்டை செய்தபலன் கொடுக்கும்; மூன்றடிக்கு கோடிவிமானம் தூபிகளை யுடைய கோயில் கட்டியபேறு தருமம. எ-று. (கூ)

வேறு.

நீடருணகிரிவலத்தோ ரடியிட்டோ
ருருத்திரர்வா ணிலைகைக் கொண்டோர்
ஈரடியிரண் டடியிட்டோர் மகேசுராதம்
பதத்தடைந்தார் நதியுஞ் சூடி
யாடரவம் புனைநதமலை வலமாக
வெழுந்தொருமூன் றடியிட்டார்க்கே
கோடிதலை முறையவரைச சிவலோகந்
தனிற்கொடுபோய்க் குடிவைத்தாரே.

இ-ள். நீண்ட அருணாசலத்தை வலஞ்செய்ய வேணடுமென் று ஓரடி வைத்தவர்கள்; உருத்திர பதமடைவார்கள், இரண்டடி வைததவர்கள், மகேசுர பத மடைவாாகள்; மூன்றடி வைததவர் கள கோடிதலை முறையிலுள்ள மனிதரையும் பதவியிற் கொணடு போயச சோக்கும். எ-று. (௧௦)

நன்றிதரு மருணகிரி வலமாகச்
சிறிதுவழி நடக்தபேர்க்குத்
துன்றுநெடுங் கிரணவெள்ளிக் கயிலைமலை
வழிகடுகித் தொலையாதிற்கு

மன்றியுமம் மலைவலமாய் நடந்தவழிப்
  பாலுறுதது மழற்சியாலே
கன்றியகா லரைக்காணிற கன்றியகா
  லரைப்போலக் காறுமெ பாவம்.

இ-ள். நன்றினைக் கொடுக்கும் அருணாசலத்தை வலமாகச் சிறிதுதூரம் நடந்தவர்களுக்கு வெண்ணிறமாகிய கிரணத்தை வீசுகின்ற வெள்ளி மலையாகிய கைலாயகிரிக்குப் போகும்வழி விரைவில் தொலையும்; அல்லாமலும், அம்மலையை வலமாகப் போம் போது பருக்கைக் கல்லுகளாலும் அழற்சியினாலும் கன்றிப்போன காலையுடையவரைக் கண்டால் எமனென்று பயந்து பாவங்கள் ஓடிப்போம். எ-று (௧௧)

வன்னிமலை வலம்புரிந்தோர் பதத்துகளொன்
  றொரு வாயு வசத்தினாலே
புனைமணி மலையிடம் புகுந்ததிலது
  கயிலையெனப் புனிதமாகும்
மின்னுமவர் பதத்துகளோர் மனிதருடற்
  செறியிலவர் பிறப்பு நீங்கும்
துன்னுமவர் பிறப்பொழியும் வலம்புரிந்தோர்
  பெருமைகளை சொல்லுவோமே.

இ-ள். அக்கினிமலையை வலம் வந்தவர்கள் பாதத்தில் ஒட்டியதுகளொன்று காற்றினால் நகரத்தையொத்த இடங்களிற் சேர்ந்தால் அதுவும் கைலாயம்போல் பரிசுத்தமாம்; இன்னும் வலம் வந்தவர்கள் பாதத்துகளில் ஒன்று மனிதர் தேகத்திற்பட்டால் இறப்பும் அவர்களை பின்பற்றிவருகிற பிறப்பும் நீங்கும்; அப்படியாகும்போது பிரதக்ஷணஞ் செய்தவர் பெருமைகளை என் சொல்லுவோம். எ-று. (௧௨)

அந்தமலை வலம்புரிந்தோர் சிவனிருக்குங்
கயிலையினி னேகும் போதிற் .
சந்திரன்வெண் குடையெடுக்கு மிரவிவிளக்
கெடுக்குமங்கை தருமநதாங்கு
மந்திரமே யிந்திரனார் வழிநகுமலர்ப்
பரபபிடுவா னளகைக்கோமான்
வந்தனைசெய் தருகுவருங் கநதமலர்
மழைசொரிவா வசுக்கடாமே.

இ-ள். இவ்வருணாசலத்தை வலஞ்செய்தவர்கள் பரமசிவன் வாசஞ் செய்கின்ற கைலாயமலையைச் சேரும்போது, சந்திரன் வெள்ளைக்குடை பிடிப்பான்; சூரியன் விளக்கெடுப்பான்; தரும தேவதை கைதாங்கிவரும்; இந்திரன் வருகிறவழியில் புட்பங்களைப் பரப்புவான ; குபேரன் தண்டனஞ்செய்து சமீபத்தில் வருவான் ; அஷ்டவசுக்கள் புட்பவருஷம பொழிவார்கள். எ-று. ()

மேனகையு மரம்பையுட னுருப்பசியுந
திலோர்த்தமையும் வீணையாக்குங்
கானநடம் புரிவர்கங்கா நதியுடனே
யமுனைநதி கவரிவீசும்
போனகவின் னமுதுமலைத் துகிலுமுல
லெடுத்தெதிரே போதும் போது
ஞானமுங்கொண் டலர்மடந்தை நணுகுமுன்னே
மறைபுகழ்ந்து நடக்குந் தாமே.

இ-ள். மேனகையும், அரம்பையும், ஊர்வசியும், திலோத்தமையும் வீணைவாத்தியத்துடனே சங்கீதம்பாடி நடனஞ்செய்து கொண்டு வருவார்கள், கஙகையும் யமுனையும் சாமரம் வீசிக்கொ

ண்டு வருவார்கள்; சாப்பிடத்தகுந்த அமிர்தத்தையும் மலையளவு ஆடைகளையும் மேக மெடுத்துக்கொண்டு எதிரேவரும்; இலக்குமி பூவும் கஸ்தூரியுங்கொண்டு வருவாள்; முன்னே நாலுவேதங்களும் புகழ்ந்துக்கொண்டு வரும். எ-று. (௧௪)

வேறு.

சேற்பொதிந்துகளுங்கங்கை படிவதுஞ்சிறந்ததானும்
பார்ப்பதுமியோகத்தாலே வருதலும்பலமொவ்வாதா
லார்ப்பொலிசடையான்சோணு சலத்தினைவலமாய்ச்சூழல்
காற்பலனென்றெண்ணுதே முழுப்பலங்கருதுங்காலே.

இ-ள். சேற்கெண்டை குதித்து விளையாடும் கங்கை முதலிய தீர்த்தங்களி லாடியபலனும் சிறந்த சிவத்தலங்களைத் தரிசனஞ் செய்த பலனும், யோகஞ் செய்தலினால் வந்தபலனும் ஒப்பாகாது; ஆத்திமாலைதரித்த சடையையுடைய சிவசொரூபமாகிய அருணு சலத்தை வலஞ்செய்தால் காற்பலமென் றெண்ணுமல் முழுப்பல மாய் நினைகுகும்போது. எ-று. (௧௫)

நிரந்தர மிமையோர் போற்று
நெடியமால் வரையைச் சூழ்வோர்
பரந்திடும வழியிற் றேன் றும
பரவிறைற் சிவந்த பாதம்
வரங்கொள வணங்கும் வானோர்
மகுடகோ டிகளிற் றைத்து
விரிந்தசெம் மணிக டாக்கி
மீளவுஞ் சிவக்கு மாதோ.

இ-ள். எப்போதும் தேவர்கள் வணங்கும் பெருமையுள்ள அருணுசலத்தை வலஞ்செய்வோர்களுடைய வழியிற்கிடக்கிற பர

ற்கல்லுகளை மிதித்துச் சிவந்தபாதம் பின்பு வரத்தைப் பெறுவத ற்கு வணங்கும் தேவர்களுடைய மகுடகோடிகளிற் பதித்துப் பிர காசிக்கும் இரத்தினகோடிகள் தாக்கி மறுபடியுஞ் சிவக்கும் எ-று.()

கானடைகொடுக்கப்பெற்றென்கரியகண்டெரியப்பெற்றென்
மானிடம்பிறவியுற்றென் மலைவலம்புரியாமாந்த
ருனுடைப்புழுக்கூடேறி நரகிடையூசலாடித்
தானிடர்ப்படுவதல்லா லுய்கிலர்சனகவென்றூர்.

இ-ள். அப்படிப்பட்ட அருணாசலத்தை வலஞ் செய்யாதவர் கள் கால்நடையுண்டாய் நடந்துதிரியப் பெற்றென்ன பிரயோச னம் ; கறுத்த கண்கள் நன்றாகத் தெரியப் பெற்றென்ன பிரயோ சனம்? அரியமானுடப் பிறப்பாகப் பிறந்ததென்ன பிரயோசனம்? மாமிசம் திரண்ட புழுக்களுடைய தேகத்திற் சேர்ந்து நரகத்தில் வீழ்ந்து அலைந்து துன்பப்படுவ தல்லாமற் பிழைக்கமாட்டார்கள், சனகனே என்றூர் பிரமதேவர் எ-று. (கஎ)

வஞ்சியர்புணர்ச்சிவேண்டின் மன்னர்கைவசமாவேண்டி
லஞ்சியப்பகைமையெல்லா மக்கணத்தகற்றவேண்டிற்
பிஞ்சின்மதிபோனல்ல புதல்வரைப்பெறுதல்வேண்டிற்
சஞ்சிதமுதலாமூன்று கருமமுந்தவிர்க்கவேண்டில்.

இ-ள். அஃதல்லாமல் நல்ல மாதருடைய போகம் வேண்டி னுல், அரசர்கள் கைவசமாக வேண்டுமானுல், அஞ்சத்தகுந்தபகை யெல்லாம் அக்கணத்திலே நீக்க வேண்டுமானுல், பாலசந்திரன் போல நல்ல பிள்ளைகளைப் பெறவேண்டுமானுல், ஆகாமிய சஞ்சித பிராரத்துவமாகிய மும்மலங்களையும் நீக்கவேண்டுமானுல். எ-று.

மூவுலகனலகைபூத கணங்களைமுனியவேண்டிற்
றுய நருபிணியுமாகச் சோகமுந்தவிர்க்கவேண்டி

வியலிசையறியவேண்டி லெழுதருங்கோலம்வேண்டின்
மயலறுபுகழைவேண்டின் மலைவலம்புரிவார்வல்லார்.

இ-ள். முயலகன்போன்ற இராக்கதரையும் பசாசுகளையும் பூத கூட்டங்களையும் கோபிக்க வேணடினால், துன்பம் செய்யும் வியாதியையும் தேகத்தில்வரும் சோகத்தையும் நீக்கவேண்டினால், இயலிசை முதலாகிய கல்வியை வேண்டினால், அழகை வேண்டினால் குற்றமற்ற கீர்த்தியை வேண்டினால், அம்மலையை வலஞ் செய்வார்கள் பெரியோர்கள். எ-று. (கக)

வரந்தருமருக்கவார மலைவலம்புரிந்தோர்வெய்யோன்
றெறிந்தமண்டலத்தைக்கீறிச் சிவகதிபதியாச்சேர்வார்
திரந்தருஞ்சோமவாரந் திருமலைவலமாய்வந்தோர்
புரந்தரனெனவேழ்பாரும் புரந்தரன்றன்மைபூண்பார்.

இ-ள். சிறந்த ஆதிவாரத்தில் அம்மலையை வலஞ் செய்தவர்கள் சூரியமண்டலத்தைப் பிளந்து சிவபதத்தைச் சேர்வார்கள் ஸ்திரமாகிய சோமவாரத்தில் வலமாய் வந்தவர்கள் இந்திரன்போல ஏழுலகத்தையு மாண்டு சிவசாரூப்பிய மடைவார்கள். எ-று. (உ0)

மங்கலதினத்திற்சூழ்வோர் கடனுடன்வறுமைநீங்கிச்
சங்கிலித்தொடராமேழு பிறப்பையுந்தவிர்ப்பார்புந்திக்
கெங்கணுபகரைச்சூழ்வோ ரிருங்கலைமறைகளுலா
றங்கமுந்தெளிந்துமுத்திக் கருகராயமரராவர்.

இ-ள். மங்களவாரத்தில் கிரியை வலஞ்செய்வோர் தங்களுக்குண்டாகிய கடனையும் தரித்திரத்தையு நீங்கி, சங்கிலி கட்டுபோல் தம்மைவிடாத ஏழுபிறப்பையும் நீக்குவார்கள்; புதவாரத்தில் சுவாமியைப் பிரதக்ஷணஞ் செய்வோர் நாலுவேதங்களும், ஆறு

சாஸ்திரங்களும், அறுபத்துநாலு கலைகளும் தெரிந்து முத்திக்கு நெருங்கினவராய்த் தேவர்களாவார்கள். எ-று. (உ௧)

மாவியாழத்திற்செய்ய மணிவரைவலமாய்ச்சூழ்வோர்
மூவரும்புகழத்தேவர் முனிவர்தங்குரவராவார்
தாவிலாவெள்ளிவாரந் தனில்வலம்புரிந்தோர்கஞ்சப்
பூவையைப்புணரும்பூவைப் புணருமால்புரத்திற்சேர்வார்.

இ-ள். பெருமை பொருந்திய குருவாரத்திலே அம்மலையை வலமாக வந்தவர்கள திரிமூர்த்திகளும் புகழும்படி தேவர்கள் முனிவர்களுக்கு ஏசமான ராவார்கள்; குறைவில்லாத சுக்கிரவாரத்திலே வலஞ்செய்தவர்கள் தாமரை மலரிலிருக்கின்ற இலக்குமியைச்சேரும் விட்டுணுபதத்தைச சேருவாரகள். எ-று. (உஉ)

உதயமேசனிநாட்சூழ்வோர்க் கொன்பதுகிரகங்ளுயப்
பதினொரமிடத்திற்றாய பலன்களைப்பலியாநிற்கு
மதியணிசிவனிராவும் வருடம்வந்துதிக்குநாளு
மதிகமாமதிகமாகு மைப்பசிமுதலாமூன்றும்

இ-ள். சனிவார உதயத்தில் பிரதக்ஷிணஞ் செய்வோர்களுக்கு நவக்கிரகங்களும் பதினொன்றாமிடத்திலிருந்த பலனைக் கொடுப்பார்கள்; சிவராத்திரியிலும் வருஷப் பிறப்பினின்றும் ஐப்பசி முதலாகிய மூன்றுமாதமும் வலஞ்செய்தவர்களுக்கு மேற்சொன்ன பலன்களினும் அதிகபலன் சித்தியாகும். எ-று. (உ௩)

அயனசங்கிராமமாசி மகத்திலர்த்தோதயத்தில்
வெயிலுறுங்கதிரைப்பாம்பு விழுங்குநாள்விதிபாதத்திற்
பயனுறவலஞ்செய்வோர்க்கும் பலன்களிற்கோடியாகு
மயர்வறத்தினமுஞ்சூழ்வார் பேற்றையாரறியவல்லார்.

இ-ள். உத்தராயணத்திலும், தக்ஷிணாயனத்திலும், மாசி மகத்திலும், அர்த்தோதயத்திலும், சூரிய கிரகண காலத்திலும், விதிபாதத்திலும், இஷ்டசித்தியை அடைய விரும்பி வலஞ் செய்தவர்களுக்குக் கோடிபங்கதிகமாகப் பலன் கிடைக்கும்; தளர்ச்சி யடையாமல் தினந்தோறும் வலஞ்செய்தவர்களுக் குண்டாகும் பலனை யாரறிந்து சொல்லவல்லவர். எ-று. (உ௮)

காரிகையவரையற்றைக் கனவிலும்புணர்ந்திடாம
னீரினின்மூழ்கித்தூய துடுத்துவெண்ணீறுசாத்தி
யாரிடமுறையேதான மளித்துத்தாமவைகொள்ளாமற்
பாரிடைநடந்துசூழ்ந்து தேவரைப்பணிந்துபோற்றி.

இ-ள். அப்படி அதிக பலனைத் தரும் அருணாசலத்தை வலஞ் செய்யும் விதமெப்படியெனின், பிரதக்ஷிணஞ் செய்யும் அன்றைக்குப் பெண்களைச் சொப்பனத்திலும் நினையாமல் நீரில் ஸ்நானஞ் செய்து பரிசுத்தமாகிய வஸ்திர முடுத்துக்கொண்டு விபூதிதரித்து அவ்விடத்திலே தானம் கிரமமாகக் கொடுத்து தாம் ஒருவரிடத்திலும் தானம் வாங்காமற் பூமியிலே காலினால் நடந்து கிரியைச்சுற்றியிருக்கின்ற தேவர்களைப் பணிந்து வணங்கி. எ-று. (உ௯)

கஞ்சுகம்போர்வைநீத்துக் கவிகையுஞ்செருப்புநீத்தே
யஞ்சுதல்வெகுளிசோக மக்கணத்தகற்றிவாசி
குஞ்சரமுதலாயுள்ள வாகனங்குறுகிடாமல்
விஞ்சியவடைக்காயுண்டி வழியிடைவெறுப்பதாக்கி.

இ-ள். அங்கத்தில் தரிக்குஞ் சட்டையும் போர்வையும் நீக்கிக் குடை பிடித்துக் கொள்ளாமல், கால்களுக்குச் செருப்புப் போட்டுக் கொள்ளாமல், பயமுங் கோபமுஞ் சோகமும் நீக்கிக் குதிரை யானை

முதலாகிய வாகனங்களிலேறாமல் தாம்பூலம் தரிக்காமற் போசனத்தையும் வெறுத்து. எ-று. (௨௬)

செங்கைவீசாமற்சோரா துவகையாற்சிரத்திற்கூப்ப
மங்கையர்பதிதர்நீச ருறுப்பிலாவடிவுநோக்கா
தங்குறுமடியிணோசை செவிப்புகா தரசமாதர்
கிங்கனையிரண்டுஞ்சென்றுநடந்திடுஞ்செயல்போற்சென்று

இ-ள். கைகளை வீசிக்கொண்டு போகாமல், சோர்வில்லாமல், சந்தோஷத்தோடு சிரத்திற் கையைவைத்துக் கூப்பிக்கொண்டு மாதரையும் பாவிகளையும் நீசரையும் அவயவ ஈனரையும் பாராமல் நடக்கிறபோது அடியினுடைய சத்தங் காதிற்கேட்காமல் மெள்ள அரசமாதர்கள் பத்து மாதத்துக் கருப்பத்தோடு நடக்கிறதுபோல நடந்து. எ-று. (௨௭)

இருவினையகற்றுமந்த மலையையெண்டிசையும்வீழ்ந்து
பிரவியங்கதனைச்சூழ்ந்த கடவுளர்ப்பணிந்துபோற்றி
யருவமாய்வலமாஞ்சித்த ரமரரைமனத்தாற்போற்றி
யுருகியங்கவர்மேற்கைகால் படுமெனவொதுங்கிச்சென்று.

இ-ள். நல்வினை தீவினைகள் இரண்டையும் நீக்கும் அக்கிரியை எட்டுத்திக்கும் வணங்கி அத்திக்கிலிருக்கும் சுவாமிகளையும் வணங்கி உருவந் தெரியாமல் வலஞ்செய்துகொண்டு வருகிற சித்தர்களையும் தேவர்களையும் மனத்தினால் வந்தனஞ்செய்து அவர்கள் மேற் றங்கள் கைகால்கள் படுமென்று பயந்து வழியினின்றும் ஒதுங்கிச்சென்று. எ-று. (௨௮)

வானமார்மலையைப்பொன்னிற் படிகநன்மணியாவெண்ணி.
மோனமாநடக்கவல்ல திறைபுகழ்மொழியைக்கேட்க
வானவிச்செயலினாலே வலஞ்செய்தாலயத்தினண்ணி
யேனமுன்னறியான்றாளைப் பணிந்துதன்னிருக்கையெய்தி

இ-ள். ஆகாயமட்டு மளாவிய அம்மலையைப் பொன்போலவும் படிகம்போலவும், இரத்தினம்போலவும் கினைந்து மௌனமாய் நடக்கவேண்டியது; அல்லது சுவாமி துதிகளைக் கேட்கவேண்டியது. இப்படிப்பட்ட தன்மையாக வலம் வந்து கோயிலுட்சென்று விட்டுணுவாகிய பன்றி யறியாத சுவாமியின் பாதங்களை வணங்கித் தாமகளிருக்கு மிடத்துக்கு வந்து. எ-று. (உக)

குன்றெனுங் குணத்தார்சூழ
விருந்துதீங் கனிபால் கொள்க
வன்றியே புலவுநீதத
வடிசிலை யுண்க நீதி
நின்றவத் தலத்தோர் செய்யு
நிலைமையீ ததிதூ ரத்திற்
சென்றவர் வருத்தமாயெவ்
வகைவலஞ் செயினும் சீராம்.

இ-ள். மலைபோலுயர்ந்த குணத்தை புடையவராகிய சிவபத்தர்கள் சூழ இருந்து மதுரமாகிய பழங்களும் பாலுஞ் சாப்பிடக்கடவர்; அப்படி யில்லாவிட்டால் மாமிசபதார்த்த மில்லாமல் அன்னத்தைப் புசிக்கக்கடவர்; இப்படிப்பட்ட செய்கைகளை நீதிபொருந்திய அத்தலத்திலிருக்கிறவர்கள் செய்யவேண்டியது; அதிக தூரத்தில் நின்றும் வந்தவர்கள் தங்களுடைய வருத்தத்தினால் எவ்விதமாக வலஞ்செய்தாலும் நன்மையாம். எ-று. (௩0)

தண்டுத விலாத ஞானச்
சனகவிச் சயிலஞ்சூழ
வெண்டிசை புரப்போர் தம்மே
ரினிற்சிவ வுருவங் கண்டார்

வண்டிசை பெருகு மோதி
மலைமகண் மலையின் கீழ்பாற்
கண்டனள் பவள வெற்பிற்
கயிலைவெற் பிறைவன் காட்சி.

இ-ள். கெடுதலில்லாத ஞானத்தையுடைய சனகரிஷியே! இம்மலையி னெட்டுத்திக்கிலும் திக்குப் பாலகர் எட்டுப்பேரும் தங்கள் பேரினாலே இலிங்கங்களைத் தாபித்துப் பூசித்திருக்கிறார்கள்; வண்டுகளின் ஒலிபொருந்திய கூந்தலையுடைய பார்வதி, கிரியின் கிழக்குத்திக்கில் பவளமலைபோல் ஒரு இலிங்கத்தைத் தாபித்துப் பூசித்தாள். எ-று. (௯௧)

மணிவரை பரியிற் சூழ்ந்த
வச்சிராங் கதனப் போது
புணர்பவந் தவிர்க்கத் தென்பாற்
புழுகணி யிறையைக் கண்டான்
றணிவிலா வினைக ணீக்கத்
தமியனேன் மலையின் மேற்பா
லணியண்ணா மலையா னென்று
மருவுரு விறையைக் கண்டேன்.

இ-ள். அருணாசலத்தி னிடத்தில் குதிரையி லேறிக்கொண்டு வந்த வச்சிராங்கதபாண்டியன், அக்காலத்தில் தன்னையடைந்த பாவத்தைத் தீர்க்கத் தென்றிக்கில் புழுகணி யிறைவரென்று ஒரு லிங்கத்தைத் தாபித்துப் பூசித்தான்; தணியாத பாவங்களை நீக்கிக்கொள்ள நானும் (பிரமன்) அம்மலையின் மேற்குத்திக்கில் அணியண்ணாமலையா னென்கிற பேரிட்டு ஓரிலிங்கத்தைத் தாபித்துப் பூசைசெய்தேன். எ-று. (௯௨)

வாலவெங் கதிர்மேற் சோண
வரைகடந் தொருநாட் பாய்ந்து
சாலுமத் துயரந் தீரத்
தனதுபே ரிறையைக் கண்டா
னாலய முழுதுந தேவ
ரரவநாட் டுறைவோர் சித்தர்
சீலமா முனிவர் கண்ட
சிவனுருத் தெரிகவொ ணாதே.

இ-ள். சூரியன் அருணாசலத்தைத் தாண்டிப் போனதினால் வந்தபாவந் தீரத் தன் பேரிட்டு ஒரு இலிங்கத்தை தாபித்துப் பூசை செய்தான். அல்லாமல் அம்மலையிலிருக்கிற கோயில்கள் முழுதும் தேவர்கள், நாகலோகத்தார்கள், சித்தர்கள் முனிவர்கள் இவர்களால் தாபித்துப் பூசைசெய்யப்பட்ட சிவலிங்கங்களை இவ்வளவென்று சொல்லக்கூடாது. எ-று. (௯௯)

ஈசனார் வடிவமான விலிங்க
மவ் வெல்லை சூழ
யோசனை மூன்றுஞ் சேர
நெருங்குமவா னுடுக்கள் போலப்
பேசுவ தெவனோ வந்தத்
தலத்தினிற் பெருமை வேலன்
றேசுறுங் கவுரி யானை
முகத்தினுந் தெரிக்கொ ணாதே.

இ-ள். பரமசிவ ரூபமான அநேக இலிங்கங்கள் அவ்வெல்லையைச் சுற்றி மூன்றுகாத வழிமட்டும் ஆகாயத்து நக்ஷத்திரங்கள்

போல செருங்கியிருக்கும்; அப்படி யிருக்கிறபோது அத்தலத்தின் பெருமையைச் சுப்பிரமணியர், பார்வதி, விநாயகர், இவர்களாலே யே சொல்லக்கூடாம லிருக்கிறபோது என்னாற் சொல்லக்கூடுமோ. எ-று. (௯௪)

தாதவிழ் மலரோ னிவ்வா
றுரைத்தலுஞ் சனகன் போற்றி
வேதனே பிறவி தீர்க்கும்
விமலனே விமல ஞான
வாதியைப் பழித்தோர் செம்பொன்
கவர்ந்தபே ரடையுந தீங்கும்
பாதகந் தவிரு மாறும்
பகரெனப் பதுமன் கூறும்.

இ-ள். தாதுவிரிந்த தாமரை மலரிலிருக்கின்ற பிரமன் இப்படிச் சொன்னதும், சனகரிஷி வணங்கி வேதமுழுதுங் கற்றுணர்ந்தவரே! பிறப்பை நீக்கும் பரிசுத்தரே! மலபந்தரான சிவனைப் பழித்தவர்களுக்கு வந்த பாவமும், அவர் தனத்தை அபகரித்தவர்களடையும் பாவமும், அவைகள் நீங்கும் வகையும் சொல்லுமென்று கேட்கப் பிரமதேவர் சொல்லத்தொடங்கினார். எ-று. (௯௫)

ஒன்பதாவது,

திருமலை வலம்புரிச் சருக்கம்

முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-௫௨௰௫.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# ஆதித்தச் சருக்க வசனம்.

காமம், வெகுளி, மயக்கம் என்னும் முக்குற்றங்களையுங் கடந்த முனிவர்களாலே சூழப்பட்ட திருவண்ணாமலைக்கு வேறு மலைகளு மொக்குமென்று நினைதை கூறும் பாவிகட்கு யமராயன் கொடுந்தண்டனை புரிவான். எத்தகைய பாவங்களைச் செய்தவர்களும் இவர்க்கு நேராகார். விட்டுணுவாகிய பன்றியும், பிரமனாகிய அன்னமுந் தேடியறியாத திருவண்ணாமலையை முற்காலத்தில் இகழ்ந்து தேககுறைபட்டுத் துக்கப்பட்டா னொருவன் உளனென்று அக்கதையைச் சொல்லத்தொடங்கினார் பிரமதேவர்.

சனகமுனிவரே! முன்னர் ஞான்று காசிபர்க்கும் அதிதிக்கும் பிறந்த குமாரர்கள் பன்னிருவர் உளர். அவர் அதிதியின் புத்திரராதலால் ஆதித்தியர் எனப்பட்டார். அவர் மாதம் ஒவ்வொருவர் தோன்றி உலகத்தைப் பிரகாசப்படுத்துவர். தெய்வமாகிய திருவருணாசலத்தை மரறை மலைபோல நினைத்து அவ்வாதித்தர்களுள் ஒருவன் தனது ஒரு சக்கரமும எழு குதிரைகளும் பூட்டப்பட்ட இரதத்தை யதன்மீது செலுத்தினான். அப்போது மலை வெடித்து அங்கு நின்றும் வெப்பத்தீ தோன்றிப் புகைந்துவர, சூரியனது இரதம் பரமசிவனாரது திருப்புன்முறுவல் அக்கினியால் வெந்து நீறான திரிபுரங்கள்போல எரிந்து சாம்பராயிற்று. குதிரைகளோ உயிரில்லாதனவாயின. சூரியன் தனது பாகனாகிய அருணன் கால்களை யிழந்ததுபோலத் தானும் கிரணங்களை யிழந்து ஒன்றுந் தோன்றாது மூர்ச்சித்தான். பின்னர்த் தெளிவுகொண்டு அந்தமலையின் பிரபாவங்களை யெல்லாம் தெரிந்து சிவபெருமானைத் தியானித்து மெய்

யன்புடன் பிரதக்ஷிணஞ் செய்து மேலான கதியை யடையுமாறு செல்லும் யான் சூரியனது நிலையைப்பார்த்துச் சில உபாயங்களைக் கூறினேன்.

ஆயிரங் கிரணங்களையுடைய சூரியன் அவ்வாறு மெய்யன்புடன் வலம் வந்து பரமசிவனாரைத் துதித்தான். மகா மேருமலையை வலஞ்செய்யுஞ் சூரியன அருணாசலத்தை வலஞ் செய்யவே. "கைலாசசிகராவாச மோஙகார ஸ்வரூபிணே மூமார்த்தக்ருத சேகரம்" என்றற்றொடக்கத்தனவாக வேதாந்தங் கோஷிக்கத அருணாசலேசுரப்பெருமானே ரேனறியருளி முன்னர்போலவே சூரியனுக்குத் திருவருள் புரிந்தார். சித்திரை முதற் பங்குனியீறாக எல்லா மாதமும சூரியன் மலைவலம் வருவான்.

ஆதித்தச் சருக்க வசனம

முற்றிற்று.



ஆதித்தபகவான் சோதிரூபமுள்ள மலையினுச்சியில் தன் இரதத்தை நடத்த, அச்சோதி தாக்கி இரதமெரிந்தபின்பு. ஆதித்தபகவான் மலையை வலம்வர பரமசிவன் இடபவாகனரூடராய்த் தோன்றி காக்ஷிகொடுத்த மகாத்மியம்.—17.





உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

பத்தாவது,

# ஆதித்தச் சருக்கம்.



அறுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்.

குற்றமற்றமுனிவர்சூழு மருணபூதரத்துடன்
மற்றவெற்புமொக்குமென் றிகழ்ந்துரைத்தமனிதர்வாய்
புற்றெழுந்துபுகையெழுந்து புழுநெளிந்துபுல்வுநீர்
சுற்றெழுந்துபெருகுமண்டிசோரிமாரிசொரியுமே.

இ-ள். குற்றம் நீங்கிய முனிவர்கள் சூழ்ந்துவரும் அருணாசலமென்னு மலையோடு மற்றமலைகளையு மொக்குமொன்று நிந்தைசொன்ன மனிதர்வாயில் புற்றுண்டாகிப் புகைந்து புழுக்கள் நெளிந்திடலால்நாற்றம் நாறுகின்ற நீர்சுற்றியெழுந்து மிகவும் இரத்தமாரி சொரியும். எ-று. (க)

அந்தமைந்தர்தம்மையெற்றி யந்தகன்றனேவலாய்
வந்ததூதர்செக்கிலிட்ட ரைத்தரைத்தெடுப்பர்வாய்
வெந்தவாளினுலறுப்ப ரெந்தைசோணவெற்பையோ
நிந்தைசெய்வையென்றடித்து நெய்யில்வேகவைப்பரே.

இ-ள். அருணாசலத்தைநிந்தித்த அம்மனிதர்களைப் பின்பு எம னுடைய ஏவலாயவந்த தூதர்கள் செக்கில் அநேகதரம்போட்டு அ ரைத்து எடுப்பரர்கள்; அவர்கள்வாய்களை நெருப்பிற்போட்டுக் காய் ச்சிய கத்தியினுலறுப்பார்கள்; எங்களாண்டவன் மலையையோ நிந் தைசெயவாயென்று அடித்துநெய்யிலே வேகப்போடுவார்கள். எ-று.

பஞ்செழுத்துவைத்தரக் குருக்கிவாய்பரப்பியே
நஞ்சினைப்புகட்டிவெய்ய நரகிலேகிடத்துவார்
அஞ்சியந்தநரகுதானு மருவருத்தலைத்திடும்
நெஞ்சகத்திலெண்ணினார் தமக்குமீதுநிகழுமே.

இ-ள். பின்னும் அவ்வருணாசலத்தை நிந்தித்தவர்களை எமது தர்கள் பஞ்சாகத்துவைத்து அரக்கையுருக்கி வாயிலேவிட்டு நஞ்சை க்குடிப்பித்துத் தீமையாகிய நரகிலே தள்ளுவார்கள்; அந்நரகமோ வென்றால் பயப்பட்டு இவர்களைத் தாங்குகிறதற்குச் சகிக்காமல் மிக வும்வருந்தும்; இப்படிப்பட்ட துன்பம் மனத்தில் இம்மலையைக் கு றைவாக வெண்ணினவர்களுக்கும் உண்டாம். எ-று. (கூ)

குருக்கடந்தைதாயராவி கொன்றதீயர்முதலினோ
ரிருக்கும்வெய்யநரகின்மீதி லிட்டபோதிலவர்களும்
பெருக்கநொந்துபாவியென்று பேசுவார்கடம்முடன்
சேரிக்கொணாதுதள்ளுமென்று தங்கள்கண்புதைப்பரே.

இ-ள். ஆசிரியர்களையும், தாய்தந்தையரையும், பிராணன் வா ங்கிய தீயபாவிகள் முதலானவர்கள் வாசஞ்செய்யுங் கொடியநரகத்

தில் இவ்வருணசலத்தை நிந்தித்தவர்களைப் போட்டபோது, இவ்
களை முன்னிருக்கும்பாவிகள் மிகவும் வருத்தப்பட்டு சுவாமியை
நிந்தித்தபடியினால், நம்மிலும் பாவிகளென்றுசொல்லி நம்மோடி
வர்கள் சரியாயிருக்கக்கூடாது தள்ளிவிடுமென்று தாங்கள் கண்க
ளைப் பொத்திக்கொள்வார்கள். எ-று. (௪)

என்றுரைத்துநானும்வைய மேழுமுண்டமாலுமா
யன்றுமின்றுமளவிடாத வருணபூதரத்தையோர்
குன்றமென்றிகழ்ந்துசென்று குன்றிமெய்குறைந்துமுன்
கன்றிநொருக்கனென்று கதைவிளம்பலாயினான்.

இ-ள். பிரமன் இப்படியென்று சனகரிஷிகளுக்குசொல்லிப்பின
னுஞ் சொல்லுவார்; நானும் எழுலகத்தையுமுண்ட மகாவிஷ்ணு
வுஞ்சேர்ந்து அன்றமுதல் இன்றையவரையிலும் அளவிடப் படாத
மகிமையுள்ள அருணசலத்தை, ஒருவன் ஒருமலையென்றிகழ்ந்து
போய்க் குன்றுதலடைந்து தேகங்குறைந்து துக்கப்பட்டான்முற்கா
லத்தில் என்று அக்கதையைச சொல்லத் தொடங்கினார். எ-று. ()

உலவுகின்றசோதியாவு முள்ளில்வைத்திவ்வுலகிலோர்
மலையதாகிநின்றதெய்வ மலையைமற்றமலைகள்போல்
அலகுபெற்றவிரவியெண்ணி யாழியொன்றுவாசியே
ழிலகுதேரம்மலையினுச்சி யெல்லையாய்நடத்தினான்.

இ-ள். நான்குதிக்கிலுஞ் சென்றுவிளங்கும் பிரகாசங்களையெ
ல்லாம் தன் வுள்ளத்தில் வைத்துக்கொண்டு இப்பூமியில் ஒப்பற்ற
மலையுருவங்கொண்ட தெய்வீகமாகிய அருணசலத்தை மற்றமலைக
ள்போலநினைத்து ஒருசக்கரமும் எழுகுதிரையும் பூண்டதேரை அவ்
வருணசலத்தினுச்சியில் எல்லையாகநடத்தினான் சூரியன். எ-று. ()

முருக்குதர்தேடுமந்தவெற்பின் முடியின்மேவுமுன்னமே
மிகுந்தசோதியுள்ளினும் வெடித்தெழுந்துவெம்மையாய்

புகைந்துசெல்லவிரதமூவர் புரமெனப்பொரிந்ததே
யுகைந்தபச்சைவாசியோ வுலர்ந்தவாயானதே.

இ-ள். சூரியன் விட்டுணுவினால் தேடப்பட்ட அம்மலையின் உச்சியில் போவதற்குமுன்னே, மிகுந்த பிரகாசமான மலைவெடித்து அவ்வுள்ளிடத்தில்நின்று எழுந்து வெப்பங்கொண்டு புகைந்துவரத் தேர் திரிபுரமெரித்த பரமசிவன் நகையாகிய நெருப்பிலே பொரிந்ததுபோலப் பொரிந்துபோய்விட்டது, நடத்தப்பட்ட குதிரைகளோ சீவனில்லாத குதிரைகளாயின. எ-று. (எ)

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

குதிரையுங்கரிகளாகிக் கொடியநேரலகைத்தேராய்க்
கதிரையுந்தனதுபாகன் காலெனவிழந்தபானு
மதியழிந்திருந்தானந்த மலைவலஞ்செய்துஞானக்
கதிபெறச்செல்வேன்கண்டு கதிரவற்கிவையுரைத்தேன்.

இ-ள். அம்மலையினிடத்தில் நின்றெழுந்த கிரண வெப்பத்தினால்; குதிரைகளேழும் கரிகளாகப்போய்க் கொடியையுடையதேர் கானல்போலத்தோனறியு முருவில்லாததாய்த் தன்னுடைய பாகன் காலையிழந்ததுபோலக் கிரணங்களெல்லாவற்றையும் தானிழந்து சூரியன்மதிகெட்டிருந்தான்; அந்தமலையை வலஞ்செய்துகொண்டு மேலாகியகதியை அடையும்படியாகப்போகின்ற நான்பார்த்து அசசூரியனுக்கு இவ்வார்த்தைகளைச சொன்னேன். எ-று. (அ)

ஐயனை மலையென்றெண்ணி
யகந்தையா லிகழ்ந்து வீழ்ந்த
கையனே யொருகா லத்துங்
கதியிலை யுனக்கென் றுனுஞ்

செய்யுமோர் தொழிலினாலே
　தீர்க்கலாந் தெளிவு ளார்க்கு
மெய்யனை யருணையானை
　வலஞ்செயன் றுரைத்துமீண்டேன்.

இ-ள். அருணாசலேசுரரை ஒருமலையென்று நினைத்து அகங்காரத்தினால் நிந்தித்து கீழேவிழுந்துகிடக்கின்ற ஆயிரங் கிரணங்களையுடைய சூரியனே? உனக்கு எவ்வகையிலும் ஒருகாலத்தும் கதி கிடைக்காது, அப்படியிருந்தாலும் ஒருதொழிலினால் கிடைக்கலாம அதுயாதெனில் தெளிவுள்ளவருக்கு மெய்ம்மையாகிய அருணாசலத்தை வலஞ்செய்துகொண்டு வாவென்றுசொல்லித திரும்பினேனென்றார் பிரமதேவர். எ-று. (௯)

போதித்த படியே சென்று
　பொன்மலை வலமாய் முன்னஞ்
சாதித்த வருக்கன் சோண
　சலத்தினை வலமாய் வந்தான்
வாதிக்கு மழுவினானு
　மழவிடை மீதிற் கோடி
யாதித்த ரெனவே தோன்றி
　யாதித்தற் கருளிப் போனான்.

இ-ள். பிரமன் அனுக்கிரகஞ்செய்தபடியே மகாமேருகிரியை முன்னே வலமாகவருகின்ற சூரியன் அருணாசலத்தை வலஞ்செய்து கொண்டுவந்தான்; அச்சூரியனுக்கெதிரே வாதித்துச் சத்துருக்களைக் கொல்லுகின்ற மழுவையேந்திய பரமசிவன் இளமையாகிய ரிஷபத்திற் கோடிசூரியர்போலத்தோன்றி அனுக்கிரகஞ் செயது கைலாயத்துக்கு எழுந்தருளினார். எ-று. (௧௦)

பன்னிரு மாதந் தோறும்
  பரிதிமுற் பயத்தி னாலே
வன்னியின் வடிவ தான
  மலையினை வலமாய்ச் செல்வான்
சென்னியி னெல்லை செல்லா
  னிடப்புறஞ் செல்லான் றன்றேர்
அந்நிலை வரும்போ தேத்தி
  யலர்சொரிந் தகலு மென்றான்.

இ-ள் சித்திரைமுதல் பங்குனி ஈறாகச்சொல்லப்பட்ட பன்னிரண்டுமாதமும் சூரியன்முன்னே தனக்குண்டான பயத்தினால் அக்கினிவடிவமாகிய மலையை வலஞ்செய்துகொண்டுபோவான்; அம்மலையி னுச்சியின்மேலும் போகான்; இடப்புறமாகவும் போகான். அம்மலைக்குச் சமீபத்தில் வரும்போது தோத்திரஞ்செய்து புட்பமாரி பொழிந்து செல்வானென்று சொன்னார் பிரமதேவர். எ-று. (கக)

யததாவது,

ஆதித்தச்சருக்கம்

முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-ருகஅ.



காசிநகரையாண்ட பிரதத்தராஜன் இவ்வண்ணாமலை சந்நிதிக்குவந்து தரிசனஞ்செய்யுங் காலத்தில் ஓர் தாசியை யிச்சித்தபாவத்தால் குரங்குமுகமாகி பிறகு சில காணிக்கைகள் கொடுத்துப் பூசித்துப் பழையவடிவமைந்த மகாத்மியம்.—18.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்

# பிரதத்தராஜன் சருக்கம்,

முற்காலத்தில் ஒருநாள் காசிதேசத் தரசனாகிய பிரதத்தன் என்பவன் தன்னுடைய மந்திரிகளோடும் சேனைகளோடும் யாத்திரையாகப் பிரயாணப்பட்டுச் சோழநாட்டுக்குப் போகும்படி திருவண்ணாமலைக்குவந்து சுவாமியைத் தரிசிப்பதற்காகக் கோயிலுக்குப் போய் வந்தனஞ் செய்யும்போது அவ்விடத்தில் நாட்டியஞ் செய்திருந்த தாசிப்பெண்களில் ஒருத்தியைப்பார்த்து ஆசைகொண்டு இந்தப்பெண்ணைத் தன்னுடன் கொண்டுபோய் விடுவதற்கு நினைத்தான். அந்த நினைப்பு அவன் கொள்ளுவதற்கு முன்னமே தானே அவன் முகமானது குரங்குமுகமாய் விட்டதைக்கண்டு எல்லாரும் நகைத்தார்கள். பின்பு அவ்வரசன் மிகுந்த வருத்தப்பட்டுத் தன்னுடைய வாகனங்களெல்லாவற்றையும் தன்னோடுவந்த பெண்களையும் ஆலயத்திற்குக் காணிக்கையாகக் கொடுத்துவிட்டு சுவாமிக்கு அருமையான பூசைசெய்தான் அப்பொழுது; பரமசிவத்தின் கிருபையால் குரங்கு முகம்போய் இயல்பான முகத்தை அடைந்து தன் நாட்டுக்குப் போய்ச்சேர்ந்தான்.

---

எழுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

அருணைவா ழிறைவன றிரவிய மணுமட்
டாயினுங் கரந்தபே ருடனே
மரணமாய் நமனுட் டழலிலே குளிப்பர்
வச்சிர வுலக்கையான் மறிய
ரிருணிறை நரக மிருபதெண் கோடி.
யிடத்திலு மடைவிலே யிருப்பர்
தண்ணிரிற் புழுவாய்ப் பிறப்பர்கள் களவு
தனக்கிசையாத தவருமத் தலையர்.

இ-ள். அருணாசலேசுராது திரவியத்தில் அணுவளவேனுந்திரு டினவர்கள் உடனே மரணமடைந்து எமலோகத்திற்குப்போய் அக் கினிக்குழியில்விழுந் தவஸ்தைப்படுவார்கள்; இருள்நிறைந்த இரு பத்தெட்டுகோடி நரகஙகளிலும் அடைவாகவிழுந்து கிடப்பார்கள்; மறுபடியும் பூமியில்வந்து புழுவாய்ப் பிறப்பார்கள்; அத்திருட்டுக் குடன்பட்டிருந்தவர்களும் அப்படிப்பட்ட துன்பத்தை அடைவார கள். எ-று. (க)

ஓங்கியதரையு ளிசைத்தபொன் னெதிரே
யுற்றபே ருடலையு மொறுக்குந்
தேங்கியகருணை யருணைநா யகர்பொற்
செய்கையைப் படியினிற் கரந்து
வாங்கியபேரைக் கிளையுடன் சிதைக்கு
மலையினுங் கடலினு மொளித்து
நீங்கியபொழுதுந் தொடர்ந்திடும விடுமோ
நிழலெனத் தொடருமெந நிலத்தும்.

இ-ள். திருடி பூமியினுள் ஒளித்து வைக்கப்பட்டபொன் அவ் விடத்தின்மேல் வந்தவருடைய தேகததையுங் கண்டிக்கும்; அப்ப டிச்செய்வது மிகுந்த கிருபையுடைய அருணாசலேசுரருடைய திர வியத்தின் செய்தியாம்; அப்பூமியில் ஒளித்துவைத்து எடுத்துக்கொ ண்டவரையோ வென்றால், அவர்களுறவோடு கெடுக்கும்; மலையி னுங கடலினு மொளித்துக்கொண்ட பொழுதுந் தொடர்ந்து வருந் தும்; விடமாட்டாது; எவ்விடத்திற் போனாலும் நிழலைப்போலத் தொடரும். எ-று. (உ)

கடிக்கலாஞ் சிலையை விழுங்கலா நெருப்பைக்
கடுவிடங் குழைத்திழைத் தெடுத்துக்
குடிக்கலா மிரும்பை யருந்தலாங் கமப்பொற்
கொள்ளலா மிருந்தினற் குணத்தால்

முடிக்கலாம புகையை யருணை நா யகர்பொன்
விழுங்கினால் மிடற்றிலே பிடிக்கும்
உடற்குளே கனலும் புகையுமவ் வளவோ
வுயிரையு முளத்தையு மொறுக்கும

இ-ள். பின்னும் பிரமன் சொல்வான்; கல்லைக கடிக்கலாம நெருப்பை யெடுத்து விழுஙகி விடலாம், விஷததோடு கொல்லும படியான வஸ்துக்களைச சோததுக் குழைததெடுத்துசசாப்பிடலாம இருமபைப் புசிக்கலாம். கள்ளிப்பால் முதலிய வறறையுங குடிக்கலாம. இவைகள உபததிரவஞ் செயயவொட்டாமல் நல்ல மருநதுகளால நிவாததிபணணிக் கொள்ளலாம் அருணாசலேசர திரவியத்தைச சாப்பிட்டவுடனே தொணடையைப் பிடித்துக கொள்ளும், தேகத்துக்குள்ளே நெருபபாகக் கனறும், புகையுணடாக்கும், அவ்வளவுதான் செய்யுமோவென்றால் அவாகளுயிரையுங்கொன்று உளளததையுங கெடுக்கும. எ-று. (ரு)

முக்கணன் பொருளைக் கவர்ந்தபே ரிருக்க
முயன்றபேர் நினைததபேர் முதலா
யக்கணத தழிவ ரவர்களு மிருக்க
வடியவர் பொருட்கவர்ந் தலைக்கத்
தக்கது நினைததார் கெடுவரென் றுரைத்துச்
சததியம் பலபல சாற்றிச்
செக்கருங் கருக வொளிவிடு மணிப்பூட்
டிசைமுக னொருகதை செப்பும்.

இ-ள். மூன்று கணகளையுடைய அருணாசலேசுராது திரவியத்தைத் திருடினவர்கள் படுகின்ற துன்ப மிப்படிப்பட்டது ; அஃதிருக்கட்டும், அப்பொருளைத் திருடுகிறதற்கு முயறசி செய்தவாகள் திருட நினைத்தவாகள், இவர்க ளந்தக கணததிலே யழிவாாகள்; அவர்களு மிருக்கட்டும், சிவபத்தர்களுடைய பொருளைத் திரு

டியவர்களைத் துன்பப்படுத்த நினைத்த பேர்களும் கெடுவார்களெ
ன்று பலபல சத்தியத்தோடுஞ் சொல்லிச் செவ்வானமுங் கருகும்
படி ஒளிவிடுகின்ற இரத்தினாபரணங்களைத் தரித்த பிரமதேவர்
ஒரு கதை சொல்லத் தொடங்கினார். எ-று. (௪)

முன்னமே யொருநாள் வடதிசைக் கிறைவன்
  முழுமணிக் கங்கைநீர்த் துறைவன்
இந்நிலந் திழிந்த விந்திர னனையா
  னண்டுகை முருகவே ணிகர்வான்
மன்னவர் நிரைந்த மகுடகோ டிகளின்
  வயிரநா யகங்களாற் றேய்ந்த
பொன்னவிர் கழலான் றருமமுங் கழலான்
  புகழ்ப்பெயர் பிரதத்த னென்பான்.

இ-ள் பிரமன் சொல்லுவான். முற்காலத்தில் ஒருநாள் வட
தேசத்துக்கு அரசனாயிருக்கின்றவனை விலையுயர்ந்த முத்துக்களுக்
கிருப்பிடமாகிய கங்காநதித் துறையை யுடையவன் தெய்வலோ
கத்தினின்று பூமியி லிறங்கிய தேவேந்திரன் போன்றவன், ஆண
மைக்குணத்தில் சுப்பிரமணியருக்குச் சமானமானவன், அரசர்கள்
பணியும்போது அவர்களால் நிரைநிரையாகத் தாழ்த்தப்பட்ட கிரீ
டகோடிகளில் இழைக்கப்பட்ட உயர்ந்த வயிரங்களாற் றேயவுற்ற
பொன்னாற் செய்யப்பட்ட வீர கண்டையைத் தரித்தவன்; தரும
மென்பதை இடைவிடாது செய்கிறவன்: கீர்த்திபொருந்திய பிர
தத்தமகாராஜனென்னும் பெயரையுடையவன். எ-று. (௫)

காலனேர் விழியாற முகமென விளங்கிக்
  களங்குடைத் தொழுக்கிய மதிபோல்
நீலமா மணிக்காம் பியைந்தவெண் கவிகை
  நெடுநிலப் பரப்பென நிகழ்த்தச்

'சாலவே பணியா வரசர்க ளிவன்பொற்
சரணமே படிந்துயிர் பெறுமென்
றேலவே யழைக்குந் தருமதே வதைபோ
லிரண்டுசா மரைகளார்த் திடவே.

இ-ள். எமன்போலக் கொடுமைசெய்கின்ற கண்களையுடைய பெண்கள் முகம்போல் விளங்கிக் களங்கத்தை யுடைத்து ஒழுகவிட்ட சந்திரன்போல நிலாத்தின மிழைந்திருக்கின்ற காம்பையுடைய வெள்ளைக்குடை நீண்ட சந்திரிகையைப் பூமியின் பரப்பெல்லாம் சிகழ்த்தவும் மிகுந்த மரியாதையோடு பணியாத பகை யரசைப்பார்த்து, இந்திரனுடைய அழகிய பாதங்களை வணங்கி உங்களுயிரை இறக்காமல் பெற்றுக்கொள்ளுங்களென்று பொருந்த அழைக்குந் தருமதேவதையைப்போல இரண்டு சாமரங்கள் வீசவும். எ-று. (௬)

வருணமண் டலத்திற் புரவிபோற் சீர்த்த
மரகதக் துரககம் வயங்க
அருணமண் டலத்தை யளாவிடுங் கொடித்தே
டரவிகள புவியை யடைப்பக்
கிரணசிந் தூரத்துப் புகர்முக மருப்பிற்
கிம்புரிக் கரிதிசை ளைரத்
தரணிபர் நடுங்க மந்திரி கணத்தோ
டெழுந்தனன் றண்டையாத் திரையே.

இ-ள். வருண மண்டலத்தில் விளங்கும் குதிரைகள் போல் உயர்வாகிய மரகத நிறத்தையுடைய குதிரைகள் பிரகாசிக்கவும் சூரியமண்டலத்தை யளாவிய கொடிகள்கட்டிய தேர்க்காடுகள் பூமியையடைக்கவும் கிரணம்பொருந்திய சித்தூரந்தீட்டிய புள்ளிகளையுடைய முகத்தையும் பூண்கட்டிய தந்தங்களையுடைய யானைகள் திசைகள்தோறும் பிரகாசிக்கவும் பகைமன்னர் பயப்பட மந்திரிகூட்டத்தோடுஞ் சேனைகளோடும் யாத்திரையாகப் பிரயாணப்பட்டார்கள் பிரதத்தமகாராசன். எ-று. (எ

அங்கற்புற் றேற யவனர்வெற் படைய
　வவந்தியர் விலவிணுண் கௌவச்
சங்கிலித் தொடக்காம் மற்றமண் டலிகர்
　தம்பிறை தாங்களே சுமக்கச்
சிங்கவே றெனவே சோழநா டணைவான்
　றிருநதி கடந்துதென் னருணை
கங்கைவாழ் சடையான் கோயிலிற் புகுந்தான்
　கங்கையும காசியும் புரப்பான்.

இ-ள். இப்பிடத்தகமகாராஜன பிரயாணப்பட்டபோது. அங்க தேசத் தரசர்பயந்து புற்றிலேறிக்கொள்ளவும், யவனதேசத்து அரசாகள் மலையிலொளித்துக கொள்ளவும், அவந்திதேசத்தரசா விலவி லிருக்கின்ற காணியைக் கௌவிக்கொள்ளவும், மறறதேசத்து அரசர்கள் சஙகிலிபோலத் தொடாந்து நின்று தாஙகள் கட்டவேணடிய கப்பஙகளைத் தாஙகளே சுமநதுவரவும், ஆண்சிஙகம்போலச சோழநாட்டுக்குப் போகும்படி புறப்பட்டுத் திருநதியைத்தாணடி அழகிய அருணசலத் தலத்துக்குவந்து கஙகையைததரித்த சடையையுடைய பரமசிவன் கோயிலிற் புகுந்தான்; கஙகைக்கியையும் காசிதேசத்தையும் ஆளுகிற பிரதத்தமகாராசன். எ-று.

அரும்பவிழ் மலர்கொண் டருச்சனை புரிய
　வருணைநா யகர்திருக கோயில்
விரும்பியுட் புகுந்து பணியுமவ் விடத்தில்
　விடத்தினுங் கொடியகூர் விழியாள்
இரும்பையு முருக்கு மிசையினு லொருத்தி
　யிலங்கிழை யாருட னிருந்தபால்
கரும்பெனு மொழியாற் பாடுதல் கேட்டான்
　கண்டனன் வளைத்தோள் கரும்பை.

மந்திரிக்கிழவ ராசனைவினவி
மன்னவா நினைத்தவா றதனை
வந்தவித்துயரந் தவிர்ந்திட மலைமேன்
மருந்தினைப் பணியென வவனுஞ்
சிந்துரக்குவடுங் கவனமாம்பரியுஞ்
செழுமணிச் சிவிகையுந் தேரும்
சந்தனமணியுந் தவ நிறைபலருந்
தமணியக் கோயினைமுன் விடுத்தான்

இ-ள். மந்திரிமார்கள் பிரகத்தமகாராசனைப் பார்த்து குரவருமாகம வந்ததற்குக் காரணங் கேட்டறிந்துகொண்டு அரசனே? நீ லமயாகிய உமதுவினைப் பிணியடைந்து இத்துன்பம் நீங்கும்படி உன்மேல் மருந்தாகிய அருணாசலேசுரரை வணங்கென்று சொல்ல, அவ்வரசனும் மலையையொத்த யானைகளையும், வேகமாய்த் தாவுகின்ற குதிரைகளையும், நல்ல இரத்தினங்களால் இழைக்கப்பட்டிருக்கும் சிவிகைகளையும், தேர்களையும், சந்தனக்குழம்பைப் பூசினதனங்களையுடைய பெண்களையும், பொறபிரகாசம் பொருந்திய பொற்கோயிலுக்கு முன் காணிக்கையாகக் கொடுத்துவிட்டான். ௯-ரு.

அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

பண்ணருமனந்த பூசனைபுரிந்தான்
பரமனு மவற்கருள் புரிந்தான்
இன்னமொழியாள விருப்பிலைடைந்த
இலேசவா னரமுக மொழிந்தான்
கன்னரமுகம்பெற் றிறையுநா டணைந்தா
னதலா லரன்பொருட் கவர
வுன்னரியபாவம் பதின்மடங் கரும்பொன
னுதவினற் றவிருமென் றுரைத்தான்.

இ-ள். பிரதத்தமகாராசன் சுவாமிக்கு சொல்லுதற்கரிய ஆநந்தம் அருமையான பூசைகள்செய்ய அப்பொழுது சுவாமியும் அவ்வரசனுக்குக் கிருபை செய்தார்; வீணையினிசைபோலும் வார்த்தையையுடைய பெண்மேற்கொண்ட ஆசையினாலடைந்த துன்பம்பொருந்திய குரங்குமுகத்தை யொழித்தான்; நல்ல மானிட முகத்தையடைந்து அவ்வரசன் தன்னுடைய நாட்டிற்குப்போய்ச் சேர்ந்தான்; ஆகையால் அருணாசலேசருடைய பொருளைத் திருடினவனுக்குண்டாகிய பாவம் அப்பொருளுக்கும் பதின்மடங்கு திரவியங்கொடுத்தால் தீருமென்று சொன்னார் பிரமதேவர். எ-று. (௧௨)

மாதவனே யருணகிரி வளமிதுதா
னெனத் திருவாய் மலர்ந்தா னந்தப்
போதனையங் கடிபணிந்து போதனையான்
மகிழ்ந்த தனமிப் புவியின் மீதே
கோதமுட னறிந்துசெய்த பாதகமே தீருங்
கதையினையுங் கூறுகென்றான்
மூதறிவா யினினு [illegible]
யிரமுகமாய் மொழி [illegible].

இ-ள். மகத்தாகிய தவத்தையுடைய சனகரிஷியே! அருணாசலத்தின் வைபவம் இதுவாமென் [illegible]; அப்பிரமனை அவ்விடத்தில் சனகரிஷி வணங்கி [illegible] யுடைய போதனையினால், ஆநந்தமடைந்தேன் இவ்வுலகத்தில் [illegible] அறிந்துசெய்த பாவம் நீங்கும்படியான கதையை [illegible] மெனப்பேரறிவுகொண்ட பிரமதேவர் [illegible] ஆயிரம் வாயாகச் சொல்லத் தொடங்கின [illegible] (௧௩)

பதினெட்டாவது

பிரதத்தராசன சருக்கம்

முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-[illegible].




உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

பன்னிரண்டாவது.

# பாவந்தீர்த்த சருக்கம்.

### கலிவிருத்தம்.

வாக்கினால்வடிவினால் மனத்தினால்பவந்
தாக்கினாரருணைமா சயிலநோக்கினா
னீங்குமென்பது நிகழ்த்தினான்மறை
தேக்கினான்சிலகதை செப்பலாயினான்.

இ-ள். வாக்கினாலும், தேகத்தினாலும், மனத்தினாலும், துர்விஷயங்களைச் சொல்லியும், செய்தும், நினைத்தும், பாவத்தை யடைந்தவர்கள் திருவண்ணாமலையைத் தரிசனஞ் செய்தால், அப்பொழுதே தங்கள் பாவத்தை நீக்குவார்கள் என்று சொல்லி நான்கு வேதங்களையுந் தன்னிடத்திலுடைய பிரமன் சிலகதையைச் சொல்லத் தொடங்கினான். எ-று. (௧)

அறுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்.

எம்பெரிய சபையிடத்தி லிருநான்கு
வசுக்களும்வந் திருந்தார் முன்னே
தம்பெரிய தவத்தினையும் புகழினையும்
வியந்துரைத்த தகைமை நோக்கிக்
கும்பமுனி முதலானோ ரிடையிலுமை
வியந்துரைத்த கொடுமை யாலே
அம்புவியி லிழைத்ததவ மனைத்தினையு
மவமாக்கி யகற்று மென்றேன்.

இ-ள். என்னுடைய பெரிய சபையினிடத்தில் அஷ்ட வசுக்களும் முன்னொருகாலத்தில் வந்திருந்தார்கள்; அப்பொழுது அவர்கள் தங்களுடைய தவத்தின் பெருமையும் அதனால் வந்த கீர்த்தியையுங் கொண்டாடிச் சந்தோஷித்தார்கள்; அதைப்பார்த்து அகத்தியர் முதலான ரிஷிகள் மத்தியில் செய்த தவமெல்லாம் அவமாகச் செய்து விடுமென்று சொன்னேன். எ-று. (௨)

உற்றபெருந் தவத்தினையுந் தமதறத்தி
னலத்தினையு முரைத்த பேரு
மற்றொருவர் தமையிகழ்ந்த வருந்துயரக்
கடன்மூழ்கி மறிவ ரென்றேன்.
சிற்றறிவா கியவசுக்க ளனைவர்களு
நடுங்கியிது தீருங் காலஞ்
சொற்றருளு கெனவுரைத்தா ரனருளாற்
றீருமுங்க டுயர்தா னென்றேன்.

இ-ள். பெருமை வாய்ந்த தம்முடைய தவத்தையும், செய்த தருமத்தையும் சொன்னவர்களும் மற்றொருவரை யிகழ்ந்துபேசின

வர்களும்; துக்கசமுத்திரத்தில் முழுகி மறிபட்டுக் கிடப்பார்களே ன்றேன். சிற்றறிவுடைய அட்டவசுக்களும் அவ்வார்த்தையைக் கேட்டுநொந்து; இச்சாபம் எக்காலத்தில் தீரும் அருள்செய்யவேண்டு மென்று கேட்டார்கள்; பரமசிவன் கிருபை உங்களுக்கு என்றைக் கிடைக்குமோ அன்றைக்குத தீருமென்றேன். எ-று. (௩)

சொல்லுதலும் வசுக்களெலா மெனையகன்று
நெடியகங்கைத் துறையிலேகி
வல்லையிலா நெடுங்கால மிறையைநினைந்
தரிதவ மியற்றினார்கள்
வல்லிபங்க னொருநாளின் மழவிடைமே
லடைந்துதமவரமேதென்றான்
அல்லிமல ரவன்கொடுத்த கொடுஞ்சாபக்
கடலிலெடுத் தருளென்றார்.

இ-ள். அப்படி சொன்னவுடன் வசுக்க ளெல்லாரும் என்ச பையைவிட்டு நெடுந்தூரஞ் செல்லுகின்ற கங்காநதியின் துறையிற் போய் அளவில்லாக் காலம் பரமசிவனை நினைந்து அரிதாகிய தவத் தைச் செய்தார்கள் ; பார்வதியை வாமபாகத்தில் வைத்துக் கொண் டிருக்கும் எமது பரமசிவன். இளமையான ரிஷபவாகனத்தி லெழு ந்தருளிவந்து நாம் உமதுகளுக்குக் கொடுக்கவேண்டிய வரமென்ன வென்றுகேட்டு அருள்செய்தார்; அவ்வசுக்கள் இதழினையுடைய தாமரை மலரிலிருக்கின்ற பிரமன் கொடுத்த கொடிய சாபமாகிய கடலினின்றும் எங்களை எடுத்தருள வேண்டுமென்றார்கள். எ-று. ()

கருணைமுகின் முகமலர்ந்து வசுக்களுட
னுமதுபவங் கடக்கவேண்டில்
தரணியிலே யொருநகரந் தலைச்சங்கமென்
றிலங்குமந்தத் தலத்தின் மீதே.

அருணகிரி யெனுமலையா யிருக்குமந்தப்
பதியணுகி யசலஞ்சூழ்ந்
தருணா திசை தொடங்கிட்டுத் திசைகளிலு
மிருந்துதவ மியற்றுமென்றார்

இ-ள். திருபாவருஷம் பொழிகின்ற மேகமாகிய பரமசிவன் திருமுகமலர்ந்து அந்த வசுக்களைப் பார்த்து உங்களுடைய பாவங்களை நீங்கள் கடக்கவேண்டுமேல் பூலோகத்திலே சுரமென்று ஒரு திவ்விய தலம் விளங்குகின்றது அந்தத்தலத்தில அருணாசலமென்று ஒரு மலை யுண்டு. அந்தத் தலத்தையடைந்து அம்மலையைச் சூழ்ந்த கிழக்குத் திக்குத் தொடங்கி எட்டுத் திக்குகளிலுமிருந்து தவஞ் செய்யுங்களென் றருளிச்செய்தார் எ-று. (௫)

அன்னவய லருணையிற்சி ரரியதவ
மியற்றிடுமவ் வளவையுங்கள்
முன்னரழற் கிரியுமெட்டு முகமாக
விளங்கியட்ட மூர்த்தியாகு
மன்னுமுங்க ளரும்பவமுந் தவிருமென
வுரைத்துவெள்ளி மலையிற்சேர்ந்தான்
தன்னையடைந் தவாகளெலாந் தன்னைப்போல
விருக்கவரந் தருகு வானே.

இ-ள். அன்னப்பறவைகள் தங்கி வயல்சூழ்ந்த அருணாசலத் திறகுப்போய் நீங்கள் அரியதவத்தைச் செய்யுங்கள். அப்படிச் செய்த அளவிலே அக்கினி சொரூபமாய் விளங்கிய ஒப்பற்ற அம்மலை உங்களுக்கு முன் காட்சி கொடுக்கும் அப்போது நிலைபெற்ற உங்களுடையபாவமும் நீங்குமென்று திருவாய்மலர்ந்து, கைலாயத்திற்கெ

இ-ள். அந்த மலையைச் சூழ்ந்த எட்டுத் திக்குகளிலு மிருந்து வசுக்கள் அஷ்ட மூர்த்தமாகிய சுவாமியைப் பூசித்த படியினால், பழையபடியே தமது பதவிகளைப்பெற்றுக்கொண்டு சுவாமியினது கிருபையும் பெற்றார்கள்; குற்றமற்ற மிகவும் அருமையான வேதப் பொருளாகிய அச்சுவாமி எட்டுமுகமா யிருந்தபோதும், விட்டுணுவும் திருவடியைக் கிரமத்துடன் அறியமாட்டாமற்போனார், இன்றளவும் எனக்கும் முடிதெரியவில்லை எ-று. (அ)

சண்முகனை யளித்தவனைந் துமுகத்தவனெண்
வசுக்கள்செய்த தவத்தினாலே
எண்முகமா யிருந்ததனைக் கண்டொருமுகமா
யிமையவரா னந்தகெடுத்த பயன்று
தண்முகநான் குடையபிரா னசனகமுனிக்
குரைத்தருளச் சயிலத்தா னீட
பண்முகயா ழனையமொழித் திலோத்தமைசேர்
கதையினையும் பகர லுற்றான்.

இ-ள். சுப்பிரமணியரைப்பெற்ற பரமசிவன் எட்டு வசுக்களுஞ் செய்த தபோபலத்தினால் எட்டுமுகமா யிருந்ததைப் பார்த்துத் தேவர்களெல்லாம் ஒன்றாய்க்கூடி வணங்கிப் பல்லாண்டு கூறினார்களென்று கருணைபொருந்திய நான்கு முகங்களையுடைய பிரமன் சனகரிஷிக்குச்சொல்லி அருள்புரிகின்ற அத்திருமலையில், யாழி னிசைபோன்ற சொல்லையுடைய திலோத்தமையடைந்த கதையையுஞ் சொல்லத் தொடங்கினா னென்று. (க)

கலி விருத்தம்.

தேவர்கோன் முன்னொரு நாளரிடத்திற் சேர்ந்துதன்
பாவனமான தன் பதவி வேண்டியே

யாவரு மருந்தவ மியற்றிரு ரதற்
காவது செய்யென வறைந்து போயினன்.

இ-ள். பிரமதேவர் சொல்லுவார்; இந்திரன் முன்னே என்னிடத்தில்வந்து தன்னுடைய பரிசுத்தமான பதவியைச் சிந்தித்து எல்லாரும் அருமையான தவத்தைச் செய்கிருர்கள்; அத்தவம் நிறைவேருதபடி எதாவது ஒரு விக்கினஞ் செய்யவேணுமென்று சொல்லிவிட்டுப் போனன். எ-று. (௧௦)

இந்திரன் போனபினி யக்க மங்கைய
ரந்தர மங்கைய ரரவ நாட்டவர்
சுந்தரங் கடற்புவித் தோகை மார்வரை
மந்தர முலைசசிய ரழகு வாரியே.

இ-ள். இந்திரன் போனபிறகு இயக்கலோகத்துப் பெண்கள் தேவலோகத்துப் பெண்கள் நாகலோகத்துப்பெண்கள். அழகமைக்க கடல்சூழ்ந்த பூலோகத்திலுள்ளபெண்கள், மந்திரகிரிபோன்ற முலைகளையுடைய வரையரமகளிர், இவர்களுடைய அழகு எடுத்துக்கொண்டு. எ-று. (௧௧)

வகுத்தனன் றிலோத்தமை யென்னும் வஞ்சியை
யுகுத்தனன் வலிமைநன் மதியை யோட்டினன்
மிகுத்ததோர் விஞ்சையிற் புழுவின் வேட்டுவ
னகத்துட லழித்துட லளிப்ப தென்னவே.

இ-ள். குளவி தன்னிடத்திலுள்ள ஒரு சாமர்த்திய விசேடத்தினுல் புழுவின் உடலைக்கெடுத்து, அதற்கு வேறெரு தேகத்தைக் கொடுப்பதுபோலத் திலோத்தமை யென்னும் பெண்ணை உண்டாக்கினேன்; அப்பொழுதே அவள்மேற்கொண்ட ஆசையால் என்னுடைய வல்லமையை யிழந்தேன்; ஞானத்திற் சொல்லுகின்ற என்னுடைய புத்தியையுந் துரத்திவிட்டேன். எ-று. (௧௨)

மன்மதன் கணையினால் மயங்கிவாடுமென்
றன்மையைப் பிரிந்துநான் றனக்குத் தாதையென்
றென்மனம் பொருந்திலா தெனது கையுறான்
முன்பினி லொளிக்கநான் முகமுந் தேடினேன்.

இ-ள். மன்மதனுடைய பாணத்தினாலே மயக்கமடைந்து வாடுகின்ற என்னுடைய இயல்பையகன்று. நான் தனக்குத் தந்தையென்று என் கருத்துக்கு ஒவ்வாதவளாகியும், நான் பிடிக்கும்போது என் கைக்கு அகப்படாதவளாகியும், எனக்கு முன்னின்றும் ஓரிடத்தில் தானறியாதபடி ஒளித்துக்கொள்ள ! நான்கு பக்கங்களிலும் அவளைத்தேடினேன். எ-று. (கடு)

அறுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்.

கன்னிமான் வடிவாய்ச் சென்றாள்
கலையதாய்த் தொடர்ந்தேன் பேட்டு
அன்னமாய்ப் பறந்தாள் சேவல்
வடிவமாய்த் தொடர்ந்தேன் மங்கை
பின்னைப்போர் கதியுங் காணாள்
பிறங்கலா மருணை நாதன்
றன்னையே தூரக் கண்டாள்
சரணமென் றுரைத்துச் சார்ந்தாள்.

இ-ள். அப்படி நான்தேடி அவளைக்கண்டு பிடிக்கும்போது: பிடிப்பதற்கு முன்னே பெண் மானாகி ஓடினாள், நான் கலை மானாகத் தொடர்ந்தேன் ! அதன்பின் பெண்கிளியாய்ப் பறந்தாள், நான் ஆண்கிளியாய்ப் பறந்து தொடர்ந்தேன் ; அத்திலோத்தமை பிறகு என்கையிலகப்படாமலிருக்கிறதற்கு வேறொரு கதியுங்காணாமல் வருந்தும்போது மலையுருவாகிய அருணாசலேசரைச் சிறிதுதூரத்திலே கண்டு சரணென்று சார்ந்தாள். எ-று. (கசு)

மாயமால்விடையின்பாகர் வடிவிலாவிடையின்பாகர்
காயமுலாணமெய்யர் கானகத்தாடுமையர்
ஆயுமாரணத்தின்சோதி யடைக்கலமென்றுளையன்
சேயிளமழலைபோலத் திருச்செவிசாற்றினாளே.

இ-ள். மாயஞ்செய்கின்ற விட்டுணுவாகிய ரிஷபத்தின்மேல் வருகின்றவரே ; தோற்றாத இடையினையுடைய பார்வதியைப்பாகத்தில் வைத்துக்கொண்டிருப்பவரே ! தகிக்கும் அக்கினிவடிவமானவரே! திருவாலங்காட்டினிடத்தில் நடனஞ்செய்த சுவாமியே ! ஆராய்ந்து தேடுகிற வேதத்தையுடைய சோதியே ! அடைக்கலம் என்று சகலரையும் ஆளுகின்ற பரமசிவன் திருச்செவியிற் செல்லும்படி குழந்தையின் இளமையாகிய குதலைச்சொல்லைப் போலச் சொன்னாள். எ-று. (௧௫)

முருமலர்க் குழலிறைடன்
முறையிடு முறைகேன்னையன்
திருவுரு வண்ண தனந்தாய
செவிகளா யிருந்தபோது
விரைவின்மால் வரையைக்கீறி
வேட்டுவனாகி நாலு
சுருதியு ஞமலியாகத்
தோன்றினன் றோகைபாகன்.

இ-ள். வாசனையமைந்த புட்பமாலையையணிந்த கூந்தலையுடைய இவேளார்த்திமை முறையிடுதலுக்கு, என் சுவாமி அழகிய உருவமெல்லாம் செவிகளாயிருந்தன ; அதனால் சீக்கிரத்தில் மலையைக் கீறி அதினின்றும் தாம்வேடவடிவமாகியும், யாச்வதிவேடச்சி உருவமாகவும், நாலுவேதங்களும் நாய்களாகவும் தோன்றினா பார்வதியை இடதுபாகத்தில் வைத்துக்கொண்ட பரமசிவன். எ-று. ( )

கூடகச் செங்கைபாகன்
சிலையொடு தோன் றும்போதில்
வாடிய மருங்குலாண்மேன்
மயக்கமும் வருத்தந்தீர்ந்தே
னாடிய பெருமானம்மை
முனியுமென் றஞ்சித்தாழ்ந்தேன்
வேடனைப் பறவைகண்டால்
வெருவுமோ வெருவுறாதோ.

இ-ள். வளையலையணிந்த கையையுடைய பார்வதியை ஒருபக்கத்தில் வைத்துக்கொண்டிருக்கிற பரமசிவன் வேடனாகிவில்லைக்கையிலேந்திக்கொண்டு தோன்றியபோது, முன்னே நடனஞ்செய்த சுவாமி என்னைக் கோபித்துக்கொள்வாரென்று பயந்து வணங்கின்ற இடைபிளையுடைய திலோத்தமைமேலுண்டாகிய மையலையும், உடலிலுண்டாகிய வருத்தத்தையுந்தீர்ந்து அச்சுவாமியை வணங்கினேன்; வேடனைப்பறவைகண்டால் பயப்படுமோபயப்படாதோ எ-று

வெற்பெனு முலையாடன்னை
விதித்துநீ விரும்புந்தீமை
கற்பகோ டியினுநீரா
தாயினுங் கருணையாமித்
தற்பரமலைகண்டாயே
யாதலாற் றவிர்த்தோம் போவென்
றறபுதன் மொழிந்து மீளப்
புகுந்தன னருணைவெற்பில்.

இ-ள். மலைக்குநிகராகிய தனத்தையுடைய திலோத்தமையைப்படைத்து நீயேவிரும்பினதினாலுண்டாகிய பாவம் கற்பகோடி காலத்திலுந்தீரமாட்டாது. ஆனாலும் அருணுருவமாகியும் தானே பரமாகியும் உள்ள இம்மலையை தரிசித்தாயாதலால், அப்படிப்பட்ட

பாவந்தீர்த்துவிட்டோம், உன்னிடத்திற்குப்போவென்று திருவாய்மலர்ந்து அம்மலைக்குள் சுவாமிமறைந்துவிட்டார். எ-று. (௧அ)

கலி விருத்தம்.

தன்னையறியாமல்வினை சாருமுடனூனந்
தென்னருணைசேரிலது தீருவதுதிண்ண
மின்னல்வினையற்றனி லெண்ணியதுபெற்றார்
முன்னமுளரென்றயன் முனிக்குமொழிகின்றான்.

இ-ள். ஒருவனுக்கு அபுத்தி பூருவமாகவந்த பாவம் அவன் அழகுபொருந்திய அருணாசலத்தையடைந்தால்தீரும்; அது நிச்சயமே; முற்காலத்திலும் அநேகர் தங்களுடைய வினையைநீக்கி அத்தலத்தில் தாங்கள்நினைத்தவரம் பெற்றுக்கொண்டார்களென்று பிரமதேவர் சனகரிஷிக்கு ஒருகதை சொல்லுகிறார். எ-று (௧௯)

கற்பமுடிவாயிருள் பெயர்ந்துபுலர்காலத்
தற்பனிருணின்றதுமுன் னுளிறையினாலே
சொற்பரவைமாயனுண ராதுதுயில்கொள்ளச்
சிற்பரமயோகியர்கள் செம்மலைநினைந்தார்.

இ-ள் முற்காலத்தில் பரமசிவனுடைய திருவிளையாட்டினால் கற்பகாலம் முடிவுற்று மகத்தாகிய அந்தகாரம்நீங்கி வெளிச்சமுண்டாகிறகாலத்தில். அவ்வந்தகாரத்திற் கொஞ்சம்நின்ற அக்காலத்தில் இதனையறியாமல் விட்டுணு சமுத்திரத்தில் நித்திரைசெய்துகொண்டிருக்க மேன்மையான சின்மயமாகிய யோகியர்கள். பரமசிவனை நினைந்தார்கள். எ-று. (௨௦)

அத்தனடியார்கடம தாணவமறுக்குஞ்
சுத்தனமுலானதொரு சோதிவடிவானோ
னெத்தலமுமெத்திசையு மெங்கும்வெளியானோ
னுய்த்தபொறிதம்மிலுள வாயுவுலகெல்லாம்.

இ-ள். எல்லாச் சீவராசிகளுக்கும் பிதாவாகியும், தமதடியார்களுடைய ஆணவமலத்தைக்கெடுக்கின்ற சுத்தராகியு மிருக்கும்பரமசிவன் நெருப்புமயமாகிய ஒரு சோதிரூபத்தை யடைந்தார்; எத்தலங்களிலும் எத்திக்குகளிலும் மற்ற எவ்விடங்களிலும் ஆதாயமே தமக்குருவாகிய அசசுவாமியானவர் அப்போது சிந்திய பொறிகளாலே உலகமெல்லாம் உண்டாயின. எ-று.

ஊழிமுடிவாயிருள் புலர்ந்துமுணராதே
யாழிமிசையிற்றுயிலு மச்சுதனையெய்தி
வாழியெனயோகிய ரெழுப்புதலுமாயன்
பாழியிலுநின்றதி பயத்துடனெழுந்தான்.

இ-ள். ஊழிக்கால முடிந்து மகத்தாகிய அந்தகாரம் நீங்கியும் அறியாமல் சமுத்திரத்தில் நித்திரைசெய்யும் விட்டுணுவினிடத்தில்வந்து வாழியென்றுசொல்லி யோகியர்கள் எழுப்புதலும் அவ்விட்டுணுசர்ப்பசயனத்தினின்றும் அதிகபயத்துட னெழுந்திருந்தார்.

வையகமளிக்கமல ரோனையுதவாதே
பையரவின்மிக்கதுயில் கொண்டபரிசாலே
வெய்யபுன்வினைத்தொழில் விளைத்தனனெனத்தன்
னையுணர்வுமஞ்சியெனை யையனைநினைந்தான்.

இ-ள். உலக முண்டாக்கும் பொருட்டு பிரமனைச் சிருட்டிக்காமல் படத்தையுடைய பாம்பின்மேல் நித்திரைசெய்த தன்மையினல், வெம்மையாகிய தீவினையைச சம்பாதித்துக் கொண்டேனென்று ஐம்பொறிகளுங்கலங்கி யென்னுடைய ஆண்டவனாகிய சுவாமியை நினைந்தார். எ-று. (௬௩)

அன்பர்க்கருகிருக்குமை யாகியெதிர்வந்தே
துன்பமகல்விக்குமது . தூயதொழிலானன்

வன்படிகவெற்புமிசை மன்னுசுடர்போலே
மின்பருடமேனியுடன் வெள்விடையில்வந்தான்.

இ-ள். அடியார்கள் நினைத்தால் சீக்கிரத்தில் தானே அவர்களுக்கு எதிராகத்தோன்றித் துன்பம் நீக்குவதே தமக்குப் பரிசுத்தமாகிய தொழிலாகக்கொண்ட பரமசிவன் வண்மையாகிய படிகம்லையின்மேல் விளங்கும் சோதிபோல வெண்மையாகிய ரிஷபத்தின்மேல் மின்போன்ற நிறத்தோடும் எழுந்தருளி வந்தார். எ-று. (௨௪)

பொருக்கெனவெழுந்தடி பணிந்தருள்புகழ்ந்தே
யருக்கியமுதற்புரி யாருச்சனையினாலே
யுருக்கியென்வினைத்தொட ரொழித்தருள்தியென்று
னெருக்கணிகுவானிவை யெடுத்துமொழிகின்றான்.

இ-ள். அப்படி பரமசிவன் ரிஷபவாகனத்தில் எழுந்தருளி வந்தவுடனே. விட்டுணு சீக்கிரத்தில் எழுந்து திருவடிக்கமலங்களுக்கு வந்தனஞ்செய்து, அவருடைய திவ்விய கிருபையைப் புகழ்ந்து, அவருக்கு அர்க்கியமுதலிய பூசைகளினாலே சுவாமியினுடைய திருவுள்ளத்தை இளகச்செய்து, எனக்கு நித்திரையினால் வந்தவினையை நீக்கி அருள்செய்ய வேண்டுமென்றார்; எருக்கம்பூமாலையைத் தரிக்குஞ் சுவாமி இவைகளைச் சொல்லத்தொடங்கினார். எ-று. (௨௫)

அர்க்கியம் முதலாயின என்பன அர்க்கியம், பாத்தியம், ஆசமனமாம்.

வாசிமகமேமுதன் மகம்பலசெய்தாலும்
பாசமுதலாதவினை பேறறுதலெண்ணித்
தேசமிகுதென்றிசை செறிந்தருணை தன்னிற்
பூசைபுரிவிட்டுவினை போகுமுனையென்றான்.

இ-ள். ஒருவன் தனக்குண்டான பரசவினையை நீக்கும்படி நினைத்து அசுவமேதமுதலிய பலயாகங்களைச் செய்தாலும் அது போகாது; ஆகையினால், சோதிமயமாகிய தெற்குத்திசையில் -வின

ர்க்கும் அருணாசலத்திற்குப்போய்ப்பூசைசெய்தால் உன்னைவிட்டுவினை போம் என்றார் பரமசிவனார். எ-று. (உ௬)

நாறுபொழிலங்கரு ணாமும்வடிவொன்றே
வேறலவதன்பெருமை வேதமுணராதால்
நீறணிவோமயோகியாக ணீவிர்பலர்தொண்ணூற்
றாறுபிரமாவதி லருச்சனை புரிந்தீர்.

இ-ள். வாசனையுடைய சோலைகள் சூழ்ந்த அவ்வருணாசலத்திற்கும் எனக்கும் வடிவம் ஒன்றுதான், பேதமன்று; (நான்கு) வேதங்களுங்கூட அறியமாட்டா; விபூதியை முக்கியமாகத் தரிக்கும் யோகியர்களும் விட்டுணுக்களாகிய நீங்கள் பலரும் தொண்ணூற்றாறு பிரமாகளும் அத்தலத்தில் பூசைசெய்தீர்கள். எ-று. (உ௭)

முற்றிழையுரோகிணி முலைக்கிடைபின்மூழ்கா
மற்றவிருபத்தருவா வாழ்வையுமறந்தான்
கற்றைமதிதக்கனுடல் கன்றுறச்சபித்தான்
அற்றமதியப்பதியி லத்துயரொழித்தான்.

இ-ள். சந்திரன் நன்றாக வேலைதீர்ந்த ஆபரணங்களை யுடைய உரோகிணி தனங்களின் போகத்தைவிரும்பி மற்றை இருபத்தாறு நாயகிகளுடைய போகவாழ்வுகளை மறந்துவிட அந்த முன் சொன்ன இருபத்தேழு பெண்களுக்குத் தந்தையாகிய தக்கன் கேள்விப்பட்டு எல்லா நாயகிகளிடத்தும் விருப்பம்வையாமல் ஒருத்திமேல் மாத்திரம் வைத்ததனால் அவனுடல் குன்றிப் போகக்கடவதென்று சபித்தான்; அச்சாபத்தையடைந்த சந்திரன் அவ்வருணாசலத்தில் வந்து அத்துன்பத்தை நீக்கிக்கொண்டான். எ-று. (உ௮)

நினைப்பளவின்முத்தித்தரு நீணகரதிற்போய்
மனக்குறைதவிர்த்திடுதி யென்றிறைமறைந்தா
னனற்கிரியைநாடியரி யத்திசையினண்ணிச்
சனைக்கமலவாவிதிகு சோணகிரிகண்டான்.

இ-ள். நினைத்த மாத்திரத்தில் முத்தியைக் கொடுக்கும் அருணாசலமென்னும் அத்தலத்திற்குப் போய் மனக்குறையை நீக்கிக்கொள்ளென்று சுவாமி மறைந்தார்; விட்டுணு அக்கினி வடிவாகிய மலையைத் தியானஞ்செய்து அதுவிளங்குந் தென்றிசையை யடைந்து சுனையிலிருக்கிற தாமரைப்பூவின் வாசனையிகுந்த அத்தலத்தைக் கண்டார். எ-று. (௨௯)

ஈசர்வடிவான மலை கண்டினி திறைஞ்சித்
தேசுமிகுநன்னகர் செறிந்துமகிழ்வாகி
வாசிவ்தடத்திடை படிந்துவலமாகிப்
பூசனைபுரிந்துவினை போயமலனானான்.

இ-ள். மலைவடிவமாகிய சுவாமியைத் தரிசித்து அன்போடு பணிந்து ஒளியமைந்த அத்தலத்திற்குப்போய்ச சந்தோஷமடைந்து இந்திர தீர்த்தத்தில் முழுகிக் கிரிப்பிரதக்ஷிணம் வந்து பூசைசெய்துகொண்டுவரத் தம்முடைய வினையைநீக்கி விஷ்ணுமூர்த்தி பரிசுத்தரானார். எ-று. (௩௦)

மேவியருணைப்பதியின் மிக்கபுகழ்மாயன்
பாவமகல்வித்திடு பலத்தினையுரைத்துத்
* தாவியுமைபாகமுறை சோணகிரிநாத
னாவியின்மகிழ்ச்சியையு நான்முகனுரைப்பான்.

இ-ள். மிகுந்த புகழையுடைய விட்டுணு அருணாசலத்திற்குப் போய்த் தம்முடைய பாவத்தைநீக்கி அவர் அடைந்தபலனைப் பிரமதேவர் சனகாதிக்குச்சொல்லிப் பார்வதி ஒருபுறத்தில் வாசஞ்செய்கின்ற அருணாசலேசுரர் புழுகு பூனையினால் அடைந்த சந்தோஷத்தையுஞ் சொல்லத்தொடங்கினார். எ-று. (௩௧)

பன்னிரண்டாவது,
பாவந்தீர்த்த சருக்கம்
முற்றிற்று.
ஆக திருவிருத்தம்-௩௭௦.

---

* தாவிமயல் பாகமுறை என்றூஉம் பாடம்.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# புளகாதிபச் சருக்க வசனம்.

நினைத்தவாறு பலபல வடிவங்களை யெடுக்கத்தகுந்த வலிமை
யுடைய புளகன் என்னும் ஓரசுரன் இருந்தான். அவன் ஒருநாட்
புழுகுபூனையின் உருவத்தைக்கொண்டு அம்மலையின்கண் உலாவிக்
கொண்டு புழுகைச சிதறினான். அதனால் சிவபெருமானது வரபல
த்தையடைந்து விட்டுணு முதலாகிய தேவர்களும் முனிவர்களும்
துன்பப்படவும், பூமியிலுள்ளார் பயப்படவும் ஆன கோரச்செய்கை
களைச் செய்வானாயினான். அச்செய்கைகளாலுண்டாகிய துன்பத்
திற்கு ஆற்றாத மாயவன் முதலாய தேவர்கள் பரமகருணாநிதியாகிய
பரசிவப்பிரபுவையடைந்து வணங்கி முறையிட்டுக் கொண்டனர்.

தடங்கருணைப் பெருங்கடலாகிய தற்பரசிவனார் அவ்வார்த்
தைகளை யெல்லாங் கேட்டுத் திருவாய் மலர்ந்தருளுவார். அன்பர்
களே! வாசனைமிக்க புழுகை நமது வடிவமாகிய அருணகிரியின்
கட் சிதறினபடியால் அதிகபலம் அடைந்திருக்கின்றான். அவன்
நமது வரபலத்தை யடைந்தமையால் எளிதில் அழியமாட்டான். ஆ
தலால் அவனை எமது மூத்திக்கண் இரண்டறக் கலக்கும்படிசெய்து
உங்கட்கு நேர்ந்த துன்பங்களைப் போக்குகின்றேமென்று அபயாத்
தங்கொடுத்து, நம்மிடங்கட்குச் சேர்மினென்று விடைகொடுத்தார்.
அவரனைவர் தத்தமிடங்கடோறுஞ் சென்றனர்.

மேருவை வில்லாகவளைத்துப் பதுமநாபனாகிய திருமாலைப்பா
ணமாகக்கொண்ட சிவபெருமானார் புளகனென்னும் அசுரனையழைப்
பித்துத் திருவாய்மலர்ந்தருளுவார். தானவ! நினது உருவத்தை
விட்டு முத்தியடையக் கடவாயென்றனர். அப்போது புழுகுபூனை

யாகிய அசுரன் கூறியதென்னவெனில் பெருமானே! நானெடுத்த உருவமாகிய புழுகுபூனை மரபிற்றோன்றும் பூனைகளின் புழுகு தேவரீரது திருமேனியி னேற்றுக்கொள்ளவும், அதனால் தேவரீருக்குப் புழுகணி யிறைவன் என்னும் பெயர் தரித்துக்கொள்ளவும் திருவருள் செய்யுமாறு பிரார்த்தித்தான். அவ்வாறே யருள்செய்தேமென அசுரனுயிர்விட்டான். அவனுக்கு முத்திகொடுத்த தன்மையை யறிந்து தேவரும் முனிவரும் புழுகுசாத்த, அப்புழுகு கரைந்து பனிநீருடன் ஆலயத்து அருவிபோல ஓடாநிற்கும்.

ஆதலாற் சனகாதி முனிவர்களே! புழுகு காப்பு ஒரு முறையாவது அருணசலேசுரப் பெருமானுக்கு அணிவித்தோர் சிவசாயுச்சிய முத்தியையடைவார் என்று பிரமதேவர் கூறினர். இவ்வருணசல புராணத்தைக் கேட்டவர் யாவரும்வாழ்க. புராணம் படிப்போர் பொருள்சொல்வோர் யாவரும் வாழ்க.

புளகாதிபச் சருக்க வசனம்

முற்றிற்று.






சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

பதின்மூன்றாவது,

# புளகாதிபச் சருக்கம்.

---

எழுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்.

உருவுபலவேறுபுனை புளகனென்னுமோரசுர
னொருபொழுது நாலுவடிவா
யருணகிரிமீதுலவி யரியபுழுகேசிதறி
யதிகபலமா யவனியோர்
வெருவவிமையோர்முனிவ ரொருவரொழியாதழிய
வினைபுரிகையா லவரெலாங்
கருணைமலைபோலிலகு மலையமலையாகருணை
கயிலைமலைமேவி மொழிவார்.

இ-ள். சினைத்தபடி வெவ்வேறே உருவங்களை யெடுத்துக்கொ
ள்ள வல்லமையுள்ள புளகனென்னும் ஓரசுரன் ஒருநாட் புழுகு



ஓர்காலத்தில் புளகனென்னும் அசுரன் புழுகுபூனை வடிவங்கொண்டு உலகத்தையழித்து திருமலையில் புழுகைச் சிதறி ஜீவிக்குங்காலத்தில். தேவர்கள் தோத்திரத்திற் கிரங்கிய பரமசிவன் புளகனுக் கனுக்கிரகஞ்செய்த மகாத்மியம்—20.

பூனை உருவமடைந்து வெவ்விய நிறத்தையுடைய அம்மலையின்மே ல உலாவிக்கொண்டு புழுகைச் சிதறியபடியால், சுவாமியினுல் அதி கபலம்பெற்றுப் பூமியிலுள்ளவாகள் பயப்படவும், தேவர்கள், முனிவர்களெல்லாரும் துன்பப்படவும், துர்க்கிருத்தியஞ் செய்வ தனுலே அவர்களெல்லாம் இமய பருவதராசனுடைய புத்திரியாகி ய பார்வதியை ஒருபாகத்தில் வைத்தருளிய கருணைமலர் போன்ற பரமசிவன் எழுந்தருளியிருக்கின்ற கைலாயகிரிக்குப்போய்ச் சொ ல்வார்கள். எ-று. (க)

புளகனெனுமோரசுரன் பிறகவடிவாகிவதைத
புரியவுலகேழு முறைபோய்
விளைதுயரமாயினர்களெனவுரைசெயதாரவர்கள்
விமலனவ ரோடுபுகல்வா
னளவின்மணமானபுழு கருணைகிரிமீதுதவி
யதிகபலமாய் மருவினு
னெளிதிலழியானவனு மினியகதியேறவுமை
யிடரலையிலேற விடுவோம்.

இ-ள். புளகனென்னும் ஓர் அசுரன் புழுகுபூனை வடிவங்கொ ண்டு ஏழுலகங்களிலும் முறையே பகுந்து சீவராசிகளையும் வதை செய்ய, அதனுல் எல்லாரும் துன்பமடைந்தார்களென்று வந்தவர் கள் சொல்லிக் கொள்ளப் பரமசிவன் அவர்களோடு திருவாய்மல ர்ந்தருளுவார்: மணம் வீசும் அளவில்லாத புழுகை நமதுருவமாகிய அருணுசலத்திற் சிதறியதனுல் அதிகபலம் அடைந்திருக்கின்றான் அப்படிப்பட்டவன் எளிதில் அழியமாட்டான் ; ஆனபடியினுலே அவனை மோட்சத்தில் அடைவித்து உங்களைத் துக்கசமுத்திரத்தி னின்றும் கரையேற்றுவோம். எ-று. உ

மேவுமெனவோதியரு ளோடுபுளகாதி
  வேதமுதல் கூவியவுண
நாவிவடிவாகியவ் ஞவிவிடுவாயென
  நாவிவடிவான் மொழிகுவான்
பாவையொருபாகவரு ணாலயபுராதன
  பராபரவிலோச னகுளா
வேவலெளியேன்மொழியு மாறுதவெனவிறைவ
  னீரடியின் மீதுதொழுதே.

இ-ள். நீங்கள் உங்களிடத்திற்குப்போய்ச் சேருங்க ளென்று விடைகொடுத்தருளி மிக்ககிருபையோடு புளகனென்னும் அவ்வசு ரனை. வேதமுதலாகிய பரமசிவன் அழைத்து அசுரனே ? புழுகு பூனை வடிவங்கொண்ட உன் பிராணனை விடென்று சொல்லிய அளவில், அவ்வசுரன் சொல்லுவான, பார்வதியை யொருபாகத் தில் கொண்டருளியவரே; கிருபைக்கு இடமா யிருக்கின்றவரே! பழமையானவரே ! பராபரமாகியவரே ! நெற்றிக் கண்ணையுடைய வரே ! உமக்கு ஏவல் செய்தற்குரிய எளியேன் கேட்டுக் கொள்ளு கிற வரம் கொடுத்தருளுமென்று சுவாமி இரண்டு திருவடிகளுக் கும் வந்தனஞ் செய்து சொல்லுவான். எ-று. (௫)

எனதுகிளையாமிருக முனதுதிருமேனிபுக
  வினியபுழுகாது மொருபோ;
புனைகமெனவேபரவி யுயிர்விடலுநாவிகதி
  புகுதவிறைமேயா னருளினுன
டனமுருகியேமுனிவ ரிமைபவர்கண்மானிடர்கண்
  மதிமுடியின் மேலணியவே
யனவரதமார்மதமு மிமசலமுமாலயம
  தருவியெனவே பெருகுமே.

இ-ள். நானெடுத்த உருவமாகிய புழுகு பூனையின் மரபினுல் உண்டாகின்ற புழுகு உம்முடைய திருமேனி ஏற்றுக்கொள்ளவும், அதனுற புழுகணி யிறைவனென்று ஒருநாமததை நீர் தரித்துககொள்ளவும், அருள்செய்ய வேணடுமென்றவணங்கி நாவியுயிர் விட்டவுடனே, அவ்வசுரன கதிசேரும்படி சுவாமி அனுக்கிரகஞ் செய்தார. அப்படி அவனை இரட்சிததததுகண்டு முனிவர்களும் தேவர்களும, மனிதர்களும் மனவருததமடைந்து சந்திரனைததரித்த சுவாமி சிரததிற புழுகு காப்புசசாதத, எப்போதும் அப்புழுகு கஸ்தூரி பனிநீரோடு சுவாமி ஆலயம அருவியை யுடையதாகப்பெருகி யோடும எ-று. (௮)

புழுகுபனிநீர்களப மனுவளவதேனுமிறை
பனையுமவைகைபா லுதவினோர்
விழிகுளிரநீழ்யா விணையடிகளேபரவி
விழவினர்கள வீடுபெறுவா
ருழைமருவுபாணியினா சரிதமிதுவாகுமென
வுவகையுடனே யுரைசெய்தான
மொழியுமலராலயனை முனிவருடனேசனக
முனிபுகழவினோடு தொழுதான்

இ-ள். புழுகும் பனிநீரும், கட்டுவர்க்கச சந்தனமு மாகிய இவைகளில அணுவளவேனும் சுவாமி ஒப்புககொள்ளுமபடி செய்தவாகளும, கணகள் களிபபடையும படியாகத் தரிசித்துச சுவாமி திருவடிகளைவணங்கி அவா சரித்திரத்தைக் கேட்டவர்களும் மோட்சமடைவார்கள்; மானைககரததில் வைத்தருளிய பரமசிவனுடைய திவ்வியசரிததிர மிதுவாமென்று சந்தோஷமாய் அப்பிரமதேவா சொல்ல அப்படிசசொல்லிய பிரமதேவனைச சனகரிஷி முனிவர்களோடு தோத்திரஞ்செய்து வணங்கினர். எ-று. (௯)

வென்றொழிலேயாசித்த வில்லையெனு நீவதனின்
றன்றொழிலே சோணா சலா. ௨௪

நறும்பூவுடன்சேர்ந்த நாருமணமெய்து
மிறும்பூதன்றைய வெளியேன்—பெறம்பே
றதுவேதானாக வடியருடன் சேர்வேன்
சதுவேதா சோணா சலா. ௨௫

பத்தருக்குஞ் சித்தருக்கும் பண்ணவர்க்கும் விண்ணவர்க்கு
முத்தருக்கு மற்றவர்க்கு மூவரொனுக—கத்தருக
நற்றுணையாய் வாழ்கினறாய் நாயேற்கு நாயகனே
சற்றுணையாய் சோணா சலா.

வணங்கொத் தலையும் வழுத்தாத நாவு
மிணங்கா மனமு மெனக்கே—யணங்கா
யிருதியா வின்னம விளம்புவதே னந்தோ
தகுதியா சோணா சலா. ௨௭

என்னோநீ ராடபபோ யெண்ணமறந்தொருவன்
பின்னேசே றுகின்ற பெற்றிபோற்—கொன்னேவெவ
கன்மத்தைச் செய்து கழிக்கின்றே னல்லகர
சன்மத்தைச் சோணா சலா. ௨௮

அண்ணா மலையென்று மண்டமெல்லாம் பெற்றெடுத்த
வுண்ணா முலையென்று முன்னதே—யெண்ணாத
நாளிலலை நாயேற்கு னறறுன வாதடையுக்
தாளில்லை சோணா சலா. ௨௯

இலவுதனைக் காத்தே யிருக்குங் கிளிபோற்
குலவுகுடும் பத்தையே கோரி—விலகினேன்
மாதுரியா னந்தகம் வாய்க்குமோ வேண்டிக்குச
சாதுரியா சோணா சலா. ௩௦

நாட்டைவிட்டுக் காட்டையுற்று நற்கனிதேரோர்சிறுவன்
வேட்டையிற்றப் புகுகொடிய வேங்கைகண்டு—கோட்டை
யரண்புகுந்தே யுய்ந்ததென யானுய்ய நின்பூஞ்
சரண்புகுந்தேன் சோணா சலா. ௫௧

வானேமுகவட்ட மாமூர்த்தி யாவிளங்கும்
கோனே நினதுபதங் கூடாமல்—யானே
தனித்திருந்தேனோ விளங்குத தளரவிதற கென்றே
சனித்தேனோ சோணா சலா. ௫௨

தேவாரந்தன்னைச சிரத்தையா நாயடியே
னோவாரப் பயந்துவிழிக—கோவாரக
கன்னிகருமுள்ளங் கனிததுருகும வாழ்வருளாய
தன்னிகருஞ் சோணா சலா. ௫௩

ஞாயிறுதிங்க ணயனஞ்செவ் வாயுமைமெய
மேயபுதனின்மெய் வியாழமுறை—வாய
தனியாமோர் வெற்புத்தழை வெள்ளியுறுகுச
சனியாமோ சோணா சலா. ௫௪

பெண்ணாசையாதியாப் பேசுகின்றமூவாசை
யெண்ணாசைவையகத்தி லேறகாதோ—அண்ணா
மலையானே கொண்டவர்யார மற்றாசைதம்மிற
றலையானே சோணா சலா. ௫௫

ஓர்தனிரு தாண்முமல மோவுறவே நாற்கரணஞ்
சேர்தாவஞ் சக்கரமூஞ் சிந்தித்தா—ரூர்பொழுது
மேழுவேவ் தத்திசைசயி னேத்தருளெட்டங்கமுறத
தாழுவேன் சோணா சலா. ௫௬

காலத்தே சென்றுசிவ கங்கையிலே நீராடிப்
பாவத்தே நீற்றைப் பரித்தணிந்து—மூலமா

மந்திரமே யோதிநினை மன்னிவலஞ் செயவதுய்யு
தந்திரமே சோணசலா. ௧௭

நின்னைசதமா நினைக்குஞ் சிறியேற்கும்
பின்னைவுறுமைப் பிணியுண்டோ—பொன்னைச
சதாசிவா வென்றழைக்குந் தோகைபுணாசாம்ப
சதாசிவா சோணசலா. ௧௮

உடல்பொருளோடாவி யுனக்கேயளித்தேன்
கடனுகக்கொண வெனைக்காவா—கடனுடனே
யிகடத்தைநீபுரிந்தா லேவாபாற கூறுவனென
சகடத்தைச சோணசலா. ௧௯

தன்னிகரில்சோண சயிலனேயென்பாச
சொன்னிகழ்பாமாலையன்று சூட்டினருக—கின்நிலத்தின
முன்மானன்றெட்டரிய முண்டகத்தாளன்றியுண்டோ
சன்மானஞ் சோணசலா. ௨௦

வாக்கின்வருகவென்றால் வாய்நோமோ தாழ்ந்தேனைத
தூக்கின்மலர்க்கை துவளுமோ—நோக்கின்
வலிக்குமோ நின்கடைக்கண் வள்ளலுக்குமுள்ளுஞ்
சலிக்குமோ சோணசலா. ௨௧

நன்னெஞ்சகடனுன்ற ணைமலர்த்தாள்பூசியே
னென்னெஞ்சகல்லா யிருப்பதா—னின்னெஞ்சங்
கல்லாபார்மேலென்னைக் காவாதென்காரணமோ
சல்லாபா சோணசலா. ௨௨

தஞ்சமெனநின்கமலத் தாளடைந்தானிருக்க
வஞ்சகமனென்பால் வருவாரோ—நஞ்சமிக்க
பொங்கராவேணிப் புனிதர்மார்க்கண்டனையார்க
சங்கரா சோணசலா. ௨௩

கரங்குவித்து மெய்சிலிர்த்துக் கணணீருதிர்த்துச
சிரங்குவித்துத் தெண்டனிட்டுத் தேம்பி—யிரஙகுணர்க்கு
வந்திடுவாய்கேட்ட வரந்தருவாய்நாயேற்கென்
றந்திடுவாய் சோண சலா. ௬௪

ஒருவனொருத்தியுட னேகைபெறக்கூடும்
மருவம்பனிததுளிபோற பாயநது—கருவுற்
றுருவஞ்சார்ந்துறபவித திவகோடியுழலாதான்
சருவஞ்சா சோண சலா. ௬௫

வன்பிறவிநோயக்கு மருந்தாவிருநதடியாா
தன்பிறவிழிக்குநினைச சூழ்நதவருக—கென்பிரசிா
சிறபராவமபலததிற றெயவாநடஞசெயதருளுந
தற்பரா சோண சலா. ௬௬

ஒருரென்றில்லாம லோடெடுததுபபிசசைககா
வூருராசசுற்றி யுலகினருய—பேருரி
லேற றுவாயென றனனை யெயபபடியானமபுவது
சாற்றுவாய சோண சலா. ௬எ

அன்பாரவுன்ற னடிககமலம்பூசிதத
லென்பாரமெனனை பிரசிதத—லுன்பாரவ
காரணதீதா கருணாகராமழுமான
தாரண சோண சலா. ௬அ

பந்தக்காளென்னைப் பருத்தவுடல்சுமப்பே
னந்தக்காலன்வெருணடெ ஞவிகொள—வநதககா
லஞ்சிலிப்பேனீவந் தருளாயேலென்செய்வேன்
சஞ்சலிப்பேன் சோண சலா. ௬௯

ஒருமணத்தைநீக்கி யுயர்நாவலூரார்க்
கிருமணத்தைச்செய்தாண்டு தென்னீ—வருமணத்தோா

மாட்சியோவென்பாரேல் மங்கையுமைகங்கையிவர்
சாட்சியோ சோணா சலா. ௬௦

ஞாதுருமெய்ஞ்ஞான நவிலரியஞேயமென
வோதுருமம்முப்புருளி னுண்மைதனைப்—பேதுறவேன்
றேர்வேனோதேர்ந்துன் றிருவாளர்தஞ்சபையிற்
சார்வேனோ சோணா சலா. ௬௧

ஞாலமிடலோடருந்து நாரணனேயாதியரிக்
காலமிடர்தீர்ததெம்மைக் காத்தியென—வோலமிட
கஞ்சமுண்டாவுன்னைவிட நாயேற்குலகிலொரு
தஞ்சமுண்டா சோணா சலா. ௬௨

அபயகரமு மருள்சேர்முகமு
முபயபதமு முமையா—ளிபமுகன்சேய்
நண்ணவாமால்விடைமே னாயேன்சரணுனக்கே
தண்ணவா சோணா சலா. ௬௩

அன்பேதிரியா வருளேநெய்யாமிக
நன்போகமகலா நானோ—முன்பேமெய்ஞ்
ஞானமாந்தீபமிட்டு நணபொடுவாழ் வாழ்வருளசீர்த்
தானமாஞ் சோணா சலா. ௬௪

மணமென்று கூறியதோர் வாயாலேமற்றும்
பிணமென்றுகூறுகின்றா பின்பும்—குணமென்ற
வெம்மதியேனானு மெய்யினைமெய்யென்றனுவுஞ்
சம்மதியேன் சோணா சலா. ௬௫

மாசகன்றவாதவூர் வள்ளல்வழங்குமணி
வாசகமேமாமறைக்கு மாண்பென்றே—பேசுவே
னங்கையானீயெழுது மன்பேபெருஞ்சான்றாஞ்
சங்கையா சோணா சலா. ௬௬

இரந்தும் பரிந்தே யிடுவென்று நீதி
கரந்துவிடா திருக்கக் கச்சூர்ப்—பொருந்தி
யுணவா தளித்து நம்பியுண்ண வளித்தாய்சீர்
தணவாத சோணா சலா. ௬எ

பாலையளித் தாய்காழிப் பாலனு ரின்புறவே
சூலையளித் தாயப்பர் துன்புறவே—யேலவிவை
நன்மையோ வாயுண் முறைகாமத்தி னுல்விளைந்த
தன்மையோ சோணா சலா. ௬அ

கற்பனையே லாங்கடந்த காரண நீதசுக
தற்பரனே நின்றாள் சரண்புகுந்தே—னற்பனெனக்
கொள்ளாதே குற்றங் குறியாதே யன்னியமாகத்
தள்ளாதே சோணா சலா. ௬௯

பூசேன்வி பூதிதனைப் பூணேன்சிவமணியைப்
பேசேன்பஞ்சாக்கரத்தைப் பேதமையை—வீசேன்
வலவனேபோற்றிரிவேன் வாழ்வேனோவேணிச
சலவனே சோணா சலா. ௭0

அளவைகடந்த வருளொளியேநின்பே
ருளவையனுவு முணரேன்—களவகன்றோர்
தந்நிதியேமெய்ஞ்ஞான தாண்டவானந்த
சந்நிதியே சோணா சலா. ௭௧

தொண்டர்களுமாதலரும் தூயசிவகாமியுநல்
வண்டர்களுங் காணமன்று ளாடுகின்றாய்—பண்டிருவர்
காணேமெயென்று கருதுங் கமலப்பூந்
தாளேமே சோணா சலா. ௭௨

ஆணிலே பெண்ணிலே யல்லா வுயிர்களிலே
வீணிலே யென்போல் விளைவார்யார்—வேணி

வியாளனே பொல்லா வினையேனைக் காப்பாய்
தியாளனே சோணா சலா. ௬௩

தொல்லை வறுமையினாற் சோர்ந்தாலு மென்மேனி
யில்லையெனும் லோபிகளை யாசியேன்—இல்லையிலே
வேமபசிவ தைக்கழுஞ் சேயவேணடிபாலாழிதந்த
சாம்பசிவா சோணா சலா. ௬௪

கருணைபுரிந தென்னை நீ காததியே லென்ன
யருணையடைந்ததுணடோ வன்பாத—தருணமல
ரிணைடையுணடோ தொணடுணடோ வெனனுணடெனறனபாசெய
சணைடையுணடோ சோணா சலா. [௬௫

திட்டுணடு வெணணெய்த திருடியுணடு மாதபாற
கட்டுண் டடியுண்டான கணணனே—பிட்டுணடு
வாழ்வெவர்க்கு நலகவே மாறனடி யுணடாயநீ
தாழ்வெவாக்குச சோணா சலா. ௬௬

தாயுமிலை தந்தையிலை தான்றனிய னைநீ
சேயுமிலை சேயகளுககுத தோநதினை—யாயுஙகால்
வர்க்கமிலை முன்பின மரபிலைநீ வததுவெனனத
தர்க்கமிலை சோணா சலா. ௬௭

நண்ணியவெற் போவெள்ளி நறசிலையும பொற்சிலையாம்
புண்ணியமா தேவியன்ன பூரணியே—யுணமையிவை
நம்புமேனன் றுபத்தா நடியிரந் துணடகதை
சம்புவே சோணா சலா. ௬௮

விளைவான் மலிந்திடு நெல்வேலி யுணக்குணை
விளையான் குடிமாற னின்பா—முளையதனை
வரிவருக காலை மறுக்காயோ மால்விடைமேற்
சாரிவருஞ் சோணா சலா. ௬௯

அண்ணா மலையானை யப்பநீ தாயுமையு
முண்ணா முலையா ளுண்மைசொல—வொண்ணுதா
மிக்கதோ நல்லோர் வியந்து துதிசெய்யத்
தக்கதோ சோணா சலா. எ0

சூதாடப் பொய்பேசத் தூயோரை நிந்திக்க
வாதாட வஞ்சிக்க வல்லவன்யான்—வேதாவின்
றோதகமோ நின்றாடு திக்கறியே னென்னுடைய
சாதகமோ சோணா சலா. எச

குகைநமசி வாயர் குருநமசி வாயா
தகையுறு வெண்பா மாலைசாதிப்—புகழடைந்தா
ரேதறுகின்றே னுள்ளபடி யில்லையவா போலச
சாதறுகின்றேன் சோணா சலா. எஉ

நந்தவனம் புக்கு நறுமா மலரெடுத்துச
சுந்தரப்பன் மாலைதொடுத தணிந்தே—யெங்கை
யருணேசா வெணபாரை யாபத்திற் காகருந்
தருணேசா சோணா சலா. எஙு

முயலகன் மேல்வைக்கா முளரித் தாளிந்த
மயலகன் மேல்வைத்து மகிழலா—வியல்சேர்
பாதமே செய்க பகனுனக்கு முணடு
சரதமே சோணா சலா. எ௪

பூவடிவம் வெற்பரையன் புத்திரிக்குத் தீண்டரிய
தீவடிவ நின்றனக்கேற் சேர்க்கசுகி—மாவலக்கீழ்த்
தந்தேகம் வாடாமற ரன்வுவிளத்தா ணீபிவைத்தால்
சந்தேகஞ் சோணா சலா. எ௬

நன்மார்க்க நான்மார்க்க நண்ணுஞ் சரியையுறு
மூனமார்க்க மேனு முயலாத—வென்மார்க்கத்
துன்மார்க்க மாதலினற் சூழ்வதெங்கே மேலான
சன்மார்க்கஞ் சோணா சலா. எ௬

பல்லாயிரந் தரமாப் பாலன்குறை யெல்லாஞ்
சொல்லா திருக்கவிலை சொல்லியுமென்—பொல்லாத
புத்தியின் றேடத்தாற் பொருத்தமின்றோ வாண்டருளச்
சத்தியின்றோ சோணா சலா. எஎ

ஆடரங்கா வன்பர்மன மானந்தக் கூத்துகந்தாய
கோடரங்கா ணென்றன் கொடியமன—நீடரங்க
மண்டிப்பாய்வேக மடங்கவெங்கு மோடுவதைத்
தண்டிப்பாய் சோணா சலா. எஅ

மழைகுளிர்வெங் காற்றுரும வல்லடிதீ வெய்யில்
குழைபசிநோய் கள்ளர் கொடுங்கோல்—விழைகூற்றுற்
றீங்குவா ராதுவலஞ் செய்வாரை நீயிருந்து
தாங்குவாய் சோணா சலா. எ௯

பூமாலை கையும் புனன்மாலை நேத்திரமும்
பாமாலை நாவும் பரிந்தணியுந்—தாமே
நெடுமாலைத் தேடவைத்த நீயெனைச்சேர் பார்கூய்த்
தடுமாலைச் சோணா சலா. அ0

முற்காசி மன்னன் முகத்தைக் குரங்காக்கிப்
பிற்காசி கந்தவருள் பெய்தனையே—யெற்காசி
யப்படியேன் றண்டித் தருள்புரியா யத்தோயான்
றப்படியேன் சோணா சலா. அ௧

தென்பாகத் தேவியுடன் சேர்ந்துசிறுத் தொண்டரிட்ட
வன்பாவ கறியை யருந்தற்கே—யின்பாப்போய்ச்
சீராளா வென்றழையுஞ் சேயையெனத் தந்தளித்த
தாராளா சோணா சலா. அ௨

ஆக்குவாய் காப்பா யழிப்பாய் மறைப்பாய்பின்
னோக்குவா யாவு மொடிப்போதே—தாக்கு
மிமியேறகு சேரந்தா னெத்தனையோ கறயந்
தமியேற்குச் சோணா சலா. அ௩

தாயிலாச் சேய்போற் றவிக்கின்றே னென் றுரைத்தா
லாயிலா னென்ற றைவையென—வாயிலா
லூமனே யொத்தியா னென் றுமுரை யேனிதழித
தாமனே சோணா சலா. அ௪

அனகனா னஞ்சுண்டா னம்மை வினையாற்
புனையுடம்பும் பாதியாய்ப் போனன்—றினமூந்தா
னேமாந்த மானிடனென் றெள்ளாம லேததுவதென்
றுமாந்தர் சோணா சலா. அரு

சஙகரியத் தங்கொளலாற் சக்கரமான் மன்னுதலால்
வெஙகரி பயந்தவனன் மேவலா—லிஙகரிது
நிற்குருவே யென்னுருவ நீமுழுதுங கொண்டுறைவாய்
சற்குருவே சோணா சலா. அசு

மோன முடிவே மொழியவரு மானந்த
ஞான வடிவேயின் னலமுழுதுந்—தீன
னரியம்புவே னெவ்வா றினியவருள் செய்யாய்
சயம்புவே சோணா சலா. அஎ

முத்தே மணியே முழுவயிரப் பொற்றூணே
சித்தே யெமதுகுல தெய்வமே—சுத்தகுண
மேருவே கற்கருணை மேகமே வந்தடைந்தேன்
றூருவே சோணாசலா. அஅ

சோதிக்க லாமா தொழும்பனேன் றன்னைமிக்க
வாதிக்க லாமா மணியரவம்—பாதிக்
கலாமதிகஞ் சேரவைத்த காரணநின் றூட்குச
சலாமதிகஞ் சோணாசலா. அகூ

அண்டாண்ட கோடி யருளா லளித்தடிமை
கொண்டாண்ட சோதிக் குருமணிநீ—கண்டாய்
சமுகனே யாகவெனைத் தொண்டுகொள வாயன்பர்
சமுகனே சோணாசலா. கூ0

திருவல கிட்டுத் திருமெழுக்கு மிட்டு
மருவுதிருக் கோலமிட்டு வாழ்த்திப்—பெருகுதளி
கம்பத்தே கத்துடனே கைகூப்பிச் சூழ்வதுநந்
சம்பத்தே சோணாசலா. கூக

உருவா யருவா யுருவருவாய் நின்ற
வொருவா வுபதேச மோதக—குருவாய்
வரவேணு முன்றன் மலர்ச்சரணந் தந்து
தரவேணுஞ் சோணாசலா. கூஉ

ஆரூரு மம்பலமு மானந்த கானமெனும்
பேருருவை கட்டமெனப் பேணுகிலேன்—சீரூர்
நித்தியமே நின்னூர் நினைக்கின்றேன் முத்திபெறச்
சத்தியமே சோணாசலா. கூங

பாரறியா விண்ணறியா பாதாளந் தானறியா
யாரறிவா ருன்ற னருஞ்சீர்த்தி—யோரணுவும்
யானறியாத் தன்மையதே யெம்பெருமா னின்னமுநீ
தானறியாய் சோணா சலா. ௧௪

கார்த்திகைக்குக் கார்த்திகைநாட் காட்சிபெறக்காட்டுகின்ற
சீர்கதிவளர் மெய்ஞ்ஞான தீபத்தை—யேசதி
மதுரநேயத் தமிழால் வாழ்த்த வரந்தாராய்
சதுரனே சோணா சலா. ௧௫

வானே முதலட்ட மாமூர்த்தி யாயமர்ந்த
யேனே வுலகுயய வெண்ணியோ—வானே
றதிபதியே ஞான வருணிதியே சீலச
சதிபதியே சோணா சலா. ௧௬

சமயுவே யென்றனது தாணினைக்க வொட்டாம
லைப்புலத்தார்கூடி யலைக்கின்ற—வெம்பிறவி
வெந்தோடநீகொடு விபவமருள் வாய்மிகவுஞ்
சநதோடனு சோணா சலா. ௧௭

சோதனை செய்யாதே சுயவடிவா வந்தென்னை
யாதரிப்பாய்காட்டி லருச்சுனனின்—பாதமலர்
நாடினேன் வேடனு நண்ணினேய் வில்லாலே
சாடினன் சோணா சலா. ௧௮

வெள்ளையா னின்னும் விளம்புவதென் மென்கனிதேர்
கிள்ளைமொழி போலிதனைக் கேட்டருள்க—பிள்ளைநான்
மூதாநீ தொண்டனென் வணபதிநீ யேழைநான்
தாதாநீ சோணா லசா. ௧௯

அருணாசலா வென்றே யன்புடனே போற்றி
யிருணாச மெய்த்தீப மிட்டோர்—பெருவாழ்வைச்
சிந்தையே செய்தளவு தோந்துரைக்க வொணாதென்
றந்தையே சோணா சலா. கOO

சோணாசல வெண்பா.

முற்றிற்று.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சோணாசல சதகம்.



சோணை சிகராகச் சொரியும் மதச்சிறுக
ணானைமுகன் றாதைசோ ணாசலத்துத்—தேனைச்
சகம்பொதிந்த பார்வதிக்குத் தக்கிணனை யென்புல்
லகம்பொதிந்து பெற்றேனருள். ௧

சோதிவடி வாயிருவர் தேடத்துலங்குமுக்க
ணாதிவடி வார்சடையி னார்கங்கை—பாதிச
சசியணிந்தார் சோணா சலமதனைச் சற்று
லசியமின்றிச் சேர்வா மிது. ௨

சேராத நெஞ்சினிடைச் சோணா சலத்தார்க
ணாராத காத லமைவானேன்—பாழாழி
சந்திரனுஞ் சூரியனுந் தங்கிலவிண் டாலுமுழ
லந்தகனென் முன்சேரா னால். ௩

சோகந் துடைத்தருள்வாய் சூர்ப்பனச் சிறுக
ணாகந் தனையுரித்த சம்பனே—மேகமோடு
சந்திரன் றாழ்சோணா சலவாம பாற்றைய
லத்திவண்ணத் தையா வருள். ௪

சோமன் றலைக்கணிந்த சோணா சலவுனரு
ணாமந்தனை யென்வாய் நல்குவாய்—காமன்
சரமுன்மேற் பூப்போலச் சார்த்திடினு நம்மே
அரமெனச் சாராமை யருள். ௫

சோறுண்டிட லுடுத்தல் றூங்க லிவைகளின்க
ணூறுதலுண் டோகஞ்சோ ணாசலா—நீறு
சயமாக மேனி தனிலெனது நெஞ்சா
லயமாக வென்று மிரு. ௬

சோலைநெறி யாரூரோ சோணமலை யோவிசையென்
ணாலையிசைப் பார்வாயோர் நம்பாட்டோ—மாலைச
சயமழித்த காசியோ சாதில்லை யோவா
லயமென்று நீசா ரிடம். ௭

சோதித்தென் னின்ன றுடைகா ரெனவியங்க
ணோதிக்குஞ் சோணமலை நாதனே—வாதித்த
சகத்தா நெஞ்சின்மடந் தானொழித்தாய் வேதன்மா
லகத்தா யர்த்தி னைத்தா. ௮

சோதித் திருப்போரா ருயபசிவன் றாட்கிருக
ணூதித் துயர மகற்றுமல்—யோகத்தார்
சகத்துச சோணா சலமதனி லேகாம
லவ்விகருச சென்று லேவோ ராய். ௯

சோபிக்கு ஞானவுருச சோணா சலத்தார்தா
ணூபிக் கமலற்கு காடரிதே—பாவிச்
சனங்கட்குக் காணுமோ சத்திவிளக் கார்மா
லணவகொண்டு காணுங்கண் ணன்பு. ௧௦

சோணாசல சதகம்.

முற்றிற்று.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருவருணைக் கலிவெண்பா.

கார்பூத்த மாலுங் கருமாவாய்க் காணரிய
பார்பூத்த சீரடியும் பங்கயத்தோ—னேர்பூத்த ௧

அன்னவடி வாயு மறியா முடியுமன்பர்
நன்மனங்கொள் சோண நகத்தனே—சின்மயமாம் ௨

உண்ணா முலையம்மை யோர்பாகங் கொண்டுதிரு
வண்ணாமலை விளங்கு மைம்முகனே—விண்ணவர்கள் ௩

தந்தியக்க நீங்கமத தந்தி புரிவைபோர்த்
தந்திவண்ண நீத்தருளைத் தந்திட்ட—சுந்தரனே ௪

நஞ்சைதனி யாதீத நஞ்சைவளை சோணமலை
நஞ்சையணி கண்டத்து நம்பனே—யைஞ்சபையாஞ் ௫

செம்பம் பலநெல்லை சித்ரசபை குற்றாலம்
பம்புமணி யம்பலமா லங்காடு—உம்பர்தில்லைப் ௬

பொன்னம் பலங்கூடல் புக்கவெள்ளி யம்பலங்க
ளின்னடஞ்செய் சோணமலை யீசனே—வன்னமலி ௭

தேவன் றுறைச்சக் கிரசேக ராலயந்தெந்
காவணா கயிலை யதுவடக்காத்—தேவர்புகழ் ௮

சோமநா தம்மேற்குச் சொல்லீமே [illegible]
வாமத்தி னின்ற வருளையுங்—காமா ௯

வடக்குத் திகளழகை வானிற்றுரக்கஞ்
சுடர்ப்பொன் னிலங்கைதெற்காத்தொல்லோர்—நடத்துபுகழ் ௧௦

பொன்னிலங்கண் மூன்றும்விற் போலவிளங்கநடு
நன்னிலநகொன் சீரருணை நாதனே—தொன்மை ௧௧

அவந்தி துவாரகைமேற் காக்கரஞ்சி கீழாச்
சிவன்சேர் மாயாமதுரை தெற்காய்ப்—பவந்தீருங் ௧௨

காசி யயோத்திவடக் காகநடு நின்றமரர்
பூசிக்குஞ் சோணப் பொருப்பனே—ஆசற்ற ௧௩

கங்கையமுனை கவுதமியே நன்மறைசேர்
மங்காச சரசு வதிவடக்கால்—ஐங்கரத்தோன் ௧௪

கொட்டியகா வேரி குமரிதெற்காய்ப் பாயநடு
வுட்டிகழு சோணகிரி யோநகொளியே—சிட்டாபுகல் ௧௫

மண்ணிலிங்கங் காஞ்சி மழையிலிங்க மானைக்கா
விண்ணிலிங்கந் தில்லை வியன் மூதூர்—திணணர்சார் ௧௬

வாயுலிங்கங் காளத்தி மற்றிவைக்குமத்தியாந்
தேயுலிங்க சோணகிரிச் சிற்பரனே—காய் ௧௭

பிறக்கமுத்தி நல்கு மெழிற்காசி வந்து
பிறக்கமுத்தி நல்குதிரு வாரூர்—அறத்தாற் ௧௮

றனைப்பார்க்க முத்திதரு தில்லையிவைக்கு
னினைக்கமுத்தி நல்கருணை நின்றாய்—அனைத்தாளும் ௧௯

கற்பால்கள் பஞ்சாய்க் கனமழையோ பூவலராய்
வெற்புநிறை ராசி விளங்கினையே—பொற்பொலியும் ௨௦

அந்தியன்னத் தந்தி யமல மலர்ப்பாதம்
த் திசைக் கொண்ட பெருமகத்தே—சந்தமலி ௨௧

வள்ளவா யாரல்லி வாயுவளை யாரவொ
வெள்ள விளையுள்வயல் வேலிவளை—யுள்ளு உஉ
ரழல்வரையா ராழிவர யாயயில்வா யுள்ளா
ருழியுலவா யொல்லை யருள்வாய்—விழிநிறைந்த உ௩
கஞ்சக் கழலிணைகள் கையாற் றநித்தனது
தஞ்சத் தடைக்தேன் தயைதருவாய்—விஞ்சொளிய உ௪
சந்திரனுஞ் சூரியனுந் தாமிருவிற் கால்போல
அந்தவில்லம் பாய்மலைமே லார்தீபம்—இந்துகதிர் உ௫
மத்திநிற்கு தீயாகி மாலயனுண ணீயாகு
மித்திருநாள் கண்டார்க் கிடருண்டோர்—வித்தகமார் உ௬
கல்வி மறந்தழியுங் காய் நிலையாது
செல்வ நிலையாது தேருங்காற்—றொல்லை உஎ
வினையோ வனுபவித்தாற் றீருமென் றும் வீடா
துணையேத்திப் பெற்றவரு ளுண்மை—கனைசிலம்பா உஅ
யாரணைக் கோலிட்டறியா தகிலசக
காரணைத் தாநின் கழலிணைக்கே—சாரன்பாற் உகூ
பாடாப் பெற்றேன்கண் பார்க்கப்பெற் றேனின்னை
நாடமனம் பெறறே னக்கயில்லைத்—தேடரிய ௩௦
பாதார விந்தம் பணியப்பெற் றேன்றமியேற்
காதார நீயே யருள். ௩௧

திருச்சிற்றம்பலம்.

திருவருணைக்கலிவெண்பா

முற்றிற்று.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருவண்ணாமலை

# திருவருட்பதிகம்.



எழுசீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்.

வளங்கிளர்சடையும் விளங்கியவிதழி மாலையுமாலயன் வழுத்துங். குளங்கிளர்நுதலுங் களங்கிளர்மணியுங் குலவுகிண்புயமும் புயத்தின், றளங்கிளர்பதமு மிளங்கதிர்வடிவுந் தழைக்கநீயிருத்தல் கண்டுவந்த, வுளங்கிளரமுதே துளங்குநெஞ்சகனே னுற்றகருணை யிற்பெறவருளே. ௧

அன்பர்தம்மனத்தே யின்பமுற்றவைக ளளித்தவர் களித்தி டப்புரியும், பொன்பொலிமேனிக் கருணையங்கடலே பொய்யனே ன்பொய்மைகண்டின்னுந். துன்பமுற்றலையச் செய்திடலருணைத் தொன்னகரிடத்தனதெழில்கண், டென்புளமுருகத் துதித்திடல் வேண்டியிவ்வரமெனக்கிவணருளே. ௨

பூத்திடுமவனுங் காத்திடுமவனும் புள்ளினங் குருக்கொடுகோடி, யேத்திடுமுடியுங் கூத்திடுமடியு மின்னமுங் காண்கில ரென்றுங், கோத்திடுமடியர் மாலையினளவிற் குலவினை யென்று நல்லோர்கள், சாற்றிடுந்துரேட் டவேந்தனன்னினது சந்நிதியுறவெனக்கருளே. ௩

அருள்பழுத் தோங்கு மானந்தத்தருவே யற்புதவமலநித்திய மே, தெருள்பழுத்தோங்குஞ் சித்தர்தம்முரிமைச் செல்வமேயருணையுந்தேவே, யிருள்பழுத்தோங்கு நெஞ்சினேனெனினு மென் பிழைபொறுத்து நின்கோயிற், பொருபழுத்தோங்குஞ் சந்நிதிமுன் னர்ப் போந்துனைப் போற்றுமாறருளே.

மறையுமம்மறையின் வாய்மையுமாகி மனனரியவள்ளலேமலா
மே, லிறையுமாதவஞ்சூ ழிறையுமினனவனென் றெய்திடாவிறைவ
னேயடியேன், பொறையுநன்னிறைய மறிவுநற்செறிவம் பொருந்
திடாப்பொய்யனேனெனினு, மறையுநற்புகழ்சேரருணையை விழை
ந்தனன்கெனை யடைகுவித்தருளே. ௫

தேடுவார்தேடுஞ் செல்வமேசிவமே திருவருணுபுரித்தேவே,
யேடுவாரிதழிக்கண்ணியெங்கோவே யெந்தையேயெம்பெருமானே,
பாடுவார்களிக்கும் பரம்பரப்பொருளே பாவியேன்பொய்யெலாம்
பொறுத்து, நாடுவார்புகழு நின்றிருக்கோயி லணுணுமாறெனக்கித்
தேனருளே. ௬

உலகுயிர்தொறுநின் றாட்டுவிட்டாட்டு மொருவனேயுத்தம
னேநின், னிலகுமுக்கண்ணு நகாளகண்டமுமெய் யிலங்குவெண
ணீற்றணியெழிலுந், திலகவொணுதலுண் ணுமுலையுமையாள்
சேரிடப்பாலுங்கண்டடியேன், கலகவைம்புலன்செய்துயரமுமற்றைக்
கலக்கமு நீக்குமாவருளே. ௭

அருட்பெருங்கடலே மானந்தநறவே யடிநடுவெந்தமுங்கடந்த,
தெருட்பெருமலையே திருவணுமலையிற் றிகழ்நயஞ்சோதியேசிவ
னே, மருட்பெருங்கடலின் மயங்குகின்றேனென் மயக்கெலாமொ
ழித்துவன்பிறவி, யிருட்பெருங்கடல்விட் டேறநின்கோயிற் கெளிய
னேன்வரவரமருளே. ௮

கருணையங்கடலே கண்ணகண்மூன் றுடைய கடவுளேகமலன்மா
லறியா, வருணையெங்கோவே பரசிவானந்த வமுதமேயற்புதநிலை
யே, யிருணிலம்புகுதா தெனையெடுத்தாண்ட வின்பமேயன்பர்தம்
மன்பே, பொருணலம்பெறநின் சந்நிதிக்கெளியேன் போந்துனைப்
போற்றுமாறருளே. ௯

ஏதுசெய்திடினும் பொருத்தருள்புரியு மென்னுயிர்க்கொருபெருந்துணையே, தீதுசெய்மனத்தார் தம்முடன்சேராச் செயலெனக்களித்தவென்றேவே, யாதுசெய்புலனால் வருந்தல்செய்கின்றேன் வருந்துருவண்ணமெற்கருளித், தாதுசெய்பவனேத் தருணையங்கோயிற் சந்நிதிக்கியான்வரவருளே. க0

திருச்சிற்றம்பலம்.

திருவருட்பதிகம்

முற்றிற்று.

---

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# அருணாசலீசர்பதிகம்.



காப்பு-வெண்பா.

அல்லல்போம் வல்வினைபோம் அன்னைவயிற் றிற்பிறந்த
தொல்லைபோம் போகாத் துயரம்போம்—நல்ல
குணமதிக மாம்பதிகம் கூறுதற்குத் தொந்திக்
கணபதியைக் கைதொழுதக் கால்.

நினைவாகிமூலம் நினையாகிநேசம் நிசரூபமான வடிவெ
மனமாய்கைமூடி யறிவேகலங்கி மனமும்மயங்கி வெருவாய்
யினமோடிருந்து அவதிக்குலைந்து யெமதூதரோடி வருமுன்
மனவேகமாக அருணாசலீசர் வரவேணுமெந்த னருகே. ௧

கயிலாயமேரு அதிலாறுவீடு கரைகண்டதில்லை யொருவர்
வெயிலானசோதி விளையாடும்வீடு வெளிமாய்கை யேதுமறியேன்
பயிலானகொம்பிற் பசுங்காயுமாகி பழமாயுதிர்ந்து விழுமுன்
மனவேகமாக அருணாசலீசர் வரவேணுமெந்த னருகே. ௨

நதியோடுதும்பை முடிமீதணிந்து நலமானவெள்ளை விடைமேல்
பதியாயிருந்து வுமைபாதிகொண்ட பரனேயுன் னைமறவேன்
விதிஞூதனேவ யெமதூதர்வந்து வெகுவாதைசெய்து விடுமுன்
மதியேபுனைந்த யருணாசலீசர் வரவேணுமெந்த னருகே. ௩

உற்றாருமில்லை யுறவாருமில்லையாரு முறைசொல்லி யிப்பவரவே
பெற்றாருமில்லை மறைதேடுகின்ற பிரானேயுன் னைமறவேன்
கற்றாருமேற்ற வடியாரிருந்து கனியாயமர்ந்த கனியே
மற்றாருமில்லை யருணாசலீசர் வரவேணுமெந்த னருகே. ௪

கொங்கைக்குரும்பை மூலமாதராசை கொடிதான மோகமதனாற்
சங்கற்பமொன்ற மறியாமல்வினையைத் தடுமாறியாவி விடுமுன்
திங்கட்கொழுந்து முடிமீதணிந்த சிவனேயுன் ஞானமறவேன்
மங்கைக்கிரங்கு மருணாசலீசர் வரவேணு மென்றனருகே. ௫

உருவானகாய மதிலாறுவீடு யுதிரங்கலந்த தேகம்
கருவாகிநின்று புவிமீதில்வந்து கபடேதுமொன்று மறியேன்
குருவாகிநின்ற சிவஞானசோதி குருவேநின் ஞானமறவேன
மருவீசுசோலை யருணாசலீசர் வரவேணு மென்றனருகே. ௬

பணியாதகோயி லணியாதநீறு பசியாதசோறு தருவாய்
துணியானவாசி சிவஞானமோன சுகமேயெனக் கருளுவாய்
தணியாதகோப முடலோடிருந்து சலியாதமாயகை வெளியே
மணியாமொகாத மருணாசலீசர் வரவேணுமென்றனருகே. ௭

சூதாகிநின்ற சிவசூஸ்திரங்கள் சுளுவாயமர்ந்த சுழியே
பாதாதிகேச முடலோடிருந்து படிகா[illegible]லாடு நடனம்
வேதாவுமாட மதியாடமூவர் விளையாடிநின்ற வெளியே
வாதாடிநின்ற அருணாசலீசர் வரவேணுமென்றனருகே. ௮

அடிமூலவட்ட வதிலாறுதிட்ட வதின்மேலிருந்த பரனே
துடியானசத்தி சிவரூபவல்லி சுகமானவேதவடிவே
அடியார்களுள்ளத தெரிவாய்விளங்கு மரனேநின் ஞானமறவேன்
வடிவானசோதி அருணாசலீசர் வரவேணு மென்றனருகே. ௯

உரைதங்கிநின்ற யுயிரெங்குமாதி யுலகெங்குமேக வடிவாய்
கரைகண்டதில்லை வெகுகோடிகாலங் கலிகாலமாய்கை யதனால்
இரைதேடியாசை பசியால்மெலிந்து யிருகண்டியங்கி விழுமுன்
வரைதங்கிநின்ற வருணாசலீசர் வரவேணுமென்றனருகே. ௧௦

அருணாசலீசர்பதிகம்

முற்றிற்று.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருவண்ணாமலை
# அருணாசலேஸ்வரர் பதிகம்.

---

வெண்பா-காப்பு.

ஆதியயன்மா லடிமுடியைக் காண்பரிய
சோதிவரை யாகிநின்ற தூயனொளி—பாதிமதி
கற்றைச் சடைக்கணிந்த கணனுதலைப் போற்றவெங்க
ளொற்றைக்கொம் பன்றுணைத்தா ளுண்டு.

ஆசிரியவிருத்தம்.

ஓதுமலைதுல்லிய விபூதிமலைகைலைய னுறைந்தமலைமந்திரமலை உத்தமமெய்ஞ்ஞானியர் தபோதனர்கள் சூழுமலை யோகிகுமலை யழியாமலை, சோதிமலையிருகண களிக்குமலைமெய்யடியர் தொழுதுகுரு சோணமலையே, துங்கபத்திரியமுனை கலைவாணிதீர்த்தமலைசுனையருவிவொளிர்மாமலை, வேதமலைசித்திர விநோதமலை யென்னனையர் வேணுமலை காணடமலையே, வினைதீர்க்கவந்தமலை கனகாபிஷேகமலை வீறுமலையேறுமலையே, ஆதிமலைமீதுறை யநாதியேயென்னையா ளருணாசலக்கடவுளே, அரகரமகேசனே பரமகுருவீசனே அண்ணாமலைவாசனே. க

காளத்திநாதராய்க் கழுகாசலத்தராய்க் காசிதனில் விசுவேசராய்க், கச்சியேகம்பராய் வேளூர்விநோதராய்க்கமலமலர்தன்னிலுறைபுத், தேளுக்குமாலுக்கு மெட்டாதசோதியாய்த் திருவொற்றியூர்த்தியாகராய்த், தென்மதுரையிற்சொக்க ராய்க்காழிதன்னிற் றிருத்தோணியப்பர்தாமாய், காளசசரோருகத் தடமேவுதென்றில்லை நடராசராய்விரிஞ்சை, நகர்வழித்துணைலிங்க ராய்த்திருச்செங்காட்டு நடப

யடியார்களை, ஆளக்கடைக்கணருள் செயவிளங்கியவெங்க ளருணாசலக்கடவுளே, அரகரமகேசனே பரமகுருவீசனே அணியண்ணாமலைவாசனே. ௨

பாணிச்செழுஞ்சடைப் பரமனேயுலகிலுறு பத்தர்கோடிகளே த்திடும், பாதபங்கேருகா சங்கரசதாசிவா பாலநேத்ராசாம்பவா. பூ னிற்பொலிந்தமா தேவிபங்காசர்ப்ப பூஷணநீலகண்டா, பூதநாதா றபராசிற்பராசர்வ பூரணசதுராயணா, சேணிற்பொலித்தபண் ணாகணைமோலயின் சிந்தனைசெய்தேவதேவா, திகழ்சிகரமேருசோ ண்டாவகண்டா சிதம்பராகருணாகரா, ஆணிப்பொனேநாயினேன் னையாளுவா யருணாசலக்கடவுளே, அரகரமகேசனே பரமகுரு வீசனே அணியண்ணாமலைவாசனே. ௩

சூலமொடுமான்மழு கபாலமுதலைக்கொண்ட துங்கமிகுசிவச ங்கரா, சுற்றிவந்துன்கோயில் பணிதியுடனேதொழுது சொல்லுமெ னதுசொல்லையைக்கேள், வாலிபந்தன்னிலே யொருநலமுமெய்திடா வழுமைவந்தெனைவருத்த, வெண்புவியிலொருசாண வயிற்றினைவளா க்கவுளம் வாடினேனதேடிவந்தேன், சாலவஞ்சித்தெனைக் கைவிடு தூகாயினேன் சாமியுனைவிடுவதில்லை, தள்ளாமலுன்பாத பதுமநிதி மார்திடத் தயைசெய்வதுன்பாரமே. ஆலவிடமருவுமணி நீலகண்டா னே யருணாசலக்கடவுளே. அரகரமகேசனே பரமகுருவீசனே அ ணியண்ணாமலைவாசனே. ௪

தேவர்துதிதேவராய் வாழ்விக்குமீசருய் செகதலக்கர்த்தவ்யமா ன. நெய்வீகமாமுசித வைபோகராயனே சிந்தைநொந்திளிதுவாடி. வலகில்கொலைகளவு கட்காமமாதிய வகுதுதவைம்பாதகங்கள், ம ை சசமில்லா தியற்றினேனேனுமுன்னை வந்தித்திடாதகுறையோ, கூ டுவன்றசத்தமுன் செவிகொண்டுகேளாத கொடுமைதானென்னை யுமே, குழவியழுகுரல்கேட்ட தாய்போலவந்தெனது குறைதவிர்த் து யுமே ஆவிக்குநீதுணை யலாதுவேறில்லையென் னருணாசலக்

வீணேயிவ்வவனியி லுதித்துவந்தழனேர் விசாரத்தினாலெனதுளம், வெந்துமிகநொந்துன்னை வந்தடுத்தேனென்ன விதமானபாதகங்கள், நாணாதுசெய்தகொடி யேனெனினுமென்பிழையை நம்பனேநீபொறுத்து, நலமெலாந்தந்துன் னடிக்கமலமலர்தன்னை நாடவென்னை யடிமைகொள்வாய், சேணாடர்போற்றுமிறை வாசங்கராமகாதேவாத்ரிலோகநாதா, சித்தர்கின்னரருகர் அரகரவெனசசொலிச சேவிக்கு மறைநாயகா, ஆணைப்பெண்ணாயலிய தானவென்னையனே அருணாசலக்கடவுளே, அரகரமகேசனே பரமகுருவீசனே அணியண்ணாமலைவாசனே. ௯

இந்திரன்தீர்த்தமுடன் அக்கினித்தீர்த்தமும் யமதருமதீர்த்தமுதலாய், இயனிருதிதீர்த்தமும் வருணதீர்த்தமுமுக்ய மென்னும்வாயுவுதீர்த்தமும், விந்தைக்குபேரதீர்த்தமும்மலமேவுமீ சானதீர்த்தமுமுவந்த, மிளிராமுலைப்பால்தீர்த்த நளிதமிழ்பயந்தமுனி வேண்டுமுயர்தீர்த்தமிகவே, சந்தசசரஸ்வதி தீர்த்தமுமிலக்குமித் தாய்தீர்த்தமுநகௌதமர், தன்தீர்த்தமுஞ்சக் கரத்தீர்த்தமுநந்தி தகைதீர்த்தமும்பிரமமாம், அந்தமலி தீர்த்தங்கள் விந்தையுடைசூழுதல வருணாசலக்கடவுளே, அரகரமகேசனே பரமகுருவீசனே அணியண்ணாமலைவாசனே. ௧௦

கூட்டமிகுமடியார்கள் கூட்டுறவிலாமடமை கொண்டமுழுமூடன்வித்யா, குருசீடனாய்க்கல்வி கல்லாதமூடனும் கூறுசரிதந்தன்னையே, கேட்டதறியேனுனது நாட்டமறியேனன்மை கிளர்பாதநான்குமறியேன், கெந்தாட்சதைகூ விளங்கொண்டுபூசனை செய்கிரியையறியாதமூடன், பாட்டுமறியேன்வினைக ளோட்டவறியேன்கலிப் பத்துமிவையர்த்தமுடனே, பகரவறியேனுனைப் பரவவறியேன்செய்த பாவமேதோவறிகிலேன், ஆட்டிவைத்தேமன்கை காட்டிக்கொண்டாதருள்செய் அருணாசலக்கடவுளே, அரகரமகேசனே பரமகுருவீசனே அணியண்ணாமலைவாசனே. ௧௧

அருணாசலேஸ்வரர் பதிகம்

முற்றிற்று.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# உண்ணாமுலையம்மன் பதிகம்.

காப்பு வெண்பா.

அண்ணா மலைநாத ரார்ந்திடுபக்கத் தமர்ந்த
உண்ணா முலைப்பதிக மேவுரைக்க—வொண்ணான
அந்தரிறத் தானீன்ற வண்ணலெனு மைந்துகரத்
தந்திமுகன் றானே சரண.

சந்த விருத்தம்.

திருவாருங்கூடு தனிலாறுவீடு தினமேயிருந்துமுடிவிற், பெரு வீடுதன்னில் மணல்வீடுகட்டிப் பேயேன்பிழைக்கவசமோ, எரிகா டெனச்சொல், சுடுகாடுபோமென் னெளியேமுன் வந்தருளுவாய், மருவார்ந்த வுண்ணாமுலைநாமதேவி வரவேணுமெந்தனருகே.

விலைமாதர்தங்கள் நிலையேமெய்யென்று விரிவான வுலகந்த னில், அலையாய்த்துரும்பு போலேயுழன்ற வடியேனையாராளுவார், கலைதேடிகாணா தொளிருமப்ரசித்தில் கனத்தோர் புகழுமண்ணா, மலைமேவுவுண்ணா முலைநாமதேவி வரவேணுமெந்தனருகே. உ

சீர்கொண்டவகிலந் தனில்வாழுமாந்தர் செய்கோடி தப்பிதத் தை, ஏர்கொண்ட வுன்றன் வாளாலறுத்து யிரட்சிக்கு முலகம் மைநீ. ஆர்கண்டு நின்கீட ருரைசெப்ப வல்லவனாதரட்சகிநீயலோ, வார்கொண்டவுண்ணா முலைநாமதேவி வரவேணுமெந்தனருகே. ௩

பிறைபோன்றநெற்றிப் பறையம்பணைத்தி பரிபாலனைத்திபுகழ் சேர், நிறையோடுநின்ற திருவேனின்சீரை நிலையோடு செப்பவுள ரார், குறைவாழ்வைநீக்கிப் பதமீந்துரட்சிக் கொடிபோலிடைப்பெ ணமுதே, மறைதேடு உண்ணா முலைநாமதேவி வரவேணுமெந்தன ருகே. ௪

செஞ்ளிக்குழக்கைதப் புனலைத்தரித்த சிவன்வாமபாகந்தனில்
மின்னேனொனச்சொன் மிகவேயிருக்கு மெல்லியற் கணுமையே,
எனையைப்போலேழை யகிலத்திலில்லை யீடேறவைத்தாளுவாய், மன்
னிக்கு உண்ணு முலைநாமதேவி வரவேணுமெந்தனருகே. ௫

பந்தாங்குசத்தி பணிசோமுகத்தி பதுமாசனத்திமாயி, நந்தார்
காழத்தி நாராயணத்தி நளினப்பதத்தி னணிசேர், சிந்தாகுலத்தை
வந்தாகரித்து சீர்பெற்றிடசிறுவன்முன், வந்தாள்கவுண்ணு முலை
நாமதேவி வரவேணுமெந்தனருகே. ௬

கொடிபோன் றிடைசசி குறமாதுமாமி குணமானபூஷணை
தோ, டிடியேறுபோன்ற மிடியால்மெலிந்த யேழைக்கிரங்குசத்தி,
கொடையாலனத்தை மெலியசெய்விக்கு நாராயணன்சோதரி, வடி
வார்ந்த உண்ணுமுலைநாமதேவி வரவேணுமெந்தனருகே. ௭

சற்றுகிலுன்ற னுளமேயிரங்க பினிதாமசங்கேளேன், சித்தாங்
குரூபி திவ்யப்பிரதாபி திருவார்ந்ததில்லையதனில், எதுதால்விளைந்த
கதைபோலிருக்கு தென்னன்மழைப்பூமியில், வற்றுத உண்ணுமுலை
நாமதேவி வரவேண்டுமெந்தனருகே ௮

விரிவானபூமி தனில்வாழுமாந்தர் வெகுதப்பிதங்கள் செயினு
ம், அரிதானஞான மதுகொண்டோ வரைப்புரந்தாள்வை, பெருவா
ழ்வளித்துப் பிரியத்தொடென்னை பிரியாதிருக்க விப்போ, வருசெ
ல்வியுண்ணு முலைநாமதேவி வரவேணுமெந்தனருகே. ௯

ததியிந்தவேளை மதியேயிலாத தமியேனைரட்சிப்பதற், கெதி
யாருமில்லை யுனையன்றிவேறு கௌமாரிவீரியிந்தப் பதிகத்தைநின்
றன் சரணத்திலொன்ற பரிவற்றுவைகுமெனையாள், மதிசத்தியுண்
ணு முலைநாமதேவி வரவேண்டுமென்றனருகே. ௨௦

உண்ணுமுலையம்மன் பதிகம்

முற்றிற்று.

சிவமயம்.

# உருத்திரசங்கிதைத்தோத்திரம்.

கருவுரு வினுமுளா கவலைகள களைவா
னருவினை யொடுமெத னதுமுத லரிவா
னிருமல னிணையடி நிழலினை யடைவான்
பரிவொடு கரிமுக னடியிணை பணிவாம். ௧

கருணாசல னிமையோர்தொழு கயிலாசல னியலாம
லருணாசல மறைஞானிசண முகனவாரண வதனச்
கருணாசல னெனுமேகவிரைச சமைத்தா னெமைத்தடுத்தா
னருணாசல னமருந்திருக் கோயிலெம தறிவே. ௨

பெருந்தாரணி தனிலவாக்கி சிப பிறவாம் வினைப பிணியும
பொருந்தாதுபக கிருக்கேசிவ புரஞ்சிறபரி புகுவா
ரருந்தாருயிர மலநோயக்கொடி ரருணாசலன மயமா
மருந்தாமுலை யடிநாடொறும பணியாமுடி யணவாம. ௩

துங்கமான கயிலை மலையனே
 துலகங்கு செஞ்சடைச சூடு மலையனே
மங்கையாளுமை யாணமண வாளனே
 மாலயன்சிரங் கொய்யங்க வாளனே
வெங்கை யானை யுரித்த விடலையே
 விரும்பி னூர்தமை யாண்டு விடலையே
யெங்கண் பாச மறக்கர மாவையே
 யீடழித்தரித தாய்கர மாவையே. ௪

மெய்யில் வெண்பொடி பூசும் விரதனே
 விண்ணுளார்மயத தான விரதனே
கையி லம்பெண வாய்த்தவன் கணனே
 கனிபு யன்ம ரகமலர்க் கண்ணனே

பைதல் வெண்பிறை பாம்பணி வேணியே
பத்தர் மேற்படர் தற்குள வேணியே
மைய லென்றனை மாற்றிய வாக்கியே
மயிலின் மணணினை ரேதநுரு வாக்கியே. ௫

---

படயிற் றிகியிற் பயிலேனே பரமற றவரைம பரவேனே
சடலைக் கடலிற் படிவேனே சமனைக்குறகித் துடியேனே
யுடலைச சிறையிற் புரியாதா ருணாவிற புரிவுற றெருளிர்வோனே
யடிவைத் தென துச சியினுளா யருணச சயிலத தமாவோனே. ௬
இயலிற் பொருளாத் துயிராவாழ்வா யெணமற்றிருளிற் றுயில்வேனை
னயர்வற் றறிவுற் றிடவேயின் னடிவைத் தென துச சியினுளாய
கயிலைச சயிலத் தமாவானே கனகக கிரியிற பயில்வானே
யயனச சுதனுக் கருள்வானே யருணச சயிலத தமர்வானே. ௭

ஒருவனிரு வருமிகல நடுவே யுணர்வரிய வனலுருவினொளி-யோவான, வெருவியவர் தொழலுமருள புரிவோன் மிடலுமுடைய விகலவரை விடவே, தருணமதி சடைமுடியி னணிவோன் சகலரையுநமவரைபு மகலா, னருணகிரி யமலனவ னடியா மறிவினுற நினைவமிருள றவே. ௮
தினகரனு மதிதவள மதியுந் திருநயன மெனவனலு முடையோன
னகமன சடைமுடியி லணிவோன் கமழிதழி மதியினொடு நதிநீ
ரணிவினைய நிலவருண மலையான் மலவயிரி தனதடியை மறவா
ரனகனிரு மலனவனொ டகலா தமருமுமை யடிமுடியி னணிவாம்.

---

வாமமறை யோதிய வாயவனே வானில நீரலு வாயவனே
பிரமனை யாக்கிய பீடினனே பேரர னட்டவம் பீடினனே [னே
யாவினை யிற்றெரு று மாட்டினனே யனைக்குமை யாளுறு மாட்டின
கருவினை தாய்த் திடுங்கண்ணினனே கருதடியார் தமக்கண்ணினனே.

போதகத்தீருரி மூடினனே பொழிவிழி யாளொடு மூடினனே
மாதவருக்கற மோதினனே வளரொளி பல்லற மோதினனே
யாதியுமந்தமு மில்லவனே யடிய ரடைந்தம ரில்லவனே
பேதமவாக்கிறப் பேணினனே பிறரறி யாவனப் பேணினனே. ()

---

கருவைத் துரிசைக் களையாவெவ களைவைக் கருணைக் கடலானே
பரிவுற் றுனைக்கண ணினைமூடிப் பழிபற் றியுவம் பிகைபார்மே
லெரியுற் றறலுற் றெழிலாகத திடருற் றிடவொப் பரியாளென்
றரிவைக் கதலைக் கருள்வோனே யருணை சயிலத் தமர்வோனே. ()

பகலற் றிரவற் றுன்பாதப் பரவப் பதம்வைத் தெனையாளாய்
சகலாக் கவரொத் தவர்பாசந் தனையெட் டதனைத் தகைவானே
விகலர்க் கவருக் கழல்வானே விரையத் துகளைத தணியேதா
னகலர்க் கெதிழிற் றருள்வானே யருணை சயிலத் தமர்வானே. ()

---

கனக வெற்பினுங் கயிலை வெற்பினுங
கழுகு வெற்பினும பிரியாதா
னனக னற்புத னருண வெறபின
னலரி னொத்தன் னடிபாடு
மணிக ருக்குழுண மலம ரித்திலங
குணர்வி னுற்றெழும் பனுபூதி
தனையளிப்பவன சகள நிட்களன்
சரண நித்தலும் பணி வாமே. ௧௪

அருவ னிட்கள னமல னித்திய
னசல னத்தத னுமையாள் வான்
கருவி னுட்படு மெமைய ளிப்பது.
மெமன மனத்தினுங் கருதாதா
ரிருவ ருககுமொள் ளெரிய னெத்திகழ்ந்
திகவிரிதவர்க் கினியானு
மொருவ னெப்பில னவனி டத்துறு
முமைம லர்ப்பத முனைவோமே. ௧௫

முனைவினைத் திறத்தினு முதிரவுற் றுடற்கணே
பிணியெமக் கொழிப்பரா ரெனமனத் திலைப்பிர்கா
னனுசயத் தையற்றுநீ ரருணவெற் பகத்துளீர்
தனியளிப்ப ஞெப்பிலா தவனுடற்ற றப்பனே. கசு

கருவினைக் கழித்தலாங் கரியகட் டழிக்கலா
மொருமையுற் றிருக்கலா மொளிரு கிட்கடளத்துநீ
ரிருவருக்கு மெட்டொணு வெரிமயக்க னத்தினு
மருணவெற் பகத்துளீ ரயர்வினைத் தடுதுமே. கஎ

வெய்யவன் காலனை வீட்டினனேவீறன மாறிலவீட்டினனே
ஐயவர் முன்னர வாட்டினனே தசமுகன்றோள்பலவாட்டினனே
பைதலெ னென்றிடா பாறறினனே படாசடை மேனிரப்பாறறின
னே. நையலென் றெனனுள நாட்டினனே ஞானமணனுமைலை நாட்
டினனே. கஅ

எழுது புகழுடையா ரெழிலருண கிரியார்
புழுகுமகிழ் பெருமான் புனிதவடி புகழ்வோ
மொழுகுமல கவலா யுடலினினி யுதியோ
மகிழவிண ணடைவோ மமவனடி யடைவோம். கக

கருதுவதன் முனமே கருதினவு முறமே
யிருமையினு மினிதா மிருபலமு மெளிதே
யருணகிரி யரனே டமருமுமை யடியே
யொருமையுற வுளமா தரவுமுற வுறுவோம். உ0

உருத்திர சங்கிதைத் தோத்திரம்

முற்றிற்று.

சிவமயம்.

# உண்ணாமுலையம்மன் சதகம்,

காப்பு நேரிசை வெண்பா.

உண்ணாமுலைமாய ளெங்குதங்கை சங்கரிமேல்
லுண்ணாமுலைச்சதக மோதுதற்குக்—கண்மூன்று
வேழமுகத்தானை வேழமுகத்தானை
வேழமுகத்தானை வேண்டு.

அவையடக்கம்.

பார்மிசையி னாவலர்மு னானுமொரு புன்சொலைப் பகர்வதென்
சமதையெனிலோ. பாதலந்தனிலாதி சேடனுடையாண்டம் பணைமுடி
தனிற்சுமக்க, சீர்கிகரி யானுமண் டஞ்சுமப் பேனெச் சிற்றெறும்
புகளுமுட்டை, சிதைந்தவோட் டைசசுமந்ததுபோல வெண்கவித்தி
றமையாயிதுவலாமல். கூாமையொடு தான்பெற்ற பிள்ளைசிறுவயதி
னிற் குளறுகிறமழலைமொழியைக். குற்றமென்றேகற்ற பெரியோர்
களிகழ்வரோ குலவுவாலாம்பிகைபெயர். சார்வாககவிதனுன்னிருக்கை
யா லியாவருஞ்சரியென்று கைக்கொள்ளுவார். தக்கபெரியோர்களு
ம்மிக்கசிறு பிழையையும் தான்பொருத் தருள்செய்வரே.

நூல்.

உலகமிசைமேவிய சராசரத தெழுவகையி லுண்டானபேதமத
னி, லுள்ளுயிரதாய்நின்று விளையாடியுங்கருணை யோங்குபிராணவு
வுருவமா, யிலகுதிருயட்சரச டாட்சரபீசாட்சரத் தினியடஞ்சாட்சர
த்தோ, டேற்குமைம்பதினுட னொட்சரர் தன்னிலு மியல்பஞ்சகிர்
த்தியமுதலாய், பலபலவிதங்களாய் , நின்றபொருணீயென்று பழம
றைகண் முறையிடுதலால், பகரவினி வேறுமொரு தெய்வமுண்
டோ சொலும் பரம்பிரம ஞானவடிவே, தலைவியருளோங்கார ஸ்ரீங
காரவல்லியை சத்தியே முத்திமுதலே, தருமேவுமருணகிரி யீசர்பா
லுறையுலகு தாயுண்ணாமுலையம்மையே.

பிராமணரியல்பு.

கதிரோனுதிக்குமு னெழுந்து ஸ்நானஞ்செய்து காயத்திரிசெ பதபமெலாம், கருதிவழுவாமலே முடித்தபின் றிருசந்தி காலக்கிரியங் கொடுத்து, அதிகபுகழ்சேர்சுருதி நூல்கற்கவும்வேள்வி யாகங்கள்செ யவிக்கவும், அறிவுடன்பலசாத்தி ரம்பிரசங்கிக்கவு மவனிமிசை யெ வர்களுக்கும், விதிவழியறிந்து சாதகமெடுத்தோதவும் மிக்கதவமே ன்மையதனால், வேதியர்தமைத்தெய்வ மென்றுகலியுகமதில் விளம் புவர்கள் யாவருந்தான், சதுர்மறைபிலெட்டாத திருநயனவல்லியே சாம்பவிகன்னியரசீ, தருமேவுமருணகிரி யீசர்பாலுறையுலகுதாயு ணாமுலையம்மையே. உ

அரசரியல்பு.

ஆளுகையினுலகிற் பிறக்குஞ்சமாசார மன்றாடகம் விசாரித், த தற்குமேலெத்தனஞ் சொல்லுமதியுக்தியா யமைசசனொருவனை யுநே மித், தேளிதப்பயலொன்ன லார்முடிதுணித்தவனி யெங்குமொரு குடையுளாக்கி, யிதமுறுஞ்சேவலர்க் கவரவர்தராதரத் தேற்றசம்ப ளமுமீய்ந்தே, நாளினுக்குக்குடிக ளுழுதபூமிக்குநிதி ஞாயமுடதன தெண்டியும், நாலெட்டறத்தையுஞ் சிலமுடனேசெய்து நற்லசற்கு ணமிசைந்து, தாளினிற்பணிபவர்க் காறுதலைசொல்லுவதுந் தரணி யாண்மன்னர் முறைமை, தருமேவுமருணகிரி யீசர்பாலுறையுல கு தாயுணாமுலையம்மையே. ௩

மேழிச்சிறப்பு.

செகதலந்தனிலரசர் மனுநீதிமுறைமையும் ,செய்யவேதியர்தர் மமும், சித்தமொருமைத்தவமு முத்திநிலையும்புகழ் சிறந்ததேவதை மகிமையும், சுகவனுதைமேவிய மயல்கொள்வதும் பொருட்சுருதி யொடு பலகாவியம், சொல்கல்வியுங்கருணை யில்லறமுந்திவ்விய சுந்தரவுலாசவெழிலும், அகமகிழ்ந்திடுசெல்வ மும்பரிவுதருமுமதிக் குலமேன்மைவளமும், அடையலரை வெல்வதுங் கீர்த்திப்ரதாபமு

மஞ்செழுந் துணர்வுநிலையும், சகலமும்புவிமிசையில் வேளாளர்மே
ழியின் தனதுடையபெருமையலவோ, தருமேவுமருணைகிரியீசர்பா
லுறையுலகு தாயுண்ணாமுலையம்மையே. ௪

## நல்வழிப் போதனை.

அதிகாலமேமகா கணபதிதனைப்பணிந் தகலவைதைமறக்கவேண்
டா, மதிகமயல்கொண்டுநெற் கற்புடையவனிதைமே லாசையநுவை
ககவேண்டாம், தம்பெறுந்தாய்தநதை குருவுடன் பெரியோர்கள்
சொல்லதனை யிகழவேணடாம. சோர்வுற்றகொலைகளவு பொய்யு
டனகந்தையுஞ் சொப்பனத்தினிலும்வேணடாம், நிதிமமனதயாலே
பரதேசியர்க்கன்னமது நேராநிருக்கவேணடாம். நீணிலந்தனையாளு
மரசரைவணஙகாம ணேருடன்பகைககவேணடாம், சதியதுவாம
லிப்படிமனிதருக் கியல்புசாறறிஞேர் தருமநெறிதான், தருமேவு
மருணைகிரி யீசர்பாலுறையுலகு தாயுண்ணாமுலையமமையே. ௫

## மனிதரிற்றெய்வமென்பவா.

அந்தணர்க்கனதான மீயவதும்வேள்வியா கஙகளைமுடிப்பிப்ப
தும், அரும்பொருளளித்தீச ராலயஞ்செய்விததுமதினந்தனம்படை
த்தும், செந்தமிழ்க்கவிஞாபா னெதமிழ்கேட்டுமிச செகமெலாஙகீர்த்
திபெற்றும், சிவனைமறவாதஞ்செ ழுத்திருதயத்தினிற் றியானித்து
வருமுறைமையும், பந்துசனமொடுபுவியி லியார்க்குமொரு நீஙகுகு
றைபண்ணாதிருக்கையாலும், பரிவுடன்புவிமிசையி லெவர்க்குநலல
வனெனுமபதிவிரதநிலைமையாலும், சந்ததமுமிப்படிப் புகழ்பெற்ற
மனிதரைத் தான்றெய்வமென்றசொலலாம், தருமேவுமருணைகிரி
யீசர்பாலுறையுலகு தாயுண்ணாமுலையம்மையே. ௬

## பசிவேளையினில்லாதவை.

மதுரகவிராசமெழுகு கல்வியும்விச்சித்ர வசனமுங்கனபெருமை
யும், மங்கையர்க்ணமேலதிக விரகசல்லாபமும் வண்மையுந்தன்மை

சயமும், சதிருடன்பணியணிந் திகோகரீகமும் தனயன்மேல்வருபி ரியமும், தங்குபுகழ்மானமு மிக்கிதமுயற்சியும் தாடாண்மையோங் குதவமும், நிதியிசையவர்க்களவி லாசையும்புகழுற்ற நேமமுஞ்சூல் வளமையும், நிசமாகவிதயமொரு வழிபடுதலுந்திறமை சேர்ந்தபுயப லசமர்த்தும், சதிருடன்பசிவந்த போதிலிவ்வகையெலாம் சற்றுநில லாதுகண்டாய், தருமேவுமருணைகிரி யீசர்பாலுறையுலகு தாயுண்ணா முலையம்மையே. எ

பயனற்றவை.

குருவுரைக்காதவுப தேசமும்பரிமளங் கொண்டிருக்காதமலரு ங, கூறரியகணவனில் லாதவொருவிதைவையுங் குஞ்சரமிலாததள மும். தருவெடுத்துற்பன முறைககாதயந்திரியும் தனயரில்லாசசெ ல்வமும், சமயகாலங்களுக் குதவாதபந்துவும தனமிலாதவரிளமை யும், நெறிமுறைமையில்லாத வேந்தனுங்கபடசதை நேமிப்பாவிசு வாசமும், சேருடன்பயிர்விளை தாராதபூமியும் நின்புகழ்சொலாதபே ரும். சரிவரப்புவிமிசையிருந்தென்னகாரியஞ்சாரிசமதேதுமுளதோ தருமேவுமருணைகிரி யீசர்பாலுறையுலகு தாயுண்ணாமுலையம்மையே.

இல்லையென்பவை.

ஆனபலநூலெலாங் கறறவரிலைத்தலை லயனெழுத்தறிவதில் லை, அநதிபகலுந்தனைப் பணிவர்க்குவினையில்லை யாசைக்குரோசமி ல்லை, மானமதுபோனபின் வருவதில்லைக்கவிசொல் வாணருக்குப்ப கையிலை, மாதர்மனதளவறிவ திலையுயிருடன்கவரி மானகபபடுவதி லலை. யீனமுடனேபொருளி லாசைவைப்பவர்களுக் கினியபுகழ்வ ருவதில்லை, யெண்ணருங்கனதனம் பெற்றூலுமறையவர்க ளோற்கா திருப்பதில்லை, தானமதுமுப்பத் திரண்டறவளர்த்திட்ட சாம்பவிய ருண்சத்தியே, தருமேவுமருணைகிரி யீசர்பாலுறையுலகு தாயுண்ணாமு லையம்மையே. க

இன்னார்க்கிது முன்னிற்கும்.

சுத்தரணவீரருக் குக்கோபமுந்திடும் சோரற்குப்பொய்முந்திடு
மே, தோதகக்கள்ளிக்கு விழியினீர்முந்திடுஞ் சொற்புறட்டோதும
டைய, வுத்தருக்ககடவிகடங்களதுமுந்திடு மியோகிகட்கமிவுமுந்
தும். ஓங்குகவிவாணருக் குக்கல்விமுந்திடுமுன் பதத்தினையென்று
ம. சித்தமதில்லைப்பார்க்கு மெய்ஞ்ஞானமுந்திடுந் தியாகிக்குக் கை
முந்திடும். தினமுமாயத்துறையி லனியாயமுந்திடுஞ் சேய்க்கழுகை
யேமுந்திடும். சத்திகலைமாரிசிவ சாம்பவிமனோன்மணி சர்வசீவாத்ம
வுருவே, தருமேவுமருணகிரி யீசர்பாலுறையுலகு தாயுண்ணாமுலையம்
மையே. ௧௰

ஒன்றிலொன்றடக்கம்.

தாடமிகமுழங்குபல வாச்சியமெலாநாக சுரமதிற்குள்ளடக்கம்,
சுகமிகுங்காமுகர்கண மயல்கொண்டவேளையிற் றோகையர்க்குள்ள
டக்கம். படியினைவளைததிட்ட சப்தசாகரமெலாம் பண்புதமிழ்முனி
யடக்கம். பாரிடங்களிலுற்ற வல்வினைத்துஞ்செய்ய பருதிமதியால
டக்கம். அடையலாக்கணமுடியி டறுவீரராயினு மரசராக்கினைக்குள்
ளடக்கம், ஆதியடியாருமறி யாக்திலோசனனு மன்பரிதயத்தடக்கம
தடமுறுங்கருணைவிழி யம்பிகாமலையுதவு தற்பரீஇ யடியர்பாகாய்,
தருமேவுமருணகிரி யீசர்பாலுறையுலகு தாயுண்ணாமுலையம்மையே.

தாசிகளியல்பு.

காரொத்தகுழலினைச சீவிப்பருந்ததிற் கமழ்மலரிணைப்புனைந்
து, சலைநுதலிற்கனக திலதமிட்டுக்கயற் கணணிலஞ்சனவரைந்து,
வாருறறகுங்குமக் கொங்கையிற்பரிமள வசந்தபாளிதஞ்சவ்வாது,
வாடைகழியிர்ந்துபட் டாடைசிற்றிடைமீது வகையுடன் கொய்துடு
த்தி, சீபொங்கிசரிந்தமுக் காடொருபுறந்தனந் தெரிவதொசியிலாய்ம
றைத்துச், சிலம்பொலிபுலம்பிட நடந்திகழ்திறந்தினிய சிறுநகை
செய திளைஞர்வாழும், சார்பினிற்சென்றுவிழி வலைவீசிமயல்தருவ

ர், தாசிகண்டத்தையிதுவாம், தருமேவுமருணைகிரி யீசர்பாலுறை
யுலகு தாயுண்ணாமுலையம்மையே. ௬௨

இதுவுமது.

பொதுமடந்தையர்வீடு சதுர்பரவகச்சேரி புல்குமனையங்காடி
யாமம், புத்திவதுவஞ்சகத்தொப்பையவளங்கம் பொருந்துவாடகை
மட்டமாம், நிதிதருங்கொஙகை விளையாடுபெந்தாமல்கு னோர்ந்தவர்க
ணீர்பருகுகலசவாயாம், விதமுடன்றழுவுகைக் கிணைதேரின்வட
மாகு மிக்கநகைவேம்புரசமாம், வேதைதருவார்களவ ராசையதுடக
ஷாண மேதினியிலிப்படியெலாஞ், சதிகணடிருந்துமவண மயல்வ
லையிலலைவதேன் சற்றறிவிலாதபேர்கள், தருமேவுமருணைகிரி யீசர்
பாலுறையுலகு தாயுண்ணாமுலையம்மையே. ௬௩

இதற்கு இதுநலமென்பவை.

கற்றறிவிலாதபர மூடர்களிடத்திற் கருதுவிசுவாசமதினுங்,
கல்விநெறியறிகின்ற பெரியோர்கள்சிந்தையிற் காண்குபகைமிகநல்
லதாம், உற்றசொற்களோ திடும்புசொலுமனைவிய ருடன்கூடிவாழ்வ
தினிலும், ஒங்குகையிலோடுகொண் டுலகெலாஞ்சென்றிறந் துண்ப
தேமிகநல்லதாம், பற்றலரிடத்திலடி போற்றியேசீவனம் பணணிப்
பிழைப்பதினிலும், பஙகமுறசடலத் தொழித்துயிர்விடுப்பதும் பார்
மிசையிலேநன்மையாம், சற்றுநின்கிருபையுண டானவர்கணியமித்
த சங்கதியெலாநன்மையாம், தருமேவுமருணைகிரி யீசர்பாலுறையு
லகு தாயுண்ணாமுலையம்மையே. ௬௪

மனிதரிற் சுணங்கர்.

காசொன்றமீயாதலுத்தனும்புகழுற்ற கல்வியடையாமடையனு
ம், கருதுமனையாளையொரு வர்க்கீய்ந்துதான்றினங் காலட்சியஞ்செ
ய்வனும், நேசமுடனன்பிலா மங்கையரைவலுமையோடு நித்திரை
யிற்சேர்கிப்பனும், நிலையிலாப்பொய்சொலும் கசடனுடனுறுகிக்,

தையுற்றிடுசோரனும், தூசமூக்குடனணிவ தொடுமேனிசற்றுஞ்சு சிகரமிலாக்காளையும், துற்சனம்பலவித விளைப்பனும்புவியினிற்சொ ற்கெளித்தாய்த்திரிவனும். தாசசிவயோகியை யிகழ்ந்தவனுமிவரெ லாந் தரணியிற்சுணங்கனெனலாம், தருமேவுமருணைகிரி யீசர்பாலுறையுலகு தாயுண்ணாமுலையம்மையே. க௬

## தீமையென்பவைகள்.

தேவரீரல்லாது வேறுகதியிலையெனத் தெண்டனிடுவார்கண் மீது, சிந்தையிற்கபடம்வைத் தனுதினமவர்க்கிடறு செய்வதுகொடு ந்தீமையாம், பாவலரிடத்தினிற் செந்தமிழ்க்கேட்டுநற்பசுவுநல்காம லேபின், பாகட்டுமென்றுவீணைப்நடப்பிப்பதும் பவமுறுகொடுந்தீ மையாம், காவலரிடத்தரு இருந்தமுதருந்தியுட் கவுளவறிந்தபினபு கருதிமெதிராளியைச சோந்துசமர்புரிவதுங கடியதோர்கொடுந்திய தாம், தாவபரிமளகந்த குங்குமபயோதரத்தரிவையேவித்துமுதலே தருமேவுமருணைகிரி யீசர்பாலுறையுலகு தாயுண்ணாமுலையம்மையே.()

## பெருமையென்பவை.

மக்களொடுபதிணுறு மறிவிலர்பிறந்தென்ன வரிசையொடுபெ ருமையல்ல, மன்னுகல்வித்தொழில் விவேகசற்குணனுமொரு மக வுபெறுவதுபெருமையாம், மிக்கதனதான்யசம் பத்துகளநேகமு மிருப்பத்துபெருமையல்ல, மேதினியிலேற்பவர்க் கீய்ந்துபுகழெங் கும் விளக்குவதுவெகுபெருமையாம், பக்குவமுறுஞ்சமரி னின்று வீண்பாசையது பகருவதுபெருமையல்ல, பற்றலர்கண மகுடமுடி யற்றிடப்பொருதுவது பராக்கிரமம் வெகுபெருமையாம், தக்கபுகழ் மெய்ஞ்ஞான வல்லியேயருமறைத் தலைவியேயோங்காரியே, தரு மேவுமருணைகிரி யீசர்பாலுறையுலகு தாயுண்ணாமுலையம்மையே. ௮

## கபடசந்நியாசிகள்.

நெற்றியிற்றுளித விபூதிருத்திராக்கமும் நேசமுறுசடைமுடி யுடன், சிசமானகாவிகாம்பூ மூமணிந்து மிகவேமமும் பலவிரதமும்,

கற்றுணர்ந்தவரனைய சாஸ்திரப்ரசங்கமும் கையினிற் செபமணிதனை, கண்மூடியென்னுவது மெப்பொழுதுமரனையே கருதுவது போன்மழிவதும், கற்றவம்புரிகின்ற யோகீசர்வாதமுறை நான்கோடிசெய்வமென்பார், நாலாறுகைக்கொண்டவ் வேகராத்திரியிலேநன்றுயொளிர்துவிடுவார், சற்பனைசெய்திந்தவகை வேடம்புனைந்தகடுதான்வளர்ப்பார்கள் வெகுபேர், தருமேவுமருணைகிரி யீசர்பாலுறையுலகு தாயுண்ணாமுலையம்மையே. ௧௮

நன்மையிற்றீமை.

தேடரிய தருமத்தை நாடினுமவர்க்குமொரு தீமைகள்வராதிராது, சிறந்தவின்பத்தளவு துன்பமுங்கூடவே சேர்ந்தேவாராதிராது, கூடெரிதியனிலூற்றி லொன்றினிறகழிவுடன் குத்துகளிராதிராது, கோகநகமேவிய தடாகத்திலுங்கொட்டி கூடியில்லாதிராது, நாடிரவிமதியுமொரு கண்மாயினும்மரவி னுன்மறைபடாதிராது, நற்கருப்புகட்டி யாயினுங்கணைமணுனு நாடாமலேயிராது, தடாகைசம்மாரமால் துணைவியேகருணைவிழித் தையலேசெய்யபுகழார், தருமேவுமருணைகிரி யீசர்பாலுறையுலகு தாயுண்ணாமுலையம்மையே. ௧௯

சிறுமையிற்சிறுமை.

ஆசைதருவேசியொடு நேசமதுவாயினு மதுவுமொருசிறுமையல்ல. வன்புடன்காசுதாராமலேனாடையா யகலுவதுவெகுசிறுமையாம், பாசமுறுவறுமையா னொந்துடன்மெலிந்துமலை பவதுமொருசிறுமையல்ல, பாக்கியமிருந்துமிலை யென்றுபாசாங்குமொழி பகருவது வெகுசிறுமையாம், நீசர்துரையாயினு லவரிடங்கைகட்டி நிற்பதுஞ்சிறுமையல்ல, நிதமுமனையர்டமக் கேவலுன்புரிகுவது நித்தையுற்றிடுசிறுமையாம், சாசுவதமாய்ச்சிரஞ் சீவிமார்க்கண்டனைத் தாபரித்தெமனைவென்ற, தருமேவுமருணைகிரி யீசர்பாலுறையுலகு தாயுண்ணாமுலையம்மையே. ௨௰

## இன்றியமையாமை.

பாவலர்க்குனது செய லல்லாது சற்றுமவர் பைந்தமிழ் முடிப்ப தில்லை, பகாறியவிந்திரன் செய்கையல்லாமலிப் பாரின்மழை பொழிவதில்லை, யேவல்புரிகணனாளர் தொழிலையல்லாமலே யெத்தொழிலுமாவதில்லை, யேரம்பர்தனைமுந்தி நினையாதகருமமக வேதொன்றுமாவதில்லை, மாவிருதர்பஞ்சவர் முகுந்தனருளல்லாமல் வன்சமரில்வென்றதில்லை, வனலட்சுமிகிருபை யில்லாமலியாவர்க்குமழிழ்செல்வம்வருவதில்லை, தாவுமல்லிகைமுல்லை யிருவாட்சி சணபகந் தண்கோடிபடர்ந்தபஞ்ச, தருமேவுமருணைகிரி யீசர்பாலுறையுலகு தாயுண்ணாமுலையம்மையே. ௨௧

## கன்மத்தால்வருபவை.

கற்பித்தவித்தையை மறந்தசடனுவதுங காயமுன்செய்த கர்மம், கல்வியறியாதவர்க் குப்பாரியாவதுங கருதுபெண்செய்தகர்மம் சிற்புத்தியாலேபோய் பொயசசாட்சிசொல்வதுந் தெளிந்துசெய்திட்டகர்மம், சிவமாலைமதபேத மொடுதூசணிப்பதுந் தீராதகர்மமாகும், கற்புற்றமனைவிவிப சாரியாவதுமந்த நாயகன்செய்தகர்மம், களசக கிரவர்த்தியடி கைத்தொழில்புரிந்ததும் நவிலவொண்ணாத கர்மம், சற்பூரணிபார பரிகரதபாவியே சாம்பவீசிவகாமியே, தருமேவுமருணைகிரி யீசர்பாலுறையுலகு தாயுண்ணாமுலையம்மையே. ௨௨

## தனத்தாற்றுக்கமென்பவை.

தனமதைவருத்தமாய்த் தேடவும்வியாகூலஞ் சார்ந்திடுமேர்நிதியையொருவர், தாண்கடன்கேட்கக் கொடுக்கவும் வியாகுலந் தந்தபின்சொன்னகெடுவில் தினநடந்ததைமெல்ல வாங்கவும் வியாகுலந்தெண்டியேகைக்கொண்டினிச், சிரல்லவூரொம்ம லாருமென்றெண்ணியே செப்பமாய்ச்சொப்பிலிட்டு மனைதனிற்கல்லிப் புத்தகவும் வியாகுலக் வைத்தபொருளுக்குமோசம், வாரதிராப்பகல்காக்கவும் வியாகுலம் வலுவரசர்சோரர்பூமி,தனதிலாவனலிவையிலொ

ருமோசம்வந்திடிற் சாகும்வரைவியாகுலந்தான், தருமேவுமருணைகிரி ஈசர்பாலுறையுலகு தாயுண்ணாமுலையம்மையே. ௨௩

## இன்னார்க்கின்ன திட்டமென்பவை.

படிமிசையிலரசுபுரி மன்னருக்கதிகபொன் பாலிப்பர்மீதிலிஷ்டம், பரமசிவனுக்குரிய தவமுயலுமெய்ஞ்ஞான பத்தர்களிடத்திலிஷ்டம், வடிதமிழுணர்ந்தகவி ஞோர்களுக்கீகைபுரிமாந்தர்களிடத்திலிஷ்டம், மயலதிகமுற்றவிப சாரிக்குவாலிப வசீகரர்தம் மீதிலிஷ்டம். அடிமைவானரவெள்ள மெழுபதிரண்டில்மா ரையனுக்கனுமனிஷ்டம், அந்திபகலுந்தனைக் கருதித்துதித்தலே யடியனுக்கிஷ்டமாம், சடைதிகழ்விநோதபரி பூரணிதயாதிவ்ய சாம்பவீயேழைபாகாய். தருமேவுமருணைகிரி ஈசர்பாலுறையுலகுதாயுண்ணா முலையம்மையே. ௨௪

## உலகம் பலவிதம்.

காசினியின்மானிடர்க் கயன்விதிப்படியாலே கன்மவினைவந்தபோது, கணிகாரர்தமதிட முறைக்கவமுறைப்பாடு கண்டுதீர்த்திடுவனென்பார், வீசுபுகழ்சோசிய ரிடத்துரைத்தாலவனு மிகநவக்கிரகங்கள், விரோதித்திருக்கின்றதுபசாந்தி செய்திடவுவேண்டுமென்றேயுரைப்பார், நேசமுறுதெய்வமா டுவர்களைக்கேட்கிலுன்னீதியுயர் வீட்டிலுள்ள, நேரானதெய்வமது சீராடுதென்பார்க ணிசவைத்தியர்கைகளைப்பார்த், தாசைவைத்திதுதொந்த ரோகமென்பார்விதியின் சகதியையாருமுரையார், தருமேவுமருணைகிரி ஈசர்பாலுறையுலகு, தாயுண்ணாமுலையம்மையே. ௨௫

## இதற்கிதுநலமென்பவை.

அட்டதிக்கொன்னலரை வெட்டிச்செயங்கொண்டவ் வரசாட்சிசெய்வதினிலும், அரனடியராயஞ் செழுத்தெண்ணிமெய்ஞ்ஞான வறிவதுமிகசிலாக்யம், வட்டமிட்டுக்கிர மயிற்குழகன்வடகிரியை வலமாகவந்ததினிலும், மதகரிமுகக்கடவுள் சிவனைவலம்வந்துகனிவாங்கினதுமொருசிலாக்யம், துட்டவினை தொலையவுல கத்திலுனதுல

மெலாஞ்சுற்றி யோதொழுவதினிலும், சுந்தரமுயாருணைகிரியிற்றி ருக்கார்த்திகைச சோதிகாண்பது சிலாக்கியம், சட்டமுடனெவ்வு பிர்க்குபிரானபார்வதீ சமயமுதலானபொருளே, தருமேவுமருணை கிரி யீசர்பாலுறையுலகு தாயுணாமுலையம்மையே. ௨௬

இன்னாருக்கின்னார் விரோதமென்பவை.

சொற்புத்திகேளாத மைந்தர்தன் றந்தைக்குச சொல்லரியசத் திராதி, தொலையாதகடன்வைத் திறந்தபின்தந்தையுஞ் சுதனுக் நத்சத்திராதி, உற்பித்தசிசுவேற தாமளவுமாதாவி னுயிருக்கு சத்தி ராவதி, யுட்புகுந்தாசர்பாற் கோட்சொல்லுவோர்தமக் கூரெலாஞ் த்திராவதி, சற்பத்தினுக்குமன மீதினிற் கையினிற் றடிகொள்வர் த்திராவதி, தன்மனைவிகொடுமைசொல்வி லென்றமவள்சல்லியந் ணியாதசத்திராவதி. சற்றுமிவைபிசகிலைப் புவிமிசையி லிவர்களை சத்துருவெனச சொல்லலாம், தருமேவு மருணைகிரி யீசர்பாலு றையுலகு தாயுணாமுலையம்மையே. ௨௭

பலனற்றவை.

கோத்திரமுயர்ந்தென்ன சாத்திரமிலாதவன் குலவீனனுகுமல வா, கொடியவாபத்திலுக வாததெய்வம்மிக் குழவியின் சமதைய வோ, மாத்திரையிருந்தென்ன தாதுநிலையறியாத வைத்தியனுமூ லலவோ, மாடமாளிகையலங் காரித்துமாதரில் மனையிடம்பாழதல வா, ஆத்தினிடைசென்றதிற் றீர்த்தமாடாவிடிலரும்பாவி தானும வோ, ஆரியபஞ்சாட்சரத் துபதேசமில்லாத வசட்னும் பிரேதமல வா, தாத்திவியதாவெனத் திருநடனவம்பலத் தானவர்கள் புகழுகி ற. தருமேவுமருணைகிரி யீசர்பாலுறையுலகு தாயுணா முலையம் மையே. ௨அ

அற்பர்களியல்பு.

புல்லறிவுளோர்தமக் கதிகாரம்வைத்திடிற் புகழறத் தினைவிரும் ார், புண்ணியபதிவிரதைமேன் மயல்கொண்டுவார்களிப் புடனுதாசன விண்டுவார், ஆல்அபகலுமை கொடிய பீகோணினைத்தெவர்களையு

மகடவிகடஞ்செய்குவார், அன்புடன்பெரியோர் களுக்கிடருபுரிகு
வா ரதிககருவங்களுடனே, கல்லுருவினிற்காய்ந் தெனக்குநிகரிலை
யென்று நட்டணைகள்பேசிவெல்ல, நகைசெய்து மீசைமேற் கை
போடுவார்தன் னடத்தையைப்பார்த்தபின்பு, சல்லியப்படுவார்க்கு
நின்கிருபைதங்குமோ தங்காது சற்றுமவர்பால், தருமேவுமருணை
கிரி யீசர்பாலுறையுலகு தாயுண்ணாமுலையம்மையே. ௨௯

## உலுத்தர் உதவார்.

காட்டின் மரமாயினும் நிழலுதவுமறிவிலாக் கழுதையும்பொதி
சுமக்கும், கதரிச்சுணைகளுங் கள்ளனையகற்றிடுங் கைத்துரும்புதவி
யதிகம், வீட்டினிற்சிமையார் சுத்தமதுசெய்திடும் வேலிபயிரைக்கா
த்திடும், மிதியடியுமுள்வெய் யலுக்குதவிசெய்திடும் வீழ்பழயசுவரு
மறைவாம், காட்டுவதின்மலசலா திகண்மருந்துக்காகும் நட்பிலாலு
த்தரியார்க்கும், நல்குமுபகாரமிலை யாகையாலே முன்னனவின்றதற்
கிணையாவரோ, தாட்டுணைய லாதியான் வேறுகதி யறிகிலேன் றரு
மஞானக்கொழுந்தே, தருமேவு மருணைகிரி யீசர்பாலுறையுலகு
தாயுண்ணாமுலையம்மையே, ௩௦

## நல்லோரியல்பு.

நல்லதற்குணர்தமக் கதிகாரம்வந்திடினு நாவினிற் பொய்யு
ரைக்கார், நம்பினோர்தமையாத ரிப்பரெல்லோருக்கும் நல்வசனமே
பகருவார், சொல்லரியதருமத்தை யேசெய்குவாரொருவர் சொத்தி
னுக்காசைவையார், தூயபிறர்மனைவியைத் தாயெனச் சிந்தையிற்
சொப்பனத்திலுமெண்ணுவார், அல்லலெளியன்வலிய னாரேனுமவ
ர்வழக்கி னியாயமதவுரைக்கார், அரன்றிருப்பதமலரை யெப்பொழு
துமிருதயத் தகலாமல்வைத்துநினையுக், தல்லிப்பதியெனத் துதிசெ
ய்வராகையால் சாயுச்சியமீவதரிதோ, தருமேவுமருணைகிரி யீசர்பா
லுறையுலகு தாயுண்ணாமுலையம்மையே. ௩௧

## சின்னமனிதர்.

அன்புடன்வாங்கின கடன்கொடாமனிதனு மபசத்தியு முரை
மனிதனும், அன்னையொடுதந்தைசொல் லிகழ்கின்றமனிதனு மப

யமென்றஞ்சிமிகவே, நன்மைபெறவந்தோர்க்கு வீண்சொல்லுமனி
தனும் நயகுணமிலாமனிதனும், நாடோறும்வேட்டகந் தனிலுண்ணு
மனிதனும் நல்லோரையிகழ்மனிதனும், இன்பமனையாளை வேசிக்க
டிமைசெய்துதன் னிதயமகிழ்வுறுமனிதனும், ஈனர்களிடத்திலுற
வானவீண்மனிதனு மிவர்களெல்லோரு மெளிதாய்த், தன்பெருமை
யில்லாத சின்னமானிடரெனச சாற்றுமே யுலகுமுழுதும், தருமே
வுமருணைகிரி யீசர்பாலுறையுலகு தாயுண்ணுமுலையம்மையே. கூஉ

இணைசொலிற்பலனில்லாதவை.

அருங்கானின் மிருகத்தை மானென்றுமென்னபெண
ணானமானிணையாகுமோ, ஆமணக்கன்விரையை முத்தென
றுமென்ன திசூழாணிமுத திணையாகுமோ, வருங்காமனைப்பு
லவர் வேளென்று மென்சுப்ர மண்யவேட்கிணையாகுமோ, வ
ள்ளவிருபத்தொருவரென்றென்னவடுகலை வள்ளலுங்கிணை
யாகுமோ, திறமிலாலோபரைக் கர்னனென்றென்னலவர் தி
யாகமப்படியீய்வரோ, தெய்வமெத்தனைபகிரிந் தாலுமின்ப
தசேர்வை செய்வதற்கிணையாகுமோ, தரைமிசையிலிவர்க
ளுக் கிணைசொலிற் பயனில்லை தற்பரானந்தவொளியே, தரு
மேவுமருணைகிரி ஈசர்பாலுறையுலகுதாயுண்ணுமுலையம்மையே.

பழவினைப்பயன்.

பொன்னுலகையாளிந்த்ர னகலியாலாயிரம் பொருந்துவிழியுரு
வதானன், புகழரிசசந்திரன் விசுவாமித்திர முனியினாற் புலையனுக்
கடிமையானன், முன்னநளனைச்சனிய னவர்தொடுத்தவர் முய
ன்றென்னபாடுபட்டார், முகுந்தர் சானகியுடன் பதினான்கு வருட
மும் மொய்வனந்தனிலுறைந்தார், பன்னரியசேடனுங் குன்மவலி
யாலுடல்பதைத்தகமெலிந்தழன்றான், பகருமுன்பெரியோர்கள் வி
தியாலலைந்திட்டபண்டிகதை கேட்டிருந்தும், தன்னைமுனவினைவி
டா தென்றிராமல்மனிதர் தான்விசன மடைவதேதோ, தருமேவும
ருணைகிரி ஈசர்பாலுறையுலகு தாயுண்ணுமுலையம்மையே. கூச

தியாகிகள்.

சிருலவு கானனும் புகழ்பெற்றகுமுணனும் திருவசிகரங்தியும் செயவெண்ணைநல்லூரி னிறசடையனுமபரிவு சேர்ந்தசயிதக்காதியும், காரனையகரதலச சேந்திகாததாவெனுமிற கதிகருநல்காமனும் பின். கணிசமுறுகசசியப பனுமதிகபெரியனுங கருதிணடஙகானததயும, எச்பபரவுசோமனு மிவரெலாம்புவியினைசயி லினிய்தமிழுக்கிரகவி, யிரவலாககோயாம லீயகேதியாகியென றெண்ணருங கீர்த்திபெற்ருா. சாரபுகுணமிலலாத னுததருககவாகளைச சரியெபாடலாமோ. தருமேவுமருணைகிரி ஈசாபாலுறையுலகு தாயுண்ணாமுலையமமையே ரு௫

பாவவழி.

அந்தணர்களுடைமையைத் தெண்டம்பிடித்திய்வ ததுபுண்யமலபாவமாம, அன்னசததிரமதின முகம்பார்த்து வன்னமிடுவது புண்யமலபாவமாம, முநதுசமரிற்ருளில் விழ்வனைக்கொல்வது முனைசசெளரியமலபாவமாம், முன்னவனெறெவியைப்பரிகாசமாகவே மொழிவதது வெருபாவமாம் சநததிகளுடனுண்ண வேயச்சமுறுவதுநதான்சுத்தமலபாவமாம், தனதான்யவாககததி லாபவிலலைவைப்பதுஞ் சம்பாத்யமலபாவமாம, சநததமுமிவவகை நடக்கையிற் பாவங்கடானனுருகலிகாலமே, தருமேவுமருணைகிரி ஈசர்பாலுறையுலகு தாயுண்ணாமுலையம்மையே. ரு௬

புண்ணியத்தாவாமென்பவை.

குலவீனர்சிவனடியராகிலவரைப்பணிதல் கொஞ்சமலவேபுண்யமாம். கொடியபகையாளருக்காபத்திலுதவுமது கோழைமதியல்புண்யமாம், தலையைத்துணிககவேவிமெம்புதப்புவது தாட்டீகமலபுண்ணியம், சகலசெளபாக்யமுடனேவாழ்ந்திருப்பதுந் தன்றிறமைபலபுணயமாம, நிலையாய்பெருக்காற்றில் வீழ்ந்தவனை நப்புந்து நீச்சின்வலியலபுண ணியம், செடியவாருதியெய்தி மீள்வதும்பீசாமலிலமையலவெகுபுண்ணியம், சலதாமடர்தைபூக் குழலியேபுவியினிற்றங்கு

புண்யங்களிதுவாம், தருமேவுமருணைகிரி யீசர்பாலுறையுலகு தாயு ணாமுலையம்மையே. ௲எ

### பயனற்றவர்.

கண்ணிருந்துங்கண்ணி லாதவர்களாரெனிற் கல்விகல்லாத பேராம், காலிருந்துமுடவ ராரெனிற்சவதலங் கருதிமிதியாதபேராம், மண்ணுடன்பொன்னிருந் தன்னமீயாதவர்கள் வாயுள்ளபெரியகாயாம், வாயிருந்தும்மூனது திருநாமமொருதினம் வழுத்தவறியாருமையாம். பண்ணிருந்தும்பாட வல்லமையிருந்துமுனைப் பாடாத வன்புலையனும், பரிவாகவிருகை யிருந்துமகுவித்துனைப் பணியாதவருமூடராம். தணமையுளவிம்மனிதர் புவியிற்புறம்பதிற்று னென்னபலனோசொலும், தருமேவுமருணைகிரி யீசர்பாலுறையுலகு தாயுணாமுலையம்மையே. ௲அ

### வைசியரியல்பு.

சீரிலாமடையரோ டிணங்கிலார்வியாபாரஞ் சிந்தையாய்வந்தபேர்க்குச், சித்தமொப்பித்திர மெழுப்பசும்பொனைசசெய லாகவேயுதவுவார், ஆர்வமுடனேகணக் காசாரமதனிலே யரைவீசமுந்தரியெலாம், ஆராய்ந்துபார்த்தெழுதி நிலுவைதெண்டிப்பொன்னையருமையாய்ச்சேர்ப்பார்பின்னும், கூர்மையொடுவேளையா வேளையுமதிற்கரங் கொண்டமட்டும்பொருளினைக், கொள்ளுபதினாயிர மிலக்கமாயினுமனங் கொணாதுசெலவழிப்பார், தாரணிதனியிற்பிரபலஞ்சிறக்கிடுவைசியர்தங்கடனியற்கையிதுவாம், தருமேவுமருணைகிரி யீசர்பாலுறையுலகு தாயுணாமுலையம்மையே. ௲௯

### உலகவழக்கம்.

வரிசைப்பிடாரிக்கும் பொங்கல்வையாமலே மழைபெய்யவில்லையென்பார், வந்தகோடைநோயறிந் தௌடதமீயாமலிம் மனிதனுமிறந்தெனென்பார், சரிவரசெய்தொழின் முயற்சியில்லாமலே ஞான்குடியினைத்ததென்பார், தன்திறமையாலேமுன் சொன்னபடி

தப்பாது சபதமுமுடித்தனென்பார், ஒருவனவனெதிராளி போன பின்பதிலெதயோகம் வந்துற்றதென்பார், உபாத்தியார்திறமில்லை யாகையாலேமதற் குயர்கல்விவல்லையென்பார், சரிவையெலாநீசா செய் கையென்றறியாமற் றணியின்மயங்குவார்கள், மருமேவுமரு ணைகிரி யீசர்பாலுறையுலகு தாயுண்ணுமுலையமமைமையே. சC

ஒன்றுலொன் றுவரும்.

தனதென்றுகடசாம லரசர்மனைசொல்வோர் தனக்கிழிவுவாத கேரும், தன்கணவற்றபெண் ணுருமில்லாவிடிற் றுய்விவெந்துசே ரும், நினைவுபேதித்துப் பிதற்றுவர்தனைப்பித்த னிவனென்றுசொ ல்வரியாரும், நிணமொத்தவிசுவாச மும்பொருள்வழங்குவதி னெடி வபகைவந்துசேரும், பனகமொபெலகாளு மேபழகிலொருதினம் ப கெவிடந்தருகமீரும், படிமிசையிலருணையை நினைத்தபொழுதேப ஞ்ச பாதகமொழிந்ததீரும், தனியனதுபாதமல ரல்லாதுதுணையில லை தமயன்மேற்கிருபைபாரும், தருமேவுமருணைகிரி யீசர்பாலுறை யுலகு தாயுண்ணுமுலையம்மைமையே. சக

பொது.

மாணிக்கமீய்ந்ததெனு மறவத்தையுலகத்து மனிதர்கம்புவது முண்டோ, மாதனதனம்படைத் தாலுங்கொடாதவரை வையகம் புகழ்வதுண்டோ, பூணிக்கையானாற் றமிழ்வாணர்நாவினிற் பொ ய்தட்டவட்டமுண்டோ, புலிபசித்தாலுமது தசையருந்தாமலே புல் லினைத்தின்பதுண்டோ, நாணியெதிராளிமுன் வார்த்தைசொல்லா ாகளது ஞாங்கரும்வெல்வதுண்டோ, ஈசன்கைப்படவுயிர் மீண்டு வரதிப்பெரிய ஞாலத்துமுய்வதுணடோ, சாணிக்குமேன்மைச் சங் வாதுக்குமேறவில்லை சரியென்றுசொல்வதுண்டோ, தருமேவுமருணை கிரி யீசர்பாலுறையுலகு தாயுண்ணுமுலையம்மைமையே. சஉ

ஒன்றுவொன்று பயன்படாது.

வேதாந்தமெய்ஞ்ஞான முறுணர்ந்தென்னகொல் வெகுளிமன துள்ளிருக்க, மிகாயவொழுக்கமுடன் வார்த்தைசொலி வெள்ளுவ

லன் வெகுலோபியாயிருக்க, வாதாடியெதிர்செய்து நின்றென்ன கூறிய வழக்கினைத்தேயிருக்க, வரிசையாபரணங்கள் பூண்டென்ன மெய்ம்மூக வசீகரமிலாதிருக்க, கேதாரமொடுதீர்த்த யாத்திரைகள சென்றென்ன கெடுதனினைவுள்ளிருக்க, கெம்பீரமாய்க்கரையி லாயுதமெடுத்தென்ன கெசபேடியாயிருக்கத், தாதாவேயுலகுக்கு மாதாவேயெழுவகைச சராசரத்திலுமுறைந்த, தருமேவு மருணைகிரி யீசர்பாலுறையுலகு தாயுண்ணாமுலையம்மையே. சகூ

## மூடர்கள்.

சகலகலைகற்றுணர்ந் தாலுஞ்சினத்தைத் தவிர்க்காதவன்மூடனும், தந்தைதாய்சொற்புத்தி சிந்தையிலுமெண்ணாது தள்ளிவிடுவோன்மூடனும், அகமகிழ்ந்தரிசிவன் பூசையினிணினைவுவே ருவனொருபரமூடனும், அன்பிலாவீட்டிலே வலியவேசென்றுதா னனம்புசிப்போன்மூடனும், சகமதிற்பெண்வார்த்தை கேட்டொருவர் மேற்சணடை தான்செய்குவோன்மூடனும், தயாளுவேயென்றவாக் கீய்வரைவிலக்கிடுந் தகவிலாதவன்மூடனும், தகவிலாதரனையே வேறுபகைாக்குவோன் சணடாளமூடனுகும், தருமேவுமருணைகிரி யீசர் பாலுறையுலகு தாயுண்ணாமுலையம்மையே. சஎ

## பயன்படாதவை.

உரியவேளானையுஞ் சகுனமதுசெய்ததா லூர்ப்பீடையதுதுலையுமோ, வொருவர்வாழ்வதுபொருந் தாமலேகாய்ந்ததா லுயர்பவுசவர்க்குவருமோ, பரிபூரணனந்த ஞானமறியாவிடிற் பரமபதமுமகிட்டுமோ, பண்டுநோய்கருத்தெய்வம் வேண்டியேபொங்கலொடுபுடிகொடுத்தாற்போகுமோ, அரியவாருதிதீரி னைத்தாகமாயபே ரன்னியுமருந்தலாமோ, அடையலர்கண்முன்னைகயி லாயுதமெடுத்தபின் னஞ்சியும்மிற்கலாமோ, சரியெனக்கொருவர்கிக ரிலையென்றியாவருந் தன்னைவேபுகழலாமோ, தருமேருமருணைகிரி யீசர்பாலுறையுலகு தாயுண்ணாமுலையம்மையே. சஅ

## இதனையிவரறிவரென்பது.

வித்துவானருமைதனை வித்துவானறியாமல் வீண்மூடர்தாமறிவரோ, வியாபாரநிலைவரந் தனவைசியரறியாமல் வேறொருவர்தாமறிவரோ, பக்தரிடதவமகிமை ஈசனறியாமல் பலதேவர்தாமறிவரோ, பருவாதிமதனுருவை யறிவதல்லாமலிப் பாரிலொருமாதறிவரோ, எத்திசையின்விடய நாரதமுனிவரறியாம லிசையதும்புருவறிவரோ, வெழில்கமலமுளமதுவை வண்டினமருந்தாம லேதமுளதவளையுணுமோ. சத்தியேசின்மகிமை யாரறியவல்லார்கள் சண்முகனை யீன்றவளேயே, தருமேவுமருணைகிரி ஈசர்பாலுறையுலகு தாயுண்ணாமுலையம்மையே. ௪௬

## ஒன்றிலொன்றுபயன்.

பண்புற்றசுதிகூட்டி யிசையுடன்படியாத பைந்தமிழினிப்பிருது, பருவகாலத்தில்விரை தெளியாதபயிரும் பலித்தேவிளைந்திடாது, நண்ணுபொருளில்லாதார சொல்வசனமரசர்பகை நவிலும்பிடியிராது, நடுவழிமறித்தடித் துப்பொருள்பறிப்போர்க்கு நல்லொழுக்கந்தயவிரா, தெணபத்துநான்குநா ளுயிரஞ்சொறுநீ ரில்லாமலுயிரிராதே, ஈசருன்றிருமலை லுசசலுகையல்லாமலேகஞ்சை யுணபதேது, தன்புத்தியில்லாதவர்க்குஞானங்களைச சாற்றினுமறிவிராது, தருமேவுமருணைகிரி ஈசர்பாலுறையுலகு தாயுண்ணாமுலையம்மையே. ௪௭

## இதற்கிதுவேண்டுமென்பது.

வசசிரமகுடந்தரித் தரசபுரிமன்னர்க்கு வாக்கின் மனுநீதிவேண்டும். மன்னுகல்வித்தொழிலு மெனிநல்லவிரவுபகன் மனதிற்கருத்துவேண்டும். உசிதமுடன்சபையி லுட்கார்ந்தபோதிலுமுதாரனைதன் சொல்லவேண்டும். ஒருவனாதாகிலுந் திருக்கார்த்திகைக்குவந் தாந்தனைப்பணியவேண்டும், எச்சவிச்சித்ரமுடன் வித்தைசெய்யினுமிருகை யேந்தியேயிரக்கவேண்டும், ஏதுமொருகருமங்கள் கோரிக்கை செய்யுமிடத் தெண்ணியேயிரக்கவேண்டும், சச்சிதாநந்தபரி பூரணி

யசிலமதுதந்தகாரணிசாம்பவி, தருமேவுமருணைகிரி யீசர்பாலுறை
யுலகு தாயுண்ணாமுலையம்மையே. ௪௮

அதிகபுகழ்பெற்றிடுஞ் செல்வநிலைநிற்குமோ வாங்காரமானதி
லெண்ண, வவரவர்கள்முன்செய்த கர்மநோய்த்தீவினைக் கயலாரை
சொந்தமென்ன, மதியாமலெவரையும் வசைசொல்லுவோர்கட்கு
மானமரியாதையென்ன, வந்தவுடனேமகிழ்ந் துபசரிக்காதவன் வா
சலிற்செல்வதென்ன, பதிதோறுமிரந்துணப வர்க்கினியசுடுசோறு
பழஞ்சோறுபஞ்சமென்ன, பக்தியிதயத்திலில் லாதவன்சிவபூசை
பண்ணுவதிற்பலனுமென்ன, சதுர்மறைபுகழ்ந்திடுங் கருணைநிறை
வாரியே சயிலரசனுதவுமயிலே, தருமேவுமருணைகிரி யீசர்பாலுறை
யுலகு தாயுண்ணாமுலையம்மையே. ௪௯

நன்னகரம்.

சித்ரமணிமேடையுஞ் சத்ரநிறைசாலையுஞ் சிறந்தரதவீதியழ
கும், தெங்கயில்பலாவெலு மிசசைகதலியங்கமுகு சேர்ந்திலகுசோ
லைவளமும், பத்திரமதாணகற் கோட்டையுஞ்சிகரப்ர பலபலமதிற்
கோவிலும், பங்கேருகத்தடமு மெங்கெங்குநிதிசிறப் பானகடைவீ
யபாரமும், உத்தியோகபுருட ரதகஜதுரகபதாதியு முறைந்திருக்கி
ன்றனவும், உற்றசங்கீதசாகித்யமுளபாடலு மோங்குதாசிகண் ட
னமாஞ், சத்தமும்முரசுபல வாத்யமுடனிவையெலாம் தங்குவதுநன்
னகரமாட், தருமேவுமருணைகிரி யீசர்பாலுறையுலகு தாயுண்ணாமுலை
யம்மையே. ௫௰

உலகவியல்பு.

நேர்தந்நிதியுள்ளபே ரங்கியர்களென்னினுந் தெருவீதிவரவுகா
ணித், திக்கைதயின்மகிழ்ச்சியொடு கைதொழுதுகார்த்திகைத் திங்க
ளின்பிறையென்னவே, விறல்பெறவுமேங்கள்வந் ததுநல்லவேளை
யென், வீட்டிவ்வரவேணுமென்று, மெத்தவுமகிழ்ச்சியொ டுபசரித்
தேமனை யிரித்தவிருத்திவைத்து, நிறம்பெற்றபட்சணாதி காய்கறி

படைத்துணைவு செய்தபினுரைப்பர்பூர்வத், தினிலுங்கடாயெங்கள் இளையினிற்பெண்ணென்று சேதிபெரியோர்கண்மொழிவர், சரச முடனீக்கவ்வந்துறவாடவில்லையென்று சலுவைகொண்டாடுவார்கள், தருமேவுமருணகிரி யீசர்பாலுறையுலகு தாயுண்ணாமுலையம்மையே.

இதுவுமது.

தனமிலாதவனதிக பவுசாளிதன்பந்து ஜனமென்றுவீடுவந்தால், தயவுடன்வந்தவனை வாவென்றழைத்திடார் சற்றுநேரத்தினப்பால், மனமதுசலித்துநீ யாரென்றுகேட்கவுன் மைத்துனனியானென்னவே, வரலாறுகேட்டபின் னுந்தனைக்கண்டியான் வாடிக்கையில்லையென்பார், தினமிரண்டாடியிற் பெண்களுமெள்ளச செனத்துதட்டைப்பிதுக்கிச், செப்புவாகன்சாடையாய்க் கெதிகெட்டவீண்சோறு தின்னவந்தவனென்பர்கள், சனமல்லவெனவவனை வலியவேதாட்டுவது தரணிமானிடர்முறைமையாம், தருமேவுமருணகிரி யீசர்பாலுறையுலகு தாயுண்ணாமுலையம்மையே. ௯௨

மானிடசென்மமல்லார்.

மகிமையுளசிவயோகி யென்றுதலைகீழ்நின்று வயறதுவளர்க்கவெண்ணி, வம்புசெய்தேகாசு வாங்குவனுமியோகியல வெளவாலெனுஞ்சென்மமாம், அகமறிவிலாமலே யான்பெருவைத்தியனென்றசாத்திகொடுரோகத்தினுக், கெளடதஞ்செய்தவுடனே கூலிவாங்குவோனவன் வேசநீசென்மமாம், பகல்முழுதுமென்றன்கை யென்னனையென்றே புரிந்திரவில்வந்தெனக்குப், பாரியென்றேமுறை மயக்கிப்புணர்ந்திடும் பாவியொருநாய்ச்சென்மமாம், தருமிவர்களைக்காலனுமென்னதண்டனைக டான்செய்வரோ வறிகிலேன், தருமேவுமருணகிரி யீசர்பாலுறையுலகு தாயுண்ணாமுலையம்மையே. ௯௩

பொது.

எம்பிரானருளலது மூவுலகிலேமுயலு மெத்தொழிலுமாவதல்ல, வினியாசவாதமுறை புவிமீதுமானிடர்க ளெல்லோருமறிவதல்

ல, தம்பிதமயற்குமுன் பங்குபதியிலேயென்று தள்ளுவதுமியாயமல்ல, தருமங்கெடுப்பவரை யீயவொண்ணாதவகை தடுப்பதுமியாயமல்ல, செம்பீரகயமீது வருவனைச்சுன்னமது கெட்பதும்புத்தியல்ல, சொடியாசுதனதென்று படியிலுளபேரைக் கெடுப்பதுந்தருமமல்ல, சம்புவைப்பரிசெய்த பரமசிவனடிமுடிகள் சகலருங்காண்பதல்ல, தருமேவுமருணைகிரி யீசர்பாலுறையுலகு தாயுண்ணாமுலையம்மையே.

சகாயத்தாலாமென்பவை.

சுந்தரமுயர்தீபபங் திகளதுவிளங்கிடத் தூண்டுகோலொன்றுவேணடும், சூழ்ந்தசதுரங்கதள படைசேனையேவிடச் சொல்லாளியொருவன்வேண்டும், மந்திரஞ்சித்திக்க வேண்டுமெனின் மனமதுமகிழ்ந்துகுருவாக்குவேணடும், மறையவரையெதிர்கொண்ட போதுமிகவழிபாடு வந்தனைகள்செய்யவேண்டும், கந்தரமிசைந்திராகத்தொடுபடிக்கினுங் கல்வியைக்கருதவேண்டும், கடியநடையானதுரகதமெனினுமிராவுத்தர் கையிற்சவுக்குவேண்டும், சந்தத்மும்டியாலலைஈதிடினுமழியாத தருமசிந்தனைமுன்வேணடும், தருமேவுமருணைகிரி யீசர்பாலுறையுலகு தாயுண்ணாமுலையம்மையே. ௯௯

தகாதமனைவி.

ஆரடிவீட்டிலே பரதேசியொருவனுக் கன்னமிடுமென்றகணவனுண்ணயொருபார்வைபார்த் தென்பாவமேன்கொள்கி றாயுனக்கறிவில்லையோ, சிறுற்றமக்களுக் கேயன்னமிலையென்று சீறுவாளேதுபதர்தான், சிர்கெட்டதென வெண்ணி மனதில்வைத்தவ்வாறு செப்பெரணுதையர்மெத்தத், தூரத்திருந்துவந் தாரன்னமிடுமெனச் சொல்லவும்பின்னேதுகின், றுக்கத்துக்கெத்தனை காளமுவேனென்றவசை சொல்லவும் வெகுண்டடித்தால், தாரைபோல்விழியினீர் சோரவழுதுள்ளரெலாஞ் சலுவைசொலுமனைவிகமனும், தருமேவுமருணைகிரி யீசர்பாலுறையுலகு தாயுண்ணாமுலையம்மையே. ௱

## சிறப்பிலாதவை.

சித்தமகிழ்வடைகின்ற புத்திரபவுசில்லாத செல்வஞ்சிறப்பிராது, திருமங்கல்யமங்கழுத் தில்லாதமாதரிட தேகமுஞ்சிறப்பிக்கா, தொந்திலசப்புகழ்பெற்ற காவேரியனுகாதவூருஞ்சிறப்பிக்கா, துன் கிருபைதாங்காது பூதலந்தன்னிலே தோன்றுஞ்சிறப்பிராது, சத்த சுரமறிவிலா ரஸ்தமதில்வீணை சங்கீதஞ்சிறப்பிராது, சத்தசிவசாம்ப விகாதலிமனோன்மணி சடாதரிவேதமுதல்வி, தருமேவுமருணகிரி ஈசர்பாலுறையுலகு தாயுண்ணமுலையம்மையே. ௯௭

## வருபயன.

குன்றாதசகலசௌ பாக்கியமொடுவாழ்வதுவ கொடுங்கலிய டைக்துளல்வதுவ, கூர்மையொடுகல்விகற் றபபிரஸங்கித்தலுங் குறங்கிமடையனுமாவதும், ஒன்றநூறாய்வம் மிசம்பிரபலிப்பதும் ஒழுந்திலாதேவிடுவதும், ஆமைகூன்குருடுமுட முடலாயெடுப்பது மூறமழகிலழகாவதும், மனனர்வலியாரெளிய ராவதும்மெளியரம் மன்னராவதுமெலாமூன், வரலாரியனெழித் தெள்ளவுந்தப்பாது மற்றொருவராலாகுமோ, தன்னையேசாந்துகுவ குமமணிபயோதயவ சசிதாணந்தபரையே, தருமேவுமருணகிரி ஈசர்பாலுறையுலகு தாயுண்ணமுலையம்மையே. ௯௮

## இன்னார்க்கிதுதவி.

பாங்குயாருவடவரைக் குதவியாமஷ்டகுல பருவதங்கமழ்சிறந்து. பளபளெனவளர்தா மரைக்குதவி நீர்சித்திரபானுவுக்குதவி வாய்வாம், ஓங்குபுகழ்விண்ணைவாக் குதவிகுகனோர்கையி லுக்கிரவருவேலாயுதம, உற்றசங்கீதசெக் தமிழ்ராகமோதுவார்க் குதவிதம்பூர்புவியிளில், தேங்குபயிருக்குதவி மேகம்வருஷித்தல்சிறு சேய்க்குதவியாகுமன்னை, திக்கரசருக்குதவி மதிமந்திரிசுத்தரண, சேவகாக்குதவிகைவாள், தாஙகுசின்கருணையரு ளல்லாதுவேறுதவி தமியனுக்கேதுமுனரோ, தருமேவுமருணகிரி ஈசர்பாலுறையுலகுதா யுண்ணமுலையம்மையே. ௯௯

சிறந்தவை.

வரிசையுளகவரத் தினத்திற்பிரகாசமுள மாணிக்கமதுசிரேஷ்டம், மங்கையர்க்குள்ளதிக கற்புநிலையுற்றகுண மாதருக்கதுசிரேஷ்டம், அரியமந்திரமதிற் பிரணவந்தேவர்க்கு மரிதாருமதுசிரேஷ்டம அம்புவியிலேகோச லத்தரிச்சந்திரனே யரசரில்வெகுசிரேஷ்டம், பரிவுகந்திடுசெத்த சாகரமதிற்றிருப்பரற்கடன்மிகச்சிரேஷ்டம், பணணுபழமொழிதமிழி லிந்நிலச்செய்கையது பகர்திருக்குறள்சிரேஷ்டம், தருவுயர்ந்திடுசிவஸ் தலமதிற்சிரேஷ்டநீ தங்குபுகழருணைநகராம், தருமேவுமருணைகிரி யீசர்பாலுறையுலகு தாயுண்ணாமுலையம்மையே. ௯௦

மாதரார்கெட்டவர்கள்.

புவிமிசையிராவண னிறந்ததுங்கீசகன் பொன்றினது விண்ணுலகில்வாழ், புரந்தரர்க்காயிரங் கண்ணானதுந்தவப் புனிதசாதனன்மாண்டதுந், தவநிலைகலைக்கோட்டு மாமுனிகுலைந்ததுஞ் சாரங்கனுளமான, சநகதியுமிகுசித முயர்ந்தநற்றெருவர்கள் சமர்க்களத்தேபட்டது, கவியினத்துற்றபல வாலியுயிர்போனது கனவணிகுகோவிலனைமுன், கருதரியமதுரையில் விருதாசர்கொன்றது கபடமயிடன்போனதுந், தவளிதமுறுங்கொங்கை மாதரால்வந்திட்டதாழ்வுகுறையென்பர்பெரியோர், தருமேவுமருணைகிரி யீசர்பாலுறையுலகு தாயுண்ணாமுலையம்மையே. ௯௧

மேலோருக்கு எப்பொழுதும் மேன்மை.

மேதினியின்மேன்மக்கள் கெட்டாலுமவருக்கு மேன்மைமரியாதையுண்டு, வெவ்வளைந்தாலுமது நிகழ்கின்றசிவிகையின் பேறுமகாணடிருப்பதுண்டு, நீதரசவாதமுறை கெட்டாலுவைத்தியம் சேர்ந்தேபலிப்பதுண்டு, கிழ்ச்ரியிறந்திடினும் வீணைவல்லவன்றிதனை நலந்தருகொள்வருண்டு, ஆதிலாயோகிகட் கிமதிற்சுகமில்லை சொர்க்கத்தின்முத்தியுண்டு, சகமதனருபியென் றுலுமீரதியாட்டுஞ் சருப

மொடுதோற்றமுண்டு, தாசியில்லில்வாச மிலாவிடினுமரனுடைய தலமீதிப்பதுணடு, தருமேவுமருணைகிரி யீசர்பாலுறையுலகுதாயுண்ணுமுலையம்மையே. ௬௨

ஒப்பில்லாதவை.

முருக்குப்பெருத்திடிற் றானாகுமோபட்சி முட்டையண்டமுமாகுமோ, மூடர்நிதிதேடினுஞ் சர்ச்சனர்களாவரோ ருலைகளுமலையாகுமோ, விருப்பமில்லாதபேய்ச் சுரைகரிக்காகுமோவென் றதென்சுக்கிரனுமோ. மிக்கபனைகற்பகத் தருவாகுமோதவளை வெற்றிபெருதவளையாமோ. இருக்கிலும்பெருப்பிள்ளை தன்பிள்ளையாகுமோவெழுதுமடன்மாதாகுமோ, வீனவெள்ளாட்டிதன் பெண்டாவளோகீரிணிற்கயல்மூடுவதாமோ, தருவடருதலமெலாம் புகழ்தங்குமருணைத்தலத்தினுக்கொப்பாகுமோ. தருமேவுமருணைகிரி யீசர்பாலுறையுலகு தாயுண்ணுமுலையம்மையே. ௬௩

இன்னார்க்கிதாசம்.

தெரிவையர்கண்மேலதிக விரகமுற்றிடுவெரிட தேகமும்பொருளுநாசம். தெய்வசந்நிதியினின் றகபத்தியங்களைச் செய்வாகுலமுழுதுநாசம், தடமசிந்தனையிலாத துன்மார்க்கவேந்தரைச் சார்ந்திடுங்குடிகளுநாசம். சவ்வாதெத்தனையிலொரு பனையளவுசுண்ணமது தான்கலக்கிடவுநாசம், உருகதலிவேய்சிப்பி நண்டிவைகள்கெற்பமுண்டாயினுயிருக்குநாசம், உள்ளங்கலங்கிடி லெடுத்தகருமங்களியாதொன்றாமில்லாமநாசம், மருவபாவங்களைய் மிடியலாகினதுடையுந்தாள்பணியாநாசமாகும், தருமேவுமருணைகிரி யீசர்பாலுறையுலகு தாயுண்ணுமுலையம்மையே. ௬௪

உலகத்தார்மயக்கம்.

ஜயமிட்டுண்கவென வௌவையாருரைத்தது லறிவகத்தென்னையலே, யநேகமாய்நீதிநெறி முறைதனையவியாசமுனி யருளினுரென்றுமல்ல, செய்யகுருமுனியுடன் பதினெண்மருஞ்சில செப்பினுரென்றவீனைத், திரிவதானலமேது கதிமூழ்கியேதலஞ் சேவிப்பதுபயனேது, வையமதின்மெய்சித்தி யாமெனக்கற்பமும் வமுத

னிறாதனையெண்ணி, மானிடர்களிசமெனக் கருதுவாராதுமினது மகிமையில்லாமல்வேறே, தையலேபரிமள மடந்தைபங்கேருகத் தற்பரானந்தவல்லி, தருமேவுமருணைகிரி யீசர்பாலுறையுலகு தாயுண்ணாமுலையம்மையே. ௬௫

பொது.

சிறுபிள்ளையாயினும் புத்திநிலைசாஸ்த்ரவழி தெரிந்தொழுகுவன்பெரியவன், சிந்தைகோணமலொரு தாம்பூலமாயினுந் தெரிந்துதவுவதுதர்மமாம், பரிவுள்ளபங்கே ருகத்திரளனேகம் படர்ந்திருப்பதுதடாகம், பவமுறுஞ்சிறறமும் பாசமுமொழிந்திருப் பவனுமெய்ஞ்ஞானயோகி, புருடனைத்தெய்வமென்றெண்ணியேபூசித்த பூவையேகற்புடையவள், புதியவறுசுவைமிகுதி யாகவேசேர்த்துப் புசித்திடுவதேபோசனம், சருவபூடணமெனும் பரிவுள்ளவஸ்திரந் தரிப்பததலங்காரமாம், தருமேவுமருணைகிரி ஈசர்பாலுறையுலகு தாயுண்ணாமுலையம்மையே. ௬௬

இன்னார்க்கிதுபிரியம்.

சூழ்ந்திரவியாலுலர்ந் திட்டபயிருக்குமழை சொரிவதாலேகெற்சிதம், சோரற்கமாவாசை யிரவினிற்பிறர்மனை சுரங்கமிடவேகெற்சிதம், தாழ்ந்தவிபசாரிக்கு வருசோரநாயகர் தனைக்காணவுங்கெற்சிதம், சமரிலொன்றார்படை முறிந்தோடில்வெற்றிபெரு தமனைத்துங்கெற்சிதம், வாழவுணவைக்குகன் வேற்றுணித்திடுயோதில் வாணவர்க்குக்கெற்சிதம், மந்திரிசம்பெருகு கனிசிறந்திடுதோப்பில் வருகமிகவேகெற்சிதம், தார்குழலிநீயெகரு, நீறபதாலீரே மூலகனைத்துங்கெற்சிதம், தருமேவுமருணைகிரி யீசர்பாலுறையுலகு தாயுண்ணாமுலையம்மையே. ௬௭

இல்லை.

அறிவிலாமூடர்முன் கல்விப்பிரஸங்கமதி வழுகில்லையின்பமில்லை, வையமிட்டின்னாத வர்க்குமெய்ப்புகழ்கீர்த்தி யறமில்லைவீரு

யில்லை, துரியாதீத மறியார்க்குமெஞ்ஞான சூட்சமில்லைமோட்சமில்
லை, சுத்தரணவீரருக் கெங்காளுமனதினிற் றுயரில்லைப்பயமு மில்லை,
யிருதயக்கபடமிகு சங்கமணியதனினுக் கிதமில்லைப்பயமுமில்லை, யெ
வ்வுயிர்க்குயிரான வீசனார்க்கெப்போது மிறப்பொடுபிறப்புமில்லை,
சருவலோகாம்பிகா வென்றனைப்பணிவார்க்குத் தாழ்வெனுங்குறைவ
தில்லை, தருமேவுமருணகிரி யீசர்பாலுறையுலகு தாயுண்ணாமுலையம்
மையே. ௬௮

## இன்னார்க்கிதுண்டு

அதிகபலசாத்திரங் கற்றுணர்ந்தவர்களுக் கறிவுடன் மேன்மை
யுண்டு, அபயமெனவந்தவரை யஞ்சாதேயென்பவர்க் கறமுண்டு
கிரமையுண்டு. பதிவிரதைமாதர்மே லாசைவைத்திடலதிகபாவமொ
டுபகையுமுண்டு, பாலடிசிலுண்ணகம தரகிரண்டகஞ்செயிற் பழியு
ண்டுவழுவுமுண்டு, சுசிதானமறுவிலாற் பாடுசங்கீதமதில் சுகமில்லை
குற்றமுண்டு, துன்மார்க்கரூடரோ டிணங்கியுறவாடிற் சூதுண்டு
வாதுமுண்டு, சதுர்மறையிலெட்டாத திருநயனவல்லியே சத்தியே
சீவதமுதலே, தருமேவுமருணகிரி யீசாபாலுறையுலகு தாயுண்ணாமு
லையம்மையே. ௬௯

## துன்பமென்பவை.

தொலையாத்தரித்திரரோ யடைவதுத் துன்பவினை சூழ்ந்திடினும
திகதுன்பம், சொல்லிதழுமனைவியோடு வாழ்வதுந் துன்பமெய் சுகீ
ரமிலாது துன்பம், பலகாலமுந்துயிலு வது துன்பமாவயிறு பசியாதி
ருத்தறன்பம், பாங்குயர்ந்திடினுமட் கலினைத்தலையென்னாத பரி
சேறுவது துன்பமா, மிலகுமனுநீதியில் லாவரசனுரினி லிருப்பதும
னைக துன்பம், எதிராளியைத்தினம் வணங்குவது துன்பமக விவ்லா
நதிக துன்பம், சலத்திற்கராவென்ற மாவின்சகோதரி சாம்பவிமது
ராயாசி, தருமேவுமருணகிரியீசர்பாலுறை யுலகு தாயுண்ணாமுலையம்
மையே. ௭௦

இன்பமென்பவை.

சிந்தையிற்மகிழ்ச்சியுறு செல்வமின்பம்பரம சிவனடியராவதின்பம், செகதலப்பிரக்யாதி யாவதின்பந்தரும சிந்தனையிருந்தவின்பம், தந்திமுகனைக்கால மேதொழுவதின்பாற் சற்சனர்கள்சேர்வையின்பம், சற்புத்ரனைப்பெற் றெடுப்பதின்பங்கல்வி தானறிந்திடுதின்பம், கொந்தலர்ந்திடுபுட்ப மணிவதின்பம்சேம குருவினுபதேசமின்பம், குணமிக்கமனைவியுட னில்லறந்தன்னிலே கூடிவாழ்ந்திடுவதின்பம், சந்ததமுநின்பதம் பணிவதறவின்பமே சாயுச்யமெனக்கருளுவாய், தருமேவுமருணகிரி யீசர்பாலுறையுலகு தாயுண்ணாமுலையம்மையே. ௭௧

நரகமெய்தவழி.

கற்புவனிதைக்குமொரு தப்பிதஞ்சொல்வதுங் கள்ளுண்டடஞ் செய்வதுங், கனிந்தொருவர்தேடரும் பொருளபகரிப்பதுங் கடுவெ கொலைதொழில்புரிவதும், செப்புகுருவைத்தூஷ மணிப்பதுஞ்சிவனடியர் சிந்தைநலியசசெய்வதும், தியாகமேறபவர்தமக் கீய்வரைவிலகடுக் கீமையும்வாய்வலுமையில். ஒப்பினவருக்கழிவுசெய்துகைக்கூலியாக குடன்கொள்வதும்பிறரிடத், துய்யவேசையோக மது செய்வதிவையெலா முழுநரகில்வீழ்வதற்குத், தபபிலாமரசெனும் தடமென்றறிந்துமித் தாணியின் மயங்குவார்கள், தருமேவுமருணைகிரி யீசர்பாலுறையுலகு தாயுண்ணாமுலையம்மையே. ௭௨

காவலர்வறுமை.

ஒருகாசுமீயாத லுத்தப்பிசாசர்களை யோக்குபுகழ் கன்னனென்று, மூரியசெந்தமிழ்சற்று மறியாதமூடர்களை யுயர்ந்தகுருமுனிவனென்றும், விருதாவினியிடமதி லூறுபொய்கூறுவரை யிக்கரிசசந்திரனென்றும், மெய்முகவசிகர மிலாதவன்ராஞ்சித மிகுந்தமன்மதனென்றுமெஞ், செருமுனையிலாத மெய்க்காதபேடியை செயவீமசேனனென்றும், செந்தமிழிறுலும் புகழ்ந்துபுவிமனிதரைத் தினந்

தினம்பாவெதினுற், தரையிலசையினுவலர்க் கலையாதவறுமையைத் தானடைந்தார்களம்மா, தருமேவுமருணைகிரி யீசர்பாலுறையுலகு தாயுண்ணாமுலையம்மையே. எங

இதிலிது மேன்மை.

பாவில்வெண்பாக்கலித் துறையதிகமலரினிற் பங்கயக்கமலமாம், பட்சியிற்கருடனே யதிகமாங்கீர்த்தியிற் பாண்டிவேளாளராகும், கோவிலினிலதிகரின் சந்நிதிபிலத்தினிற் கொடுவிடசேடனதிகம், குலவுபலமொழியினிற் குறளதிகமலையினிற் குன்றாவிரண்யவரையாம், காவினிற்கற்பகத் தருவதிகமாதினிற் கற்புடையவனிதையதிகம், கரியிலதிகம்வெண்மை யயிராவதம்கதிக் கறையினிற்கங்கையதிகம், தாவுபொருண்மேவுதிரி கோணத்துயர்ந்தசிவ சகைரீயருள்வாரியே, தருமேவுமருணைகிரி யீசர்பாலுறையுலகு தாயுண்ணாமுலையம்மையே. எச

இன்னார்க்கிவர்விரோதம்.

அருளாதிகறைக்கிடும் வைகுந்தமாலுக்கு மவுணருக்கும்விரோதம், ஐயமிலுணர்க்கோர்க்கு மூடர்க்குமொர்காளு மாகாதுவெகுவிரோதம், பருதியொடுமாமதிக் கும்ராகுகேதெனும் பரம்பினுக்கும்விரோதம், பரிமளசவ்வாதினிற் சுண்ணமதுசேராது பழுதுண்டுவெகுவிரோதம், அருமறையர்கணிகைக்கு வைத்தியர்சுணக்கனே டவரிவைத்தார்விரோதம், அம்புவியையாள்கின்ற கெம்பீரத்துறைகளுக்கடையவர்கண்மேல்விரோதம், தாணிதனிலிவர்களொருவர்க்கொருவர்பகையென்று சாற்றினேமுலகறிய, தருமேவுமருணைகிரி யீசர்பாலுறையுலகு தாயுண்ணாமுலையம்மையே. எடு

பயனற்றசெல்வம்.

அடங்காதமோகவி காரத்திருள்மிழ்க் தரிவையார்க்குதவுபொருளும், அறிவகற்றிச்சிறுமை செய்திருங்கள்ளினுக் கன்புடனளித்தபொருளும், உடன்படாமற்கோளுரைக்கின்றபாதகரை யுறவுசெ

ய்திந்தபொருளும், ஒருவருக்கொருவர்கூ தாசெங்கதியினுலொப்பி யேதோற்றபொருளும், திடங்கொண்டவாதமுறை தெரியாமல் வீணிலே தீயினிற்சுட்டபொருளும், செப்புமிப்பொருளெலாம் புண்ணிய விஷயத்தினிற் சேர்ப்பித்தபொருளல்லவாம், தடங்கொண்டசீர் கரைத்தபுளியாமொன்று சாற்றினேன்பறாறிவுறத், தருமேவுமருணைகிரி யீசர்பாலுறையுலகு தாயுண்ணாமுலையம்மையே. ௭௬

தருமகாரியம்.

பூவினின்மகத்தான சாலைநீர்ப்பந்தரும் புகழுடனமைத்ததருமம், புட்பஞ்சிறந்ததிருநந்தனவனப்பயிர் பொருந்தவேசெய்ததருமம், கோவிலணிசிகரகோபுரமண்டபஞ்செயுங்கொள்கையுமநேகதருமம், கூபந்தடாகங் குளம்வாவிசெய்வித்தல் கூறவரிதானதருமம், யாவருமிலாதவர்க் குரியமணமேசெய்வ ததுமகிமையுற்றதாமம், அன்னசத்திரமுடன் கன்னியமங்களுண் டாக்குவதுயர்ந்ததர்மம், தாவபுகழேசிறந் தோங்குபரிபூரண தயாபரிமுத்திமுதலே, தருமேவுமருணைகிரி யீசர்பாலுறையுலகு தாயுண்ணாமுலையம்மையே. ௭௭

அஞ்ஞானிகள்.

சகலமுநமக்குளே யல்லாதுகோவிலிற் றுனென் றுமில்லையென்பார், சமுசாரமாய்கையது வீணென்றுதொல்லையாஞ் சந்நியாசம்நல்லதென்பார், பகரரியவேதாக மபுராணங்களைப் பழுதுமுன் சொன்னதென்பார். பரிவாகவீரேழு புவனத்திலும்புண்ணிய பாவமேதில்லையென்பார், மகிமையுளபனிரண்டு சமையமுஞ்சமயத்துணை மந்திரமுமில்லையென்பார், வாயிலிப்படியுரைப் பார்கள்சிலபேர்தகைண் மனதின்மெய்ஞ்ஞானமறியார், தகைமையுடனுலகைப் பழித்திகழுமறிவிலாச் சண்டாளர்மெத்தவம்மா, தருமேவுமருணைகிரியீசர்பாலுறையுலகு தாயுண்ணாமுலையம்மையே. ௭௮

பகைக்கவொணர்.

கருதிநூலறியுமந் தணரையுங்கல்விமுறை குருதக்கற்றவரையும், தொல்புவியையாளுமன் னவரையும்மன்னரிட தோளமையமை

சாதமையும், விருதணிந்திடுசுத்த வீரர்களுணிகரையு மிகவயித்தியா களதமையும், வியரிதமக்ாமந்த்ர வாதியருடன்றினம் வேணடுந்ரு தேசிகனையும், அறிவுயர்ந்திடுதபோ தனரையுந்தன்னபிப் பிராயந் தெரிகதவரையும். அரிதானபஞ்சத்தி லாதரிதகோர்களுட ளுருமிப் பதிதெரிநுளை. தரணிமிசைச்செயர்களும் பகைசெய்யலாகாது தன தாயிருககவேண்டும், தருமேவுமருணகிரி யீசாபாலுறையுலகு தாயு ணாமுலையம்மையே. எக

உமையுதவி

மணனுபுகழீசசுரர்வெந் நஞ்சுண்டமகிமையும் மழுமான்றிருக்க ரதலில, வைததமகிமையுமவேத னைசிரமறுநதிட்ட மகிமையுடன ஆலாமல், நன்னயமதககரி யுரித்துமுபபுரமதை நகைத்தெரிததிடு மகிமையும், கவலகற்பிணிகளது கறபகதுியவடிவு நவிலவொண ணாமகிமையும், மின்னுமுயலகனைபு மிதிததஇதாடுகமனைபு விழவு தைததிடுமகிமையும, மிருககண்வேள்வியை யழிததமகிமையிநேடு வெறறிபெறுமகிமைகளெலாம், தன்னிகரிலாதநின் மஙகல்யமகிமை யின சலுகையல்லாமல்வேறே, தருமேவுமருணகிரி யீசர்பாலுறை யுலகு தாயுணாமுலையமமையே. அ௦

திருமாதிருப்பு.

வில்லாத்திலுங்கலங்க மலரிலும் மும்மத முனைசத்வேழத்தின்மி சையும, வெம்பரியமுகத்திலுமி ரணகளந்தன்னிலே வீரமாயச்செல வாபாலும், நல்லயசுதன்னிலும் பாலினுந்தேனிலும் நாகரிகவனிதை யாலும. நவலரியபகேரு கத்திலுகடலிலும நற்பாறகுடகொடி யிலும், இல்லினிலிரஞ்சித மிகும்மனையுலுந்தெளிந் திடுநீரிலரசாவ தனந், திலுமுதாரனைத தொழிலி லுத்தியயவன் பாலுமியல்வல்லவா மொழியிலுஞ், சல்லாபமாயவன் மார்பினுந்திரு மாதுசலியாதுவாழ ந்திருபபா, டருமேவுமருணகிரி யீசர்பாலுறையுலகு தாயுணாமு ஓ யம்மையே. அக

திரவியவகை.-

நாடுபடுதிரவியம் பயறுசெந்நெற்கதலி நற்கனிபசுக்குரகதம், நயகரும்பொடுமின்பு நகர்படுந்திரவியம் நவில்வதுகருங்குரங்கு, நீடு மணநடியித் தனுமரசர்காட்டானை நெடியகாடுதிரவியம், திருதமய நுபியு மிருலரக்கொடுதேனு நீழ்கடற்றிரவியவகை, கூடுமுத்துச சங்கு பவளமுப்புக்கோர்வை குலவுமலைபடுதிரவியம், கோஷ்டமொ டுகுறுமிளகு குங்குமத்தக்கோலங் குளிர்சந்த மைந்துமாகும், சாடிய மகாசூர பதமனைவதைத்திட்ட சரவணனையீன்றவளையே, தருமேவு மருணைகிரி யீசர்பாலுறையுலகு தாயுண்ணாமுலையம்மையே. ௮௨

உமைமயம்.

புவனமென்றும்பெருங் ககனமென்றுங்கரும் புனல்பரவுமுவரி யென்றும், போதமென்றுங்கருணை வேதமென்றுதிவ்விய புண்ணியமெ ய்த் தலமுமென்றும், மவுனமென்றும்ஞான மந்திரமென்றும் மேழு வகையிலுறுதோற்றமென்றும், வாசமென்றுந் தலவிசேடமென்றும் மகிமை வாய்ந்திடுந்தெய்வமென்றுங், கவனமென்றும்நல்ல வுவண மென்றும்மறிவிற கட்டழித்தின்பமுலவும், கடாட்சமென்றும் மதிக மோட்சமென்றிப்படிக் கருணையொடுசகலவடிவாய்த், தவறுமலென கெவகு நின்றபொருணீயென்று சாற்றுகிறதாரணமெலாம், தருமேவுமருணைகிரி யீசர்பாலுறையுலகு தாயுண்ணாமுலையம்மையே. ௮௩

சரியை.

பரிவுக்திடுதேவ ராலயந்தொழுதலும் பகரரியகங்கை முதலாய், பாரிலுளபுண்ணியதீர்த் தங்கண்மூழ்கலுமிதய பக்தியொடுமலர் சாற்றலும், பொருள்வழங்கியதே திருப்பணிமுடித்தலும் பொருந்துதீபம்வைத்தலும், புகழுடன்திருவலகு செய்தலும் மெழுதலும் போதமெய்ஞ்ஞானியர்களை, யரிவினுற்கண்டே மகிழ்ச்சியொடுபணிந்து மன்புடனே யுண்டியிடலும், அம்முலவுவாவிகூ பங்கள்செய்

வித்தலும் ஆகுமிவ்வவனிமிசையில், சரியையாமிதன்படி நடப்பவரு முன்பதஞ் சார்ந்திடுவர்சாலோகமே, தருமேவுமருணைகிரி யீசர்பாலுறையுலகு தாயுண்ணாமுலையம்மையே. அ௪

கிரியை.

கந்தவர்க்கமுமதிக கிளர்மணப்புகையுடன் கவின்கொடீபமு மன்புடன், கமழ்சிறந்தோஙகுதிரு மஞ்சனபிடேகங் கனிந்துநறபு னல்சொரிந்துங், கொந்தலர்ந்திடுபுட்ப முஙகொணடுமாய்கையின் குணமனைத்துஙகளைந்து கூறவரிதானபரமானந்த வடிவையுஙகொ ணடிதயபகதியுடனே, யைந்துஞ்சுத்திகள்செய்த கம்பெறவிறைஞ்சி யுமஙகியின் கடன்முடித்தும, அறிவுடன் சிந்தையொரு வழியிலே கொண்டுமைந் தக்கரத்தாலுமரனை, சந்ததமுமிப்படிப் பூசிப்பர்கிரி யையோர் தானடைவர்சாமீபமே, தருமேவுமருணைகிரி யீசர்பாலு றையுலகு தாயுண்ணாமுலையம்மையே. அ௫

யோகம்.

முக்கலைம்புலந்தனை மைந்துடனடக்கியே மூலவாய் வினையடைத்து, முற்றுமிகவேயதைப் பக்குவத்தொடுவழி மூடித்தொருவழிப்படுத்தி, சிக்கெனும்படியாக வேபிடித்தருணையொளி சேர்ந்திடும் பிர்மமதுபோல், திகழ்கின்றதாண்டவச சிலம்பொலியுடன் சிறந்திட்டவருளெனமிகுந்த, மிக்கபுகழுஞ்செழுத் தோரெழுத்தருவதாய் விளங்கிடத்தன்மைகண்டே, மேவுபெருவழியினுக்கேபுக்கிறைஞ்சி மெய்யுறப்பெற்றுவாழ்வார், தக்கதொரு கேட்டுவினை மன்புமுவெனசசொலத் தகுமியோகசாரூபமே, தருமேவுமருணைகிரி ஈசர்பாலுறையுலகுதாயுண்ணாமுலையம்மையே. அ௬

ஞானம்.

அரிதான சுருதியூ லாகமசாஸ்திரசமைய மாதிரண்டிருபத்தியெண், ணகமம்பதினெண் புராணமபலகலையெலா மறிந்துந்தொக்கி

தெல் பின்னும், உரியதாயகமப் பொருளினது செய்தியையுவமை பலவெனவறிந்தே, யுள்ளத்தெளிந்தறி விசைத்துழலு மாய்கையினு லைவுமுதலாகநீத்து, பரிவாகவேண்டவரி தாகுநற்சிவபோத பணப னைத்துந்தெரிந்து, பாசமென்னனுவளவு நெஞ்சினிற்கொள்ளாது பறித்தறிவினாலறிவது, சரியுள்ளஞானத் தியற்கைநாலாம்பதந் தரு மென்பர்வேதமுதியோர், தருமேவுமருணைகிரி யீசர்பாலுறையுலகு தாயுண்ணாமுலையம்மையே. ௮௭

## தத்துவம்.

பூதமைந்தரிதான புலனைந்துவாக்குமுதற் புகலுகரு மேந்திரி யமைந்து, போதமிகுஞானேந்திரியமைந்தரியதாய்ப் புகழ்கின்ற கர ணம்நான்காம், ஓதரியநாடிபத் தாதாரமாறுபிணி யுறுமூன்றுகோச மைந்து, ஊனுற்றவாயில்க ளொன்பதெனவேமொழிவ ரோங்கிய வாய்க்கன்பததாம். ஆதியுளமமூன்று குணமூன்று மண்டலமூன்றரி தான தாதுவேழு, அற்புதமிகுங்கவி காரமிருநான்குடனவதசைதயோ ரைந்துமாகும், தாவதையே தொணணூற்றோடாறுதத்துவமெனச சாற் றினர் ஞானமுறையோர், தருமேவுமருணைகிரி ஈசர்பாலுறையுலகு தாயுண்ணாமுலையம்மையே. ௮௮

## பதரென்பவர்.

பலபேர்கள்வாய்தனைப் பார்த்துமேதன்றொழிற் பாருதவன் னொருபதர், பாரிசற்குணமோடிருககவப் பாவையைப் பயினியாதவ னொருபதர், இலகுசம்பத்துக ளிருக்தேயிரவலர்க் கீயாதவன், வீண் பதர், எதிருவளிவக்துறவு செய்தபொழுதுள் ளதையியம்புவோன் மதி யிற்பதர், உலகினிகரிலையென்று தன்னையே தான்புகழ்ந்தசைப்பத றிவில்லாப்பதர், உள்ளமட்டும்வேட் டகந்தனிலுண்பவனுமூதாரியா னபதராம், தலைவிபக்வதிபுரு தனிமனோன்மணி கிகர்த்தாண்டவிய நலமணியே தருமேவு மருணைகிரிஈசர்பாலுறையுலகு தாயுண்ணாமு லையம்மையே. ௮௯

### திறமுடையவர்கள்.

மிக்கசெருமுனை தனிற் பின்கொடாமற்சென்று வெட்டுவோ னதிகதிறவான். மிடிதுன்பவினைசோடி வரினுந் தன்னெறியம்விடா தவனுமதிகதிறவான், சிக்கெனவெடுத்தகருமங்களை முடிக்கின்றசிற் கையனுமதிகதிறவான், திண்புவியிலியார்க்குநல் லவனெனப்பேர் கொண்ட செயலுடையனதிகதிறவான், மைக்கடலினிற் செல்லு வங்கம் தூற்றபல மாலுமியுமதிகதிறவான், வரிசைபுனகல்வியிற்கண் டதைககற்கின்ற வல்லபனுமதிகதிறவான், தககபுகழானந்த ஞானா ருதிபரூ சத்தியேகைலையரசே, தருமேவுமருணகிரி யீசர்பாலுறை யுலகு தாயுண்ணாமுலையம்மையே. ௰

### பொது.

பொய்வசனமெத்தனை யுரைக்கிலொரு மெய்ம்முன்பொருந்தி யதுநிலைகொளாது, புல்லருக்கதிகவுப காரமேசெயினுமவர் புத்தி யிற்றயவிராது, தையலர்கணமேலதிக மயல்கொண்டுவோர் மனது சற்றும்வெட்கப்படாது. சந்ததிகள்பெற்றதிது போதுமெனவே பெ ற்றதாய்க்குஞ்சலிப்பிராதே, வையமிட்டுண்டவர்க் குரியரிகழ்மேன் மையா மன்றியொருகுறைகன்வாறு, தனுபோகவினைதனை பலமிலா ப்பெரியோர்களாலும்விலக்கொணாது, சையமாதவரம்பூ சிதபாதசே வியே சந்திரசேகராசாரியே, தருமேவு மருணகிரி யீசர்பாலுறையு லகு தாயுண்ணாமுலையம்மையே. ௧௧

### அரிதென்பது.

அடங்காதசண்டமாருத மதைச சிமிழிலடைக்கினுங் கடலி னிற்சென், றாழமிவ்வளவெனவுரைக்கினும் பிசகாதவட்டகுலபரு வதத்தைத், திடமகொணகையினிற் செண்டடிக்கினு மாதிசேட னுடு மல்லுயுத்தம், செய்துவெல்லினுமறிவி லாதவர்க்கருத்தைத் திருத்தினுங்கஜமட்டையும், அடங்காமல்வாலைப்பிடித்துச் சுழற்றி னும்மாதரிதயத்தினளவை,மண்மிசையிலெவராலுமறிவதரிதென்றே

வழுத்தினோர் தமிழ்வல்லோர்கள், நடங்கொண்டுலாவபூவும் பொழிக்
களெங்கெவரு சார்ந்திலகுவேதமுதலே, தருமேவுமருணைகிரி யீசர்
பாலுறையுலகு தாயுண்ணமுலையம்மையே. கஉ

### இது இதனைத்தருமென்பது.

கல்விகற்றிடினிலா தென்னதருமென்னிலோ கருத்தினல்லறி
வுதருமாம், கருத்தினிடைநல்லறிவு தென்னதருமென்னிலோ கனி
க்தரன்றனைவிரும்பும், தொல்புவியிலீசனரு ளென்னதருமென்னி
லோ சோர்வற்றபுண்யமுதவும், சொல்லரியபுண்யமவை யென்னத
ருமன்னிலோ தோற்றமெய்ஞ் ஞானமுதவும், நல்லுற்றமெய்ஞ்ஞா
ன மென்னதருமென்னிலுன் னளினபதசேர்வையீயுங், நளினபெர்
றபதசேர்வை யென்னதருமென்னிலோ காசாயுசியமீயும், வல்
லியேயின்கிருபை யுண்டாகிலிவையெலாந் தானுகவந்துசேரும், தரு
மேவுமருணைகிரி யீசர்பாலுறையுலகு தாயுண்ணமுலையம்மையே. கங

### சமயங்கள்.

சேமமுயர்சைவமொடு பாசுபதவைரவம் கிருமலக்காளாமுகம்
நேர்ந்திடுமெவாமாமாவிரதமிவையாறு நிசமானவுட்சயமாம், பூமிசை
யினுலகாயி தம்பௌத்தஞ்சமணம புகலுபாட்டாசாரியம், பொருநது
ம்மாருலசையொடு பாஞ்சராத்திரமெனும யுலசசமய மிவைகளோரா,
ரும்மைப்பனிரண்டு சமயத்திலுலவுமுயரைம் பதிரேறோடோரரட்சரீ,
யத்கோணசதகோண முக்கோணவீட்டில்விளையாடுமருளானந்தியே
தாமிசமிலாமலெளி யேனையாட்கொளவருக சமயமீதருமையுமை
யே, தருமேவுமருணைகிரியீசர்பா லுறையுலகு தாயுண்ணமுலையம்மை
யே, கச

### அரிதானவர்கள்.

குலமுழுது மோட்சமடையததவஞ் செய்தாவி குலபகீ ரதன்
போலவும், கூறுபதினாலாண்டி லனல்விழு ம்வெண்ணைக் கூறுபா
ன்போலவும், இக்குமக னைப்பிரிக் கயிர்வைத் திரேனென்றி

றந்த தசரதன்போலவும், இசைந்திடுங் கணவர்மொழி தப்பாமலே
வல்செய் திடுதபதி யைப்போலவும், நிலமிசையின்மருவுருஞ்சகோத
ரர்பிதாவுடன் நேயமுறு மனையாட்டியும், நெடியராயரியதவமேசெ
யினு மவர்போல நேர்ந்திடுவ தரிதுகண்டாய், தலைவிகங்காளிமகி
டாசூர சம்மாரி தற்பரீ சத்திபரையே, தருமேவுமருணைகிரி யீசர்பா
லுறையுலகு தாயுண்ணாமுலையம்மையே. ௧௫

ஸ்திரீயுடன் புணரொணாக்காலம்.

வருடசங்க ராந்தியிற் றிங்கண்முனை பின்னிலும் வளர்பிறைப்
பிரதமையிலும், மதிவிளங்கும்பூர ணைத்திலும் பிதுர்தலைவி வாய்ந்தி
டுஞ்சிரார்த்தத்தினுவை, இருணிறைந்திடுமமாவாசையொடு சென்மநா
ளியல்பொடு பிறந்தநாளும், இனியமங் கையாபூ மலர்ந்தநாண்மூன்
றுதவ மேற்கின்ற விரதநாளும். அரிவையுடனே கூடலாகாது கூடி
னலதிகபா வங்களேறும், ஐசுவரிய நில்லாது திருவகலுமதுவலாலா
யுளுங் குறையுமென்றே, தரைமிசையின் முன்னோருரைத்தவர்க
ளாகையாற் சாற்றினே னுலகமறியத், தருமேவுமருணைகிரி யீசர்பா
லுறையுலகு தாயுண்ணாமுலையம்மையே. ௧௬

பிரயாணத்துதவி.

கையினிற் றண்டொன்று தப்பட்டுமோர்பனங் காவில் வலி
தானகுறடுவு, கட்டுசா தந்தாக நீர்கொளப் பாத்திரங் கனலுதவிசெ
ய்யவையமும், தொய்யல்தரு வெள்ளிலை யடைக்கா யுடன்சுண்ணக்
துயவொரு நாழியரிசி சொன்னதிவை யாவையுந் தைரியத்தொடு
கொண்டு சோர்விலா நல்வேளையில், துய்யகரி முகனடி பணிந்து
பின்வழிசெலத் துணையாகு மிவைநன்மையும், குழிவளை யுவகிலுள
மானிடவருக்கறிவு தோன்றவே சொன்னதிவையாம், தையலே, ஈ
ராறு சமயமுத லாய்நின்ற தற்பரீ பச்சைமணியே, தருமேவுமருணை
கிரி யீசர்பாலுறையுலகுதா யுண்ணாமுலையம்மையே. ௧௭

### புகழ்பெற்றோர்.

மெய்வாசகந்தனிலரிச்சந்த்ரனேகொடையில் மிக்கபுகழுறுகர்ணனே, விரதநிலை காப்பதிலு ருக்குமாங்கதனென்னும் வேந்தனேயவனிமிசையில், செய்யுமுபகாரமதில் விக்ரமா தித்தனேசெருவலர்க்கஞ்சியபயம், செப்பின ரடைக்கலங் காத்திடுதல் விசயனே திவ்யரவி குலம்விளங்க, மெய்த்தவஞ்செய்தவன் பகீரத னொருத்தனே மேவுமிப் படிமிசையிலே, வேந்தர்களி லிவ்வகைக்கீர்த்தியிவர்கட்கலால் வேறொருவ ருக்குவருமோ, தையலே முப்பத்திரண்டாம் வளர்த்திட்ட சாம்பவீ பொன்வல்லியே, தருமேவுமருணகிரிஈசர்பாலுறையுலகு தாயுண்ணாமுலையம்மையே. கஅ

### புராணங்கள்.

விரிந்தபொருள் மச்சமார்க் கண்டேயம் வாமனம் விளங்குவைணவமிலிங்கம், விண்ணவர் புகழ்சைவ நாரதீ யம்பதுமம் மேன்மைதரு மாக்கினேயம். தெரிதரும் பௌடிகம் பிர்மகை வாத்தமிகு சீருலவுபாகவதமும், திகழ்கின்ற ஸ்காந்தமெழில் கூர்மமொடுவராகமும் திருதிதிரு பிர்மாண்டமும், வரந்தரும் பிர்மமுயர் காருடமென்பதினெணவாய்ந்தவெம் புராணமிவையாம், மாநிலந் தனிலரசருக்கரசியாய்வந்து மாறனுக் கருள்செய்தநீ, தருஞ்சிறியனுக்கினிய பேரின்பமுதவுவாய் தருமேவுமருணகிரி யீசர்பாலுறையுலகு தாயுண்ணாமுலையம்மையே. கக

### பொது.

உலகவாழ் வைப்பொய்யன் றேமனதினுக்கறி வுறுத்தியு மனத்தினுசை, யொழியாதுமானிட வருககரியகாரிரு ளுள்ளத்தி லறிவுமின்னும், நலமிகுந் திடுங்னது பாததா மரைமலரை நம்புமடியற்கருளுவாய், நாயகி சராசரக் காரணிபூரணி நாரிய பிராணிதேவி, மலைராசதன்னி பவானிமுக் கண்ணியமை மாதாவி மலையந்தரி, மனோன்மணி பராபரி சத்திசங் கரியுமை மாசிலா மேதவுருவே

தலைவிமரகதவல்லி பகவதி யுருத்திரை சாம்பவி பிராட்டி பஞ்ச.தரு
மேவுமருணைகிரி ஈசர்பாலுறையுலகு தாயுண்ணாமுலையம்மையே. ௧00

வாழி.

சநகரன் மாயன் வாழி சதுர்முகன் முருகன் வாழி
யைங்கரன் வாழிதேவ ரனைவரும் வாழிவாழி
இங்கித சதகந்தன்னை யெழுதினோ படித்தோர்கேட்போர
பங்கமில்லாமச்சிற் பதித்தவர் வாழிவாழி.

உண்ணாமுலையம்மன் சதகம்.

முற்றிற்று.

---

இ ஃ ஆ.

மகா வித்வான் ம-ா-ா ஸ்ரீ.

சின்ன கந்தசாமி ஐயர்களால் செய்யப்பட்டது.

உ

சிவமயம்.

திருவண்ணாமலை

# ஸ்ரீ அருணாசலேசர்

# நவகாரிகைமாலை.

காப்பு-நேரிசைவெண்பா.

சொற்பவள மேனியனைத் தும்பிமுகத் தைங்கரனை
யற்பினொடு வேண்ட வமையுமா—லற்பு
தவகாரிகைமாலைத தாமியருணேசர்
நவகாரிகைமாலை நனகு.

கட்டளை கலித்துறை.

பாரார்தருநம் மருணாசலேசா பதாம்புயத்தை
யூரார்நினைந்து கடைத்தேறுந் தன்மையை யோரபொழுது
மாராய்ந்தறிந்தவ் வழியினிலாத வசடனொரு
தேராய்ச சமைந்திலனே யருணாபுரித் தேவருக்கே. க

தனமாதர்தங்களுக் கேயிதஞ்சொல்லிச் சலித்திடுமென்
மனமாசுதீர்க்கும் வகையருள்வாயடி வாழ்த்துமன்பாக்
கினமானவர்புடை சூழ்தரவேறி யிவர்தரும்வாக
கனமாயசசமைந்திலனே யருணாபுரிக் கர்த்தருக்கே. உ

கேளானவைபல கற்றேவயிற்றின் கொடுமையினால்
வாளாவலைந்துலைந்தே னவரேறிடும் வாகனத்தைத்
தோளாற்சுமக்கவு ணார்ந்திடுந்தேரினைத் தொட்டிழுக்கு
மாளாய்ப்பிறந்திலனே யருணாபுரி யத்தருக்கே. ங

தடமானதீதென் றறியாக்குருடரின் தன்மையைப்போல்
மடமாதர்மோக வலையினிற்பட்டு மயங்குகின்றேன்

திடமாகப்பூசுரர் காடோறுமாட்டுந் திருமஞ்சனக்
குடமாய்ச்சமைந்தில னேயருணாபுரிக் கோயிலுக்கே. ௫

அடியாரும்வேற்கணி யுண்ணாமுலைக்கு மணாளவென்றே
யடியாரைக்கண்டு நற்றோத்திரஞ்சொல்லி யவரடியை
முடியாரவைக்கு முறையறியாப்பேரு மூடனொரு
படியாய்ச்சமைந்தில னேயருணாபுரிப் பாதையிலே. ௬

கோடானுகோடி பவமேபுரிந்திட்ட கொள்கையினால்
நாடார்நகைக்க வுடம்பெடுத்தேனிந்த நானிலத்தில்
கூடாதபாவி யினியேவல்செய்குவன் கோயிற்பசு
மாடாயப்பிறந்தில னேயருணாபுரிமந்தையிலே. ௭

நில்லாதுகாயம் நிலையாதுவாழ்வினை நிச்சயமே
பொல்லாதபுத்தியை யேன்படைத்தாய் புரமூன்றெரித்த
வல்லாய்நின்கோயில் பசுமாடுகள்மேயி புல்லரவுணைப்
பல்லாய்சமைந்தில னேயருணாபுரிப் பூமியிலே. ௮

கனியானபாவி யிளமையிலேயெனை தான்பிடித்தே
பனியாயகண்டதை யார்க்குரைப்பேனயன் மால்வணங்கும்
பனிமாமலைமகள் பாகனுக்கன்பர் பரிந்தருந்துங்
கனியாய்ச சமைந்திலனே யருணாபுரிக காவகத்தே. ௯

நயாப்பெரும்புல்லர்க் கேயிதஞ்சொல்லி யிரந்துழல்வேன்
மாயாப்பிறவி யறுக்குஞ் சிவபெருமான் பதமென்
றோயாமற்பூசைசெய் தண்ணன்பர்சேடத்தை யுண்ணுமொரு
நாயாய்ப்பிறந்திலனே யருணாபுரி நாட்டினிலே. ௧௦

ஸ்ரீ அருணாசலேசர் நவகாரிகைமாலை

முற்றிற்று.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# ாசல சதகம்.

பொன்பாவுகொன்றையிலேறுவோன் புனலாறுவெண்மதிசூடு நீ
என்பாரமுதினிதாவணிந் திடுதன்மையாலெளியேன்சொலும்
புன்பாடலிங்கிதுதன்னையும் போற்றிக்கொள்வாயெனவுள்ளமும்
அன்பாலுரைத்தேன்கொண்டருளருணாசலாவருணாசலா.

கடியார்துளவத்தொடையலான கமலப்புதுமலர்மேவினோன்
படியூடிடந்தடிதேடவும் பறந்தன்னமாய்முடிதேடவும்
கொடியேன்மனமேகோயிலாக் குடிமேவினையெனிலையநின்
அடியாரெலாமென்சொல்லிடா ரருணாசலாவருணாசலா.

கற்பம்மனுவாற்பம்முப கற்பம்மெனுமுறையால்வரு
பொற்பின்மிகுதிருநீறணி புனிதாககலாநின்றுனை
கற்பகயநறுமாமலர் நணுகும்மருடானெய்துமோ
அற்பின்னடியார்போற்றிடு மருணாசலாவருணாசலா.

வில்லார்மலர்க்கணையேவிய வேளைப்பொடியாச்செய்தனை
கல்லாலெறிந்தவன்முத்தியே காணப்பரிந்தனையாதலாற்
பொல்லாமனத்தவனென்றெனைப் புறமேவிடுதிடலையனே
அல்லார்களத்தெம்மண்ணலே யருணாசலாவருணாசலா.

முடிபட்டமென்முலைக்கேமலர் முகிழ்போற்குழைந்திடக்கண்டுமே
வடிபட்டகோக்குடையான்புலி வாறேடெளித்திடுவாண்மனம்
பொடிபட்டநின்றிருமேனியிற் பொருபூழியன்கையிற்பிரம்
படிபட்டபோதென்பட்டதோ வருணாசலாவருணாசலா.

வானாகினைவெளியாகினை மால்வேதனோடமரர்க்கெலாங்
கோனாகினையடியார்மனங் குடிகொண்டவருணாவூறிடுந்
தேனாகினையமுதாகினைத் தேரூர்ந்திடர்செறுபோரினில்
ஆனாகிமால்வரவூர்ந்திடு மருணாசலாவருணாசலா. ௬

புல்லாகியேபூடாகியே புழுவாகியேமரமாகியே
கல்லாகியேனுநின்னகர்க் கண்மேவிலேனினியெங்ஙனே
பொல்லாப்பிறப்பொழிந்துய்குவேன் புலைநாயினேனிமயந்தரும்
அல்லார்குழற்கொருபாகனே யருணாசலாவருணாசலா. ௭

படைக்குந்தொழிலயற்கீந்தனை பரிக்குந்தொழிலரிக்கீந்தனை
துடைக்குந்தொழிலரர்க்கீந்தனை துதிக்குந்தொழிலடியார்க்கெலாங்
கிடைக்கும்படிக்கினிதீந்தனை கிளரும்வைகைதலையன்றநீ
அடைக்குந்தொழிலாளானதென் னருணாசலாவருணாசலா. ௮

பரிந்திட்டறமெண்ணான்குமுன் பயில்வாளிருக்கவுநின்னருள்
சுரந்திட்டவன்றொண்டர்க்கெனச் சோறன்றுநீகச்சூரினில
இரந்திட்டதென்னேசொல்லுவா யெகினத்தவன்றலையொன்றினை
அரிந்திட்டிரப்பலிதேர்ந்திடு மருணாசலாவருணாசலா. ௯

மையார்விழிமலைமாதொடு மருவுந்திருக்கோலத்தையோ
கையார்புனன்மலராளிதங் காணப்பரியாதென்னையோர்
மெய்யானதுவேரூபவே வேதாவரியுழல்வுற்றனா
ஐயாவளர்மதியென்கொலோ வருணாசலாவருணாசலா. ௧௦

வாதாசனனாண்வின்மலை மாலார்கணைமறையேபரி
போதாகனனேசாரதி புவியேரதமாக்கொண்டபின்
நாதாபுரநகைத்திட்டது நவிலும்பவரகமங்கவோ
ஆதாரமாறினிமேலுறு மருணாசலாவருணாசலா. ௧௧

மூன்றாளிதழ்சருமாலையு மூரிகோளுமேபுனையத்தரும்
பொன்றாரிதழியினோடெவ்வம் புலியானைமற்றிவைதம்மொடு

மன்னுப்பயிரலவெண்ணியோ வளர்மாமலையுருவாயினை
அன்னையெனுமன்பர்க்கரு ளருணாசலாவருணாசலா. ௧௨

மேனாளொருவிழியுன்பத மேல்சாத்தியமாயோன்பெரு
மீனானாளினுமவைக்கவன் விழிகொண்டதருசியென்றுநீங்
கானார்கருமபலைதவெருடு களைகின்றதுபோலானதால்
ஆனாயனார்தொழுமையனே யருணாசலாவருணாசலா. ௧௩

பாரின்கணேயைந்தாகினை பகர்நீரிடைநான்காகினை
சேருந்தழற்கணமூன்றெனச் செறிந்தாய்வளிக்கிரண்டாகினை
நேருமவிணிலொன்றாகினை நிமிரும்முயிர்க்குயிராகினை
ஆருன்னிலையறிவார்கொலோ யருணாசலாவருணாசலா. ௧௪

மாறுவரங்கருவோமெனை வைகுந்தனும்மலர்த்தேவனும்
நூறாயிரமுறைவந்தெதிர் நுவல்கிற்கினுநின்னன்பர்கள்
பேறாயதைநினைவார்கொலோ பிறவிக்கடலதுநீந்தவே
ஆறாதுநீத்தவர்வாழ்ந்துறு மருணாசலாவருணாசலா. ௧௫

ஊனந்தருமிவ்வாழ்வினி லுலையேற்றுமர்மையினண்ணியே
ஈனந்தொடர்துயர்மேவினே னென்செய்குவேனெளியேனருண்
மோனந்தருநிலையீதென மொழிவாயெனிலினியுய்குவேன்
ஆனந்தமேயுருவாகிய வருணாசலாவருணாசலா. ௧௬

இடியுங்கரைமரமாமென வெண்ணமலிவ்வுடறன்னையோர்
யிடியுங்குறையாதுண்டுநான் பெரிதேவளர்த்தனைதன்பினில்
படியுங்குணமிலனாயினும் பரிவாருனையலதியாவரே
அடியும்முடியுங்காணொணா வருணாசலாவருணாசலா. ௧௭

மாட்டார்மலர்கொடுநின்னடி மலர்பூசனைசெய்கின்றிலார்
மொட்டார்முலையார்தம்மையே லையக்கித்திகைப்பாரையையோ
கெட்டாரவர்தமக்குன்னருள் கிடையாதமுப்புரமீரெழ
அட்டாரணன்றொழுகின்றரு ளருணாசலாவருணாசலா. ௧௮

பாம்பின்விடவாயிற்குளே படுதேரைபோ லெளியேனுளந்
தேம்பிப்புலனிற்சிக்குறத் திகைப்புற்றாலுணர்வின்றியே
சாம்பிடக்கின்றேனரு டருவாயெனிலினியுய்குவேன்
ஆம்பற்சிறுவாய்பங்கனே யருணாசலாவருணாசலா. ௧௯

வீட்டுக்கொருவித்தாகிய மெய்ஞ்ஞானநன்னெறிதேர்கிலார்
பாட்டுக்கருள்செய்வாயெனும் பண்பேனுநன்குணர்கிற்கிலார்
கேட்டுக்கிட்டமாய்நாடொறுங் கிறிசெய்குவாருய்வார்களோ
ஆட்டுக்குவல்லவனாகிய வருணாசலாவருணாசலா. ௨௰

செம்பிற்களிம்பதுநீங்கவே செம்பொன்னெனத்திகழ்தன்மைபோல்
பம்புற்றமும்மலநீங்கவே பரமாவைநீயெனவோதினை
வம்புற்றநாயேனோர்கிலேன் மயிலைக்குளுங்கயிலைக்குளும்
அன்பர்க்குளுமகிழ்பூத்திடு மருணாசலாவருணாசலா. ௨௧

பாராளுமன்னவர்செல்வமும் பகரும்விசுப்பிறைசெல்வமும்
சீரானவேதன்செல்வமுந் திருமான்மகிழ்தருசெல்வமுங்
காராறுமின்னெனவெண்ணியுன் கழல்போற்றுவார்தஞ்செல்வமிங்
காராலுமோர்வொணாததா மருணாசலாவருணாசலா. ௨௨

உனக்குண்மறைந்திக்காளுநா னுறல்போலெனதருளாலினு
யெனக்குண்மறைந்திருமைந்தனே யென்றுய்குருவாய்வந்துநீ
நினைக்குந்தொறுநினைக்குந்தொறு நீயன்றியொன்றுங்காண்கிலேன்
அனக்குண்டமோர்பூதந்தரு ளருணாசலாவருணாசலா. ௨௩

காவிக்குநேர்விழிமாதரார் காமக்கடலதின்மூழ்கிய
பாவிக்குநின்னிருதாட்புணை பாலித்திடாயெனிலுய்வனோ
சாவிக்கருள்செயுமையனே ஞானத்தவர்புகழ்துய்யனே
ஆவிக்குறுதுணைமெய்யனே யருணாசலாவருணாசலா. ௨௪

௧. அன்பர்-எதுகைநோக்கி அம்பர் எனத்திரித்தது.

ஒன்றாகினை பலவாகினை யுளதாகினை யிலதாகினை
யென்றாரண மதுகூறவ தெண்ணாதுதாம் பரமென்றிடுங்
கன்றால்விள வெறிமாயவன் கமலத்தயன் வெருவுற்றிட
அன்றாழல் வரையாகினை யருணாசலா வருணாசலா. உ௫

வளர்கார்த்திகை மாதந்தொறும் வருகார்த்திகை நாடன்னிலே
பளர்கானத்தில் லாவன்பர்கள் பரிவாகவே யேத்தித்தொழக்
கிளர்மாமலை தனிலேயொளி கெழுசோதிகாட் டாநின்றநின்
அளவார்தெரி பவரையனே யருணாசலா வருணாசலா. உ௬

ஒருபான்மல ரயனாகவு மொருபாறிரு மாலாகரும்
பொருவாவருட் டிருமேனியாய்ப் பொலிவாயிதன் றியுமாமலை
வருபானவையோர் பாலாகவம் வருவாயிதன் றியுமையனே
பருவாவையுன் னருளென்னையோ வருணாசலா வருணாசலா. உ௭

ஒப்பானதி லொருமூர்த்தியா யொருபாதமார் திரிமூர்த்தியாம்
அப்பான்மைபோன் மலையாகியு மருளின்பெரு மையினையனே
இப்பாருளோர்கண்டேதொழ விருந்தாய்நதி மதியாயர
வப்பார்சடை முடியண்ணலே யருணாசலா வருணாசலா. உ௮

இருப்பானது வெளிமாமலை யிடத்தோர்மர கதமாமலை
மருப்பார்மத மலைபெற்றது வளைவில்லொரு பொன்மாமலை
விருப்பாதம ஞானாலொளி வேவும்மலை வடியாயினை
யருப்பாரெருக் கணிமாலையா யருணாசலா வருணாசலா. உ௯

பொறியின்வழி மனம்போக்கிடார் பொன்னார்திரு வடிசேர்வதுஞ்
செறியும்மிரு வினையாளர்க டிகழும்பிற வியிலாழ்வதும்
வெறிகொண்மறை பரிதிக்கெதிர் விகசித்துவா டல்போலுமென்
றறியுந்நிலை யெற்கீந்தரு ளருணாசலா வருணாசலா. ௩0

படியாவுமோர் குடைநீழலிற் பரிக்கும்மவர் மகிழ்செல்வமுங்
கடியார்தரு நீழலுறைவதும் கண்ணாயிரன் மகிழ்செல்வமும்

நெடியோன்மகிழ் தருசெல்வமு மின்னன்பர்தாள் பணிந்தேத்திடும்
அடியாரடிப் பொருநேருமோ வருணாசலா வருணாசலா. ௯௧

காட்டுத்தனே தவஞ்செய்குவார் கனலினடுத் தவஞ்செய்குவார்
மேட்டிற்றாந் கதிகாணவென் செயலிங்கிதன் கோயிற்சுனை
வேட்டிற்றல கிட்டேதிரு மெழுகிட்டிலார் கதிகாணபரோ
ஆட்டுங்குமன் றினினின்றிடு வருணாசலா வருணாசலா. ௯௨

பிறவாநெறி தருவானுநீ பிறக்கும்படி செய்வானுநீ
யிறவாநெறி தருவானுநீ யிறக்கும்படி செய்வானுநீ
மறவாதனே வாழ்ந்தும்படி வந்தாளவும் வேண்டுமையா
அறவாணர்வாழ் தொலிமேவிய யருணாசலா வருணாசலா. ௯௩

உன்றாண்மலர் முடியாகவே யுறுமன்பர்கூற் றுவற்பெற்றபே
றென்றேனுமா லயன்வானுளோ ருறுகினறில ரெனிலாங்கவர்
கன்றார்களோ விதுநான்றுகொல் கருணாகரா மதிசேகரா
அன்றாலமுண் டருள்செய்திடு மருணாசலா வருணாசலா. ௯௪

மானேந்தினை மழுவேந்தினை மதியேந்தினை நதியேந்தினை
கானேந்திலா வெருக்கேந்தினை கமலன்முடி கரத்தேந்தினை
வானோர்திறு மெலும்பேந்தினை வறியேன்மொழி யையுமேந்திநல்
ஆனேந்தவே வந்தாளுவா யருணாசலா வருணாசலா. ௯௫

திருமாலொரு கண்வாகியுன் செஞ்சேவடி மிசைசாத்தினன்
கருமாவடர் கணைப்பருங் கண்ணுக்கொரு கண்சாத்தினர்
பெருமானிவர் களில்யாவரோ பெரியோரெனச் சிலரென்னுவார்
அருமாதவர் மெய்யோர்குவா ரருணாசலா வருணாசலா. ௯௬

பூமார்திரேறன் முதலோர்தமைப் பொன்றச்செய்வை யெனவேயூர்
காமாந்தக னாவாயெனுங் கருத்தேபெரி தாக்கொண்டவீ [றுமே
ணேமாந்தர்கள் புகழ்வாரிது வெகியோமிகு மஞ்ஞானமோ
ஆமாம்பினை திரிசாரல்கு மருணாசலா வருணாசலா. ௯௭

கல்லானைருன்கைநீட்டியே கரும்புண்ணுமா றருள்செய்தநீ
பொல்லாதகன் மனமுன்னருட் போதந்தனையுணச்செய்
வல்லாயலைபோனிற்பதென் மாயஞ்சொலாய்மகிழ்தொண்டர்கள்
அல்லாதவர்க்கரிதாகிய வருணாசலாவருணாசலா. ௩௮

வாட்டேறுகண்ணிசைஞானியர் மைந்தன்றனையாட்கொண்டநான்
பட்டேயருச்சனையாமெனப் பகர்ந்தாயஃதுணர்ந்தும்பிறர்
மாட்டேகவிசொலவெண்ணுமென் மருணீக்குவாயிருவோர்கள்போ
ராட்டேசெயவவர்முன்வரு மருணாசலாவருணாசலா. ௩௯

ஈனந்தருபிறவிக்கட லிடையேழையேன்பலகால்விழ
ஊனந்தரும்வினையாம்வளி யுறவித்தலாலுனதின்னருள்
மோனந்தருகுகைசேரவே முனனிக்கொடுவந்தேனையா
ஆனந்தமாடியவையனே யருணாசலாவருணாசலா. ௪௦

நாய்தன்னிலுங்கடையாகிநின் னல்லன்பர்தம்பரணண்ணிலேன்
வாய்தன்னினின்றனைவாழ்த்திலேன் வணங்கிப்பணிசெய்துமிலேன்
பேய்தன்னொடாடியவாறுபோற் பித்தேறுமென்னகநண்ணிலை
ஆய்தன்னிலுமருள்செய்திடு மருணாசலாவருணாசலா. ௪௧

சந்தித்துமாலயன்வாதுசெய் தலினுமவர்க்கரிதாகினை
வந்திதலரொருபாணன்முன் வந்தாய்விறகேந்திக்கொடு
சிந்தித்திடலவரிதிறந் தெளிவெய்தியென்னருள்சேர்குவார்
அந்திப்பிறைமுடியாளனே யருணாசலாவருணாசலா. ௪௨

உமையாளருளனையாகவு மொருதந்தைநீதானாகவுந்
தமருன்னடியாராகவுஞ் சார்பற்றவர்தமைநோக்குறி ,
னமனூர்நணுகாதேதாதே னுயேனினர்த்துனையண்டினேன்
அமர்நீதியார்தொழுமையனே யருணாசலாவருணாசலா. ௪௩

கார்மேவியகளங்கண்டனன் கழல்மேவுமால்விழிகண்டனன்
போர்மேவுசூலுங்கண்டனன் போதன்றலைக்கரங்கண்டனன்

சீர்மேவுமா திடங்கண்டனன் சிறியேனிடரினிக்காண்பனோ
ஆர்மேவு தாரணிதோளனே யருணாசலாவருணாசலா. ௪௪

திருமாலயனுந் தாண்முடி தெரிவானலமர்ந்தார்முனம்
ஒருமாதுவக்கியின்வாய்தலி னுறுமாறறிகிலாரிகல்
லுருமாறியதிறனென்னையோ வுமைபாகனேயருளாகனே
அருமாதவர்பலரேற்றிடு மருணாசலாவருணாசலா. ௪௫

வல்லாளமன் னவன்வாழவோர மகவாயவற்கருளீந்திடும்
வில்லார்மதிமுடியண்ணலே வினையேன்பிறந்திடவைப்பையேல்
கல்லாய்மரமாயேனுநீ கனிவோடமர்தருமிப்பதி
யல்லாவிடந்தனில்வைத்திடே லருணாசலாவருணாசலா. ௪௬

வரமாமலரவனீந்திட வானோர்களுக்கிடரேசெய
தாரகாசுரன்றனைவெல்லமுன் னாராயணன்றவஞ்செய்தலின்
ஒருபாதியாகவனுக்களித் தொருபாதிதேவிக்கீதலால்
அருவாயமருவினையோசொலா யருணாசலாவருணாசலா. ௪௭

என்னாகுநெய்போலவு மெறிமாமணியொளிபோலவும்
நன்னாற்றபூமணம்போலவு கனகத்துறுமொளிபோலவும்
வின்னாற்றிடா துயிர்தோறுநீ மேவுற்றதோர்ந்துவப்பேற்றுவேன்
அன்னாற்றநீறணிமெய்யனே யருணாசலாவருணாசலா. ௪௮

உண்மையாளுணைவிழிமூன்றோ னொருங்கதிர்மதிவானிடை
சமைவாயிவுக்கவுஞ்சினிரு டரணிக்குண்மூடிய தன்மையாற்
கமையாருநின்விழிகாரணக் கதிர்மாமதியெனவோர்ந்தனன்
அமைவாமனத்தவர்போற்றிய வருணாசலாவருணாசலா. ௪௯

பெருமைக்கடனிறைவண்ணனும் பிரமன்முதலியதேவரும்
ஒருமிக்கமாய்தருமூழிதோ றொருதானுமாய்த்தானீங்கவே
தருமக்கடவுள்வெள்விடை தானாய்விரவுலர்ந்தார்ந்திடும்
அருமைத்திருவருளானனே யருணாசலாவருணாசலா. ௫௰

களையார்மதிகதிராகுமின் கண்ணேறிரண்டையுமூடுநான்
மலையான்மகள்கழுவாய்செயும் வகைசொல்லியேவினைநின்னரு
ணிலையீதெனறெனவருய்ந்திடார் நிமிர்செஞ்சடைமிசையேமதி
அலையார்நதியொடுசூடிய வருணசலாவருணசலா. ருக

தக்கன்முனிந்தேகூறிய சாபந்தொடர்ந்தெய்தாதுணைப்
புக்கண்முசந்திரனேர்கலை பொலிவெய்தவுன்முடிமீதிலே
வைக்கும்படியசசந்திரன் மனைநந்துசெய்தவனென்னையோ
அக்கன்புடனணிமெய்யனே யருணசலாவருணசலா. ருஉ

உன்னன்னிலைவினவும்பொழு துமைதன்னையேவியந்தாளென
மன்னும்மழையிற்சங்கமாய் மருவிசிறுவிதியாமக
ளென்னப்பொலிகென்றேவிய தெவர்க்கும்மருடாவல்லவோ
அன்னத்தவன்பணிமையனே யருணசலாவருணசலா. ருங

விண்ணோருயிர்திரனக்கினி விறலந்தகனிருதர்க்கிறை
தணணோர்வருணன்வாயுவே தனதன்னுடனீசானனும்
உண்ணடிமூழ்கியதீர்த்தமின் ருன்றேயெமதிடாதீர்த்திட
அண்ணமலையெனநீடிய வருணசலாவருணசலா. ருச

பூசிக்கநன்மலருண்டுதீம் புனலுண்டுநின்னென்றிதோருவான்
வாசிக்கவாகமமுணடென் மலர்நோக்கமுமுண்டாகுமே
னேசித்தெளியேனுய்குவே னேறூடுகண்மணிபூண்டுளத்
தாசற்றவர்தொழுமையனே யருணசலாவருணசலா. ருரு

திருவாசகமொன்றுண்டுநற் றேவாரமுமுண்டாகவை
கருவாய்வழிவாராநெறி கீட்டும்மெனச்சான்றோர்சொலத்
தெருளாதுவீணேயையவோ தெருநாயினுங்கடையாயினேன்
அருமாதவர்துதியோய்விலா வருணசலாவருணசலா. ருசு

பல்லார்விடப்பணியாமுனி பரிந்தேதொழ்வருளீந்ததும்
பொல்லாவிடமுண்டண்டரைப் புரந்தாள்வதுமோர்ந்தும்முனைக்

கல்லார்க்கேளச்சேராநெறி கடையேற்கருள்செயவேணுமோல்
அல்லார்சுடலையிலாடிய வருணாசலாவருணாசலா. கஎ

தேவாதிதேவாவென்கிலேன் சிவலோகநாதாவென்கிலேன்
காவாயரனேயென்கிலேன் காபாலிவந்தாளென்கிலேன்
சேவானதூர்வாயெனகிலேன் சிறியேனதனுலேலாவையா
ஆவாவெனவருள்செயகிலே யருணாசலாவருணாசலா. கஅ

கன்றுருபோராவிந்திரா காமாமுகசோமாபுவி
மன்றுமெனவேபொய்யரை வாழ்த்திக்கவிசெல்லாமனன்
குன்றாருள்பெறுமன்பர்தா ளுளம்வைத்துவாழ்த்துறநல்குவாய்
அந்நாவலூராளிக்கரு ளருணாசலாவருணாசலா. கக

பசசென்னிறமொருபாலுறப் பைம்பொன்னிறமொருபாலுற
வெசசென்றதீச்சிறமேவிமேல் வெண்ணீறுபூச்சிடசின்றநீ
நசசுணடிருணடிகேணடமு நணலூற்றதைம்பூதஙகளுக்
கசசென்னநிற்பதுநாட்டவோ வருணாசலாவருணாசலா. உ0

புன்றுகளேதுயின்மாயனே பரிவோடுகாத்தருள்செய்குவ
னென்றுச்சிலரெடுத்தோதுவ நீதுண்மையேவிமையோர்வதை
தன்றுற்கடைந்திடவந்தகஞ் சங்கண்டவரஞ்சித்தொழும்
அந்நாள்புரவாவண்ணமென் னருணாசலாவருணாசலா. உக

காமத்தொடுகொலேசூதுபொய் களவுக்கிடந்தந்தென்மனம்
பூமத்தமென்பணிகின்றநீ பொருந்தற்கிடந்தாராமையால்
ஈமத்தெரிநரகம்மெனக் கிடமாகுமென்றெணிசின்னரு
ளாமெய்த்துணையேகம்பினே னருணாசலாவருணாசலா. உஉ

உனக்குள்ளடியேன்மேவிய முளேயோர்கிலாமையினிவ்வுடல்
எனக்கென்னவீந்தனைமுன்னிரு னென்றேடுசேர்ந்தந்தேலெனே
நின்க்குப்புரம்பாய்நிற்கவே நீடுற்றதாலென்செய்குவேன்
அனக்கன்னிகேர்தருமாதர்கு முருணாசலாவருணாசலா. உங

பாசக்கிடம்பசுவென்னவும் பசுவுக்கிடம்பதியென்னவு
மாசற்றயாமறைபேசுமம் மாயைம்பசு வாமென்னுளே
தேசிறபொலி பதிபாகுநீ திகழ்கின்றகற் புதமல்லவோ
ஆசைக்குமே னுயிர்சோதியே யருணாசலா வருணாசலா. ௬௪

யான்செய்தனன் பிறர்செய்தன ரெனநியானெனு மஞ்ஞானமே
யூன்செய்பிற வியையநல்குமென் றுணர்ந்தேனின தருளாலினி
வான்செய்பத விகள்சாவினு மயனகாநெறி தங்காணுவாய்
ஆன்செய்நெடுங் கொடியாளனே யருணாசலா வருணாசலா. ௬௫

வெய்யோனுத யஞ்செய்திடில் விரவும்மிரு ளொழிவாதல்போற்
பொய்யானதில் குருவந்திடப் பொய்ப்போதநீங் கிடுமெனனவே
மெய்யான நூ லுரைசெய்யவும் வீணேதிரிந் துழலவார்சிலர்
ஐயாவவ ருய்வார்கொலோ வருணாசலா வருணாசலா. ௬௬

பரையுன்னிரு விழிமூடுகைப் பதுமத்தனி விகற்பத்திலும்
வருகங்கைபத் தினின்மூன்றயன மாலிந்திர னுகங்கீந்துமற்
றொருநான்குமூன் றையும்வேணியி லொளிததுப்புவனங்காத்தநின்
அருமைசெய லறிவாரெவ ரருணாசலா வருணாசலா. ௬௭

வடவார்மய றூனோர்புறம் வருகின்றபல் பிணியோர்புறந்
திடமாம்மறு மையுமோர்புறந் தீராலதீப் பசியோர்புறம்
கடனுன்கும்வன் பேயோர்புறங் கழிவான்மரங் குரங்கோர்புறம்
அடலான்மெலிந் துனையண்டினே னருணாசலா வருணாசலா. ௬௮

தாய்மார்களுஞ் சலித்தார்வரு சமனுங்குமோ சலித்தார்மலர்
வாய்வேதனுஞ் சலித்தானழன் மலிகும்பிநிஞ் சலித்திட்டதாற
சேய்நானினிச செயும்வண்ணமென் செப்பாயபல கலைவேதமும்
ஆய்மேலவர் தொழுமையனே யருணாசலா வருணாசலா. ௬௯

மனையாண்மனம் வெறுப்பாகவு மாதாமனம் வெறுப்பாகவுங
கனிவானபெண் கொள்பிள்ளைகள் கசந்தேமனம் வெறுப்பாகவுஞ்

சனியாயிரு மருநீளையுஞ் சார்ந்தேழையே னலியாவகை
அனையாமென வந்தாளுவா யருணாசலா வருணாசலா. ௭௦

காட்டுக்குளே தவஞ்செய்குவார் கனலுக்குளே தவஞ்செய்குவார்
நாட்டுக்குளே யறஞ்செய்குவார் நதியாயினும் போய்மூழ்குவார்
பாட்டுக்குநால் வர்களெய்திய பரிசிற்பய னடைவார்களோ
ஆட்டிற்பொலி நிக்கணனே யருணாசலா வருணாசலா. ௭௧

பறவைக்கர சாளேந்தவெம் பணிவந்துபோற் றப்பூண்டநீ
மறமுற்றமா தவரேவிட வருபாம்பணிந் திடவில்லையோ [னைமுன்
திறமுற்றவண பிலனென்றெனைச சேயிர்த்தாட்கொளவுனையென்
அறவர்க்கறு டறுமையனே யருணாசலா வருணாசலா. ௭௨

எரிகுன்றதீப் போற்சிறியே யியமன்வரு மேற்பேதையேன்
பரிகின்றமார்க் கண்டேயர்போற் பணிந்துன்பதம் போற்றுந்திறந்
தெரிகின்றிலே னதனாலினி சிறியேனையாண டருள்வெம்பலி
யரிகின்றசென் னிபிலேற்றிடு மருணாசலா வருணாசலா. ௭௩

தம்மாலறி வனயாவையுந் தாமல்லவென் பதுமைந்தனே
சும்மாவிருந் திடுமாறெனச் சொல்லுந்தெளி விப்பான்மலர்க்
கைம்மான்முத லியயாவையு கரந்தோர்குரு வாய்வந்தனே
அம்மாவுன தருளென்னையோ வருணாசலா வருணாசலா. ௭௪

காலாழ்களர் படுமாயின்வெங் கரிதன்னையு நரிகொல்வது
போலாசையாம் படுசேற்றினிற் புலையேன்விழுந் துழல்கின்றதாற்
பாலாயிரு வினைவெல்லுநின் பதமெய்ந்நனர் தொழுவேனையா
ஆலாலமுண் டருணாதனே யருணாசலா வருணாசலா. ௭௫

பொருளீட்டவு மதனைவைப் பொத்தற்கடந் தனையோம்பவு
மருளீட்டுமா தர்களாசையின் மயங்கித்திரி தரவுங்கொலோ
தெருளீட்டித் தனுவீந்தனை தேவாதிதே வாவென்னையே
அருளீட்டுமென் பர்கள்போற்றிய வருணாசலா வருணாசலா. ௭௬

பொய்யானதேகுடிகொண்டது புழுவானதோவொளிகின்றது
லைசயோகமே விளைகின்றது சல்லாகிமேல் விழுகின்றது
மெய்யானதிங கிதைகாயினேன் வீணேசுமந் துழல்கின்றிலேன்
ஐயாவுன தருள்வேணடினே னருணாசலா வருணாசலா. ௭௭

இந்நாள்வரை யிலுமுண்டசோ றெல்லாமள விடவெண்ணிலோ
பொன்றுமலை தானேருமோ புலியோனின முணலேபெரி
தென்றுவுழல் வேனுதலா லியயன்வர வேயுன்னுவான்
அந்நாளின்மு னீவந்தரு ளருணாசலா வருணாசலா. ௭௮

பறக்குஞ்சிறை மறையன்னமும் படிகிண்டகோட் டொருபன்றியுங்
கறக்கின்றவான் பாலாட்டியே கனியாவருச சிதநின்றவன்
இறககும்படி செயுமன்பர்தா மெய்தும்பய னுணரார்கொலோ
அறக்குஞ்சியஞ் சடையாளனே யருணாசலா வருணாசலா. ௭௯

தாய்தந்தைநீ குருசெய்வநீ தமியேனுயி ரதுநீயெனு
வாய்தந்தன மொழிவேனலோன் மனமாண்டரின் னடியாரொடுந்
தோய்தந்துவல் வினைநீங்கவுந் துலையொத்தநன் னிலைகூடவும்
ஆய்தந்திலே னுய்வேன்கொலோ வருணாசலா வருணாசலா. ௮௦

மார்தகாண்டனின் மலையுசிமேன் மதியாதுநாடொறுமேருதல்
பார்த்தாகவன் வெருவும்படி பணிதகோர்புறஞ் செலவைத்தநீ
வோத்தாவென வுனைமேவுமென் வினையோர்புறஞ் செலவைத்திலை
ஆர்த்தார்முடிக் கணியண்ணலே வருணாசலா வருணாசலா. ௮௧

தெள்ளித்தெளி தருமன்பர்பாற் சேர்ந்தேவரு ளீவாய்படர்
முள்ளிக்குவேலிகள்போடுதல் முறையல்லவென் பதுபோலெனை
யெள்ளித்திருவருளீந்திலை யெனினேழையே னென்செய்குவேன்
அள்ளிப்புனல் முடிமேற்கொளு மருணாசலா வருணாசலா. ௮௨

தேன்பட்டசொல் லியராசையிற் றிகழாலைவாய்க் கரும்பென்னவே
நான்பட்டவெவ் தனன்மேலுமோ நமனூர்வழி யெலன்செய்குவேன்

காண்பட்டபூங் குழல்பாகநின் கழல்சூடியாட் கொளவேண்டுமால்
ஆண்பட்டநீள் கொடியண்ணலே யருணாசலா வருணாசலா. ௮௩

பதியாருநின் பதமாமலர் பணியாதபே யருநின்புகழ்
துதியாதமூ டருமாலாஞ் சூழ்வாந்திடாப் புலையாளரும்
கதியாதுகா ணுவரையையோ காலன்கதை யடிபட்டுநைந்
ததியாகுல மடைவாரலா யருணாசலா வருணாசலா. ௮௪

மாயோனையுந் தொழுகின்றிலன் மலரோனையுந் தொழுகின்றில
னாயேனினை யேபோற்றுவே னல்காயரு ளெனிலாநகைவர்
வேயேயென நகைசெய்வரே யெனநாணுறேன் மெலிகின்றனன்
ஆயேயென வடியார்க்கரு ளருணாசலா வருணாசலா. ௮௫

பொருப்புச்சிலையாயுன்னருட் போதந்தலைப் படுமென்பாக
னெருப்புக்கும்வா யுவினுக்குநீ ணீருக்குஞ் சார்மேனுமோ
மருப்புக்கடா மறலிக்குமே மனமாய்வுறு மெனவோர்ந்துநின்
அருட்புக்குய்வான், விழைகின்றன னருணாசலா வருணாசலா. ௮௬

வாசிப்பதுன் னடியார்புகழ் வந்திப்பதுன் னடியார்பத
நேசிப்பதுன் னடியார்பத நினைகிற்பதுன் னடியார்பதம்
பூசிப்பதுன் னடியார்பதம் புனைகிற்பதுன் னடியார்பதம்
ஆசிப்பதுன் னடியார்பத மருணாசலா வருணாசலா. ௮௭

பொன்னுக்குளே யொளியென்னவும் பூவுக்குளே மணமென்னவும்
என்னுக்குளே நீமேவுவ தெளியேனுணர் தருமாறுசெய்
துன்னுக்குளே யான்மேவுவ மொருநீயருள் செயவேண்டுமால்
அன்னக்கொடி யோன்போற்றிடு மருணாசலா வருணாசலா. ௮௮

வேலிக்குமுன் வீடெண்ணிலார் வெறிகொண்டபேயர்களாகியோர்
காலுக்குமுன் வீடல்போலுனைக் கடையேன்மறந் திதுகாறுமே
மாலுற்றுமெய் யதுபோற்றியுன் மலர்த்தாடொழு மாறோர்ந்திலன்
ஆலிக்குமுன் னத்தோர்க்கரு ளருணாசலா வருணாசலா. ௮௯

